# பத்தினிக் கோட்டம்

(முதல் பாகம்)

## ஜெகசிற்பியன்



வானதி பதிப்பகம்
13. தீனதயாளு தெரு
தி. நகர், சென்னை-17.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : நவம்பர், | 1964 |
| இரண்டாம் பதிப்பு | : ஆகஸ்ட், | 1972 |
| மூன்றாம் பதிப்பு | : ஆகஸ்ட், | 1981 |
| நான்காம் பதிப்பு | : ஜனவரி, | 1988 |
| ஐந்தாம் பதிப்பு | : ஜுன், | 2003 |
| ஆறாம் பதிப்பு | : மே, | 2010 |
| ஏழாம் பதிப்பு | : டிசம்பர், | 2014 |

திருநாவுக்கரசு தயாரிப்பு

---

விலை: ரூ. **240.00**

| | | |
|---|---|---|
| ☐ | Title | : **PATHINIK KOTTAM(Part-I)** |
| ☐ | Author | : JEGASIRPIYAN |
| ☐ | Language | : Tamil |
| ☐ | Subject | : Historical Novel |
| ☐ | Edition | : Seventh Edition, Dec,2014 |
| ☐ | Pages | : 538 |
| ☐ | Published By | : **VANATHI PATHIPPAKAM**<br>23,Deenadayalu Street,<br>T.Nagar, Chennai-600 017<br>Ph: 24342810/24310769<br>Email: vanathipathippakam@gmail.com |
| ☐ | Price | : **₹ 240.00** |

---

Printed at: Malar Printers, 044-42139004



பொன்னொளிர் மேனியாய் விளங்கிய தமிழகத்தைத் தன்னிகரற்ற மூவேந்தர் ஆண்ட காலம் ஒன்று உண்டு. அந்தப் பொற்காலத் தமிழகம் ஊழின் பெருவலியால் தடம் புரண்டு தாழ்ந்து இருண்ட காலம் ஒன்றைக் கண்டதும் உண்டு. களப்பிரர் என்னும் ஓர் அந்நிய இனத்தார் தமிழக அரசியலைக் கைப்பற்றி, கி.பி. மூன்றாம் நூற்றாண்டு முதல் ஆறாம் நூற்றாண்டு வரையில் ஆண்ட காலமே அந்த இருண்ட காலம் என்பதாம்.

ஆனால், தமிழகம் செய்த நற்பேறாக, அதே காலத் தொடக்கத்தில் தமிழ் நாட்டின் வட மண்டலத்திலே ஒரு புதிய விண்மீன் தோன்றித் தன் ஒளிச்சுடரை சிறுகச் சிறுகப் பரப்பத் தொடங்கியது. பப்பதேவன் வழி வந்த பல்லவ மன்னனான சிவஸ்கந்தவர்மனே அவ் விண்மீன் ஆவான். காஞ்சியைத் தலைநகராகக்கொண்டு கோலோச்சிய அவனும் அவனது வழித் தோன்றல்களும், காடு வெட்டி நாடாக்கி, கழனி திருத்தி வளமை கண்டு, தம் ஆட்சியின் எல்லையை மெல்ல மெல்ல விரிவாக்கி வந்தனர். இப்படி வளரத் தொடங்கிய இந்தப் பல்லவ நாடு முந்நூறு ஆண்டுகளுக்குப் பின்—கி.பி ஆறாம் நூற்றாண்டு—சிம்மவிஷ்ணு என்பானின் தலைமையில், வடக்கே கிருஷ்ணையாறு முதல் தெற்கே புதுக்கோட்டை வரையில் ஒரு பெரிய சாம்ராஜ்யமாக உருவெடுத்து மலர்ந்தது.

அதே சமயம், களப்பிரரின் இருளாட்சியை எதிர்த்து நிற்க மாட்டாமல் அடங்கி ஒடுங்கிக் கிடந்த பழைய பாராண்ட பாண்டியர், பல்லவரின் பேராட்சி ஒளி கண்டு வீறு பெற்று எழுந்தனர். அவர்களில் கடுங்கோன் என்பான்

தென்னகத்தில் வீழ்ந்துபட்ட பாண்டியப் பேரரசைத் தன் வலிமைகொண்டு தூக்கி நிறுத்தினான்.

இப்படி, வடக்குத் தமிழகத்திலும் தெற்குத் தமிழகத்தி லும் இரு பேரரசுகள் தலைதூக்கிவிடவே, இடையில் கிடந்து நசுங்குண்ட களப்பிரர், கதிரவன் ஒளிபட்ட காரிருள் போல் தாமாகவே மறைந்தொழிந்தனர்.

தென்புலத்தின் நிலை இவ்வாறிருக்க, வடபுலத்திலும் இவைபோன்ற இரு பேரரசுகள் எழுந்து நின்றன. இமயமலை முதல் நருமதையாறுவரை கொண்ட ஹர்ஷப் பேரரசு ஒன்று; நருமதையாறு முதல் கிருஷ்ணையாறுவரை கொம்ட சளுக்கியப் பேரரசு பிறிதொன்று. கதம்ப நாட்டுக்கு வடக்கே ஒரு சிறு பகுதிக்குச் சிற்றரசராக இருந்து, பிறகு மெல்ல மெல்லப் பேரரசு காணும் நிலைக்கு உயர்ந்தவர்கள் இந்தச் சளுக்கியர்.

சிம்மவிஷ்ணுவுக்குப் பின் அவனுடைய மைந்தனான முதலாம் மகேந்திரவர்மன் பல்லவப் பேரரசின் மன்னன் ஆனான். ஏறத்தாழ இதே காலத்தில் ஹர்ஷ சாம்ராஜ்யத்தின் மாமன்னனாக ஹர்ஷ வர்த்தனனும், சளுக்கிய சாம்ராஜ்யத் தின் பெரு வேந்தனாக இரண்டாம் புலிகேசியும் கோலோச்சி வந்தனர்.

ஹர்ஷ வர்த்தனன் தன் சாம்ராஜ்யத்தை மேலும் விரிவுபடுத்த ஆசை கொண்டு சளுக்கிய நாட்டின்மேல் படையெடுத்தான். ஆனால் சளுக்கிய மன்னன் புலிகேசி அவனை நருமதைக் கரையிலே தடுத்து நிறுத்திப் போரிட்டுப் புறங்காணச் செய்துவிட்டான். ஹர்ஷன் புறங்காட்டிவிடவே, வெற்றிப் போதையேறிய புலிகேசி தன் உறவினனான கங்க மன்னன் துர்விநீதனைத் துணைக்கு அழைத்துக்கொண்டு தெற்கிலும் திரும்பிப் பல்லவ நாட்டின்மேல் பாய்ந்தான். புள்ளலூர் என்னுமிடத்தில் புலிகேசிக்கும் மகேந்திரவர்மனுக் கும் போர் மூண்டது. அந்தப் போரில் மகேந்திர வர்மனே வெற்றி பெற்றான் என்றாலும், பல்லவ நாட்டின் ஆட்சிக்கு

உட்பட்டிருந்த ஆந்திர நாட்டைப் பறிகொடுத்துவிட்டான். சிம்மவிஷ்ணுவின் காலத்தில் கிருஷ்ணையாறுவரை பரந்திருந்த பல்லவ சாம்ராஜ்யம், மகேந்திரவர்மன் காலத்தில் வடபெண்ணையாற்றுக்குக் குறுகி வந்துவிட்டது.

ஆயினும் இதனால் பல்லவநாடு வலிகுன்றி விட வில்லை. வேறு வகைகளில் அது தன் புகழை நிலைநாட்டத் தொடங்கியது. ஆம்; தமிழகத்தில் மற்றுமொரு பொற் காலத்தை உருவாக்குவதிலே முழு மூச்சுடன் முனைந்தான் மாமன்னன் மகேந்திரவர்மன்.

களப்பிரரின் காட்டாட்சியால் மங்கி மறைந்து கிடந்த ஆடல் பாடல் ஓவியம் சிற்பம் முதலான உயர்நுண் கலைக ளெல்லாம் புத்துயிர் பெற்றுப் புதுப் பொலிவுடன் வளர ஆரம்பித்தன. தமிழகக் கட்டடக் கலைக்கு முற்றும் புதிதான குகைக் கோயில்களை ஆங்காங்கே நிர்மாணித்துத் தமிழகத்தை வனப்பாக்கினான் மகேந்திரவர்மன்.

ஆதிகால முதலே தமிழக மக்கள் தெய்வ நம்பிக்கையில் ஊறி வளர்ந்து வருபவர்கள். சமய உணர்வும் பக்தி வழிபாடும் அவர்களது நெஞ்சத்திலே நிணமும் தசையுமாகப் பின்னிப் பிணைந்திருப்பவை. இதனை வெகு நுட்பமாக உணர்த்தும் பொருட்டே, தமிழகத்தின் எல்லையைக் கூறவந்த பழம்புலவர் பனம்பாரனார், 'வடவேங்கடம் தென் குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' என்று வேங்கடப் பெருமானை முன்மொழிந்து பாடினார். இப்படி இருந்த தமிழ் மக்களிடையே வடக்கிருந்து வந்து நுழைந்த சில புதிய மதங்கள் சூன்யவாதம் பேசி அவர்களை மருளில் ஆழ்த்தின. இதனால், தமிழர்களின் தாய்ச் சமயமான சைவ சமயம் அப்போது தாழ்வுற்றுக் கிடந்தது. இந்நிலையில், சமணனாயிருந்து பின் சைவனாக மாறிய மகேந்திரவர்மன், நலிந்து கிடந்த அன்புச் சமயமாம் சைவத்தை அதன் பழைய நிலைக்குக் கொண்டுவர அரும்பாடுபட்டுப் பெரு வெற்றி கண்டான். அவன் காலத்தில் தோன்றிய ஞான மாமலையான அப்பரடிகள் என்னும்

திருநாவுக்கரசர் தேனூறும் தமிழால் தேவாரமிசைத்துச் சைவ சமயத்துக்கு ஒரு புதிய உத்வேகத்தை ஊட்டினார். அதனால் அதற்குமுன் கண்டிராத அளவுக்குச் சைவம் தழைத்து வளர்ந்தது. அதன் மறுபிரிவான வைணவமும் வீறு பெற்றுச் சிறந்தோங்கியது.

இப்படித் தமிழகத்தின் பழம்பெருமைகள் அனைத்தையும் மீட்டுக் கொண்டுவந்து நிலைநாட்டிய மாதவச் செல்வன் மகேந்திரவர்மன் மறைந்தான். அவனுக்குப் பின் அவனுடைய மைந்தனான முதலாம் நரசிம்மவர்மன் என்னும் மாமல்லன் பல்லவ அரசு கட்டில் ஏறினான். அதுவரை அடங்கிக் கிடந்த சளுக்கியப் புலிகேசி தருக்கி எழுந்து பல்லவ நாட்டின்மேல் தண்டெடுத்து வந்தான். போர்த் தந்திரக் கலையில் வல்லவனான நரசிம்மன், காஞ்சியைப் புலிகேசி நெருங்கும்வரை வாளாவிருந்து விட்டுத் திடீரெனத் தன் படைகொண்டு அவனைத் தாக்கினான். பரியலம் மணிமங்கலம், சூரமாரம் முதலான இடங்களில் புலிகேசிக்கும் நரசிம்மவர்மனுக்கும் பெரும்போர் நடந்தது. இறுதியில் புலிகேசி புறமுதுகிட்டுத் தன் நாட்டுக்கே திரும்பி ஓடிவிட்டான். ஆயினும் அவன்மேல் வஞ்சினங்கொண்ட நரசிம்மன் சளுக்கியக் கோநகரான வாதாபியை எரித்துச் சாம்பராக்கிய பின்னரே தன் சினம் தணிந்து திரும்பினான். அவன் பெற்ற அந்த மகத்தான வெற்றிக்குப் பெரிதும் காரண கர்த்தராக இருந்தவர், அவனது படைத் தலைவரான பரஞ்சோதி என்பவர் ஆவார். இந்தத் தளகர்த்தர் பரஞ்சோதியே பின்னால் சிறுத்தொண்ட நாயனாராகிச் சிவத்தொண்டு புரிந்து அறுபான் மூவரில் ஒருவரானார்.

மாமல்லன் நரசிம்மன் போர்க்கலையில் மட்டுமின்றி ஆட்சிக் கலையிலும் வல்லவனாக விளங்கினான். தன் தந்தையைப் போலவே அறப் பணி, கலைப் பணி, சமயப் பணி ஆகிய முப்பணிகளையும் பாங்குறப் பேணி ஆற்றினான். சிற்பக் கலையிலும் சேதியக் கலையிலும் புதுப் புது உத்திகளைப் புகுத்தித் தன் பெயர் கொண்ட மாமல்ல

புரத்தில், தரணி உள்ளவரை புகழ் சேர்க்கும் கற்கோயில்கள் பலவற்றை எடுப்பித்து அதை ஒரு கலைக்களஞ்சிய நகராகவே ஆக்கினான். அவன் காலத்தில்தான், அப்பரடிகள் தொடங்கிய அன்புச் சமயப் பணியை அவரோடு தொடர்ந்து ஆற்ற அவதரித்தார் ஞானப் பாலுண்ட திருஞான சம்பந்தர். அவரது அருஞ்சுவைக் கனியமுதப் பாக்களால் தமிழும் சைவமும் தன்னிகரற்று ஓங்கிச் சிறந்தன. பக்திப்புனல் பெருக்கெடுத்துப் பாய ஆரம்பித்தது.

இத்தகைய அருளாட்சியைக் கண்ட மாமல்லன் மறையவே, அவனுடைய மைந்தனான இரண்டாம் மகேந்திர வர்மன் பல்லவ அரியணையில் ஏறினான். ஆனால் அவன் இரண்டே ஆண்டுகளில் தன் ஆட்சியை முடித்துக் கொண்டு இறைவனடி சேர்ந்தான்.

கி.பி. 670-ல் ஒரு புதிய திருப்பம். கண் கலங்கத் தக்க அவலத் திருப்பம் அது.

ஆம்; இரண்டாம் மகேந்திரவர்மன் காலமானதும், அவனது அருமைச் செல்வனான **முதலாம் பரமேசுவரவர்மன்** பார்புகழ் கொண்ட பல்லவப் பேரரசின் பார்த்திபனானான்.

நரசிம்மவர்மனால் நசுக்கி எறியப்பட்ட புலிகேசி அதே கவலையில் இறந்துபடவே, அவனுடைய மைந்தனான முதலாம் விக்கிரமாதித்த வல்லபன், சளுக்கிய மணிமுடியை ஏற்று, நலிவடைந்துபோன தன் நாட்டைப் பெரும்பாடுபட்டுத் திருத்திப் பழைய வலிமையில் வைத்துக்கொண்டு பல்லவ நாட்டைப் பழிவாங்கும் வன்னெஞ்சத்தோடு காத்திருந்தான்.

பரமேசுவரவர்மன் அரியணையேறியதும், அதுதான் தருணமென்று துணிந்த சளுக்கிய விக்கிரமாதித்தன், கடல் போல் திரட்டி வைத்திருந்த பெரும் படைகளுடன் வந்து காஞ்சியை முற்றுகையிட்டு, அதன் கடக்கவொண்ணா அகழிகளையும் மதில்களையும் கடந்து, வல்லமை வாய்ந்த பல்லவக் கோட்டையைக் கைப்பற்றிவிட்டான்.

எதிர்பாராமல் தாக்குண்ட இப்பேரதிர்ச்சியால் திக்கித் திணறிய பரமேசுவரவர்மன் எதிரிகளிடமிருந்து தப்பித் தலைமறைவானான்.

இங்கிருந்துதான் இந்தப் 'பத்தினிக் கோட்டம்' நவீனம் உருவாகிறது!...

இனி, இன்னும் இரண்டொரு விவரங்களை இங்கு குறிப்பிட்டாக வேண்டும்.

பல்லவ நாட்டைச் சளுக்கிய விக்கிரமாதித்தன் கைப்பற்றிக் கொண்டதும் பரமேசுவரவர்மன் தப்பித் தலைமறைவானான் அல்லவா? அப்படித் தலைமறைவாக ஓடிப்போன அவன், ஆந்திர மன்னனிடம் படை உதவி பெற்று வந்து, பாண்டிய மன்னன் நின்றசீர் நெடுமாறனின் ஒத்துழைப்போடு சளுக்கிய விக்கிரமாதித்தனைப் பெருவள நல்லூர் என்னுமிடத்தில் எதிர்த்துப் போரிட்டுப் புறமுதுகிடச் செய்து தன் நாட்டைத் திரும்பக் கைப்பற்றிக் கொண்டான் என்பது சரித்திரம். ஆந்திரநாடு அப்போது சளுக்கிய சாம்ராஜ்யத்தின் மேலாதிக்கத்துக்கு உட்பட்ட ஒரு குறுநில அரசாக இருந்தது என்பதும், அதன் ஆட்சிப் பொறுப்பு விக்கிரமாதித்தனின் ஒன்றுவிட்ட சகோதரனொருவனிடமே ஒப்படைக்கப்பட்டிருந்தது என்பதும் சரித்திரம். இந்நிலையில், சளுக்கியப் பேரரசுக்கு உட்பட்ட ஆந்திர மன்னனிடம்-சளுக்கியக் சக்கரவர்த்தியின் உறவினரான ஆந்திர மன்ன னிடம்-ஓர் எதிரி நாட்டு அரசனான பல்லவ பரமேசுவர வர்மன் படை உதவி பெற எவ்வாறு சாத்தியமாகியது? தன் சகோதரனான விக்கிரமாதித்தனுக்கே எதிராக, அவனது ஜன்மப்பகை நாடான பல்லவநாட்டின் விடுதலைக்கு அவன் ஏன் படை உதவி செய்தான்? இந்தக் கேள்விகளுக்குச் சரித்திரம் விடையளிக்கவில்லை; விடைபெறும் வகையில் வேறு குறிப்புகளும் இல்லை.

அடுத்து, இன்னொரு விஷயம்: புலிகேசியின் காலம் வரை ஒரே நாடாக இருந்த சளுக்கிய நாடு, விக்கிரமாதித்

தனின் ஆட்சிக்காலம் தொடங்கியபின், மேலைச் சளுக்கிய நாடு-கீழைச் சளுக்கிய நாடு என்று இரண்டாகப் பிளவுண்டிருக்கிறது. வாதாபியும் கல்யாணபுரமும் மேலைச் சளுக்கிய நாட்டின் கோநகரங்களாக மாறிமாறி அமைந்து வந்திருக்கின்றன; கீழைச் சளுக்கிய நாட்டின் தலைநகராக வேங்கி இருந்திருக்கிறது. இப்படி, ஒரே நாடாக இருந்த சளுக்கிய நாடும் அதன் ஒரே அரச பரம்பரையும் இரண்டாகப் பிளவுபடக் காரணம் என்ன? அவ்வாறு பிளவுண்ட இரு நாடுகளும் அவற்றின் ஒரே இன அரசர்களும் எப்போதும் விரோத குரோதத்தோடேயே இருந்து வந்திருக்க அடிப்படைக் காரணம் என்ன? இந்தக் கேள்விகளுக்கும் சரித்திரம் விடையளிக்கவில்லை; விடை பெறும் வகையில் வேறு குறிப்புக்களும் இல்லை.

மேலும், மற்றொரு விஷயம்: முதலாம் மகேந்திரவர் மனின் காலம் தொடங்கி இரண்டாம் மகேந்திரவர்மனின் காலம்வரை தமிழகத்தில் சைவ-சமணப் பூசல் உச்ச கட்டத்திலிருந்து, பிறகு முதலாம் பரமேசுவரவர்மனின் காலத்தில் அந்தப் பூசல் மறைந்து, அவனுக்குப்பின் அது மீண்டும் தலை தூக்கியிருக்கிறது என்பது சரித்திரம். பரமேசுவரவர்மனின் ஆட்சிக் காலத்தில் மட்டும் சைவ-சமணப் பூசல் மறைந்து, இரு சமயத்தவரும் அமைதியோடு இருந்திருக்கக் காரணம் என்ன? இந்தக் கேள்விக்கும் சரித்திரம் விடை தரவில்லை.

இப்படி விடை கிடைக்காத கேள்விகளுக்கு விடை காண வேண்டுமென்ற ஓர் ஆவலால் உந்தப்பட்டே இந்த நவீனத்தை எழுதத் துணிந்தேன். **சரித்திரத்தில் ஓட்டை விழுந்திருக்கும் இடங்களைத் தேடிப் பிடித்து அவற்றைத் தன் ஊகம் எனும் கற்பனைச் சாந்தினால் அடைக்க முயலும் ஒரு காரியத்தின் புற வடிவம்தானே 'சரித்திர நவீனம்' என்பது?**

மேலே குறிப்பிட்ட பல கேள்விகளையும் உள்ளடக்கிய ஒரு கேள்வியை எனக்கு நானே எழுப்பிக் கொண்டேன்

'சளுக்கிய அரச வம்சம் விக்கிரமாதித்தன் காலத்தில் சமண சமயத்தைச் சார்ந்ததாகவே இருந்திருக்கிறது; அவ்வம்சத்தின னான ஆந்திர மன்னனும் சமண சமயத்தினனே. இப்படி யிருக்க, தென்னகத்தில் சைவசமணப் பூசல் தலை விரித்தாடிக் கொண்டிருந்த காலத்திலே, சமணனான ஆந்திர மன்னன், சைவனான பல்லவ பரமேசுவரவர்மனுக்குப் படை உதவி அளித்து அவனது நாடு விடுதலை பெற ஒத்துழைத்தது ஏன்?' என்னும் கேள்விதான் அது. இந்தக் கேள்விக்கு விடை கண்டால் மற்றக் கேள்விகளுக்கும் தானாகவே விடை கிடைத்துவிடும் என்ற எனக்குத் தோன்றியது. கற்பனைக் கன்னியின் உதவியை நாடினேன். 'அவள்' ஓர் அழகிய பெண்ணை எனக்கு ஈன்றெடுத்துத் தந்தாள். அந்தப் பெண்தான் ஆந்திர இளவரசி உத்தமசீலி! அவளைக் கருவி யாக வைத்து மேலே குறிப்பிட்ட எல்லாக் கேள்விகளுக்கும் இந்நவீனத்தின் மூலம் விடை காண முயன்றிருக்கிறேன். இந்த முயற்சியில் நான் வெற்றி பெற்றிருக்கிறேனா என்பதற்கு என் மதிப்புக்குரிய வாசக பெருமக்கள்தாம் தீர்ப்பு வழங்க வேண்டும்.

இந்த நவீனத்தில் வரும் பரமேசுவரவர்மன், வில்வேலி, விநயாதித்தன், பழையாறைச் சோழர், பெரும்பிடுகு முத்தரையர், ஆந்திர மன்னன் விஷ்ணுவர்த்தனன், நின்றசீர் நெடுமாறர், மங்கையர்க்கரசி ஆகியோர் அனைவரும் சரித்திர நாயகர், நாயகி ஆவர். மற்றையோரெல்லாம் என் கற்பனை பாத்திரங்களே. இவர்களில் சேதியக் கலைஞர் பரவாதி மல்லரும், பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனும், திரமிள சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரரும், சோழ இளவரசி இளங்கோப்பிச்சியும், பணிப்பெண் அநந்தமதி, அவளது மைந்தன் இளங்காரிக்குடையான் ஆகியோரும் என் அன்பைப் பெரிதும் கவர்ந்தவர்கள். சளுக்கிய மன்னன் விக்கிரமாதித்த வல்லபன் சரித்திர நாயகன்தான் என்றாலும் அவனைக் கதையில் நேரிடையாகக் கொண்டு வரவில்லை. அதன் காரணத்தை, நாவல் இலக்கியத்தின் இலக்கணம் அறிந்தவர் அறிவர்.

இவை தவிர இன்னொரு விஷயத்தையும் இங்கு குறிப்பிட்டாக வேண்டும். இந்த நவீனத்தின் நாயகனான **பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன்தான் தமிழகத்தில் முதன் முதலாகக் கற்கோயில் எடுப்பித்தவன்.** இது சரித்திரம், காஞ்சிக்கு அண்மையிலுள்ள கூரம் என்னும் ஊரில் அவனால் எடுப்பிக்கப்பெற்ற 'வித்யா விநீத பல்லவ பரமேசுவர கிருகம்' எனும் அந்தச் சிவன்கோயில் இப்போது இல்லை. காலத்தால் பாழ்பட்ட அக்கோயிலின் சின்னங்களாக ஒரு சிலையும், கல்வெட்டுக்கள் நிறைந்த நான்கு கம்பங்களும் மட்டுமே எஞ்சியுள்ளன. தமிழகத்தின் முதற் கற்கோயிலெனச் சிறப்புபெற்ற இதனையே இந்த நவீனத்தின் தலைப்பாகப் 'பத்தினிக் கோட்டம்' எனச் சூட்டியிருக்கிறேன்.

இனி, இந்த நவீனத்தை எழுதியதன் நோக்கத்துக்கு வருகிறேன்.

**ச**ரித்திரத்தைப் பின்னணியாகக் கொண்டு நவீனம் எழுதப்படுவது ஏன்? வெறும் பொழுது போக்குக்காக மட்டுமே நவீனம் எழுதுவதாயின் அரும்பாடுபட்டுப் பல சரித்திர நூல்களைப் பயின்றும், சொந்தமாக ஆராய்ச்சி நடத்தியும் தேர்ந்தெடுத்த உண்மைகளை ஒரு கற்பனை சிருஷ்டியில் செலுத்திச் சிரமப்படவும், சிரமப்பட வைக்கவும் தேவை இல்லையே! எத்தனையோ 'ராஜா ராணி' கட்டுக் கதைகள் இல்லையா? அவைபோல் இன்னொன்றும் எளிதாக எழுதிவிடலாமே? வெகு பிரயாசைப்பட்டுச் சரித்திர முலாம் பூசிய ஒரு கற்பனைக் கதையைச் சிருஷ்டிக்க வேண்டிய அவசியம் என்ன?

இவ்வினாவுக்குச் சுருக்கமாகவும் ஆணித்தரமாகவும் சொல்லக்கூடிய ஒரே பதில் இதுதான்: '**இறந்த காலத்தை எண்ணிப் பார்க்காதவன் நிகழ்காலத்தின் யதார்த்தத்தை உணர்ந்து எதிர்காலத்தை வெற்றிகரமாக நடத்திச் செல்லும் தகுதியைப் பெறமாட்டான்.** தன் பாட்டன் எப்படி வாழ்ந்தான் என்பதைத்

தெரிந்துகொள்ளும்போது தான் தன்னுடைய வாழ்க்கை எவ்வாறு இருக்கிறது என்னும் உண்மை புலப்பட்டு, தன் பேரனின் வாழ்வு எவ்விதமாக அமையவேண்டும் என்பதற்கு ஒரு தெளிவு ஏற்படும்.' சரித்திரமும், சரித்திரத்தைப் பின்னணியாகக் கொண்ட நவீன இலக்கியங்களும் இயற்றப்படுவதற்கு இதுதான் அடிப்படை நோக்கம்.

ஒரு நாட்டின் சரித்திரத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியது அந்நாட்டின் ஒவ்வொரு குடிமகனுடையவும் தலையாய கடமையாகும். இதற்காகவே சரித்திர நூல்கள் எழுதப்படுகின்றன. ஆனால் முழுக்க முழுக்கச் சரித்திர மாகவே இருக்கும் ஒரு நூலை எல்லா மக்களும் தம் கடமையாக எண்ணி அதை விரும்பிப் படிப்பார்கள் என்று சொல்ல முடியாது. படிக்கத்தான் வேண்டும்; படிக்காதவர் களை என்ன செய்ய இயலும்? அவர்களுக்காகத்தான் கற்பனைச் சுவையேற்றிய சரித்திர நவீனங்கள் சிருஷ்டிக்கப் படுகின்றன. சரித்திரத்தில் கற்பனையைக் கலந்து இலக்கியம் சமைப்பது இன்று நேற்று ஏற்பட்ட புதுமுறையல்ல; இளங்கோவடிகளின் சிலப்பதிகாரமும், சயங்கொண்டாரின் கலிங்கத்துப் பரணியும், சேக்கிழாரின் பெரிய புராணமும் இவ்வகை நோக்கத்தின் அடிப்படையில் சிருஷ்டியான இலக்கியச் சிகரங்களே.

சரித்திரக் கதைகள் எழுதுவோரைப் பார்த்துத் திரை மறைவில் முணுமுணுக்கும் சில மேதாவிகளும் இருக் கிறார்கள். இவர்கள் தங்களை 'யதார்த்த இலக்கியத் திறனாய்வாளர்' என்றும், 'முற்போக்கு இலக்கியச் சாம்ராட்டுகள்' என்றும் சொல்லிக்கொள்வார்கள். சரித்திரக் கதைகளைப் பற்றிய இவர்களது அபிப்பிராயம் இதுதான்: 'கோலாட்சி முறையை வழிவழியாகக் கைக் கொண்ட முடிமன்னர்களின் வம்ச பரம்பரைகளையும் பிறப்பு இறப்புகளையும் வரிசைப்படுத்தி அவர்களது மண், பெண், பொன் ஆசைகளால் விளைந்த யுத்தங்களைச் சாங்கோ பாங்கமாக எடுத்துக் கூறும் பரணிகளாகவே இருக்கின்றன

நமது சரித்திர நூல்கள். அந்தக் காலத்து மக்களின் குற்றங்களையும், அறிவின்மையையும் அடிமைத்தனத்தையும் சொல்லும் ஓர் இரகசியக் கூட்டறிக்கையாகவும் அவை விளங்குகின்றன. இத்தகைய வரலாறுகளைப் பின்னணியாகக் கொண்டு எழுதப் பெறும் கதை இலக்கியத்தால் இன்றைய ஜனநாயக யுகத்தில் வாழும் மக்களுக்கு என்ன பயன் விளையக்கூடும்? கோலாட்சி காலத்துச் செய்திகளைக் குடியாட்சி காலத்தில் வாழும் மக்களுக்கு நினைவூட்டுவது தவறல்லவா?'

இவ்வித வித்தார வாதம் பேசும் 'ஜனநாயக முற்போக்காளர்'ருக்கு நான் ஒன்று சொல்வேன்:

ஜனநாயக யுகத்தில் வாழ்வதாகப் பெருமைப்பட்டுக் கொள்ளும் நாம் இந்த யுகத்திலே வந்து திடீரெனக் குதித்து விட்டவர்களல்லர். பல லட்ச ஆண்டுகளுக்கு முன்னால் வாலில்லாக் குரங்கினின்றும் சற்றே மாறுபட்டும் வேறுபட்டும் பிரிந்த ஒரு விசித்திர பிராணி இனத்தை மூதாதையாகக் கொண்டு அதனடியாகச் சிறுகச் சிறுக வளர்ந்தே இன்றைய 'நாகரிக' நிலையை எட்டிப் பிடித்திருக்கிறோம். இந்த நமது நீண்ட நெடுங்கால வளர்ச்சியிடையே எத்தனையெத்தனையோ அரசியல், சமூக, கலாசார அமைப்புக்கள் தோன்றியும் அழிந்தும் வந்திருக்கின்றன. அவை அன்றன்று தோன்றி அடுத்த நாள் மறைந்தவையும் அல்ல; ஆயிரமாயிரம் ஆண்டுகளாக மனித இனத்தாரால் ஒருமிக்க ஏற்றுக் கொள்ளப் பட்டவைதாம். அவற்றை ஏற்றுக் கொண்டதால் அந்த மனிதக் குழுக்கள் ஒரேயடியாக அழிந்துவிடவும் இல்லை; மாறாக, வளர்ந்தே வந்திருக்கின்றன. காலத்தால் அழிக்க முடியாத பல அருட் செல்வங்களையும், பொருட் செல்வங்களையும், கலைச் செல்வங்களையும், அந்த 'அநாகரிக'க் காலத்து மக்களின் மூலமும் மன்னர்களின் மூலமும் நாம் நிறைய அடைந்திருக்கிறோம். இன்றைய 'ராக்கட் யுகத்தின்' சாதனைகளுக்கு அவை எந்த வகையிலும் குறைந்தவையும் அல்ல.

மேலும், இன்றைய காலப்போக்கில் குடியாட்சி என்ற ஜனநாயக சித்தாந்தம் சிறந்ததாயிருக்கலாம்; அதில் சந்தேக

மில்லை. ஆனால் இந்த அரசியல் சித்தாந்தமும், அதன் பண்புக்கேற்ப வளரும் சமூக, சமய, கலாசாரங்களுமே நிரந்தரமாக இருக்கக் கூடியவை அல்லது இருக்க வேண்டியவை என்று யாராவது மார்தட்டிச் சொல்லிவிட முடியுமா? அப்படி இருக்கும் என்பதற்கு உலக சரித்திரமும் மனித இனவளர்ச்சி வரலாறும் உத்தரவாதம் அளிக்க வில்லையே? ஒரு காலத்தில் கோலாட்சி முறையே சிறந்ததெனக் கொள்ளப்பட்டது; இன்று குடியாட்சி முறையே சிறப்பானதெனக் கொள்ளப்படுகிறது. நாளை இதனினும் வேறான ஓர் ஆட்சிமுறை ஏன் தோன்ற முடியாது? அல்லது பழைய கோலாட்சி முறைக்கோ, காட்டாட்சி முறைக்கோ மனித இனம் திரும்பிச் செல்லாது என்பது என்ன நிச்சயம்? மனித இனம் அநாகரிகத்திலிருந்து நாகரிகமடைவதும், பின்னர் நாகரிகத்திலிருந்து அநாகரிகத்துக்குத் திரும்பிப் போவதுமான ஒரு சுற்றுவட்டப் போக்கில்தானே உலக வரலாறே அமைந்திருக்கிறது?

ஜனநாயக அரசியலை மேற்கொண்டுள்ள நாம் மட்டும் இப்போது அப்படி என்ன, பிரமாதமாக வாழ்ந்து விடுகிறோம்? கோலாட்சி காலத்தில் அடிமையாக வாழ்ந்த 'கொம்பனு'க்கும், இன்றைய குடியாட்சியில் 'சுதந்திரமாக' வாழும் 'குப்பனு'க்கும் வாழ்க்கைப் பிரச்னைகளில் என்ன வித்தியாசத்தைக் குறிப்பிட்டுச் சொல்லிவிட முடியும்? ஜனநாயக யுகத்தில் வாழ்வதாகப் பெருமை பேசிக் கொள்ளும் இன்றைய மனித இனத்தால் சர்வ சக்தியுடன் உருவாக்கப் பட்டுள்ள ஐந்தாறு 'ஜனநாயகர்கள்', அணுக் குண்டுகளைக் கட்டி, உலகத்தையே அழித்து விடுவோம் என்று பயமுறுத்திக் கொண்டிருக்கவில்லையா? இந்த ஜனநாயகத் தலைவர் களுக்கும், அன்றைய தடிநாயக மன்னர்களுக்கும் என்ன வேறுபாட்டைக் காட்டிவிட முடியும்? அன்றுபோல் இன்றும் அரசியலில், சமூக சமய கலைத்துறைகளில் தனி மனித வழிபாடு இருக்கத்தானே செய்கிறது?

ஜனநாயகத்தின் பெயரால் கட்சிப் பலத்தைக் கேடயமாகக் கொண்டு உயர்ந்து நிற்கும் ஒரு சில தனி நபர்களின் கீழ்தான் ஒவ்வொரு நாட்டின் மக்களும் அடங்கி ஒடுங்கிப் பணிந்து கிடக்கிறார்கள் என்பதை மறுக்க முடியுமா? நமது எண்ணங்களையும் விருப்பு வெறுப்புகளையும் உணர்ந்த ஒரு நபரை நாம் வாழும் வட்டாரத்திலிருந்து ஜனநாயக வாக்குச்சீட்டு முறைப்படி தேர்ந்தெடுத்து மக்கள் மன்றத்துக்கு அனுப்புகிறோம் என்று வைத்துக் கொள்வோம்: அப்படி அனுப்பப்பட்டவர் பலவீனமான ஒரு கட்சியின் சார்பில் இருப்பவரானால், அவர் மூலம் வெளியாகும் நமது எண்ணங்களும் விருப்பு வெறுப்புக்களும் ஆட்சி மன்றத்தால் ஏற்கப் பெறுகின்றனவா? பெரும்பான்மை பலமுள்ள மற்றொரு கட்சி அங்கத்தினரின் கருத்தே அங்கு ஏற்கப் படுகிறது; அதை நாமும் ஏற்க வேண்டியவர்களாகிறோம். இந்த வகையில் பார்த்தால், தனியொரு மனிதனின் முடியாட்சி முறைக்கும், இந்தக் கூட்டுத் தலைவர்களின் குடியாட்சி முறைக்கும் வித்தியாசம் ஏதாவது தென்படுகிறதா?

எனவே, வெறும் வறட்டுத்தனமான அரசியல் அளவு கோலை வைத்து, நாம் வளர்ந்து வந்த வரலாற்றையும், அவற்றைப் பின்னணியாகக் கொண்டு எழுப்பப் பெறும் இலக்கிய முயற்சிகளையும் அளந்து புறக்கணிக்க முயல்வது அறிவுடைமை ஆகாது எனக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

'கல்கி' பத்திரிகையில் இந்தப் 'பத்தினிக் கோட்டம்' தொடர்கதையாக வெளிவந்து பல லட்சம் வாசகர்களால் பாராட்டப் பெற்றது. இந்நல்வாய்ப்பினை அளித்த 'கல்கி' ஆசிரியர் **திரு. சதாசிவம் அவர்களுக்கு** என் இதயங்கனிந்த நன்றி.

எனது இலக்கியப் பணிக்குப் பெருந்துணையாக இருந்துவரும் என் இனிய நண்பர் வானதி பதிப்பகத்தின் உரிமையாளர் **திரு. திருநாவுக்கரசு அவர்கள்** இந்த நூலை வெகு அழகாகத் தயாரித்து வெளியிட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு என் அன்பின் நன்றி உரியது.

**—ஜெகசிற்பியன்**

# 1

# இடம் மாறியது ஏன்?

**சு**டுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டங்கள் நிறைந்த பல்லவப் பெருநாட்டின் சோழ மண்டலக் கோநகரான பல்லவபுரத்துக்கு வடமேற்கே, காஞ்சியிலிருந்து உறையூர் செல்லும் நெடுஞ்சாலையொன்றில், நாற்புறமும் வராகச் சின்னங்களுடன் கூடிய நூலாக் கலிங்கத் திரைகளால் மூடப் பெற்றிருந்த ஓர் அழகிய சிவிகை வெகு வேகமாக வந்து கொண்டிருந்தது.

திருவாசி வடிவிலே முன்னும் பின்னுமாக வளைந்திருந்த அந்தச் சிவிகையின் நுகங்களைத் திண்தோள் வீரர்களாய் விளங்கிய அறுவர் விநய உற்சாகத்தோடு சுமந்து ‘திம், திம்’மென விரைந்து கொண்டிருந்தனர். அவர்களின் அந்த ஓட்ட நடைக்கேற்ப, காலில் அணிந்திருந்த இரும்புத் தண்டைக் காப்புகளும், கையில் பற்றியிருந்த ஈட்டிகளின் வளையங்களும் ‘ஜல், ஜல்’லென்ற ஒலியை எழுப்பின.

கோமளச் சூரியன் குட திசையில் சாயும் நேரம். மரஞ் செடி கொடிகளெல்லாம் மஞ்சள் குளித்துச் சீதளத் தென்றலில் சிகை உலர்த்தத் தொடங்கும் சமயம்.

அந்த இனிய மாலைப் போதின் பொன்னொளிப் பூச்சிலே பளபளத்து, மென்னிளங் காற்றிலே படபடத்த சிவிகையின் பட்டுத்திரையை உள்ளிருந்து நீண்ட ஓர் அழகிய பூங்கரம் மெல்ல விலக்கிப் பிடித்தது. வாளிப்பான பசுந்தண்டில் வனப்புடன் இதழ் விரித்து நிற்கும் செவ்வல்லி மலர்போல் விளங்கிய அந்தக் கரத்தின் மேலே, மொய்த்துப்

பறக்கும் கருவண்டுகளென இரு கண்கள் சுழன்று வெளியே நோக்கின. அவ்வழகிய கண்கள் சென்ற திசையிலே-

விரிந்து பரந்த விளைநிலங்களெல்லாம் வறண்டு வெடித்துக் காணப்பட்டன. தோட்டந் துரவுகளெல்லாம் தீய்ந்து காய்ந்து தோற்றமளித்தன; கனி தரும் மரங்களெல்லாம் மொட்டை மொட்டையாகப் பட்டையுரிந்து கருகிக் காட்சியளித்தன; மலர் தரும் வனங்களெல்லாம் வாடித் துவண்டு வதங்கிக் கிடந்தன. காடு கழனிகளின் புள்ளடிக்கல், திரிசூலங்கள், திருவாழிக்கல் முதலான எல்லைக் கற்களெல்லாம் தாறுமாறாகப் பிடுங்கி எறியப் பட்டு விட்டிருந்தன. அவற்றுக்கப்பால் சீர்குலைந்த ஏரிக் கரைகள், சிதிலமான மதகுகள், சேறு குழம்பிய குளங்கள், தூர்ந்து மேடான கூவல்கள்! இவற்றையொட்டி அமைந்திருந்த சில சிற்றூர்களும் பேரூர்களும் தீக்கிரையாகிய கோலத்தில் பாழ்த்துக் காணப்பட்டன. அவற்றில் குடி வாழ்ந்த மக்கள், இருக்க இடமின்றிப் பசியும் பிணியுமாக மரத்தடிகளிலும் பாதையோரங்களிலும் இடிபாடுற்ற கோயில் மண்டபங் களிலும் படுத்துக் கிடந்தனர். மற்றும் சிலர் தட்டுமுட்டுப் பொருள்களோடு ஆடுமாடுகளையும், ஞமலி கர்த்தபங்களை யும் ஓட்டிக்கொண்டு வேற்றூர்களை நோக்கிச் சாரி சாரியாகப் போய்க்கொண்டிருந்தனர். குண்டுங் குழியுமாகப் பறிந்து சீர்கேடுற்றுக் காணப்பட்ட அந்த நெடுஞ்சாலையின் இரு மருங்கிலும் வரிசை வரிசையாய் வளர்த்து விடப் பட்டிருந்த நிழல்தரு மரங்களெல்லாம் கப்புங் கிளையுமாக வெட்டிச் சாய்ந்து கிடந்தன. ஆங்காங்கே அமைக்கப் பெற்றிருந்த ஆதுல சாலைகளும், அறக் கோட்டங்களும், சுங்கச் சாவடிகளும், வழிக் காவல் நிலையங்களும், செலவுச் சத்திரங்களும், சுமைதாங்கிக் கற்களும் கவனிப்பாரற்ற நிலையில் இடிந்தும் தகர்ந்தும் பாழடைந்தும் தோற்ற மளித்தன. எங்கு பார்த்தாலும் மாண்டு மடிந்த மனித மண்டையோடுகளும், யானை குதிரை முதலானவற்றின் சிதைந்த எலும்புக் கூடுகளும் சிதறிக் கிடந்தன. அவற்றி னிடையே உடைந்து நொறுங்கிய பல்வேறு போர்க் கருவிகள்

துருப் பிடித்துக் கறுத்து மண்ணோடு மண்ணாய் மட்கிக் காணப்பட்டன.

இப்படி, அந்த எழிலார்ந்த இரு விழிகள் நோக்கிய திசையெல்லாம் பயங்கரப் பரிதாபக் காட்சிகளே பரக்கத் தோற்றமளித்தன.

இவற்றை மேலும் மேலும் பார்க்கப் பிரியப்படாத தாலோ என்னவோ, அவ்வழகிய விழிகள் இமைப் போர்வைக்குள் முடங்கின. சிவிகையின் திரையை விலக்கிப் பற்றியிருந்த செவ்வல்லி மலர்க்கரமும் அதனை இழுத்து மூடிவிட்டு மறைந்தது.

தமக்குப் பின்னால் ஏதோ ஒரு பலம் பொருந்திய புயற்காற்று தம்மை விரட்டித் தள்ளிக்கொண்டு வருவதுபோல் அத்தனை விறுவிறுப்பாக விரைந்து கொண்டிருந்த சிவிகை தூக்கிகள், ஏனோ தம் நடை வேகத்தைச் சற்றே தளர்த்திப் பயப்பிராந்தியுடன் பின்னால் திரும்பிப் பார்த்தனர்.

அந்த நெடுஞ்சாலையின் மிகத் தொலை தூரத்தில், காய்ந்த கொட்டாங்கச்சியைக் கற்பாறைமீது ஒரே சீராகத் தட்டுவது போன்ற ஓசையை எழுப்பி ஓடி வந்துகொண்டிருந்தது ஒரு செந்நிறப் புரவி. தீயை மிதித்துக் கொண்டு வருவதுபோல் ஓடிவந்த அப்புரவியின் பின்னால் அந்தத் தீயிலிருந்து எழும் புகைச் சுருளெனப் புழுதிப் படலம் கிளம்பிப் படர்ந்தது.

இந்தக் காட்சியைக் கண்ட சிவிகை தூக்கிகள் தமக்குள் ஏதோ கண்சமிக்ஞை செய்துகொண்டு முன்னிலும் அதிதுரிதமாக நடக்க ஆரம்பித்தார்கள்.

**பு**ழுதிக் கூடாரமிட்டுப் பாய்ந்தோடி வந்த புரவியின் மேல், சுமார் நாற்பது வயது மதிக்கத் தக்க ஓர் அதிகாய பாகுவான வீரர் அமர்ந்திருந்தார். பகட்டான ஆடையணி களுடன் செருக்கும் மிடுக்குமாகத் தோற்றமளித்த அவ்வீரரின் முகத்தில் இயற்கையாகவே ஒரு குரூரச் சாயல் கனன்று

காணப்பட்டது. அந்தக் குரூரத் தோற்றத்துக்கு ஏற்ப தம் குதிரையை வளியெனச் செலுத்தி வந்த அவர், சிவிகையை நெருங்கியதும் கடிவாளக் கசையை இறுகப் பற்றி முரட்டுத்தனமாக இழுத்தார். அதனால் தட்டுக் கெட்டுத் திமிறிய குதிரை பெருங் குரலெடுத்துக் கனைத்துக் கொண்டே நெம்பி நிமிர்ந்து ஒரு வட்டம் போட்டுச் சுழன்று நின்றது.

இதமாக அதன் முதுகைத் தட்டிக் கொடுத்துச் சிவிகை யோரமாகப் பெருநடை போடச் செய்த அவ்வீரர், அந்தச் சிவிகையையும் அதைத் தூக்கிச் செல்லும் ஆட்களையும் மாறி மாறி விழித்துப் பார்த்தார். பிறகு தம் இடக் காலால் சிவிகை தூக்கிகளிலொருவனின் விலாப் பக்கம் இடித்து, "ஏனடா, நாகோதரா! பொழுது சாய்வதற்குள் பல்லவ புரத்தை அடைந்துவிட வேண்டும் என்று நான் உனக்குச் சொல்ல வில்லையா? இன்னமும் இரண்டு காதத் தொலைவை வைத்து நகர்ந்து கொண்டிருக்கிறாயே!" என்று அடித்தொண்டையில் கடுகடுத்தார்.

ஏற்கெனவே கூன் விழுந்திருந்த தன் முதுகை மேலும் கூனலாக்கிக்கொண்டு கால்கள் நடுக்கமுற நடந்தவாறே ஏதோ கூற வாயெடுத்தான் நாகோதரன் என்ற அந்தச் சிவிகை தூக்கி.

அதே சமயம், வெண்முகிலை நீவிக்கொண்டு வெளிப் படும் நிறைமதிபோல் சிவிகையின் வலப் பக்கத் திரைச் சீலையைத் தன் செவ்வல்லிக் கரத்தால் விலக்கிப் பிடித்த வண்ணம் வெளியே எட்டிப் பார்த்தாள் ஓர் அதியற்புதப் பேரழகி.

புரவி மீதிருந்த வீரர் சட்டென்று கீழே குதித்திறங்கி, "இளவரசி உத்தமசீலியாருக்கு, வில்வேலியின் வணக்கம் உரித்தாகும்!" என்று பணிவுடன் தலைதாழ்த்தி நிமிர்ந்தார்.

வில்வேலி என்ற அவ்வீரரால் உத்தமசீலி என விளிக்கப்பட்ட அந்த எழிலார் இளநங்கை, "வாருங்கள் ஐயா. வணக்கம்!" என்று குழலினுமினிய குரலில் கூறித் தன் குவளை மலர்க் கண்களால் அவரை ஒரு கணம் கூர்ந்து நோக்கியவள்,

"தளபதியார் எங்களைப் பின்தொடர்ந்து வருவார் என நான் எதிர்பார்க்கவில்லையே?..." என்றாள் நெஞ்சை அள்ளும் சுந்தரப் புன்முறுவலுடன்.

இடக் கையை இடுப்பின்மேல் ஊன்றி வலக் கையால் கடிவாளக் கசையைத் துவளப் பற்றிக்கொண்டு புரவியை நடத்தியவாறு அதனுடன் கம்பீரமாக நடந்து வந்த தளபதி வில்வேலி, "ஆம், அம்மணீ! நானும்தான் இப்படிப் புறப்பட்டு வருவேன் என்பதை எதிர்பார்க்கவில்லை. நேற்றுக் காலை உங்களைக் காஞ்சியிலிருந்து பல்லவ புரத்துக்குப் பயணப் படுத்தி அனுப்பிய பின், மதியத்துக்கு மேல் உறையூரிலிருந்து உங்கள் பெரிய தந்தையாரும் எங்கள் சளுக்கியப் பேரரசரு மான இரண ரசிகர் விக்கிரமாதித்த வல்லபர் அவசரச் சேதியொன்றைத் தூதுவன் மூலம் அனுப்பிவைத்தார்..." என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே இளவரசி உத்தமசீலி குறுக்கிட்டு, "என்ன சொன்னீர்கள்? என் பெரிய தந்தையார் இப்போது உறையூரிலா இருக்கிறார்?" என்று சற்றே வியப்புடன் வினவினாள்.

"ஆம், இளவரசி! அப்படித்தான் அவர் தம் சேதியில் குறிப்பிட்டிருந்தார்."

"அவ்வாறானால் நான் இப்போது பல்லவ புரத்துக்குப் பயணமாகி வருவது அவருக்குத் தெரியாதா?"

"நன்றாகத் தெரியும், அம்மணீ! வேங்கியிலிருந்து காஞ்சி வந்து சேர்ந்திருந்த உங்களைப் பல்லவபுரத்துக்கு அனுப்பி வைக்கவேண்டுமென்பது முந்தைய திட்டம். அதன்படித்தான் நீங்களும் பயணமானீர்கள். ஆனால், மாமன்னரவர்கள் ஏனோ அந்தத் திட்டத்தை மாற்றி உங்களை நேரே உறையூருக்கு அனுப்பி வைக்குமாறு அவசரச் சேதி விடுத்து விட்டார். அதனால்தான் காஞ்சிக் கோட்டையைக் காவல் காக்கும் பொறுப்பை ஏற்றிருந்த நான், அந்தப் பொறுப்பை எங்கள் இளவரசர் விநயாதித்தரிடம் ஒப்படைத்துவிட்டு உடனே பயணமாகி இதோ வந்து சேர்ந்திருக்கிறேன்."

கண்ணிமைகள் படபடக்க அதரங்களை நெளித்துக் குவித்தபடி ஒருகணம் ஏதோ யோசனை செய்த உத்தமசீலி, "நல்ல வேளை! இந்த விவரம் தெரியாமல் நான் பல்லவ் புரத்துக்குப் போயிருந்தால் அங்கே என்னென்ன குழறுபடி களெல்லாம் ஏற்பட்டிருக்குமோ!" என்றாள் உள்ளூறப் பயந்த குரலில்.

"அப்படியெல்லாம் எதுவும் நடக்காது, இளவரசி! ஏனென்றால், பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையை இப்போது முழுக்க முழுக்கக் காவல் காத்து வருவது எங்கள் சளுக்கிய வீரர்களே. நீங்கள் அங்கு சென்றிருந்தால் அவர்கள் எல்லாவித சௌகர்யங்களும் செய்து கொடுத்து உங்களை உறையூருக்கு அனுப்பி வைத்திருப்பார்கள்" என்று பெருமையாகச் சொன்ன தளபதி வில்வேலி, "ஆயினும் நீங்கள் விவரமறியாமல் அங்கு சென்று மனத்தளவிலாவது ஒரு சிறு துன்பமும் அடையக்கூடாதே என்பதற்காகத்தான் மாமன்னரின் கட்டளைப்படி இதோ நானே உங்களைப் பின்தொடர்ந்து வந்திருக்கிறேன்" என்றார். சற்று நேரங்கழித்து மீண்டும் அவர், "ஒரு விஷயம் கேட்க மறந்து விட்டேனே!... உங்கள் தந்தையார் எங்கள் மன்னருக்கு ஏதேனும் சேதி கொடுத்தனுப்பியிருக்கிறாரா, இளவரசி?" என்று மிகவும் அக்கறையாக விசாரித்தார்.

"ஆம், ஐயா! ஒரு முக்கியமான ஓலை கொடுத்திருக் கிறார்" என்று மெல்லிய குரலில் சொன்ன உத்தமசீலி' "அது சரி, வில்வேலியாரே! பல்லவபுரத்தில் தங்கியிருந்த என் பெரிய தந்தையார் திடீரென்று உறையூருக்குச் செல்லக் காரணம் என்ன?" என்று வினவினாள்.

இதைக் கேட்டுச் சிறிதே திணறிவிட்ட சளுக்கியத் தளபதி தம்மைச் சமாளித்துக்கொண்டு, "அந்தக் காரணமா?... அது மிகச் சாதாரணமானதுதான் இளவரசி!" என்று மழுப்பலாகக் கூறிச் சிரித்தவர், சிவிகை தூக்கிகளை விறைப்பாக ஏறிட்டு நோக்கி, "பொழுது சாய்ந்துவிட்டதே போங்களடா சீக்கிரம்!" என்று கடுகடுத்தார்.

# 2

## வராகத்தை மிதித்த வாலிபன்

மேற்றிசைத் தொலை தூரத்தை அப்பால் ஓங்கி நின்ற ஞாழற்கோயில் ஒன்றின் கும்பத்துக்குப் பொற்பரி வட்டம் சூட்டிக்கொண்டிருந்தது மாலைச் சூரியன். அந்த அற்புத அழகுக் காட்சியை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டு வந்தாள் இளவரசி உத்தமசீலி.

இந்நேரம்வரை குதிரையின் கடிவாளக் கயிற்றைப் பற்றிய வண்ணம் நடந்து வந்த தளபதி வில்வேலி, அவரது விரட்டலால் விரைந்து ஓடத் தொடங்கிய சிவிகை தூக்கி களுடன் சேர்ந்து நடக்க மாட்டாமல் குதிரைமேல் தாவியேறி அமர்ந்துகொண்டார். இப்போது சிவிகையின் பக்கவாட்டி லேயே குதிரை பெருநடையிட்டுச் செல்ல ஆரம்பித்தது.

"இளவரசியாருக்கு இப்புதிய நாட்டில் இத்தனை நீண்டதூரப் பயணம் செய்வது மகிழ்ச்சி மிக்க இனிய அநுபவமாயிருக்கும்; அப்படித்தானே?" என்று கலகலப்பான குரலில் வினவினார் வில்வேலி. சற்றுமுன் அவள் கேட்ட வினாவுக்குச் சரியான மறுமொழி தராமல் மழுப்பியதை மறக்கடிப்பதற்காகவே அவர் இப்படிப் பேச்சை ஆரம்பித்தார்.

"ஆம், ஐயா! என் வாழ்நாள் முழுவதும் மறக்க முடியாத அநுபவமாகத்தான் இருக்கிறது இந்தப் பிரயாணம். ஆனால் நீங்கள் சொல்வதுபோல் இது மகிழ்ச்சி மிக்க அநுபவமல்ல; மருட்சி மிக்க அநுபவம்; துயரம் செறிந்த அநுபவம்" என்று எங்கோ பார்த்தவாறு கூறினாள் உத்தமசீலி.

திடுக்குற்றவர்போல் திரும்பிய வில்வேலி, "என்ன, இளவரசி! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று அவசரமாகக் கேட்டார்.

கண்ணொளி மங்கச் சோர்வுடன் பெருமூச்சு விட்ட உத்தமசீலி மெல்லியகுரலில் சொன்னாள்: "உண்மைதான் ஐயா! வேங்கியிலிருந்து நான் புறப்பட்டபோது இந்தப் பல்லவ நாட்டைப்பற்றி ஏதேதோ பெரிதாகக் கற்பனை பண்ணி யிருந்தேன். பாலும் தேனும் பாய்ந்தோடும் நாடு, செல்வம் கொழிக்கும் சிங்கார நாடு, காணுமிடமெல்லாம் கற்பகச் சோலைகளாகவே காட்சி தரும் நாடு-என்றெல்லாம் பலர் சொல்லக் கேட்டு, அந்த என் கற்பனைச் சித்திரத்தை மேலும் வனப்பாக்கிக்கொண்டு, அத்தகையதொரு குபேர நாட்டைக் காணப் போகிறோம் என்ற பேராவலுடன் வந்தேன். ஆனால், அந்நாட்டின் எல்லையை அடைந்தது முதலே இங்கு கண்டு வரும் காட்சிகள் அனைத்தும் எனது அந்த அழகிய கற்பனையை எள்ளி நகையாடுவதுமல்லாமல், அவை ஒவ்வொன்றும் ஒரு பயங்கர ஏமாற்றப் பேரிடியாகவே என் உள்ளத்தைக் தாக்கி வருகின்றன. இதோ, நீங்களே பாருங்களேன்! வறண்டு வெடித்த நிலங்கள்! காய்ந்து தீய்ந்த கழனிகள்; கருகித் துவண்ட தோட்டங்கள்; பட்டுப்போன மரங்கள்; பாழடைந்த குளங்கள்; சேறு குழம்பிய ஏரிகள்; சிதிலமான கிணறுகள்; இடித்து தகர்ந்த கோயில்கள்; இடிக்கப்பெற்ற மண்டபங்கள்; எரிந்துபோன வீடுகள்! இந்தப் பாழ்கடலைக் காட்சிகளைப் பார்ப்பதா மகிழ்ச்சி மிக்க இனிய அநுபவம் என்றீர்கள்?"

வில்வேலி இதைக் கேட்டு விலாப்புடைக்க நகைத்தார். கையிலிருந்த கடிவாளக் கசையால் குதிரையின் பிடரியில் அப்படியும் இப்படியுமாகச் சாடிக்கொண்டே, "ஓ, ஓ!... இளவரசியார் சொல்ல வந்த விஷயம் இதுதானா? நான் வேறு என்னவோ ஏதோ என்று பயந்தே விட்டேன்!" என்று கூறி மீண்டும் கடகடவெனச் சிரித்த அவர், சட்டென்று சிரிப்பை நிறுத்தித் தம் பருத்த உடலைப் பயங்கரமாக ஒரு குலுக்குக் குலுக்கிக்கொண்டு சினம் செறிந்த அடித்தொண்டையில்

கரகரத்தார்: "ஆம், இளவரசி! இந்தப் பல்லவ நாட்டைப்பற்றி நீங்கள் கேள்விப்பட்டவையெல்லாம் உண்மைதான். அவற்றைக்கொண்டு உங்கள் மனத்தில் தீட்டியிருந்த கற்பனை ஓவியமும் மிகையற்றதுதான். ஆனால், அந்தப் பழைய ஓவியத்தை அழித்து இன்று காணும் இப்புதிய ஓவியமாகத் தீட்டிய பெருமை உங்கள் அருமைப் பெரியப்பா விக்கிரமாதித்தவல்லபரையே சாரும்! ஆகா, இவ்வரிய இலட்சிய ஓவியத்தைக் காணவும், இதனை இந்த விதமாகத் தீட்டி முடிக்கவும் அவர் எத்தனை இரவு பகல் ஊண் உறக்கம் ஒழித்திருப்பார்; உருகிக் கண்ணீர் வடித்திருப்பார்: மறுகிமனம் வெடித்திருப்பார்? அவருடைய கனவு நனவாகி விட்டது! அவர் தீட்ட விரும்பிய இடுகாட்டு ஓவியத்தைத் தீட்டியே முடித்துவிட்டார்! வாழ்க, விக்கிரமாத்தித்தர்! வாழ்க, எங்கள் சளுக்கிய சாம்ராஜ்யம்!"

பித்தம் தலைக்கேறியவர் போல் வலக் கையை மேலுயர்த்தி உரத்தக் குரலில் இப்படிக் கூவிய வில்வேலி பெருமிதப் புன்முறுவலுடன் கம்பீரமாக நிமிர்ந்து சுற்றும் முற்றும் திரும்பிப் பார்த்தார். அவர் முகத்தில் மகிழ்ச்சியும் கோபமும் மாறி மாறிப் பரம்படித்தன. "இல்லை, இல்லை. இந்த ருத்திர ஓவியத்தை முதலில் தீட்டியவர் விக்கிரமாதித்த வல்லபவர் அல்ல; மமதை கொண்ட இப்பல்லவ நாடுதான் இத்தகையதோர் ஓவியத்தை முதன் முதலில் தீட்டிக் களித்தது. எங்கே? எப்போது? வடக்கே நருமதையாறு முதல், தெற்கே வட பெண்ணையாறுவரை விரிந்து பரந்த மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தின் கோநகரான வாதாபியில்! எங்கள் வணக்கத்துக்குரிய மாவீரர் புலிகேசியின் ஆட்சிக்காலத்தில்!... ஹா, அந்தப் பயங்கர ஓவியத்தின் பாதித் தோற்றத்தைக்கூட இன்னும் இங்கே நான் பார்க்கவில்லையே! இருக்கட்டும், இருக்கட்டும்; விரைவிலே இதை முற்றாக்கி முடிப்போம்!" - கல்லைக் கொட்டி அரைப்பது போல் பல்லைக் கரகரவெனக் கடித்துப் பிளிறிய வில்வேலி சட்டென்று திரும்பி இளவரசியைக் கனிவுடன் நோக்கி, "உத்தமசீலியாரே!

உங்களால் இந்த 'ஓவியத்தை' ரசிக்க முடியாமல் இருப்பதுபற்றி நான் வருந்தவில்லை. ஏனென்றால் இதன் மூல ஓவியத்தை நீங்கள் காணாதவர். அது வரையப்பெற்ற காலத்தில் வயிற்றுக் கருவாய்க்கூட இருந்திருக்க மாட்டீர்கள். அதனால்தான் இதன் அருமை பெருமைகளை அறிந்து அநுபவிக்க உங்களால் இயலவில்லை. ஆயினும் ஒரு வேண்டுகோள், அம்மணீ! இனி மேலாவது இம்மாதிரி காட்சிகளைக் கண்டு மருட்சியுறா தீர்கள்; மகிழ்ச்சியடையும் வகையில் மனத்தைப் பக்குவப் படுத்திக் கொள்ளுங்கள்!" என்றார் சிறுபிள்ளைக்குப் பாடம் சொல்லித் தருவது போல.

உத்தமசீலியின் அழகிய முகம் அனல்பட்ட மலரென வதங்கிச் சுருங்கியது. போர் அரக்கனின் கோர தாண்டவத் தால் பாழ்த்துக் கிடந்த அந்தப் பிரதேசத்தையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த அவள் அங்கிருந்த தன் பார்வையைப் பெயர்த்தெடுத்துக்கொண்டு திரும்பி, "ஏன் ஐயா! பல்லவ புரத்தில் தங்கியிருந்த என் பெரிய தந்தையார் ஏதோ ஒரு சிறிய காரணத்தை முன்னிட்டு உறையூருக்குப் போயிருக்கிறார் என்கிறீர்கள், அந்தக் காரணத்தை நான் அறியலாமா?" என்று இதமான குரலில் கேட்டாள்.

தளபதி வில்வேலி அவளை வியப்புடன் ஏறிட்டு நோக்கினார். பிறகு மெல்லச் சிரித்தவாறு, 'இளவரசியார் எந்த விஷயத்திலும் மிக முன்னெச்சரிக்கையோடு இருப்பார் என்று நினைக்கிறேன். கிரீட குலத்தில் பிறந்தவர்களெல்லாம் அப்படித்தான் இருக்கவேண்டும். பாராட்டுக்குரிய பயிற்சி" என்றார் கூடார்த்தமாக.

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் உங்கள் பேச்சை நான் நம்பாமல் உண்மையை ஊடுருவ முயல்கிறேன் எனக் குற்றம் சாட்டுவது போலல்லவா இருக்கிறது?" என்று வீணை முரல்வதைப்போல் நகைத்த உத்தமசீலி, "அப்படியெல்லாம் தவறாக நினைக்காதீர்கள் ஐயா! வெறும் விஷயத் தெளிவுக்காகத்தான் அந்த விவரத்தைக் கேட்டேன்" என்றாள்.

அவளுடைய பேச்சுத் திறனைக் கண்டு உள்ளூற வியந்த வில்வேலி, "அது மிகச் சாதாரணமானதுதான் இளவரசி! எங்கள் பேரரசர் விக்கிரமாதித்தர் காஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றியதும், அங்கிருந்த பல்லவ அரச குடும்பத்தினரைச் சிறைப்பிடித்துக் கொண்டுபோய்ப் பல்லவபுரம் அரண்மனையில் அடைத்து வைத்திருந்தார். அவர்களில் பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனின் தாயாரான காடவன் மாதேவி மன்னனது ஒன்றுவிட்ட தம்பியான கோவிந்தவர்மன் ஐந்து நாட்களுக்குமுன் சிறைக் காவலிலிருந்து தப்பியோடி விட்டானாம். அதனால்தான் நம் மன்னர் பிரான் தமது தற்காப்புக்காகப் பல்லவபுரத்தை விட்டு உறையூருக்குச் சென்றிருக்கிறார். தப்பிச் சென்ற இளவரசன் கோவிந்தனைப் பிடித்துவர நாலா திசைகளிலும் நம் வீரர்கள் விரைந்திருக் கிறார்கள். விரைவில் அவன் பிடிபட்டு விடுவான்" என்றார் அலட்சியமாகத் தோளைக் குலுக்கிக்கொண்டு.

இந்த விவரங்களைக் கேட்ட உத்தமசீலியின் பூவுடல் மெல்ல நடுக்கமுற்று. "அப்படியானால் பரமேசுவரவர்மன் எங்கு சிறை வைக்கப்பட்டிருக்கிறான்?" என்று அவசரமாக வினவினாள்.

"ஓ... அந்த விவரமும் இளவரசியாருக்குத் தெரிய வேண்டுமா?" என்று கேட்டு ஒரு கணம் தயங்கிய வில்வேலி, "அதுதான் இப்போது எங்கள் முன் உள்ள பெரிய பிரச்சனை! ஏனென்றால் காஞ்சிக் கோட்டையை நாங்கள் கைப்பற்றி யதுமே பரமேசுவரவர்மன் எங்கோ தலைமறைவாகி விட்டான்!" என்றார் கரகரத்த குரலில்.

உத்தமசீலி தன் இளநுங்கு மோவாயை வருடிய வண்ணம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்தாள். அவளுடைய பிரமை நிலையைக் கடைக்கண்ணால் கவனித்த வில்வேலி கடகடவெனச் சிரித்துக்கொண்டே, "இளவரசியார் எதைப் பற்றி யோசிக்கிறார் என்பதை என்னால் ஊகிக்க முடிகிறது. 'பல்லவ மன்னனும் அவனுடைய இளவலும் தலைமறைவாகி

யிருக்கும் இந்தச் சூழ்நிலையில், தாம் வந்த காரியத்தை வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியுமா' என்று யோசிக்கிறீர்கள், அப்படித்தானே?" என்று கேட்டார்.

"இல்லை, ஐயா! அதைப்பற்றியெல்லாம் நான் சிறிதும் கவலைப்படவில்லை. என் பெரிய தந்தையார் தமது பல்லாண்டு கால வெஞ்சினக் கனவு வசந்த நனவாக மாறியிருக்கும் இந்தத் தருணத்தில் இதுபோன்ற பெரிய பிரச்சனைகளைச் சமாளிக்க வேண்டிய நிலையிலிருந்தாலும், இவற்றினிடையே சிறு பெண்ணாகிய என்னைப் பற்றியும் என் வருகையைப் பற்றியும்கூட அவர் இத்தனை அக்கறை செலுத்தி உங்களை அனுப்பி வைத்திருக்கிறாரே என்பதை எண்ணித்தான் வியந்துகொண்டிருக்கிறேன்."

"உண்மைதான், இளவரசி!" என்று உற்சாகத்தோடு தலையசைத்த வில்வேலி தொடர்ந்து சொன்னார்: "ஆனால் உங்கள் மீதும் உங்களின் அருமைத் தந்தையார் விஷ்ணு வர்த்தனர் மீதும் எங்கள் மாமன்னர் விக்கிரமாதித்தர் வைத்திருக்கும் பேரன்பு எத்தகையது என்பதை அறிந்தவர்கள் இதுபற்றிச் சிறிதும் வியப்படைய மாட்டார்கள். இந்த மாசற்ற அன்பு இன்று நேற்று ஏற்பட்டதா? மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தை உருவாக்கித் தந்து காலஞ்சென்ற எங்கள் பேரரசர் புலிகேசியவர்கள், தமது சாம்ராஜ்யத்தின் கிழக்குப் பகுதியை ஒரு தனி நாடாகப் பிரித்து, தம் முதல் தம்பியாரான குப்ஜ விஷ்ணுவர்த்தனரிடம் கொடுத்து அசலபுரத்தைத் தலைநகராகக்கொண்டு ஆளும்படி செய்தது போல, மாண்டொழிந்த மகேந்திர பல்லவனிடமிருந்து கைப்பற்றிய ஆந்திர நாட்டைத் தம் ஆளுகைக்குள் வைத்துக் கொள்ளாமல் அதனை அவரது இளைய தம்பியும் உங்கள் பாட்டனாருமான முதலாம் விஷ்ணுவர்த்தனரிடம் ஒப்படைத்து வேங்கியைத் தலைநகராகக்கொண்டு ஆளும்படி செய்தாரே, அன்று வேர் பாய்ந்த அன்பாயிற்றே இது! மாமன்னர் புலிகேசிக்குப் பின் அவரது வீரப் புதல்வரான எங்கள் விக்கிரமாதித்த வல்லபர்

சளுக்கிய பார்த்திபரானார்; முதலாம் விஷ்ணுவர்த்தனருக்குப் பின் அவரது அருமைச் செல்வரான உங்கள் தந்தை இரண்டாம் விஷ்ணுவர்த்தனர் ஆந்திர நாட்டின் அரச ரானார். ஆயினும் அவர்கள் தம் தந்தையாரிடையே நிலவிய அன்பின் உறவை எந்தக் காரணத்தைக் கொண்டும் வழுவ விடாமல் இன்றளவும் தமக்குள் வளர்த்தே வருகிறார்கள். இதற்கு எத்தனையோ எடுத்துக்காட்டுகள் உண்டு என்றாலும், இப்போதைக்கு ஒன்றை மட்டும் கூறுகிறேன்: குலப்பழி தீர்க்கும் குறிக்கோளுடன், சாவா வாழ்வா என்ற வினாவோடு இந்தப் பல்லவ நாட்டின்மீது படையெடுத்து வந்த எங்கள் மாமன்னர் விக்கிரமாதித்தர், தேவையிருந்தும் கூடத் தம் ஒன்றுவிட்ட தம்பியர் விஷ்ணுவர்த்தனிடம் படையுதவியோ பொருளுதவியோ கோரவில்லை; அவரை அந்தப் போரில் ஈடுபடச் செய்யவுமில்லை. காரணம், தம்பொருட்டுத் தம் தம்பியும் அவரது நாடும் வீண் சிரமங்களுக்கு உள்ளாகக் கூடாது என்ற அன்பின் பெருநோக்குதான். இவையெல்லாம் ஒருபுறமிருந்தாலும், பெண் மகப்பேறு பெறாத எங்கள் மாமன்னர் உங்களைத்தான் தம் சொந்த மகளாக எண்ணிப் பேரன்பு செலுத்தி வருகிறார். அதிலும் நீங்கள் இந்தப் பல்லவ நாட்டிலே மேற்கொள்ள வந்திருக்கும் காரியம் அவர் மனத்தை வெகுவாக ஈர்த்துள்ளது. எனவேதான் எத்தனை-எத்தனையோ அலுவல்கள் இருந்தும் கூட, அவற்றினிடையே உங்களைப் பற்றியும் இவ்வளவு அக்கறை காட்டுகிறார் அவர்."

வில்வேலியின் பேச்சை வெகு கவனமாகக் கேட்டு மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்திருந்த உத்தமசீலி, தான் அமர்ந்து வந்த சிவிகை ஏனோ நின்று போனதை உணர்ந்து அவசரமாக வெளியே எட்டிப் பார்த்தாள்.

யோகியரின் உள்ளம்போல் நீண்டு சென்ற அந்த நெடுஞ் சாலை ஓரிடத்தில் திரிசூல வடிவிலே மூன்று கிளைகளாகப் பிரிய, அம்முச்சந்தியில் தயங்கி நின்று கொண்டிருந்தனர் சிவிகை தூக்கிகள், அவர்களிடம் ஏதோ அதட்டிக் கேட்டுக்

கொண்டே முன்னால் சென்ற வில்வேலி திகைப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தார்.

"நாகோதரா! என்ன நடந்தது? ஏன் இங்கே நின்று விட்டாய்?" என்று சற்றே குழம்பிய குரலில் கேட்டாள் உத்தமசீலி.

"ஒன்றுமில்லை, இளவரசி!... இந்த மூன்று பாதைகளில் எந்தப் பாதையிலே திரும்பி, உறையூருக்குச் செல்வதென்று தெரியவில்லை. அதனால்தான்..." என்று அச்சம் கலந்த பணிவுடன் இழுத்தான் நாகோதரன்.

"தளபதியாருக்கும் அது தெரியவில்லையா?"

"ஆம், தேவி! அவரும் இந்தப் பாதையில் இன்றுதான் முதன்முதலாக வருகிறாராம்."

சிவிகையின் நாற்புறத் திரைகளையும் விலக்கிவிட்டுச் சுற்றிலும் திரும்பிப் பார்த்தாள் உத்தமசீலி. கண்ணுக் கெட்டிய தூரம்வரை பாழ்த்துக் காணப்பட்ட அந்தப் பிரதேசத்தில் மனித நடமாட்டமே தென்படவில்லை. மாலைச் சூரியன் மறைந்து, பையப் பைய இருள் சூழ்ந்தும் வந்துகொண் டிருந்தது.

முச்சந்தியில் நின்று அங்குமிங்குமாகப் பார்த்துக் கொண்டிருந்த வில்வேலி ஏதோ ஒரு முடிவுடன் அவசரமாய்ச் சிவிகையை நோக்கி வந்தார். "இளவரசி, இங்கே எதிர்பாராத விதமாகப் பாதைக் குழப்பம் ஏற்பட்டுவிட்டது. சிரமம் கருதாது ஒரு சில விநாடிகள் பொறுத்திருங்கள். அதோ தெரியும் அந்தச் சிற்றூருக்குப் போய் யாராவது ஒரு வழிகாட்டியைத் தேடிப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து விடுகிறேன்" என்று சொல்லி விரைந்தார்.

மனிதவாடையே அற்றுப்போய் வெறிச்சோடிக் கிடந்தது அந்தச் சிற்றூர். இடிந்தும் எரிந்தும் பாழடைந்தும் காணப்பட்ட இல்லங்கள் ஒவ்வொன்றையும் பார்த்தவாறே தெருத் தெருவாகச் சுற்றி வந்தார் சளுக்கிய தளபதி

வில்வேலி. வலைபோட்டுச் சலிப்பதுபோல் தேடிப்பார்த்தும் ஓர் ஆளைக்கூட அவரால் கண்டுபிடிக்க முடியவில்லை. எங்கேனும் ஓரிடத்தில் யாராவது ஒரு மனித உருவம் தென்பட்டு, அங்கே அவர் விரைவதற்குள் அவ்வுருவம் மாயமாய் மறைந்துவிடும். இது அவருக்குப் புதிய அநுபவம் அல்ல, பல்லவக் குடிமக்கள் சளுக்கிய வீரர்களைக் கண்டாலே குலை நடுங்கி ஓட்டம் பிடித்து ஒளிந்து கொள்வதை அவர் பல தினங்களாகப் பார்த்து வருகிறார். அப்போதெல்லாம் அந்தக் காட்சி அவருக்குப் பெருமையாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்தது. ஆனால் இப்போதோ, அது வேதனையையும் தவிப்பையும் அளித்தது. என்ன செய்வது என்று தெரியாமல் குழம்பிச் சோர்ந்தார் வில்வேலி.

இருள் திரை மெல்ல மெல்ல விரியத் தொடங்கியது. இந்த இருட்டும் வேளையில், அங்கே நடுச் சாலையில் வேங்கி இளவரசியை நிற்கவைத்துவிட்டு வந்திருக்கிறோமே என்ற நினைவு வேறு அவர் மனத்தை அச்சுறுத்தியது. இருளின் கருமை தடிக்கத் தடிக்க, அச்சிற்றூரில் சீரழிந்த தெருக்களில் குதிரையைச் செலுத்திச் செல்வதே அவருக்குச் சிரமமாக இருந்தது. இன்னும் கொஞ்ச நேரம் இப்படியே சுற்றியலைந்து கொண்டிருந்தால் அப்புறம் அங்கிருந்து அந்த நெடுஞ் சாலைக்கு வழி கண்டுபிடித்துப் போவதே தடுமாற்றமாகி விடும்போல் தோன்றியது. ஆயினும் அம்முச்சந்தியில் பிரியும் சாலைகளின் விவரம் அறிய யாராவது ஓர் ஆளைக் கண்டு பிடித்தாக வேண்டுமே!

மேற்றிசையின் தொலை தூரத்துக்கு அப்பால் மற்றொரு சிற்றூர் புகைமூட்டத் தோற்றத்தில் தென்பட்டது. அச் சிற்றூரை நோக்கிப் புரவியைத் திருப்பிக்கொண்டு விரைந்தார் வில்வேலி.

சுமார் முந்நூறு குடிதாங்கிக்கோல் தூரம் சென்ற அவர், சட்டென்று தம் குதிரையை இழுந்துப் பிடித்துக்கொண்டு கீழே குதித்தார். காரணம், அச்சிறிய பாதையின் இடப்பக்க

வாட்டில் சுமைதாங்கி கல் ஒன்று இருப்பது தெரிந்தது. அந்தக் கல்லின் மேல் யாரோ ஒருவன் படுத்துக்கொண்டிருப்பதும் புலப்பட்டது.

இந்த வேளைகெட்ட வேளையில் யார் அங்கே தன்னந்தனியாகப் படுத்திருப்பான் என்ற யோசனையில் தயங்கி நின்ற வில்வேலி, வீடு வாசல் இழந்த யாரேனும் ஒரு கிராம வாசியாக இருப்பான் என்ற முடிவுடன், அவனை எழுப்பி அந்த முச்சந்திச் சாலையின் போக்கு விவரத்தை அறியத் தமது குதிரையைச் சற்றுத் தொலைவிலேயே நிறுத்தி விட்டு, அச்சுமை தாங்கிக் கல்லை நோக்கி ஓசைப்படாமல் நடந்து போய், அங்கு படுத்துக்கிடந்த மனிதனை உற்றுப் பார்த்தார்.

ஆடு மேய்க்கும் இடையன்போல் தோற்றம் அளித்த ஒரு வாலிபன் இடக்கையை மடித்துத் தலைக்கு அணையாக வைத்துக்கொண்டு, இரு கால்களையும் நெடுக நீட்டி ஒருக்களித்துப் படுத்துக் கிடந்தன. அவனுடைய வலக்கை அணைப்பில் துரட்டுக் கத்தியுடன் கூடிய ஒரு நீண்ட மூங்கில் கழி இருந்தது.

தன்னை மறந்த உறக்கத்தில் லயித்துக் கிடந்த அவ்வாலிபனை தலைமுதல் கால்வரையில் உற்றுப் பார்த்து வந்த வில்வேலி, ஏதோ தீயை மிதித்தவர்போல் திடுக்குற்று ஓரடி பின்னால் நகர்ந்து, பரபரப்புடன் மீண்டும் கூர்ந்து நோக்கினார்.

வாலிபன் அணைத்துப் பற்றியிருந்த நீண்ட கழியின் பின் முனையில், வராகச் சின்னம் பொறித்த கொடியொன்று கட்டப் பெற்றிருந்தது. அழுக்கேறிக் கிழிந்த அந்தக் கொடித் துணியை விரித்து அதன்மேல் தன் இரு கால்களையும் நீட்டிச் சுகமாக நித்திரையில் ஆழ்ந்து கிடந்தான் அவன்.

# 3

# முச்சந்தியில் முடுமந்திரம்

**வி**ல்வேலிக்கு உடம்பெல்லாம் எரிந்தது. "மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தின் வீறார்ந்த வராகக் கொடியை, கேவலம் ஓர் இடையன்-அதிலும் குடிமையுரிமையைப் பறிகொடுத்துவிட்ட ஓர் அடிமை மகன்-தன் காலடியில் விரித்துப் போட்டுப் படுத்திருப்பதா? செம்மண் புழுதி படிந்த சுமைதாங்கிக் கல்லின்மேல் தலையையும் உடம்பையும் வெறுமனே உருட்டிவிட்டுக் காலுக்கு மட்டும் விரிப்பாக இக்கொடியை இவன் பயன்படுத்தியிருப்பதற்குக் காரணம் என்னவாயிருக்கும்? கைக்குக் கிடைத்ததை ஏதோ துணியாக எண்ணி அதை விரித்துப் போட்டுப் படுத்த பின், தூக்கக் கிறக்கத்தில் அது தானாகவே நழுவிச் சுருண்டு காலடிக்குப் போய் விட்டிருக்குமா? அல்லது சளுக்கிய நாட்டின்மீது கொண்ட வன்மத்தால் அதன் கொடியை அவமதிக்க வேண்டு மென்ற வெறியுணர்ச்சியுடன் இப்படிச் செய்திருப்பானா? தலை சாய்த்துப்படுக்க இடமின்றிப்போன தரித்திர நிலையில் தன்னந் தனியாக உறங்கும் வேளையிலும் இவனுடைய அந்நிய எதிர்ப்புணர்ச்சி இத்தன்மையதாய்ச் செயல்படு மாயின் இவன் எவ்வளவு பெரிய குடிமைப்பற்றுக் கொண்ட பயங்கர வெறியனாயிருப்பான்?...'

அனல் துண்டங்களெனப் பழுத்துச் சிவந்த கண்களை உருட்டி விழித்துப் பார்த்துக் கொண்டு நின்ற தளபதி வில்வேலியின் மனம், கட்டுமீறிய சினத்தால் குமுறிக் கொந்தளித்தது. தாம் வந்த காரியத்தையும் மறந்து, அந்த வாலிபனை அக்கணமே இரு துண்டங்களாக வெட்டியெறிய

வேண்டுமென்ற கோபாவேசத்துடன் உடையவாளை உருவப் பின்னால் நகர்ந்தார்.

அதே சமயம்–

“வாழ்க, வராகக் கொடி! ஓங்குக சளுக்கிய சாம்ராஜ்யம்!” என்று கனவில் உளறுபவனைப்போல் உளறிக்கொண்டே புரண்டு படுத்த அந்த வாலிபன், மீண்டும் குறட்டைவிட்டுத் தூங்க ஆரம்பித்தான்.

இதைக் கேட்டுத் திடுக்குற்ற வில்வேலி, உருவிய வாளைச் சட்டென்று உறையிலிட்டுவிட்டு, உடலும் மனமும் சில்லிட அவ்வாலிபனை உற்று நோக்கினார். ஒரு கணம் அவருக்கு ஒன்றுமே புரியவில்லை. பிறகு ஏதோ முடிவுக்கு வந்தராய் இரு கைகளையும் இடுப்பின்மேல் ஊன்றிக் கொண்டு செருக்கும் மிடுக்குமாகத் தலை நிமிர்ந்து காட்டுப்பன்றி உறுமுவது போல் ஒரு கனைப்புக் கனைத்தார்.

அந்தக் கனைப்பொலியால் உலுப்பப்பட்ட வாலிபன் பதறியடித்துக்கொண்டு எழுந்து உட்கார்ந்து, நெடுமரம் போல் நின்ற வில்வேலியைத் திருதிருவெனவிழித்துப் பார்த்தான். மறுகணம், தன் காலடியில் கிடந்த கொடிக் கம்பைத் தூக்கிப்பிடித்தவண்ணம், “வாழ்க, வராகக்கொடி! ஓங்குக, சளுக்கிய சாம்ராஜ்யம்!” என உரத்த குரலில் கூவிக் கொண்டே சுமைதாங்கிக் கல்லின் மேலிருந்து கீழே தாவிக் குதித்துத் தலைதெறிக்க ஓட ஆரம்பித்தான்.

இதைக் கண்டு அம்பெனப் பாய்ந்து சென்ற வில்வேலி அவனை வெடுக்கென்று பற்றி இழுத்து நிறுத்தினார்.

வெலவெலத்து நின்ற வாலிபன் அவரைப் பயப்பிராந்தியுடன் மேலுங்கீழுமாகப் பார்த்துக்கொண்டே நடுங்கும் குரலில், “ஐயா, பல்லவ வீரரே! தயவுசெய்து என்னை ஒன்றும் செய்யாதீர்கள். குற்றத்தை ஒப்புக் கொள்கிறேன். நான் உங்கள் பல்லவ நாட்டின் துரோகியாகிவிட்டது உண்மை தான். வீரச் சளுக்கிய மாமன்னர் விக்கிரமாதித்தரே இப்போது

என் தலைவர். அவரது குடிமகனாயிருப்பதில் நான் பெருமையடைகிறேன்” என்று உளறினாள்.

வில்வேலிக்கு ஒரே வியப்பாகிவிட்டது. அவர் அவனைக் குறுகுறுவென உறுத்துப் பார்த்தார்.

சற்றே தெம்பு பெற்றவன்போல் கொடிக்கம்பை இறுகப் பற்றிக்கொண்டு நிமிர்ந்து நின்ற வாலிபன், “ஏனய்யா பல்லவ வீரரே? இந்த ஏழை இடையனின் பேச்சைக் கேட்டு ஏன் இப்படித் திகைத்து நிற்கிறீர்? வெட்கப்படுகிறீரா? வேதனை யடைகிறீரா? அல்லது கோபத்தால் குமுறிக் கொந்தளிக் கிறீரா? எதுவானாலும் எனக்குக் கவலை இல்லை; ஏனென்றால், நான் உயிருக்குத் துணிந்தவன்!'' என்று அலட்சியமாகக் கூறி முகத்தை வெடுக்கென வேறு புறம் திரும்பிக்கொண்டான்.

ஓரடி முன்சென்ற வில்வேலி அவன் தோளைப் பிடித்துக் குலுக்கி, “ஏய்! என்ன கதை அளக்கிறாய்? யார் நீ” என்று அடித்தொண்டையில் அதட்டிக் கேட்டார்.

''வாழ்க வராகக் கொடி! ஓங்குக சளுக்கிய சாம்ராஜ்யம்!” என்று கொடிக் கம்பை உயர்த்திப் பிடித்துக் கூவிய வாலிபன், விறைப்பாகத் திரும்பி அலட்சியமாகச் சிரித்துக்கொண்டே, “நல்ல கேள்வி கேட்டீரய்யா, பல்லவ வீரரே! அந்நியரிடம் நாட்டைப் பறிகொடுத்து விட்டதால் நாங்களெல்லாம் அந்நியராகி விட்டோம்-அதனால்தான் என்னைப் பார்த்து, “யார் நீ' என்று கேட்கிறீர்- அப்படித் தானே? என்னைப் பொறுத்தவரையில் நீர் நினைப்பது முற்றும் சரியே! என்போன்று இன்னும் எத்தனை யெத்தனையோ வாலிபர்கள் உமக்கும் உமது பல்லவ நாட்டுக்கும் அந்நியராகிச் சர்வ வல்லமை பொருந்திய சளுக்கிய விக்கிரமாதித்தரைத் தாங்கள் வீரத் தலைவராக ஏற்றுக்கொண்ட சேதியை விரைவில் கேள்விப்படத்தான் போகிறீர்” என்றான். “ஹ்ம்! வீரராம் வீரர்! போர் முனையில் புறமுதுகிட்டு ஓடிய கோழை மன்னன் பரமேசுவரனிடம்

கைகட்டிச் சேவகம் செய்த போலி வீரர்தானே நீர்? அதனால் தான் போர்க் களத்தில் காட்டியிருக்க வேண்டிய வீரப்பிரதாபங்களையெல்லாம் போக்கற்றுக் கிடக்கும் என்போன்ற ஏழைக் குடிமக்களிடம் காட்ட வந்திருக்கிறீர்! போமய்யா போம்! மாமன்னர் விக்கிரமாதித்தரிடம் மண்டியிட்டு மன்னிப்புக் கோரி, பிழைக்கும் வழியைக் பார்த்துக் கொள்ளும், போம்! அதுதான் புத்திசாலித்தனம்!"– வெறுப்புடன் இப்படிச் சொல்லித் தன் தோளைக் குலுக்கிக் கொண்ட அவன் பழையடி படுத்துறங்கச் சுமைதாங்கிக் கல்லை நோக்கி நடக்க முற்பட்டான்.

சினந்து கிடந்த வில்வேலியின் நெஞ்சம் இப்போது மகிழ்ச்சியால் மலர்ந்து குளிர்ந்து. பரிவுடன் அவ்வாலிபனைப் பார்த்த அவர், "தம்பி, பாராட்டுகிறேன் உனது நேர்மைப் புத்தியை! நீ நல்லவன்; மிக மிக நல்லவன்!'' என்று கூறிக்கொண்டே அவன் முதுகைத் தட்டிக் கொடுத்து, ‘ஆனால், ஒரு சந்தேகம்..." என இழுத்தார்.

சட்டென்று திரும்பிய வாலிபன் அவரை வெறித்து நோக்கினான்.

"ஆமாம்; இந்த வராகக் கொடியை நீ வைத்திருப்பதன் காரணம் என்ன?"

"ஓ.....இதுகூடவா உமக்குத் தெரியவில்லை? இந்த வராக கொடியின் முன்னே விடேல் விடுகு என்னும் விடை கொடியைத் தூக்கிப் பிடிக்கச் சக்தியற்றுப்போன உம் போன்ற பல்லவ வீரர்களின் கெடுபிடுகளிலிருந்து என்னைக் காப்பாற்றிக் கொள்ளவே இதனை ஏந்தி நிற்கிறேன்! இந்த வராகக் கொடிதான் இப்போது என் உயிரைக் காத்து வரும் வஜ்ராயுதம்! எங்கே, இதை எதிர்த்து நில்லும், பார்க்கலாம்? எனக்குத்தெரியாதா, இக்கொடியைக் கண்டாலே நீங்களெல் லாம் குலைநடுங்கி ஓடி ஒளியும் விஷயம்?'' என்று கூறி முகத்தைச் சுளித்த வாலிபன், சட்டெனத் தன் கையிலிருந்த கொடிக் கம்பை உயர்த்திப் பிடித்து, "வாழ்க, வராகம்! ஓங்குக சளுக்கிய நாடு!" என்று உரத்த குரலில் கூவினான்.

அவன் போட்ட கூச்சலில் வில்வேலியே அதிர்ந்து விட்டார். உள்ளூரப் பூரித்துப் புளகித்த அவர், "அது சரி, தம்பி! சளுக்கிய நாட்டின்மீதும் அதன் மன்னர்மீதும் இவ்வளவு பற்று வைத்திருப்பதாகச் சொல்லும் நீ, அதை நம்பும்படியாக நடந்துகொள்ளவில்லையே? உன் பேச்சு வேறு, செயல் வேறாக அல்லவா இருக்கிறது? இல்லையானால், சற்றுமுன் இந்த வராகக் கொடியைக் காலடியில் விரித்துப் போட்டுப் படுத்திருப்பாயா? உங்கள் நாட்டுக் கொடியை இப்படித்தான் நீங்களெல்லாம் உபயோகப்படுத்துவது வழக்கமா? யாரை ஏமாற்ற இம்மாதிரி வேஷம் போட்டு நடிக்கிறாய்?" என்று கேட்டார். அவரது கடைசிக் கேள்வியில் கடுமை ஏறிக் கனன்றது.

"என்ன சொன்னீர், ஐயா? என் உயிரினுமினிய இந்தக் கொடியைக் காலடியில் விரித்தா படுத்திருந்தேன்? இருக்காது; இருக்கவே முடியாது!" என்று பயந்த குரலில் குழறிய வாலிபன் சட்டென நிமிர்ந்து, "ஓ...அப்படித்தான் இருக்கட்டுமே! அதனாலென்ன தவறு? எதுவொன்றின்மீது பக்தி முற்றிப்போனால் தலைகால் தெரியாமலாகிவிடும் என்பதை நீர் கேள்விப்பட்டதில்லையா?" என்று கூறிக் கலகலவெனச் சிரித்தான்.

வில்வேலி இதைக் கேட்டு மீண்டும் மனம் குளிர்ந்தார். "மகிழ்ச்சி வாலிபனே மெத்த மகிழ்ச்சி!" என்று உற்சாகத்தோடு நகைத்தவர், "சரி; என்னுடன் புறப்பட்டு வா! உன்னால் எனக்கு ஒரு காரியம், ஆகவேண்டியிருக்கிறது" என்று பரிவுக் குரலில் அவனை அழைத்தார்.

"என்ன! உம்முடன் நான் வரவேண்டுமா? ஏன்? எதற்காக?"

"எனக்கு நீ ஓர் உதவி செய்ய வேண்டும்..."

"தெரியுமய்யா, தெரியும். என்னை எதற்காக அழைக்கிறீர் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். காஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றிப் பல்லவ நாட்டின் தென் எல்லை வரையில் திக்விஜயம் செய்து வரும் சளுக்கிய மன்னர்

விக்கிரமாதித்தரைத் திடீரென்று தாக்கிப் போரிட்டு விரட்டியடிக்க எங்கோ இரகசியப் படைதிரட்டும் வேலை நடக்கிறது; அந்தப் படையில் சேர்ப்பதற்காக என்னை அழைக்கிறீர், அப்படித்தானே? அது நடவாதய்யா, நடவாது. அதற்கு நான் ஒரு போதும் சம்மதிக்க மாட்டேன். போய் வாரும்".

வாலிபனின் இந்த முரண்டுப் பேச்சைக் கேட்டுக் கடகடவென்று நகைத்தார் வில்வேலி. "ஓகோ! அப்படியொரு முயற்சியும் ஆரம்பமாகியிருக்கிறதா? அதை முளையிலேயே கிள்ளியெறிவேன்" என்று அலட்சியமாகக் கூறிப் பேய்ச் சிரிப்புச் சிரித்தார்.

திடுக்குற்றுத் திரும்பிய வாலிபன் அவரைத் திருதிருவென விழித்துப் பார்த்தான். "என்ன சொன்னீர்கள். ஐயா? அந்த முயற்சியைக் கிள்ளி எறியப் போகிறீர்களா? அப்படியானால் நீங்கள்...யார்?"

உடல் குலுங்கச் சிரித்த வில்வேலி அமர்த்தலாகச் சொன்னார்: "பயப்படாதே, தம்பி! நான் பல்லவ வீரனல்ல; உன் வீரத் தலைவராக ஏற்றுக்கொண்டிருக்கிறாயே, அந்தப் பேரரசர் விக்கிரமாதித்தரின் பிரதம தளபதி வில்வேலி நான்!"

நடுநடுங்கிப் போன வாலிபன் இரு கைகளையும் நெஞ்சோடு குவித்துக்கொண்டு, "உண்மைதானா? என் செவியில் இப்போது விழுந்தவையெல்லாம் உண்மைதானா?" என்று குழறினான்.

மார்பை நிமிர்த்திக் கம்பீரமாக ஒரு கனைப்புக் கனைத்த வில்வேலி, "அதிர்ஷ்டக்கார வாலிபனே! நேரமாகிறது, சீக்கிரம் என்னோடு புறப்பட்டு வா!" என்றார் கட்டளையிடும் குரலில்.

"எங்கே ஐயா அழைக்கிறீர்கள்?" என்று மிகுந்த பணிவுடன் வினவினான் வாலிபன்.

"பிறகு அதைச் சொல்லுகிறேன். பேசாமல் புறப்படு."

"மறுத்துப் பேசுவதற்கு மன்னியுங்கள் ஐயா! நான் காஞ்சிக்குப் போய், சளுக்கியத் தலைவர்களைச் சந்தித்து அவர்களின் படையில் சேர்வதற்காக, என் உற்றார் உறவினர்

களையெல்லாம் விரோதித்துக்கொண்டு ஊரை விட்டுக் கிளம்பியிருக்கிறேன். விடியும்வரை இங்கே படுத்துக் கிடந்து விடிந்ததும் புறப்படுவதாகத் திட்டமிட்டிருக்கிறேன். எனவே..."

"அவ்வளவுதானே? அதைவிடச் சிறந்த பதவியில் உன்னை அமர்த்துகிறேன்! கவலைப்படாமல் என்னோடு வா!" என்று மகிழ்ச்சியுடன் சொல்லிக் கொண்டே அவ்வாலிபனின் தோளைத் தட்டி முன்னால் தள்ளிவிட்டுப் பின்னால் நடக்க ஆரம்பித்தார் தளபதி வில்வேலி.

கால்கள் பின்னலிடத் திரும்பித் திரும்பிப் பார்த்தவாறு அவரோடு நடந்தான் வாலிபன்.

அவர்கள் சென்ற சிறிது நேரங்கழித்து, அந்தச் சிறிய சாலையின் வடதிசையிலிருந்து நான்கு பேர் வெகு வேகமாக வந்தனர். சுமைதாங்கிக் கல் அருகில் நெருங்கிய அவர்கள் தயங்கி நின்று யாரையோ அவசரமாகத் தேடுவது போல் சுற்றுமுற்றும் பார்த்தனர். பிறகு அச்சுமைதாங்கிக் கல்லின் அடியிலும் பக்கவாட்டுகளிலுமாகக் குனிந்து சாய்ந்து நோக்கிவிட்டு, நால்வரும் நெருங்கி வந்து மிகத் தணிந்த குரலில் பேசினர்:

'இந்தச் சுமைதாங்கிக் கல்தானா? அல்லது..."

"சந்தேகமில்லை; இதே கல்தான். 'ஐம்பதாவது புள்ளிடிக் கல்லுக்கு நேரெதிரே உள்ள சுமைதாங்கிக் கல்' என்று ஓலையில் குறித்திருந்ததே!"

"பின்னே, அவரை இங்கு காணோமே, என்ன செய்வது?"

"நாம் முன்னதாக வந்துவிட்டோமோ, என்னவோ!"

"இல்லை; அவர் குறிப்பிட்ட நேரம் இதுதான்."

"அப்படியானால் சற்றுக் காத்திருந்து பார்ப்போமா?"

"வேண்டாம். அந்த உறையூர்ச் சாலையின் முச்சந்தியில் நாம் பார்த்த விஷயம் என்ன ஆயிற்று என்பதைக் கவனித்து விட்டுத் திரும்பி வருவோம்!"

"ஆமாம்; அதுதான் நல்ல யோசனை."

அவர்கள் நால்வரும் அங்கிருந்து புறப்பட்டனர்.

கரடு முரடான கொடிப் பாதையில் குதிரையின் கடிவாளக் கசையைப் பற்றியவண்ணம் நடந்து கொண்டிருந்த சளுக்கியத் தளபதி வில்வேலி, எதையோ நினைத்துக் கொண்டவர்போல் தமக்கு முன்னே நடந்து சென்ற வாலிபனைப் பார்த்து, "தம்பி! உனக்குக் குதிரையேற்றத்தில் பயிற்சி உண்டல்லவா?" என்று நைச்சியமான குரலில் கேட்டார்.

அவசரமாக ஏதோ சொல்ல வாயெடுத்த வாலிபன் சட்டென்று அதை நிறுத்திவிட்டு ஒரு கணம் தயங்கினான். பிறகு கைகளைப் பிசைந்து உடம்பை நெளித்துத் தலை குனிந்தவாறு, "என்னய்யா, இப்படிக் கேட்கிறீர்கள்? பிறந்தது முதல் நேற்றுவரை ஆட்டு மந்தைகளின் பின்னாலேயே சுற்றிக் கொண்டிருந்த இந்த எளிய இடையன், குதிரையேற்றப் பயிற்சி பெற முடியுமா? என் வாழ்நாளில் குதிரையைக் கண்ணால் கண்டிருப்பதே இரண்டொரு முறைதான் இருக்கும்!" என்று வெட்கக் குரலில் சொல்லிக் கொண்டே தன் அருகில் நடந்து வந்த குதிரையின் முதுகைப் பயப்பிராந்தியுடன் தொட்டுக் கண்ணில் ஒற்றிக்கொண்டான்.

ஏதோ ஒரு பெரிய இளிவரல் பேச்சைக் கேட்டவர் போல் உடல் குலுங்கச் சிரித்த வில்வேலி, "இது நல்ல வேடிக்கை!" என்று கூறி மீண்டும் நகைக்கலானார்.

"ஏனய்யா, சிரிக்கிறீர்கள்?" என்று கவலையுடன் வினவினான் வாலிபன்.

"ஒன்றுமில்லை, தம்பி! எனக்காக இவ்வளவு தூரம் நடந்து வரும் உன்னை என் குதிரைமீது ஏறி வரச் சொல்லலாமே என்பதற்காகத்தான் அப்படிக் கேட்டேன்!" என்று விஷமப் புன்னகையுடன் கூறினார் வில்வேலி.

அந்த நெடுஞ்சாலையில் அவர்கள் இருவரும் ஏறினர். வாலிபனை முந்திக்கொண்டு நோக்கி விரைந்த வில்வேலி, அங்கு இளவரசி உத்தமசீலியின் சிவிகை இல்லாததைக் கண்டு அதிர்ச்சியுற்று அப்படியே நின்று விட்டார்.

# 4

# பட்டோலை கண்டான்

'இளவரசியின் சிவிகை எங்கே? அவள் எங்கு போய் இருப்பாள்? நான் திரும்பி வர நேரமானதால் பொறுமை யிழந்து இம்முச்சந்தியில் பிரியும் மூன்று சாலைகளில் ஏதேனும் ஒன்றைப் பற்றித் தன் பிரயாணத்தைத் தொடர்ந்து விட்டிருப்பாளா? அல்லது வழிப்போக்கர் யாரிடமாவது விவரம் கேட்டறிந்து உறையூருக்குப் புறப்பட்டு விட்டிருப் பாளா?'

குழம்பித் தவித்தார் வில்வேலி. பரபரப்புடன் அங்குமிங்குமாக ஓடிப் பார்த்தார். காரிருள் சொரியத் தொடங்கிய அந்த முன்னிரவு நேரத்தில், கட்புலனைக் கொண்டு சாலைகளின் தொலைதூரத்தைத் துழாவிக் கணிக்க அவரால் இயலவில்லை. தலையைத் தாங்கிப் பிடித்த வண்ணம் முச்சந்தியின் நடுவில் மரமாய்ச் சமைந்து நின்றுவிட்டார்.

'எந்தப் பக்கம் இளவரசியைத் தேடிப் போவது? வளைவாழ் எலிகள்போல் தலைமறைவாகச் சுற்றி திரியும் எதிரிகளில் யாரேனும் அவளைக் கடத்திச் சென்று விட்டிருப் பார்களோ? இப்படி நடக்கும் என்று தெரிந்துதான் மாமன்னர் விக்கிரமாதித்தர் முன்னெச்சரிக்கையாக எனக்கு ஓலை அனுப்பினாரோ? ஆந்திர இளவரசியின் மூலம் இந்தப் பல்லவ நாட்டில் ஏதேதோ பெரிய காரியங்களைச் சாதிக்கத் திட்டமிட்டிருக்கும் அவர், இந்தச் சேதியைக் கேள்விப் பட்டால் எரிமலையாகி விடுவாரே! ஆந்திர மன்னர்

விஷ்ணுவர்த்தனருக்குத் தெரிந்தாலோ ஒரு பெரிய அரசியல் நெருக்கடியே ஏற்பட்டு, தாயாதிகளுக்குள் போர் மூண்டு விடுமே? இவ்வளவுக்கும் காரணமான என் கதி என்ன ஆகும்?'

சாட்டையடி பட்டவர்போல் உடம்பை நெளித்துக் கொண்டு திரும்பி ஓடி வந்தார் தளபதி வில்வேலி.

சாலையின் ஓரம் வியப்பும் திகைப்புமாக நின்று கொண்டிருந்த வாலிபன், "என்ன ஐயா, யாரைத் தேடு கிறீர்கள்?" என்று வெகு அக்கறையாகக் கேட்டுக்கொண்டே முன்னால் வந்தான்.

மேல்மூச்சு வாங்க விரைந்து வந்த வில்வேலி, "சீக்கிரம் சொல்! இந்த முச்சந்தியில் பிரியும் மூன்று சாலைகளும் எந்தெந்த ஊருக்குப் போகின்றன?" என்று படபடத்த குரலில் வினவினார்.

ஒரு கணம் தயங்கிய வாலிபன் பணிவுப் புன்னகை யுடன், "என்னை ஏதோ காரியமாக அழைத்து வந்தீர்களே. அதைச் சொல்லுங்கள் ஐயா!" என்று கேட்டான்.

வில்வேலிக்குக் கோபம் குமுறிவிட்டது. முரட்டுத் தனமாக அவன் தோளைப் பிடித்துக் குலுக்கி, "ஏய்! நான் கேட்கும் விவரத்தைச் சொல்லப் போகிறாயா, இல்லையா?" என்று உறுமிக்கொண்டே தம் உடைவாளின்மேல் கையைப் போட்டார்.

பயந்து நடுங்கிய வாலிபன் ஓரடி பின்னால் நகர்ந்து, "நீங்கள் என்ன கேட்டீர்கள் ஐயா? இந்தச் சாலைகள் எங்கெங்கு போகின்றன என்னும் விவரம்தானே?" என்று குழறினான்.

"ஆமாம், சீக்கிரம் சொல்!" என்று அதட்டினார் வில்வேலி.

தலையைச் சொறிந்தவாறு சற்று நேரம் ஏதோ யோசனை செய்த வாலிபன் சட்டென நிமிர்ந்து, "இதோ, இந்த

வலப் பக்கம் பிரியும் முதல் சாலை, பெருவளநல்லூருக்குச் செல்கிறது; அதற்கு அடுத்துப் பிரியும் நடுச்சாலை, தவத்துறை (லால்குடி) வழியாகப் பல்லவபுரம் போகிறது; அதற்கப்பால் பிரியும் மூன்றாவது சாலை உறையூருக்குச் செல்கிறது...” என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே அங்கிருந்து பாய்ந்து சென்ற வில்வேலி தம் குதிரைமீது தாவியேறினார்.

வாலிபனும் அவரைப் பின்தொடர்ந்து ஓடிக் குதிரையின் முன்னால் நின்றுகொண்டு, “ஐயா, என்னைச் சளுக்கிய படையில் சேர்த்துக்கொள்வதாகச் சொன்னீர்களே! எங்கு வந்து உங்களைச் சந்திக்கலாம்?” என்று விநயமாகக் கேட்டான்.

இதைக் காதில் வாங்கிக் கொள்ளாத வில்வேலி குதிரையைத் தட்டிவிட்டார். மறுகணம், அவ்வாலிபனை இடித்துத் தள்ளிவிட்டு, உறையூர் செல்லும் சாலையில் திரும்பி வளியென விரைந்தது புரவி.

உண்மையில் அது உறையூர் சாலைதானா?-

அலட்சியமாகப் புழுதியைத் தட்டி விட்டுக்கொண்டு எழுந்த வாலிபன் இடுப்பின்மேல் இரு கைகளையும் ஊன்றியவாறு நின்று, பேயெனப் பாய்ந்தோடும் அந்தப் புரவியையே வெறித்துப் பார்த்தான். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன்போல், கீழே கிடந்த கொடிக் கம்பை எடுத்துத் தலை கீழாகத் திருப்பிப் பிடித்துக்கொண்டு, வில்வேலி சென்ற சாலையில் அதிவேக நடைபோட்டு நடக்கலானான். அந்தக் கம்பின் அடியில் தொங்கிய வராகக் கொடி, மண் புழுதியிலே புரண்டு தேய்ந்துகொண்டு போயிற்று.

**வி**டியற்சாமத்துக் குளிர் காற்று வீசத் தொடங்கிய நேரத்தில், இரவெல்லாம் அயராது நடந்து வந்த களைப்புடன் பெருவளநல்லூர் எல்லையை அடைந்த அந்த வாலிபன், சாலையின் இடதுபுறமாக வளைந்தோடும் சிற்றாறு ஒன்றின்

மருங்கில் தன்னந்தனியே அமைந்திருந்த ஓர் அழகிய இல்லத்தை நோக்கி நடந்தான்.

சற்றுத் தூரம் சென்றவன் அங்கு ஏதோ ஓர் அதிசயக்காட்சியைக் கண்ட மாதிரி திகைத்து நின்றான். கண்களைக் கசக்கிவிட்டுக்கொண்டு பரபரப்புடன் நிமிர்ந்து பார்த்தான்.

காலைக் கருக்கல் இருட்டில் மங்கித் தோன்றிய அந்த இல்லத்தின் எதிரே, வராகச் சின்னம் பொறித்த ஒரு சிவிகை இறக்கி வைக்கப்பெற்றிருந்தது. அதற்குச் சற்று அப்பால் குதிரையொன்று மரத்தடியில் கட்டிப் போடப்பட்டிருந்தது.

சந்தேகமில்லை; அது சளுக்கியத் தளபதி வில்வேலியின் குதிரைதான்!

இந்தக் காட்சியைக் கண்ட வாலிபன் பெரியதொரு தவறு செய்து விட்டதுபோல் பதற்றத்துடன் கையை உதறியபடி பாய்ந்து போய் அந்த இல்லத்தின் வேலியோரம் மறைந்து நின்றுகொண்டு படபடக்கும் தன் நெஞ்சை அழுத்திப் பிடித்தவாறு மீண்டும் கண்களை நிமிண்டிவிட்டுக் கவனித்தான்.

வாசற்புறத்தில் இறக்கி வைக்கப்பட்டிருந்த சிவிகையின் எதிரே, அதைச் சுமக்கும் ஆட்களான அறுவர் குத்துக் காலிட்டுக் கும்பலாக உட்கார்ந்து உறங்கி விழுந்து கொண்டிருந்தனர். எளிமையில் எழில் தோன்றும் விதமாக அமைந்திருந்த அந்தச் சிறிய இல்லத்தின் வலப் பக்க அறையொன்றில் விளக்கு எரிந்துகொண்டிருப்பது, திறந்திருந்த மயில் கண் சாளரத்து வழியே தெரிந்தது.

மோதிர விரல் நுனியால் உதட்டை வருடியவாறு ஆழ்ந்த சிந்தனையுடன் அந்த இல்லத்தையே பார்த்துக் கொண்டிருந்த வாலிபன், ஏதோ ஒரு திடமான முடிவுக்கு வந்தவனாய் கைகளைத் தேய்த்துச் சூடாக்கிக்கொண்டு, மறைந்திருந்த வேலியோரமாகவே பதுங்கிப் பதுங்கிச் சென்றான்.

வேலியின் உயரம் குறைந்த ஓர் இடத்தை நெருங்கியதும் தயங்கி நின்ற அவன் சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே 'ஜிவ்'வென்று தாவி உள்ளே குதித்தான். பிறகு அங்கிருந்து முன்போலவே மலர்ச்செடி கொடிகளில் மறைந்தும் ஒளிந்தும் அச்சிவிகையை நோக்கி நகர்ந்தான்.

முட்டுக் கால்களைக் கட்டிப் பிடித்துக் குந்தியிருந்த சிவிகை தூக்கிகள், தூக்கக் கிறக்கத்தில் தலை துவளக் கிடந்தனர்.

ஓசையின்றிச் சிவிகையின் பின்புறத்தை அடைந்த வாலிபன், மூடியிருந்த திரைச் சீலையை மெல்ல விலக்கி விட்டு உள்ளே எட்டிப் பார்த்தான். ஹம்ச தூளிகா மஞ்சம் போல் அத்தனை வனப்புற விளங்கிய அச்சிவிகையின் உட்புறத்தே ஒருவரும் இல்லை. ஆனால், மத்தள வடிவிலே அமைந்த ஒரு சாய்வுத் திண்டின்மேல் பட்டோலைச் சுருள் ஒன்று கிடப்பது தெரிந்தது. ஆவலுடன் அதை எடுத்த வாலிபன், சிவிகையடியில் அப்படியே முடங்கி உட்கார்ந்து கொண்டு பரபரப்புடன் பிரித்துப் பார்த்தான். காலை இருள் கட்டுவிட்டுக் கலைந்திருந்தாலும் அதன் புகை மூட்டத்திலே அவ்வோலையில் உள்ள எழுத்துக்களைப் புலப்படுத்திக் கொள்ள முடியவில்லை.

அங்குமிங்குமாகத் திரும்பிப் பார்த்தான் வாலிபன். அறையினுள் எரிந்த அன்ன விளக்கின் ஒளி, மயில் கண் சாளரத்து வழியே கீற்றுக் கீற்றாக வெளிப்பட்டு ஒரு கொடிப் பந்தலின் அடியில் போய்த் தெறித்துக் கிடப்பது தெரிந்தது. சிவிகையின் மறைவிலிருந்து அந்த முல்லைப் பந்தலை நோக்கி நகர்ந்து சென்ற அவன், தன்னை இருளில் நன்றாகப் புதைத்துக்கொண்டு கையிலிருந்த பட்டோலைச் சுருளை மட்டும் மங்கலான அவ்வொளியிலே பிரித்துப் படித்தான்.

ஓலையில் உள்ள ஒவ்வொரு வரியைப் படிக்கும்போது அவன் முகம் சினத்தால் சிவந்து பழுத்தது. முழுதுமாகப் படித்து முடித்ததும் தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு

ஆழ்ந்து சுவாசித்தபடி மரக்கட்டைபோல் உட்கார்ந்திருந் தான். பிறகு சட்டென்று அவ்வோலைச் சுருளைத் தன் இடுப்பில் செருகிக்கொண்டான். இப்போது அவன் முகத்தில் தெளிவுடன் கலந்த இளநகையொன்று தவழ்ந்தது.

முல்லைப் பந்தலைவிட்டு இருளோடு இருளாக வெளிப்பட்ட வாலிபன், அங்கிருந்து மெல்ல நகர்ந்து, விளக்கு எரியும் அறையின் வெளிச் சுவர் ஓரம் போய் ஒட்டி ஒளிந்து நின்றுகொண்டு, மயில் கண் சாளரத்து வழியே தன் கூரிய பார்வையைச் செலுத்தினான்.

அங்கே, அந்த விசாலமான அறையின் நடுவில், ஆந்திர இளவரசி உத்தமசீலியும் தளபதி வில்வேலியும் அருகருகே அமர்ந்திருக்க, அவர்கள் எதிரே சில்லென்று பூத்து நரைத்த வெண் தாடியுடன் அமைதியே வடிவாய் உட்கார்ந்திருந்த ஒரு பெரியவர், கனிவு நிறைந்த குரலில் அவர்களிடம் ஏதோ கேட்டுக்கொண்டிருந்தார்.

# 5

# பரவாதிமல்லர் இல்லம்

அந்த எளிய இல்லத்தின் வனப்பு மிக்க அமைப்பைச் சுற்றி வளைத்துப் பார்த்தபடி மௌனமாக உட்கார்ந்திருந்தார் வில்வேலி.

தன் எதிரே அமர்ந்திருந்த பெரியவரையே ஆவல் மீதூரப் பார்த்துக்கொண்டிருந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி, "ஆம், ஐயா! அதை நினைக்க நினைக்க எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது!" என்று நெஞ்சு சிலிர்த்த குரலில் கூறினாள்.

"நானும் அதை எண்ணித்தான் வியந்து கொண்டிருக் கிறேன், இளவரசி! இப்போதெல்லாம் இம்மாதிரி விடியற் காலை நேரங்களில் நான் வெளியே எங்கும் உலாவப் போவதில்லை; காரணம், இன்றைய அரசியல் சூழ்நிலையே! என்னதான் பெரிய கலைஞனாயிருந்தாலும் நாட்டின் அன்றாட நடப்புகளைப் புறக்கணித்து வாழ்ந்துவிட முடியாதல்லவா? ஆனால் இன்றைக்கென்று ஏனோ வெள்ளி முளைத்த வேளையில் உறக்கம் தெளிந்து எழுந்து தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந்தேன். பிறகு என்னை யறியாமலே ஏதோ சிந்தனையில் சாலையிலே இறங்கி நடக்க ஆரம்பித்தேன். அப்போதுதான் சற்றும் எதிர்பாராதவிதமாக நீங்கள் எதிர்ப்பட்டு, என்னிடமே அந்தச் சாலையின் போக்கு விவரத்தைக் கேட்டீர்கள். சந்தர்ப்பம் எப்படியெல்லாம் மனிதர்களைச் சந்திக்க வைத்து விடுகிறது, பார்த்தீர்களா?" என்று மகிழ்ச்சி கலந்த மென்முறுவலுடன் சொன்னார் அந்தப் பெரியவர்.

"இதெல்லாம்கூட எனக்குப் பெரிய விஷயமாகத் தோன்றவில்லை ஐயா! முன்னதாகத் தகவல் ஏதும் அறியாமலே அந்த இடத்தில்-அந்த நேரத்தில்-திடீரென்று சந்திக்க நேர்ந்ததும், என்னுடைய குரல் ஒன்றின் மூலமே என்னை அடையாளம் தெரிந்துகொண்டு என் பெயரைச் சொல்லி அழைத்தீர்களே, அதுதான் பெரிய ஆச்சரியம்!"

"எந்தக் கலைஞனும் தன் புத்திபூர்வமாக ஏதேனும் ஓர் உருவத்தையோ குரலையோ மனத்தில் பதித்துக்கொண்டு விட்டானானால், அதை அவன் எளிதில் மறந்து விடுவதில்லை அம்மணீ!"

"முற்றும் உண்மை! ஏனென்றால், *சேதிக் கலைஞர் பரவாதிமல்லர் நீங்கள் தாம் என்பதை உங்கள் வாயாலேயே சொன்ன பிறகும், அதை நான் உறுதிப்படுத்திகொள்ள உங்களிடம் ஏதேதோ கேள்விகளெல்லாம் கேட்டுவிட்டேன் அல்லவா? அந்த அசட்டுத்தனத்தை இப்போது நினைத் தாலும் என் மனம் மிகவும் வேதனையடைகிறது."

"நல்ல வேடிக்கைதான்! இதற்கெல்லாம் வருத்தப்பட ஆரம்பித்துவிட்டால் அப்புறம் மகிழ்ச்சி அடைவதற்கென உலகில் ஒரு விஷயமும் கிடைக்காமற் போய்விடும்!" என்று மென்மையான கேலிக் குரலில் கூறிச் சிரித்த பெரியவர் மீண்டும் தொடர்ந்து சொன்னார்: "அது உங்கள் தவறல்ல, இளவரசி! இப்போதிருந்த குழப்பமான பயந்த மன நிலையில், நான் என்ன-உங்கள் தந்தையாரையே பார்க்க நேர்ந்திருந் தாலும், அவரை நீங்கள் அடையாளம் தெரிந்து கொள்ளச் சிரமப்பட்டே இருப்பீர்கள்! பத்து ஆண்டுகளுக்கு முன்னால், என் சுற்றத்தாரைப் பார்க்கவேண்டி வேங்கி நகருக்கு வந்தபோது, உங்களை நான் அரண்மனையில் வைத்து ஓரிரு முறை சந்தித்ததுதானே? அப்போது நீங்கள், ஒன்பது வயதுச் சிறுமியாய் இருந்தீர்கள். அந்தச் சிறு வயதில் பார்த்த ஒருவரை இத்தனை ஆண்டுகளுக்குப் பின்னும் இந்த அளவுக்காவது

* சேதியக் கலை—கோயில் நிர்மாணக் கலை.

நினைவில் வைத்திருக்க உங்களால் முடிந்திருக்கிறதே, இது வியப்புக்குரிய விஷயம் அல்லவா?"

"ஆம், கலைஞரே! உங்களைப்பற்றியும் உங்களிடமுள்ள சேதியக் கலைத் திறனைப் பற்றியும் என் தந்தையார் பலமுறையும், அடிக்கடி சொல்லிக்கொண்டிருப்பார் என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்த வல்லபரின் சிற்றப்பாவான மங்களேசன் என்பவர். உங்களைக்கொண்டு வாதாபியிலும், உண்டவல்லி-சித்தநகரம் முதலான இடங்களிலும் நிர்மாணித்த அற்புத சமணக் குகைக் கோயில்களை நான் நேரில் சென்று பார்த்தபோதுதான், அவருடைய கூற்று எத்தனை உண்மையானது என்பதை என்னால் நன்கு உணர முடிந்தது. இவ்வளவு பெரிய கலா வித்தகரை வேற்று நாட்டொன்றிடம் பறிகொடுத்து விட்டோமே என்ற ஆறாத் துயரம் என் தந்தையாருக்கு மட்டுமல்ல, பெரிய தந்தையார் விக்கிரமாதித்த வல்லபருக்கும், அவரது சளுக்கியக் குடிமக்களுக்குக்கும்கூட இன்னமும் இருந்தே வருகிறது.

இதைக் கேட்டுப் புன்முறுவல் பூத்துக்கொண்ட பெரியவர் இதமான குரலில் சொன்னார்: "என்னைப் பற்றித் துயரப்பட என்ன இருக்கிறது இளவரசி? நாடு, மொழி, இனம், மதம் ஆகிய அனைத்துக்கும் அப்பாற்பட்ட ஓர் எளிய கலைஞன்தானே நான்?"

"அப்படிச் சொல்லாதீர்கள், ஐயா! எங்கள் ஜன்மப் பகைவர்களான இந்தப் பல்லவர்கள் இதுவரை எங்களுக்கு எத்தனை யெத்தனையோ சிறுமைகளையும், கொடுமைகளையும் அவமானங்களையும் இழைத்திருக்கிறார்கள். எங்கள் நாட்டின் பல்வேறுபட்ட செல்வங்களையெல்லாம் கவர்ந்து வந்து எங்களை வறுமையிலும் துன்பத்திலும் ஆழ்த்தியிருக்கிறார்கள். ஆயினும், அவற்றுக்கெல்லாம் நாங்கள் எப்போதுமே கவலைப்பட்டதில்லை. ஏனென்றால், அவையெல்லாவற்றுக்குமாகச் சேர்த்து என்றைக்காவது ஒருநாள் அவர்களைப் பழி வாங்கி விடுவோம் என்ற நம்பிக்கை எங்களுக்கு இருந்தது. அதன்படி என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்த வல்லபர் இன்று இந்தப் பல்லவ

சாம்ராஜ்யத்தையே கபளீகரம் செய்து, பழிதீர்க்கும் படலத்தில் இறங்கியிருக்கிறார். ஆனால், இதனாலெல்லாம் ஈடு செய்ய முடியாத இன்னொரு பேரிழப்பை இப்பல்ல வர்கள் ஏற்படுத்தி விட்டார்களே, அதை நினைக்கும் போதுதான் எங்கள் நெஞ்சம் குமுறிக் கொந்தளிக்கிறது. ஆம், ஐயா! இன்று சளுக்கிய மாமன்னரை எதிர்த்து நிற்க மாட்டாமல் புறங்காட்டி ஓடி ஒளிந்திருக்கும் பரமேசுவரவர்மனின் பாட்டனான நரசிம்ம பல்லவன், அன்று எங்கள் அழகிய நகரமான வாதாபியைத் தீயிட்டுப் பொசுக்கிச் சாம்பலாக்கினான் அல்லவா? அத்தனை பெரிய நஷ்டத்தை உண்டாக்கிய அவன், அதோடு திரும்பவில்லை; எங்கள் செல்வத்திலெல்லாம் பெருஞ் செல்வமாய் வாதாபி நகரில் உங்களால் உருவாகி நிற்கும் அந்த ஒப்பற்ற எழிற்படைப்பான குகைக் கோயில்களைப் பார்த்து மயங்கிய அவன், அவற்றைப் பெயர்த்து எடுத்துச் செல்ல முடியாத காரணத்தால் அவைகளைச் சிருஷ்டித்த மூலகர்த்தரான உங்களையே கவர்ந்து சென்றுவிட்டான். இதனால் எங்கள் நாட்டுச் சேதியக் கலைச்செல்வமே பறிபோய் விட்டது மல்லாமல், அன்று முதல் இன்றுவரை அந்தக் கலை தலையெடுக்காமலே மறைந்துவிட்டுமிருக்கிறது. இது எங்களுக்கு எவ்வளவு பெரிய நஷ்டம்! இதற்குக் காரணமான இப்பல்லவ நாட்டை நாங்கள் எத்தனை முறை பழி தீர்த்துக் கொண்டாலும் அந்த நஷ்டத்துக்கு ஈடாகுமா? எனவேதான் இதை எண்ணியெண்ணி நாங்கள் ஆறாத் துயர் அடைகிறோம் ஐயா!'' என்று உணர்ச்சிப் பெருக்குடன் பதிலிறுத்தாள் உத்தமசீலி.

பரவாதிமல்லர் என்ற அந்தச் சேதியக் கலைஞர் தம் வெண்ணிறத் தாடியை நீவிக் கோதிக்கொண்டே அமைதி யான குரலில் சொன்னார்: “இளவரசியார் நான் சொன்னதை இன்னும் சற்று ஆழ்ந்து சிந்தித்துப் பார்க்க வேண்டும். காலத்தை எதிர்த்து நிற்கும் வல்லமை பெற்ற எந்தக் கலைச் சிருஷ்டியும் யாருக்கும் சொந்தமாவது இல்லை. அதைச் சிருஷ்டித்தவனேகூட அது சிருஷ்டியான பின் சொந்தம்

பாராட்ட முடியாது. அப்படிச் சொந்தமென எண்ணி மகிழ்ச்சியடைவதிலோ, சொந்தமில்லையெனக் கருதித் துயரடைவதிலோ பொருள் இல்லை. ஏனென்றால், அத்தகைய சிருஷ்டி, எந்த ஒரு நாட்டின் எல்லைக்குள்ளோ எந்த ஒரு வீட்டின் எல்லைக்குள்ளோ தோன்றினாலும், இறுதியில் அது உலகின் பொதுச் சொத்தாகவே ஆகிவிடுகிறது. பொதுச் சொத்து என்று ஆனபின் அதற்கு நாடு ஏது, மொழி ஏது, மதம் ஏது? எனவேதான் இத்தகையதொரு கலைச் சிருஷ்டித் தொழிலை மேற்கொண்டிருக்கும் என்னையே அந்தத் தொழிலின் தன்மைக்கேற்ப மாற்றிக்கொண்டு விட்டேன் என்கிறேன்."

ஒரு கணம் ஏதோ யோசித்துவிட்டுத் தொடர்ந்து சொன்னார் பெரியவர்: "இன்னொரு விஷயத்தையும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும், அம்மணீ! மாமல்லர் நரசிம்மவர்மர் என்னை வாதாபியிலிருந்து அழைத்து வந்த பின்னர்தான், பல்லவ நாட்டிலே குடைவரைக் கோயில்கள் அமைக்கும் கலை தோற்றுவாயாகியது என்று நீங்கள் நினைப்பது தவறு. நான் இங்கு வருவதற்கு முன்னமே, மாமல்லரின் தந்தையான மகேந்திரவர்மர் அந்தக் கலையை ஓரளவு வளர்த்தே வைத்திருந்தார். எவ்வாறெனில், அவரே அக்கலையில் முழுத் தேர்ச்சி பெற்றுச் சேதகாரியாகவும் சித்திரக்கார புலியாகவும் விளங்கினார். அவர் தொடங்கி வைத்த அந்தக் கலைப் பணியைத்தான் நான் தொடர்ந்து செய்ய முயன்றேனே தவிர, அதன் மூலப் பெருமை அவரையே சாரும். ஆந்திர இளவரசியார் மற்றுமொரு விஷயத்தையும் இங்கு தெரிந்து கொள்ள வேண்டும்; நான் வாதாபியில் இருந்திருந்தால் இதுகாறும் இக்கலைத் துறையில் எந்த அளவுச் சாதனைகள் புரிந்திருப்பேனோ அதை விட இரண்டு மடங்கு அதிகமாகச் சாதிக்க இங்கே எனக்கு ஆக்கமும் ஊக்கமும் சந்தர்ப்பமும் சுதந்திரமும் அளிக்கப்பட்டன. குறுகிய குடிமைப் பற்றைவிட்டு உலகப் பொதுநோக்கில் நின்று இதைக் கவனித்தால், மெய்யாகவே நீங்கள் துயரப்படுவதற்கு மாறாக மகிழ்ச்சியே அடைவீர்கள்."

இதுவரை இவர்கள் பேச்சில் கலந்துகொள்ளாமல் ஏதோ சிந்தனையிலிருந்த தளபதி வில்வேலி, பரவாதி மல்லரின் இந்தப் பக்குவ மொழிகளைக் கேட்டுச் செவிகசந்தவராய் முகத்தைச் சுளித்துக்கொண்டு, "சேதியக் கலைஞர் சொல்வதைப் பார்த்தால், பல்லவநாடு எங்கள் வல்லபர் காலடியில் வீழ்ந்து பட்டதை விரும்பவில்லை என்றல்லவா தோன்றுகிறது?" என்றார் அலட்சியமாக.

"நீங்கள் சொல்வதிலும் ஓரளவு உண்மை இருக்கத்தான் செய்கிறது!'' என்று பூப்போன்ற மென்மைக் குரலில் புன்னகையுடன் சொன்னார் பரவாதிமல்லர்.

உத்தமசீலியும் வில்வேலியும் இதைக் கேட்டுத் துணுக்குற்றுத் தலைநிமிர்ந்தனர். ஆனால், சேதியக் கலைஞரோ அவர்களின் அந்தத் துடிப்பு நிலையைக் கவனியாதவர்போல் மேலும் கூறினார்: "ஆம், அன்பரே! மனிதனின் கற்பனா சிந்தனைக்கும் கலை முயற்சிக்கும் ஒரு வெற்றிச் சின்னமாக இந்தப் பல்லவப் பெருநாட்டின் கடற்கரைப் பட்டினமான மாமல்லபுரத்தில் உருவாகி வரும் சிரஞ்சீவிக் கோயில்களில் சிலவற்றைப் படைத்த பெருமை எனக்கு உண்டு. மகிடாசுர மண்டபம், வராக மண்டபம், திரிமூர்த்தி மண்டபம் ஆகிய மூன்று குகைக் கோயில்களையும், ஒரே கல்லைக் கொண்டு புத்தம் புதிய முறையில் தேர் வடிவிலே செதுக்கி உருவாக்கிய தருமராசன் கோயில், பீமசேனன் கோயில், அர்ச்சுநன் கோயில், திரௌபதி கோயில், சகாதேவன் கோயில் முதலான ஐந்து கோயில்களையும், உயரமான இருபாறைகளில் கண்ணனின் கோவர்த்தன மலைக் காட்சி, சகரசாகர் கதைக் காட்சி ஆகியவற்றைப் புடைப்புச் சித்திரங்களாக வடித்தெடுத்ததையும் குறிப்பிட லாம். இவை, நயனாங்குரக் கோமான் மாமல்ல பல்லவரின் ஆட்சிக் காலத்திலே அவரது நேரிடைப் பார்வையில் உருவானவை. இறுதியாக அவர் மிகச் சிறந்த திட்டத்துடன் என்னைக் கொண்டு உருவாக்கத் தொடங்கிய கணேசர் கோயில் நிறைவுபெறா முன்பே வைகுந்த பதவியை அடைந்து விட்டார். அவருக்குப் பின் பல்லவ அரியணையில் அமர்ந்த

அவரது மைந்தர் இரண்டாம் மகேந்திரவர்மர் இந்த அரிய கலைப் பணிகளில் சிறிதும் நாட்டம் கொள்ளாமல் இறைவனடி சேர்ந்தார். மாமல்லர் மறைந்த பின் எனது சிற்பியக் கலைத் திறனைக் காட்ட வாய்ப்பு இன்றி, கைவிலங் கிட்டாற்போல் வீட்டோடு முடங்கிக் கிடந்த நான், பெரும்பிடுகு பரமேசுவரவர் ஆட்சிப் பீடத்தில் எறியதும் அரைகுறை உருவிலே எழும்பி நின்ற அந்தக் கணேசர் கோயிலை நிறைவாக்கி முடிக்க முன் வருவார் எனப் பேராவலுடன் எதிர்பார்த்தேன். ஆனால் என்னுடைய துரதிர்ஷ்டம் அவனை ஆட்சிப் பீடத்தை விட்டே விரட்டி யடித்து விட்டது. எனவேதான் எனது அன்னை நாடான சளுக்கியம், பல்லவ நாட்டை அடிபணிய வைத்த பேரின்பச் சேதி கேட்டுப் பெருமகிழ்ச்சி கொள்வதற்குப் பதிலாக ஆழ்ந்த துயரத்தில் மூழ்கிக் கிடக்கிறேன். எந்த மன்னன், எந்த நாட்டைக் கைப்பற்றி, எப்படி ஆண்டால் எனக்கென்ன? சாம்ராஜ்யங்கள் இன்று தோன்றலாம், நாளை அழியலாம்; பேரரசர்கள் இன்று புகழொடு வான் முகட்டில் ஏறி நிற்கலாம், நாளை பழியொடு அதல பாதாளத்தில் வீழ்ந்துபடலாம். ஆனால் என்னுடைய கலைச் சிருஷ்டிகளோ காலத்தால் அழிக்க முடியாதவை. அவற்றுக்கு ஆக்கம் தர எந்த நாடு முன்வருகிறதோ அதுவே என் தாய் நாடாக இருக்கும். அவற்றை ஆக்குவிக்க எந்த மன்னன் முன் வருகிறானோ அவனையே என் தலைவனாக ஏற்பேன். இப்போது புரிந்துகொண்டீர்களா, நான் முன்பு சொன்னதன் பொருளை?"

கசந்த நிலையில் அமர்ந்திருந்த வில்வேலியும், உத்தமசீலியும் பெரியவரின் இந்தப் பேச்சைக் கேட்டுச் சற்றே முகம் மலர்ந்தவர்களாய் நிமிர்ந்து உட்கார்ந்தனர்.

"அப்படியானால், அந்த முற்றுப் பெறாக் கணேசர் கோயிலை எங்கள் மாமன்னர் விக்கிரமாதித்தர் முழுமை யாக்க முன் வந்தால், பல்லவப் பரமேசுவரவர்மனின் தோல்வியைக் கலைஞரவர்கள் ஒப்புக்கொண்டு அதற்காக

மகிழ்ச்சியுறுவார் அல்லவா?" என்று உள்ளார்ந்த குறும்புக் குரலில் சிரித்துக் கொண்டே கேட்டார் வில்வேலி.

நாணற்பூச் செண்டுபோன்ற தம் வெண்தாடி விரிந்து பறக்கக் கலகலவெனச் சிரித்தார் பரவாதிமல்லர். "அப்படி ஓர் அதிசயம் நடக்குமானால் அதை மனப்பூர்வமாக ஏற்கச் சித்தமாக இருக்கிறேன்!"

"என் பெரிய தந்தையார்-ஏன், அவர் சார்பில் நானே அக்கோயிலை நிறைவாக்கி முடிப்பதற்கான எல்லாப் பொறுப்புகளையும் ஏற்க முன் வருகிறேன் ஐயா!" என்று மகிழ்ச்சியால் முகம் சிவக்கச் சொன்ன உத்தமசீலி, ஒரு விநாடி ஏதோ யோசித்துவிட்டுச் சட்டென நிமிர்ந்து, "ஆனால் ஒரு வேண்டுகோள்..." என்று தயங்கியபடி இழுத்தாள்.

"சொல்லுங்கள், இளவரசி!"

"கணேசர் பெயரிலே அரைகுறையாக எழும்பியிருக்கும் கோயிலை நமது சமண சமயத்தின் முழுமுதற் தெய்வமான அருகப் பெருமானின் திருப் பெயரில் உருவாக்கி முடிக்க வேண்டுமென்பதே என் வேண்டுகோள்! இதைக் கலைஞரவர்கள் ஏற்றுக்கொள்வார் அல்லவா?"

பரவாதிமல்லரின் முகம் சட்டென்று வெளுத்துச் சிறுத்தது. ஆந்திர இளவரசியையும் சளுக்கியத் தளபதியையும் மாறி மாறிப் பார்த்த அவர் பூஞ்சிரிப்புடன் அமைதியாகச் சொன்னார்: "இளவரசியாரின் சமண சமய பக்திக்கு என் சிரம் தாழ்ந்த அஞ்சலி உரித்தாகும்! ஆனால் அந்த ஒரு காரியத்தைச் செய்ய மட்டும் நான் என்றுமே உடன்பட மாட்டேன் என்பதைப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன். பிறர் உரிமைகளைப் பறிப்பதிலே பெருமை காணும் வழக்கம் அரசியலோடு நிற்கட்டும்; அது சமயத் துறையிலும் பரவிச் செல்ல வேண்டாம்."

ஏதும் பேசத் தோன்றாமல் தலை கவிழ்ந்தாள் இளவரசி உத்தமசீலி.

# 6

# ஓடையிலே குளிர் தரு!

**வி**ல்வேலியின் மனத்தில் வெறுப்புணர்ச்சி வியர்த்துக் கொட்டியது. அடிமையாய்ச் சூழ்நிலையிலேயே இருந்து பழக்கப்பட்ட அவருக்கு இங்கே இந்த மாபெரும் கலைஞரின் முன்னே குழைந்து பணிந்து கட்டுப்பட்டுப் பேசிக் கொண்டிருக்கக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. அங்கிருந்து விரைவில் புறப்பட்டு விடவேண்டும் என்று எண்ணியவராய், "அது சரி, இளவரசி! அந்த முச்சந்தியில் என்னை ஏன் அப்படி அலையவிட்டுப் புறப்பட்டீர்கள்? அதுபற்றி இந்நேரம்வரை நீங்கள் ஒன்றுமே சொல்லவில்லை!" என்று கேட்டுப் பேச்சின் திசையை மாற்றினார்.

ஏதோ சிந்தனையில் இருந்த இளவரசி உத்தமசீலி, "வருத்தப்படாதீர்கள் ஐயா! உங்களை அலைய வைக்க வேண்டுமென்பதற்காக நான் அங்கிருந்து புறப்படவில்லை. நீங்கள் வருவதற்கு முன்பே புறப்பட்டதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. அதைச் சொன்னால் நீங்களே சற்று அதிர்ச்சியடைவீர்கள்" என்று உள்ளடங்கிய கமறலுடன் கூறினாள்.

"என்ன நடந்தது இளவரசி?" என்று அவசரமாகக் கேட்டார் வில்வேலி.

"வழி விவரம் கேட்டு வருவதற்காகப் போனீர்கள் அல்லவா? நீங்கள் போன சற்றைக்கெல்லாம் அந்த நெடுஞ்சாலைப் பக்கமிருந்து இடையர்கள்போல் தோன்றிய நான்கு பேர் வெகு வேகமாக வந்தார்கள். தொலைவிலேயே

என் சிவிகையைப் பார்த்த அவர்கள் தமக்குள் ஏதோ பேசிக் கொண்டு சாலையின் இடது பக்கம் இறங்கி ஒரு புதருக்குப் பின்னால் மறைந்தார்கள். இதைச் சிவிகையினுள் இருந்த படி கவனித்த நான் கலவரமடைந்தேன். சிவிகையாட்களை எச்சரிக்கையாயிருக்கும்படி கட்டளையிட்டேன். சற்று நேரங்கழித்துப் புதரிலிருந்து வெளிப்பட்ட அந்நால்வரும் என் சிவிகையைத் திரும்பித் திரும்பிப் பார்த்தவாறு சாலையின் குறுக்காகச் சென்று ஒரு கொடிப் பாதையில் இறங்கி மேற்குத் திசை நோக்கி விரைந்தார்கள். அதற்குள் பொழுது நன்றாக இருட்டிவிட்டது. வழி கேட்கப்போன நீங்களும் வரவில்லை...” என்று மளமளவெனச் சொல்லிக் கொண்டு வந்த உத்தமசீலி சட்டென்று நிறுத்தினாள்.

இந்நேரம் அமைதியாக உட்கார்ந்திருந்த பரவாதி மல்லர் தணிந்த குரலில், “இன்று காற்று மிகவும் சில்லென்று வீசுகிறது! அடேயப்பா, என்ன குளிர்!'' என்று முணு முணுத்துக் கொண்டே எழுந்து போய் அந்த மயில் கண் சாளரத்தின் திரையை இழுத்து மூடினார்.

“ஏன் நிறுத்திவிட்டீர்கள் இளவரசி? சொல்லுங்கள்!” என்று துரிதப்படுத்தினார் தளபதி.

“காடாந்தகாரமாய் இருண்டு கிடந்தப் அந்த பயங்கரச் சூழ்நிலையில் என்னையறியாமலே என் மனத்தில் ஒருவித அச்சம் சூழ்ந்தது. அதற்கு மேலும் அங்கு இருப்பது நல்லதல்ல என்று உள்மனம் உணர்த்தவே, அம்முச்சந்தியில் பிரியும் சாலைகளில் ஏதேனும் ஒன்றைப் பற்றி பிரயாணத்தைத் தொடரும்படி சிவிகை தூக்கிகளுக்கு உத்தரவிட்டேன். விசாலமான அந்தச் சாலையின் அமைப்பைக் கொண்டு அநேகமாக அது உறையூர் சாலையாகத்தான் இருக்கும் என்று நம்பினேன். ஆனால், நேரமாக ஆக என் நம்பிக்கை நலிந்தது. உங்களைப்பற்றி கவலை மேலோங்கியது. இருக்கச் சொன்ன இடத்தில் நான் இல்லாததால், நீங்கள் என்னைத் தேடிக்கொண்டு வேறெங்கேனும் அலைந்து திரிந்து

அல்லற்படுவீர்களோ என்ற சஞ்சலம் வேறு மனத்தை வருத்தியது. வந்த வழியே திரும்பிப் போய் விடுவதா, அல்லது மேலே பயணத்தைத் தொடருவதா என்று தெரியாமல் குழம்பித் தவித்தேன். பிறகு, என்னவானாலும் சரி என்று அந்தச் சாலையிலேயே விரைந்து போகும்படி சிவிகை தூக்கிகளுக்குப் பணிந்துவிட்டு இரவெல்லாம் கண்ணயராமல் விழித்துக் கிடந்தே நேரத்தைக் கழித்தேன். வெள்ளி முளைத்த நேரத்தில் ஏதோ ஓர் ஊர் நெருங்கிக்கொண்டிருப்பது தெரிந்தது. மேலும் சற்றுத் தூரம் சென்றபோதுதான் எங்கள் எதிரே நம் சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் வந்து கொண்டிருந்தார். அவரைப் பார்த்தபோதுகூட முதலில் எனக்கு அச்சமே தோன்றியது. பிறகு ஒருவாறு தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அவரிடம் அந்தச் சாலைப்பற்றிய விவரம் கேட்டேன். அவர் சொன்ன மறுமொழி என்னைத் திடுக்கிட வைத்தது. காரணம், நான் வந்துகொண்டிருந்த சாலை பெருவளநல்லூருக்குப் போவது என்றும், அவ்வூரின் எல்லையைத் தான் இப்போது அடைந்திருப்பதாகவும் சொன்னார். அவரை இன்னாரெனத் தெரிந்து கொண்டதும் அதுவரையில் இருந்த பயம் குழப்பம் எல்லாம் போய், அவருடைய அழைப்பின் பேரில் இதோ இந்த இல்லத்துக்கு வந்து சேர்ந்திருக்கிறேன்."

சாளரத்தின் அருகில் நின்றுகொண்டிருந்த பரவாதி மல்லர் தம் இருக்கைக்குத் திரும்பி வந்து அமர்ந்தார்.

இளவரசி சொன்ன விஷயங்களைக் கேட்டு வெல வெலத்துப்போன வில்வேலி, "நான் சந்தேகப்பட்டது சரியாகவே ஆயிற்று!" என்றார் வெடிப்பும் துடிப்புமான குரலில். மீண்டும் அவர் தொடர்ந்து, "இளவரசி! நீங்கள் அம் முச்சந்தியில் எனக்காகக் காத்திராமல் உடனே புறப்பட்டு விட்டது மிகமிக நல்லதென்றே எனக்குப் படுகிறது. இல்லை யானால் நிச்சயம் உங்களுக்கு ஏதேனும் தொல்லைகள் ஏற்பட்டிருக்கும்" என்று கூறி, தாம் வழி கேட்கப் போனதிலிருந்து அந்த வாலிபனுடன் திரும்பி வந்தது

வரையில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் விவரமாகச் சொன்னார்.

"அப்படியானால் நான் பெருவளநல்லூர்ச் சாலையில் தான் போயிருப்பேன் என்பதையும், பரவாதிமல்லர் இல்லத்தில் தங்கியிருக்கிறேன் என்பதையும் நீங்கள் எவ்வாறு அத்தனை தீர்க்கமாகத் தெரிந்துகொண்டு வந்தீர்கள்?"

"அதுதான் எனக்கும் ஆச்சரியமாக இருக்கிறது அம்மணீ! அந்த வாலிபன் பெருவளநல்லூர்ச் சாலையை உறையூர்ச் சாலை என்று எனக்கு மாற்றிக் காட்டிவிட்டான். நானும் அதை நம்பி அதே சாலையில் வந்துகொண்டிருந்த போது உங்களுடைய சிவிகை இந்த இல்லத்தின் எதிரே இருப்பதைக் கண்டேன். இங்கு வந்த பிறகுதான் இது பெருவளநல்லூர் என்பதும், இந்த இல்லம் நம் சேதியக் கலைஞருடையது என்பதும் தெரிய வந்தன."

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் அந்த வாலிபன் உங்களை ஏதோ சதித் திட்டத்தோடுதான் வழி மாற்றி விட்டிருக்கிறான் என்றல்லவா எண்ணத் தோன்றுகிறது?"

"ஆம், இளவரசி! அப்படித்தான் நானும் நினைக் கிறேன்."

"பெருவளநல்லூர்ச் சாலையில் நான் போயிருக்கிறேன் என்பதை அறிந்துதான் அவன் உங்களை அதே சாலையில் தப்பி விட்டிருப்பானோ?"

"அப்படி இருக்க முடியாது. நீங்கள் உறையூர்ச் சாலையில் போயிருப்பதாக எண்ணி, உங்களை நான் பின்தொடராமல் தடுக்கவே, என்னைப் பாதை மாற்றி விட்டிருப்பான்; அல்லது அவன் உங்களைப்பற்றி ஏதும் அறியாமலே, எனக்கு மட்டும் ஏதேனும் ஆபத்தை உண்டாக்க அவ்வாறு செய்திருப்பான்."

"அந்த வாலிபன் யாராயிருப்பான்?"

"நான் வழி விவரம் கேட்பதற்காகப் போனபின் நீங்கள் பார்த்த அந்நான்கு பேரில் அவனும் ஒருவனாக இருக்கலாம்; அல்லது அவர்களுடன் சேர்ந்த ஐந்தாம் பேர்வழியாகவு மிருக்கலாம்."

ஒரு கணம் தயங்கிய உத்தமசீலி, மெல்லிய குரலில், "எனக்கென்னவோ வேறு விதமாக நினைக்கத் தோன்றுகிறது ஐயா..." என்றாள்.

"நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், இளவரசி?" என்று துடிப்புடன் வினவினார் வில்வேலி.

பரவாதிமல்லரைக் கடைக் கண்ணால் கவனித்துக் கொண்டு, "தலைமறைவாகத் திரியும் பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனாக அவன் இருப்பானோ என்று எண்ணுகிறேன்!" என்றாள் உத்தமசீலி.

சிம்ம சொப்பனம் கண்ட களிறுபோல் சிலிர்த்துப் பதறி எழுந்தார் வில்வேலி. அலைப்புறாத ஆழ்கடலென அமைதியாக வீற்றிருந்த பரவாதிமல்லரும் இந்தப் பேச்சைக் கேட்டுச் சற்றே உடல் குலுங்கி நிமிர்ந்தார்.

"இளவரசி, நாம் புறப்பட்ட வேண்டும், நேரத்தை வீணாக்காமல் இப்போதே புறப்பட வேண்டும். உங்களை உறையூரில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு, உடனடியாக அந்தச் சதிகாரர்களைக் கண்டு பிடித்து, அவர்களது திட்டத்தை முளையிலேயே கிள்ளியெறிய வேண்டும்" என்று தம்மை மீறிய பதற்றத்துடன் சொன்னார் வில்வேலி.

இளவரசி உத்தமசீலி தயக்கத்துடன் எழுந்து சேதியக் கலைஞரை அன்போடு ஏறிட்டு நோக்கி, "ஐயா, தாங்கள் செய்த பேருதவிக்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டிருக் கிறோம். இப்போதைக்கு எங்களுக்கு விடை கொடுங்கள். விரைவில் நான் தங்களை வந்து சந்திப்பேன்" என்று கரம் கூப்பினாள்.

"இளவரசியாரையும் தளபதியாரையும் இன்று சந்திக்கும் வாய்ப்பு ஏற்படுத்தித் தந்த இறைவனுக்கு நன்றி.

சென்று வாருங்கள்" என்று குளிர்ந்த புன்னகையுடன் சொல்லி விடை தந்தார் பரவாதிமல்லர்.

அறையை விட்டு வெளியே வந்த அம்மூவரும் அதிர்ச்சியுற்றவர்கள்போல் திகைத்து நின்றனர்.

காரணம், மரத்தடியில் கட்டிப் போடப் பட்டிருந்த வில்வேலியின் குதிரை மட்டுமே இருக்க, வாசலில் இறக்கி வைத்திருந்த சிவிகையைக் காணோம்!

பொழுது நன்றாகப் புலர்ந்துவிட்டது. புள்ளினங்கள் இனிய குரலெழுப்பிக் காலை ஆராதனை செய்யத் தொடங்கின.

சாந்தி தேவதையின் சயனக் கிருகம்போல் அமைந் திருந்த அந்த எழிலார்ந்த இல்லத்தின் ஓர் அறையில் தனியே வீற்றிருந்தாள் இளவரசி உத்தமசீலி.

அவள் மனம் வெகுவாகக் குழம்பிக் கிடந்தது. அந்தக் குழப்பத்திலிருந்து மீள, சாளரத்துக்கு வெளியே தெரிந்த வண்ணப் பசுங் காட்சிகளில் தன் பார்வையைச் செலுத்த முயன்றாள். என்னதான் முயன்றும் திரும்பத் திரும்ப அவள் மனம் அந்த ஒரு விஷயத்திலேயே மூட்டம் போட்டு முடங்கிச் சுருண்டது.

'என்ன இது விந்தை! வீட்டுக்குள்ளிருந்து மூன்று பேர் பேசிக் கொண்டிருக்கும் போதே வாசலில் இறக்கி வைத்திருந்த சிவிகை எப்படி மாயமாய் மறைந்திருக்கும்? சிவிகைதான் மறைந்தது என்றால் அதைச் சுமக்கும் ஆட்களையும் அல்லவா காணோம்? நேற்றிரவு நடந்த சம்பவங்களுக்கும் இந்தச் சிவிகை மறைவுக்கும் ஏதேனும் தொடர்பு இருக்குமோ? இல்லையானால் இவ்வளவு பெரிய நெஞ்சழுத்தமான சதிக் காரியத்தை யார் செய்திருப்பார்கள்? சிவிகை காணாமற் போனதுகூடப் பெரிது இல்லை; அதனுள் வைத்திருந்த பட்டோலைச் சுருளுமல்லவா பறிபோய் விட்டது! இந்த நாட்டில் இப்படியெல்லாம் நடக்கும் என்று தெரிந்திருந்தால்

இன்னுங் கொஞ்ச காலம் தாழ்ந்தே புறப்படிருக்கலாமே? அவசரப்பட்டுக் கிளம்பி வந்தது எவ்வளவு பெரிய தவறாகி விட்டது!”-

இளவரசியின் மனம் பீதியால் நடுங்கித் துடித்தது.

சிவிகை காணாமற் போனதால், மேற்கொண்டு பயணத்தைத் தொடர அவளால் இயலவில்லை. பல்லவ புரத்திலிருந்தோ உறையூரிலிருந்தோ புதிதாக ஒரு சிவிகை வரும்வரையில் பரவாதிமல்லர் இல்லத்திலேயே தான் தங்கியிருப்பதாகச் சுருக்கிய தளபதி வில்வேலியிடம் சொல்லியனுப்பியிருந்தாள். வில்வேலிக்கு இந்த யோசனை சிறிதும் பிடிக்கவில்லை. ஆனால், வேறு வழியின்றி ஒப்புதல் தந்து விட்டுப் போனார். இன்று மதியத்திற்குமேல்-அல்லது, நாளைக் காலை-அவளை ஏற்றிச் செல்ல புதிய சிவிகை வரலாம். அதுவரையில் அவள் இங்கேதான் இருந்தாக வேண்டும்.

‘ஆற்றுத் துறைக்கு நீராடச் சென்றிருக்கும் பரவாதி மல்லர் திரும்பி வந்து விட்டால், மனத்தின் இந்தக் குழப்பம் மறைந்துவிடும். எதைப்பற்றியாவது அவருடன் பேசி நேரத்தை இனிதாகக் கழித்துவிடலாம்.’

சேதியக் கலைஞரின் வருகையை ஆவலுடன் எதிர் பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தாள் உத்தமசீலி.

அந்த இல்லத்தின் வலப்பக்கம், அவள் உட்கார்ந்து பார்த்துக்கொண்டிருந்த சாளரத்துக்கு நேர் எதிரே, ஆற்றங் கரைக்குச் செல்ல ஒரு சிறிய பாதை அமைக்கப்பெற்றிருந்தது. அப்பாதையின் இருமருங்கும் அழகிய மலர்ச்செடிகள் வளர்த்து விடப்பட்டிருந்தன. சலசலத்து ஓடிய ரதிவர்ணச் சிற்றாற்றின் கரைமேட்டை அந்தப் பாதை சென்று தொடுமிடத்தில், ஓங்கி உயர்ந்து வளர்ந்து நின்றது ஒரு சவுக்கை மரம். பச்சை வர்ணம் பூசப்பெற்ற பிரும்மாண்டமான வேல் ஒன்றைப் பூமியில் நட்டு வைத்திருப்பதுபோல் தோன்றிய அந்த மரத்தில், முற்றிக் காய்ந்த சவுக்கங் காய்கள்

சரஞ்சரமாகத் தொங்கின. அம்மரத்தைத் தொலைவிலிருந்து பார்க்கும்போது, முற்றுந் துறந்த முனிவனொருவன் கழுத்து நிறைய உருத்திராக்க மணிமாலைகளை அணிந்துகொண்டு ஒற்றைக் காலில் நின்று யோக நிஷ்டையில் ஆழ்ந்திருப்பது போலத் தோன்றியது.

இந்த அற்புதக் காட்சியைப் பார்த்தவாறு உட்கார்ந் திருந்த இளவரசி உத்தமசீலி, இன்னோர் அதிசயத்தை அங்கு கண்டு விட்டவள்போல் தன் காயாம்பூக் கண்களின் இமையிதழ்களைப் படபடவெனத் தட்டிக்கொண்டே எழுந்து பரபரப்புடன் மீண்டும் நோக்கினாள்.

அங்கே நீராடி நனைந்த உடையுடன், நெற்றியில் வெண்ணீறும் கழுத்தில் உருத்திராக்க மணி மாலையுமாகச் சுந்தர புருஷனாய் விளங்கிய ஓர் இளந்துறவி, கையில் ஒரு பூக்கூடையைப் பிடித்தவண்ணம் சேதியக் கலைஞரின் இல்லத்தை நோக்கி நடந்து வந்துகொண்டிருந்தான்!

# 7

# இதய தரிசனம்

"இளவரசியாரை நீண்ட நேரம் தனிமையில் இருக்கச் செய்து விட்டேனோ!" என்று இதமான குரலில் கேட்டுக் கொண்டே அறையினுள் பிரவேசித்தார் சேதியக் கலைஞர் பாவாதிமல்லர்.

சாளரத்தருகில், செம்மலரோன் கைம்மலரால் செய்து நிறுத்திய பொற்பாவையெனத் தன்னை மறந்த நிலையில் நின்று அந்த இளந் துறவியையே கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி திடுக்குற்றுத் திரும்பினாள்.

இளநகையுடன் அவளை ஏறிட்டு நோக்கிய சேதியக் கலைஞர், "இன்று இளவரசியாருக்கு உபவாச தினமல்லவே?" என்று அன்போடு விளித்தார்.

பொன்வண்டு நயனங்கள் படபடக்க, பூ மேனி துவண்டு பதற்றமுற, ஒசிந்து ஓரடி பின்னால் நகர்ந்த உத்தமசீலி மீண்டும் தன் பார்வையைச் சாளரத்துக்கு வெளியே செலுத்தினாள். அங்கே, சற்றுமுன் பார்த்த இளந்துறவியைக் காணோம்; ஆற்றின் கரையோரம் வானோங்கித் தவக்கோலம் பூண்டு நின்ற சவுக்கை மரம் மட்டும் மேல் காற்றில் அசைந்தாடிச் சிகை உலர்த்துவது தெரிந்தது. முகம் வெளுத்துப் போன அவள் சட்டென்று தன் பார்வையைத் திருப்பிக் கொண்டு, "அ...அப்படியொன்றும் இல்லை ஐயா!" என்று குழறினாள்.

"மிக்க மகிழ்ச்சி! வாருங்கள், காலை உணவு கொள்வோம்" என்று பரிவுடன் அழைத்தார் பரவாதிமல்லர்.

தயக்கப் புன்முறுவல் பூத்தவளாய், "நான்...நான்" என்று இழுத்தாள் உத்தமசீலி.

"இளவரசியாருக்கு என்ன தயக்கம்?..... ஓ!... என் இல்லத்து உணவு, எப்படி இருக்குமோ என்று தயங்குகிறீர்களா?" என்று. கேட்டுக் கலகலவென நகைத்தார் பரவாதி மல்லர். "அந்தச் சந்தேகமே வேண்டாம். ஏனென்றால் உங்களைப் போலவே நானும் சிராவக தர்மத்தைக் கைக்கொண்டு ஒழுகும் ஒரு சமணன்தான். இங்கே ஆருகத உணவை அணுவிரதப்படி (மரக்கறி தவிர வேறெந்த உணவு வகையும் தலைகாட்ட முடியாது."

"இல்லை, ஐயா! நான் சந்தியாவந்தனம் செய்யாமல் காலை உணவு ஏற்பதில்லை. அதனால்தான்..." என்று தணிந்த குரலில் இழுத்தாள் உத்தமசீலி.

"அந்தக் கவலையும் வேண்டாம், அம்மணீ! இந்த இல்லத்தில் எனக்கென அமைத்துக்கொண்ட ஒரு பிரார்த்தனைப் பள்ளி உண்டு. அங்கு போய் உங்கள் சந்தித் தொழுகையை முடித்துக்கொண்டு வரலாம்" என்று பரிவுடன் கூறியவாறு முன்னே நடந்தார் பரவாதிமல்லர்.

மீண்டும் ஒரு முறை சாளரத்து வழியே அந்த ஆற்றோரக் கரைப் பக்கம் தன் பார்வையைச் செலுத்திய உத்தமசீலி, வாடிய முகத்தினளாய்த் திரும்பி அவரைப் பின் தொடர்ந்தாள்.

கூடத்து அறையைக் கடந்து வலப்புறமிருந்து மற்றோர் அறையை நோக்கிச் சென்ற பரவாதிமல்லர் ஏனோ தயங்கி நின்றார். தாழ் நீக்கி நடுக்களித்திருந்த அவ்வறையின் கதவை மெல்லப் பிடித்தவண்ணம் எட்டிப் பார்த்தார். ஒருகணம் ஏதோ யோசனை செய்பவர்போல் நின்ற அவர் இளநகையுடன் திரும்பி, "இதுதான் என் பிரார்த்தனைப் பள்ளியறை" என்று கூறிக்கொண்டே உள்ளே செல்ல வழி காட்டினார்.

"நன்றி, ஐயா!" என்று இனிய குரலில் சொல்லியவாறு தன் முதுகுப்புறம் சரிந்திருந்த பூந்துகிலை எடுத்துச் சிரசை மூடிக்கொண்டு பக்தி சிரத்தையுடன் அடிமேல் அடி வைத்து அவ்வறையினும் சென்றாள் உத்தமசீலி.

ஏதோ ஒரு சங்கடத்தில் சிக்கிக்கொண்டவர்போல் கைகளைப் பிசைந்தபடி தவிப்பு நிலையில் நின்ற பரவாதி மன்னர் அங்கிருந்து கூடத்தறைக்குத் திரும்பினார்.

**தூ**ய்மையும் எழிலுமாகத் துலங்கியது அந்தப் பிரார்த்தனைப் பள்ளி அறை.

அவ்வறையின் எதிர்ச்சுவரில் நீலநிறப் பட்டுத் திரையொன்று நடுநாயகமாகத் தொங்கிக் கொண்டிருந்தது. அப்பட்டுத் திரையில் பெரியதொரு *சுவஸ்திகச் சின்னம் மையப் பெற்றிருந்தது. அந்தச் சின்னத்தின் மேல்புறத்தில் குறுக்கு வரிசையாக மூன்று புள்ளிகளும், அப்புள்ளிகளுக்கு மேலே பிறைக்கோடு ஒன்றும், அப்பிறைக் கோடின்மேல் ஒரு வட்டப் புள்ளியும் பொறிக்கப் பெற்றிருந்தன. இப்புனித சின்னம் கொண்ட திரைக்கு எதிரே அமைக்கப்பெற்றிருந்த சிறியதொரு பீடத்தின்மேல் ஆதிபகவனான விருஷப தேவ தீர்த்தங்கரரின் அழகிய விக்கிரகம் பிரதிஷ்டையாகியிருந்தது.

அமைதி பூத்த மனத்தினளாய் ஆதிபகவன் முன்னே வந்து முழந்தாளிட்டு அமர்ந்த உத்தமசீலி, தன் கயல் விழிகளில்

* உயிர்கள் தாம் செய்யும் நல்வினை, தீவினைகளுக்கேற்ப தேவ கதி, மனித கதி, விலங்கு கதி, நரக கதி, என்னும் நான்கு கதிகளில் பிறந்து உழல்வதைக் குறிக்கிறது இந்த சுவஸ்திகச் சின்னம். இதனைப் பிறவிச் சக்கரம் என்றும் கூறுவதுண்டு. இப்பிறவிச் சக்கரத்துக்கு மேலே உள்ள மூன்று புள்ளிகள் நல்ஞானம், நற்காட்சி, நல்லொழுக்கம் எனும் மும்மணிகளாகக் கொள்ளப்படுகின்றன. இம் மும்மணிகளுக்கு மேலுள்ள பிறைக்கோடு மோட்சத்தையும், அப்பிறைக் கோட்டுக்கு மேலேயுள்ள ஒற்றைப்புள்ளி வினைகளை நீக்கி வீடு பேறடைந்த உயிரையும் குறிக்கின்றன. இவை கொண்ட இந்தத் தத்துவக் குறிகளே சமண சமயத்தின் தலையாய புனிதச் சின்னமாகும்.

கண்ணீர் சோர மெல்லிய குரலில் முணுமுணுத்தாள்: "பிண்டிதேவா! வரங்கள் வழங்குவது உமது தொழிலல்ல என்பதை நான் அறிவேன். ஆயினும் என் மனத் திண்மைக்காக அநுதினமும் உமது சந்நிதியில் நின்று நான் எடுத்துக் கொள்ளும் சபதத்தையே இன்றும் இங்கு மனம் திறந்து வெளியிடுகிறேன்; எந்த இலட்சியத்துக்காக வீடு வாசல் நாடு நகரங்களை விட்டு இப்புதிய நாட்டுக்கு வந்திருக்கிறேனோ அந்த இலட்சியத்தின் பொருட்டு என் உடல் பொருள் ஆவி மூன்றையும் தியாகம் செய்ய இப்போதும் தயாராயிருக்கிறேன் என்பதை உறுதியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். சரணம் ஐயனே, சரணம், சரணம்."

விநாடிகள் பல விரைந்தோடி மறைந்தன.

தரை நோக்கிச் சிரம் தாழ்த்தி நிமிர்ந்த அவள், விருஷப தேவருக்குப் புஷ்பாஞ்சலி செய்யும்பொருட்டு, மணையொன்றின்மீது வைக்கப்பெற்றிருந்த மலர்த் தட்டை எடுத்தாள். அன்றலர்ந்த வண்ண மலர்கள் நிறைந்த அந்தத் தட்டிலே பளபளப்பான ஓலை நறுக்கொன்று இருப்பது தெரிந்தது. பூமணம் ஏறிய அவ்வோலையை ஆவலுடன் இரு கைகளாலும் எடுத்துப் பார்த்தாள். அதிலே, அழகிய தமிழ்ப் பாடல் ஒன்று வரையப்பெற்றிருந்தது. இமையிதழ்களை இதமாக நீவிக்கொண்டு அதனை மனத்துள்ளாகவே படித்தாள்:

"ஆதி யாறை வாழியி னான்அலர்ச்
சோதி யான்சொரி பூமழை யான்வினைக்
காதி வென்றபி ரானவன் பாதமே
நீதி யால்நினை வாழிய நெஞ்சமே..."

சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் தம் பிரார்த்தனைக் கீதமாக அமைத்துக்கொண்ட பாடல் போலும் அது. அந்த நறுஞ்சுவைப் பாடலைப் படித்துப் பார்த்த உத்தமசீலியின் வாயெல்லாம் இனித்தது; நெஞ்சம் நெகிழ்ந்து கரைந்தது. அதனை இன்னொருமுறை வாய் விட்டு இசைக்கூட்டிப் பாடவேண்டுமென்று உள்ளுணர்வு எழவே, தன்னை மறந்த

பரவச நிலைக்காளாகிய அவள், யாழினுமினிய தீங்குரலால் தன்மையும் மென்மையுமான கமக ஸ்வரம் கூட்டித் தன் பவழவாய் திறந்து 'ஆ...ங்' எனும் மெல்லோசை எழுப்பினாள். அதே சமயம்–

“சொல்துணை வேதியன் சோதி வானவன்,
பொன்துணை திருந்து அடி பொருந்தக் கைதொழ...”

பாடுவதற்காக வாய் திறந்த உத்தமசீலி இந்தப் பாட்டொலி கேட்டு அதிர்ச்சியுற்று எழுந்தாள். அவள் கையிலிருந்த ஓலை நறுக்குத் தானாகவே நழுவிப் பூத்தட்டில் விழுந்தது. உடலும் உள்ளமும் பதறித் துடிக்கச் சுற்று முற்றும் திரும்பிப் பார்த்தாள்.

ஒரு கணம் அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. தேனிலே புரண்டெழுந்து வீசும் தென்றலைப்போல் அந்த முற்றுப் பெறாப் பாடலின் ஸ்வர இழைகள் சுநாதமாகச் சுழன்று வந்த திக்கைக் கூர்ந்து நோக்கிய அவள், அவ்வினிய இசை மாருதத்தைத் தன் செவிகளால் ஸ்பரிசித்த வண்ணம் வலப்புறமாக மெல்ல நகர்ந்தாள்.

பிறவிச் சக்கரம் தீட்டிய திரைக்குப் பின்னே, குறுக்குச் சுவரின் வலப் பக்க வாட்டில், ஒற்றைக் கதவொன்று ஒருக்களித்துத் திறந்திருப்பது தெரிந்தது. வியப்பும் திகைப்புமாக அந்தக் கதவின் அருகில் வந்து நின்ற உத்தமசீலி உள்ளே எட்டிப் பார்த்தாள்.

“சொல்துணை வேதியன் சோதி வானவன்,
பொன்துணை திருந்துஅடி பொருந்தக் கைதொழ,
கல்துணைப் பூட்டிஓர் கடலில் பாய்ச்சினும்
நல்துணை யாவது நமச்சி வாயவே...”

அரை வட்ட வடிவிலே அமைந்திருந்த அச்சிறிய அறையின் எதிர்ச் சுவர் மாடத்தில், அர்ச்சிக்கப்பெற்ற மலர்க்குவியல்களுக்கிடையே, சந்தனாபிஷேகம் செய்த சிறிய தொரு சிவலிங்கம் வீற்றிருக்க, அதன் எதிரே சுந்தரக் களை பொருந்திய வாலிபனொருவன் அடங்கியொடுங்கி நின்று,

அண்ணாந்த நிலையிலே தலைநிமிர்த்திக் கண்மூடிக் கரங் குவித்து ஆழ்ந்த தியானத்தில் இலயித்திருந்தான். அவனது வெண்கலக் கண்டத்திலிருந்து வெளிப்பட்ட பாட்டின் இறுதிச்சொல் நாதத் துளிகளிலே துவண்டு குழைந்து உதடுகளில் இன்னும் உலாவிக் கொண்டிருந்தது.

யார் அந்த வாலிபன்? சந்தேகமில்லை; சற்றுமுன் ஆற்றங்கரையோரம், நீராடி நனைந்த கோலத்தில், மலர்க் கூடையும் கையுமாக வந்தானே, அந்த இளந்துறவிதான் அவன்!

வியப்பால் விழிச் சிறகுகள் துடிதுடிக்க, வீடுதென்றலில் வளைந்தாடும் மாதவிப் பூங்கொடியென நின்று, அந்த வாலிபனையே பார்த்துக்கொண்டிருந்தாள் உத்தமசீலி. வாட்டமுற்றிருந்த அவள் முகம் பனித் திவலைகள் படிந்த செவ்வரவிந்தம்போல் எழில்பெற்று மலர்ந்தது.

பக்தி மோனத்தில் ஆழ்ந்திருந்த வாலிபன் மெல்ல அசைவுற்றான். மூடிய கண்கள் மூடியபடியே இருக்க நெஞ்சுக்கு நேரே குவிந்திருந்த கரங்களைத் தலைக்கு மேல் உயர்த்திக் கொண்டு, "நல்துணையாவது நமச்சிவாயவே நல்துணையாவது நமச்சிவாயவே" என்று மென்குரலில் முனகியவாறு தன்னையே வலமாகச் சுற்றினான். இருமுறை சுற்றி, மூன்றாம் முறையாகச் சுற்றத் திரும்பியபோது மூடிக்கிடந்த அவன் கண்ணிமைகள் தளர்வுற்றுப் பிரிந்தன. அப்படிப் பிரிந்த இமைப் போர்வைக்குள்ளிருந்து உருண்டு நிமிர்ந்த கண்மணிகளில் பளிச்சென ஒரு மின்னல்!

அவன் துணுக்குற்று நின்றான். கந்தர்வக் கன்னியெனக் கதவருகில் நின்று தன்னையே பார்த்துக்கொண்டிருந்த உத்தமசீலியை வியப்புடன் ஏறிட்டு நோக்கினான். ஆடாது அசையாது அம்பொற் சிலைபோல் நின்றிருந்த அவளும் அவ்னையே விழி புரட்டாமல் பார்த்தாள்.

இந்தச் சமயம், பிரார்த்தனை அறைக்கு வெளியே பரவாதிமல்லர் மெல்ல இருமிக்கொண்டே நடந்து வரும் ஓசை கேட்டது.

# 8

# அஞ்சினான் புகலிடம்

உள்ளமும் உடலும்; சிலிர்ப்புற்றுக் குலுங்கத் தன்னை மீறிய ஒரு குதூகலக் கிளர்ச்சியுடன் திரும்பித் திரும்பிப் பார்த்தவாறு அந்தப் பிரார்த்தனைப் பள்ளி அறையிலிருந்து அவசரமாக வெளிப்பட்ட உத்தமசீலி சட்டென்று நின்றாள்.

"சந்தியாவந்தனம் ஆயிற்றா இளவரசி?" என்று கேட்டுக் கொண்டே அவளை எதிர்நோக்கி வந்தார் பரவாதிமல்லர்.

பொருள் பொதிந்த புன்னகையுடன் 'ஆம்' என்று தலையசைத்தாள் உத்தமசீலி.

"இப்போது காலை உணவு கொள்ளப் போகலாம் அல்லவா?"

அழகாகக் கழுத்தை சாய்த்து அவரை இதமாக ஏறிட்டுப் பார்த்த உத்தமசீலி மெல்லத் தலைகுனிந்து, "கலைஞரவர்களை வெகுநேரம் பசியோடு காக்க வைத்து விட்டேன்; வாருங்கள் ஐயா!" என்றவாறு அன்னப் பேடையென முன்னால் நடந்தாள். அப்படிப் போகும் போது அவளையறியாமலே அவளுடைய கருங்குவளை மலர்க் கண்கள் அந்தப் பிரார்த்தனைப் பள்ளி அறைக்குள் பாய்ந்து சென்று திரும்பின.

சாம்பிய முகத்துடன் தயங்கி நின்ற பரவாதிமல்லரும் அவ்வறையைக் கடைக்கண்ணால் கவனித்தபடி மேலே நடந்தார்.

காட்சிப் புலனுக்கு விருந்தளிக்கும் விதமாக அமைந் திருந்தது அந்த உணவு அறை உத்தமசீலியும் பரவாதிமல்லரும்

அங்கு ஏற்கனவே போடப்பெற்றிருந்த இரு மணைகளில் போய் அமர்ந்தனர்.

உக்கிராண அறையை நோக்கி, "அநந்தமதி!" எனக் குரல் கொடுத்தார் பரவாதிமல்லர்.

அவ்வறையிலிருந்து வெளிப்பட்ட ஒரு முதிய பெண்மணி இளவரசியையும் கலைஞரையும் பணிவுடன் வணங்கி விட்டுத் திரும்பிப் போய் உணவுப் பாத்திரங்களுடன் வந்தாள்.

பரவாதிமல்லர் தம் கையாலேயே இளவரசிக்கு இலை விரித்தவாறு, "என்னதான் துன்ப நிகழ்ச்சிகள் நடைபெறினும் அவற்றிலே சில இன்பப் பேறுகளும் இழையோடாமல் இருப்பதில்லை" என்றார் கரகரத்த குரலில்.

அறைச் சுவரில் வரையப்பெற்றிருந்த எழிலோவியங் களை ஆர்வத்துடன் பார்த்துக்கொண்டிருந்த உத்தமசீலி மெல்லத் திரும்பினாள்.

"ஆம், அம்மணீ! என் இல்லத்தில் நீங்கள் வந்து தங்கியிருக்கும்போது உங்களுடைய சிவிகை காணாமற் போய் விட்டதே என்பதை நினைக்க நினைக்க மனம் சொல் லொணா வேதனையுருகிறது. அதே சமயம், அப்படியொரு துர்ச்சம்பவம் நிகழ்ந்ததால்தான் உங்களை என் இல்லத்தில் இருத்தி உங்களுடன் உணவு கொள்ளும் பாக்கியம் எனக்குக் கிடைத்திருக்கிறது என்பதை எண்ணும் போது நெஞ்சம் நிறை மகிழ்ச்சியில் ஆழ்கிறது."

"உண்மைதான் ஐயா! நானும் இப்போது அதே மனநிலையில்தான் இருக்கிறேன்" என்று இனிய குரலில் கூறினாள் உத்தமசீலி.

"உபசாரத்துக்காக இப்படிச் சொல்கிறீர்கள் என்று நினைக்கிறேன். உங்கள் மனத்துயரை என்னால் நன்கு உணர முடிகிறது."

"இல்லை, ஐயா! மெய்யாகவே சொல்கிறேன். தங்கள் இல்லத்தில் நான் தங்கும்படி நேரிட்டதை, எதிர்பாராமல் கிடைத்த ஒரு மாபெரும் பேறாகவே கருதுகிறேன்."

பரவாதிமல்லர் அவளை வியப்புடன் ஏறிட்டு நோக்கினார். தாம் நீராடச் செல்லுமுன் அவள் இருந்த நிலைக்கும் இப்போதைய தோற்றத்துக்கும் மகத்தான மாறுதல் இருப்பது அவருக்குத் தெற்றெனப் புலனாகியது. விடியற்போதில் பார்த்தபோது வாடி துவண்ட பூமாலையெனக் காணப்பட்ட அவள், இப்போது பொன்னுருக்குத் தடாகத்தில் முகிழ்த்து நிற்கும் பொற்றாமரை மலர்போல் விளங்கினாள். நெஞ்சத்தில் ஊற்றெடுக்கும் மகிழ்ச்சி அவளுடைய கன்னக்கதுப்புக்களில் செஞ்சாயச்சித்திரம் தீட்டிக்கொண்டிருந்தது. நீலோற்பல மலர் போன்ற நீள்விழிகளோ சுகானந்த கனவில் துயில்வன போல் ஒளியேறி விகசித்தன. அவளது பூங்குயில் கானம் போன்ற கண்டத்வனியிலிருந்து உயிர்த்து வெளியேறிய ஒவ்வொரு சொல்லும் கன்னற் குழம்பில் சலித்தெடுத்த கற்கண்டுப் பரல்களாக ஒலித்தன.

அவர் கண்ணசைக்காமல் அவளையே பார்த்துக் கொண்டிருந்தார்.

**ப**ணிமகள் அநந்தமதி பவ்யப் புன்முறுவலுடன் வந்து பொங்கக் குழைத்த போனகச் சோறு, தினைமாவில் சுட்டெடுத்த அப்பம், அனலிடையிட்டு மசித்த குறுங்கீரைக் குழம்பு, மாதுளங்காயை வில்லைகளாக அரிந்து மிளகுத் தூள் பெய்து கருவேப்பிலை கூட்டி நெய்யில் வெதுப்பிய பொரியல், மாவடு ஊறுகாய் முதலானவற்றை இலைகளில் படைத்து விட்டுச் சென்றாள்.

இளவரசி முதலில் இலையிலே கை வைக்கும்வரை அமைதியாகக் காத்திருந்தார் பரவாதிமல்லர். ஆனால் அவள் வேறெங்கோ பார்த்தபடி மௌனமாக உட்கார்ந்திருந்தாள்.

"அரண்மனையிலே அறுசுவை உணவேற்றுப் பழகிய இளவரசியாருக்கு இவ்வெளிய கலைஞனின் இல்லத்து உணவு

எப்படி இருக்குமோ! எனினும் என் அன்பு ஒன்றையே அறுசுவையாகக் கருதி நிறைமனத்தோடு ஏற்பார் என்றே நம்புகிறேன்."–கனிவும் குழைவுமாகக் கூறினார் கலைஞர்.

"இதைவிட இன்னும் எளிய உணவையே நான் ஏற்பது வழக்கம் ஐயா!" என்று அடக்கமாகக் கூறிய உத்தமசீலி, "இன்னும் சொல்லப்போனால், பல நாட்களுக்குப்பின் என் தந்தையாருடன் சேர்ந்து உணவு கொள்வது போன்ற இனிய உணர்வோடு இங்கே உட்கார்ந்திருக்கிறேன்'' என்றாள் உள்ளார்ந்த உற்சாகத்துடன். இப்படிச் சொன்னாளே தவிர, இலையில் மட்டும் ஏனோ அவள் கை வைக்கவில்லை.

தவிப்பும் வியப்புமாக அவளையே பார்த்துக் கொண்டிருந்த பரவாதிமல்லர் மெல்லக் குனிந்து, ''உண்ணுங்கள், அம்மணீ! உங்களுக்காகத்தான் நான் காத்திருக்கிறேன்" என்று பணிவுடன் வேண்டினார்.

புன்முறுவல் பூத்த உத்தமசீலி தயக்கத்துடன ஏதோ கூற வாயெடுத்தாள், பிறகு, ஏதும் சொல்லாமல் தன் அதரங்களை நெளித்துக் குவித்தபடி அங்குமிங்குமாகத் திரும்பிப் பார்த்தாள்.

''என்ன வேண்டும் இளவரசி! யாரைப் பார்க்கிறீர்கள்?" என்று அவசரமாக வினவினார் சேதியக் கலைஞர்.

''ஒன்றுமில்லை, ஐயா!...இன்னொரு மணையும் இலையும் இங்கு வரவேண்டும் என்பதற்காகத்தான் காத்திருக்கிறேன்!" என்று அஞ்சும் குரலில் கூறித் தலை குனிந்தாள் உத்தமசீலி.

இதைக் கேட்ட பரவாதிமல்லரின் உடல் ஒரு குலுங்குக் குலுங்கி நிமிர்ந்தது. அவளைப் பரபரப்புடன் பார்த்த அவர், "என்ன சொல்கிறீர்கள், அம்மணீ?" என்று குழறிக் கேட்டார்.

ஆந்திர இளவரசி அவரைக் குறுகுறுவெனக் கூர்ந்து நோக்கிக் குறும்புப் புன்னகையுடன் சொன்னாள்: "ஆம், ஐயா! இந்த இல்லத்தில் தங்களைச் சார்ந்த இன்னொருவரும்

இருக்கிறார் என்று அறிகிறேன். அதனால் அவர் வரும் வரையில் காத்திருக்கிறேன்."

திக்கித் திணறிவிட்டார் பரவாதிமல்லர். என்ன பேசுவ தென்றே அவருக்குத் தோன்றவில்லை. அப்படியும் இப்படியு மாக அசைந்து நெளிந்தார் அவர்.

"ஏன் மௌனமாக இருக்கிறீர்கள் ஐயா! ஒருவரைப் பசியில் வைத்து நாம் மட்டும் உணவு கொள்வது முறை யாகுமா? நம்முடன் அவர் உணவு உண்பதில் எனக்கு எவ்வித ஆட்சேபமும் இல்லை. ஏனென்றால், நான் இங்கு தங்கியுள்ள வரையில் உங்களிலே ஒருத்தியாக இருக்கவே விரும்புகிறேன்."

குழம்பித் தவித்த சேதியக் கலைஞர் சட்டென்று தம்மைச் சமாளித்துக்கொண்டு, "ஓ...என் மைந்தனைப் பற்றிச் சொல்கிறீர்களா?" என்று மெல்லச் சிரித்துக் கொண்டே கேட்டார்.

ஆச்சரியத்தால் கண்கள் அகல விரிய அவரை ஒரு கணம் உற்று நோக்கி உத்தமசீலி, "என்ன!...உங்கள் மைந்தரா? என்னால் நம்ப முடியவில்லையே!" என்று அலைப்புறும் குரலில் இழுத்தாள்.

"ஆம், அம்மணீ! இதில் உங்களுக்கு என்ன சந்தேகம்?" உத்தமசீலி இதைக் கேட்டுக் கலீரெனச் சிரித்தாள். இதனால் மேலும் குழப்பமடைந்த பரவாதிமல்லர், "ஏன் சிரிக்கிறீர்கள், இளவரசி?" என்று கரகரத்த குரலில் வினவினார்.

"ஒன்றுமில்லை, ஐயா!...தந்தையும் தனயனும் தனித் தனிச் சமயக் கொள்கையைத் தழுவியவர்களாக இருக்கும் விந்தையை எண்ணினேன், சிரிப்பு வந்துவிட்டது."

துணுக்குற்ற சேதியக் கலைஞர் உதட்டைக் கடித்துக் கொண்டார். அவர் முகம் வெளிறிச் சிறுத்தது.

இதைக் கடைக் கண்ணால் கவனித்த உத்தமசீலி, "எனக்குச் சம்பந்தமில்லாத ஏதேதோ கேள்விகளைக் கேட்டுவிட்டேன்; மன்னியுங்கள் ஐயா!" என்று இளநகை

யுடன் கூறிக்கொண்டே இலையிலுள்ள உணவைச் சுவைத்து உண்ண ஆரம்பித்தாள்.

இந்தக் குறுகிய நேரத்துக்குள் ஏதோ ஒரு திடமான முடிவுக்கு வந்தவர்போல் தலைநிமிர்ந்த பரவாதிமல்லர் அமைதியான குரலில், "இளவரசியார் மன்னிப்புக் கேட்பதைப் பார்த்தால் தம் மனத்தில் கிடைத்த ஐயப் பாட்டை அகற்றவில்லை என்றாகிறது. என்னைப் பொறுத்த வரையில் எப்போதும் எவரும் ஐயுறத்தக்க இரகசியங்களை வைத்துக் கொள்வதில்லை" என்றார். "சமணனாகிய எனது இல்லத்திலிருந்து சிவபூஜை செய்யும் ஒரு வாலிபன் எப்படி என் மைந்தனாயிருக்க முடியும் என்று இளவரசியார் சந்தேகப்படுவது நியாயமே. ஆனால், அதுவே முழு உண்மை என்பதை இப்போதும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். ஆம், அம்மணீ! சற்றுமுன் நீங்கள், சிவப் பூசனை செய்யும் நிலையில் பார்த்திருக்கக்கூடிய அந்த வாலிபர் என்னுடைய மைந்தரேதான். அதாவது, அவர் எனக்கு ஞான மைந்தர்."

வெண் தந்தம் போன்ற தன் கை விரல்களால் பொங்கற் சோற்றை அளைந்தபடி, அவர் சொன்னதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தாள் உத்தமசீலி.

சற்று நேர மௌனத்துக்குப் பின் மெல்லிய குரலில் மீண்டும் பேச்சைத் தொடர்ந்தார் பரவாதிமல்லர்: "இளவரசி யாருடன் பழகிய இந்தக் குறுகிய காலத்துக்குள்ளாகவே, அவர் சமண சமயத்தில் ஆழ்ந்த பற்றும், அதன் கொள்கை குறிக்கோள்களில் நிறைந்த அறிவும் கொண்டவர் என்பதை என்னால் ஓரளவு ஊகிக்க முடிகிறது; அது சரிதானே?"

அழகுப் புன்னகை பூத்தவாறு மௌனமாய் இருந்தாள் அவள்.

"அவ்வாறாயின், சமண சமயத்தைச் சார்ந்த பல்வேறு ஒழுக்க நெறிகளில் ஒரு பகுதியான நால்வகை தானங்களைப் பற்றியும் இளவரசியார் அறிந்திருக்க வேண்டுமே?"

உற்சாகத்தோடு தலைநிமிர்ந்த உத்தமசீலி தெளிவான குரலில் சொன்னாள்: "அன்னதானம், அபய தானம், ஔடத தானம், சாஸ்திர தானம் ஆகிய நான்கு தானங்களைப் பற்றித்தானே கேட்கிறீர்கள் ஐயா?"

"ஆம், அம்மணீ-அவையேதாம்! அந்த நால்வகை தானங்களில் ஒன்றான அபய தானத்தைப்பற்றி எனக்குச் சிறிதே எடுத்துக் கூறுகிறீர்களா?"

உள்ளார்ந்த வியப்புடன் அவரை உற்றுப் பார்த்த உத்தமசீலி தணிந்த குரலில் கூறினாள்: "அதாவது, அடைக்கல தானம் என்றால் என்ன என்று கேட்கிறீர்கள்? அப்படித் தானே?"

பூஞ்சிரிப்புடன் 'ஆம்' என்று தலையசைத்தார் பரவாதிமல்லர்.

"அச்சம் கொண்டு அடைக்கலம் என்று புகல் அடைந்த வருக்கு அபயம் அளித்துக் காக்கவேண்டும் என்பதே!"

"அதாவது, நமக்கு ஆனவர் ஆகாதவர், உறவினர் அந்நியர், நண்பர் பகைவர், உத்தமர் உலுத்தர் ஆகிய எவராயிருந்தாலும் அடைக்கலம் என்று வந்தால் அவரைக் காட்டிக் கொடுக்காமல் - புறக்கணிக்காமல் - அபய தானம் அளித்து, அதனால் ஏற்படும் எத்தகைய இன்னல்களையும் ஏற்றுக்கொண்டு அன்னாரை நம்மில் ஒருவராகவே போற்றிக்காக்க வேண்டும், இல்லையா இளவரசி?"

தன்னை மீறிய பரபரப்புடன் அவரை நிமிர்ந்து நோக்கினாள் உத்தமசீலி.

பூம்பஞ்சு போன்ற தம் தாடியை நீவியபடியே பரவாதிமல்லர், "ஆம், அம்மணீ! நமது சமண சமயம் வற்புறுத்திக் கூறும் இந்த உயரிய தான நெறியைக் கைக்கொண்டே நீங்கள் சற்றுமுன் பூஜையறையில் பார்த்த அந்த வாலிபருக்கு இந்த இல்லத்தை 'அஞ்சினான் புகலிட்' மாக்கி அடைக்கலம் அளித்துள்ளேன். அதனால்தான் அவரை என் ஞானமைந்தர் என்றும் கூறினேன்" என்றார்.

# 9

## விடைபெறா வினாக்கள்

எரிமலர்க் கதிரவன் குடதிசை வானின் கூனல் விசும்பிலே கூம்பிச் சரியும் நேரம்.

அந்த மாலை வேளையின் பொன்னொளிப் பூச்சில் கந்தர்வச் சித்திரமாகக் காட்சியளித்தது பரவாதிமல்லர் இல்லத்தைச் சார்ந்த சிறிய பூந்தோட்டம். அப்பூந்தோட்டத்தின் ஓரிடத்தில் மாணிக்க மணிகள் குயிற்றிய மரகதத் தேர்போல் வளர்ந்து நின்ற மகிழ மரமொன்றின் அடியிலே, தாமரைப்பூ வடிவில் செதுக்கப்பெற்ற மரத்தாலான ஆசனம் ஒன்று கிடந்தது. அதன் பக்கத்தில் அதே போன்ற இன்னோர் ஆசனமும் இருந்திருக்க வேண்டும். ஆனால், அதை ஏனோ புரட்டி எடுத்துவிட்டிருப்பதன் அறிகுறியாக அங்கு ஒரு வட்டத் தடம் மட்டுமே காணப்பட்டது. அதற்குச் சற்று அப்பால், சிந்தனை வயப்பட்டவளாய் அமர்ந்திருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

நீர்ப் பரப்பின் அசைவுக்கேற்ப நிலவின் பிம்பம் பல்வேறு வடிவங்களில் அலைப்புற்றுத் தோன்றுவதுபோல் அவளது நெஞ்சத்துச் சலனங்களைப் பங்கய வதனம் பலவிதமாய் வரைந்து காட்டிக்கொண்டிருந்தது. பளிங்கு நிறப் பிறை நிலா நுதலில் ஆழ்ந்த கவலையின் செவ்வரிகள் பின்னலிட்டுக் காண, அறிவின் ஆய்வுத் தோல்வியால் ஏற்பட்ட குழப்பம் மையுண்ட விழிகளில் மிதவையிட்டுத் தோன்ற, தேன்பசையேறிய அதரச் சுளைகளில் மகிழ்ச்சியின் சீதளப் புன்னகை ஊர்ந்து நெளிவது தெரிந்தது.

ஏதோ ஒரு காரிய சாதனைக்காகச் சொந்த நாட்டை விட்டுத் தன் பெரிய தந்தையாரைக் காணவேண்டி இந்த அயல்நாட்டுக்குப் பயணமாகி வந்த வழியில், அந்தப் பயணத்தைத் தொடரமுடியாமல் எதிர்பாராத விதமாகத் தடங்கல் ஏற்பட்டு இங்கு தங்கியிருக்கும்படி ஆகிவிட்டதே என்பது அவளுடைய பிறை நுதலில் கீறலிட்டிருக்கும் கவலை ரேகைகளுக்குக் காரணமாய் இருக்கலாம்; அடுத்து நேற்று மாலை முதல் இன்று காலை வரையில் நடந்துள்ள மர்மச் சம்பவங்கள் அவளது கண்ணில் சூழ்ந்திருக்கும் குழப்பத்துக்கு காரணங்களாய்க் கூறலாம்; ஆனால் மாதுளை அதரங்களில் தவழும் மகிழ்ச்சிக்குக் காரணம் என்ன?

எங்கிருந்தோ 'கிரீங், கிரீங்' என்று சக்கரம் சுழல்வது போன்ற ஒலி எழுவே, அவள் சட்டென்று பின்னால் திரும்பிப் பார்த்தாள். அந்தத் தோட்டத்து வேலியோரமிருந்த ஒரு கூவலில் பரவாதிமல்லரின் சமையற் பணிப்பெண்ணான அநந்தமதி நீர் இறைத்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

அந்தப் பெண்மணியைப் பார்த்ததும் உத்தமசீலியின் கனியிதழ்களில் ஊர்ந்து கொண்டிருந்த மகிழ்ச்சிப் புன்னகை மறைந்தது. இன்று காலை சேதியக் கலைஞருடன் உணவு உட்கொள்ளும்போது அவர் கூறிய விஷயம் மனத்தில் வந்து திடுமென மோதியதால்தான் அவள் அப்படி முகம் வெளுத்து போனாள். காலையிலிருந்தே அவ்விஷயத்தைப் பலபடியாக அலசிப் பகுத்துப் பார்த்தும், அது குறித்து அவளுக்கு எவ்வித முடிவும் இதுவரை புலப்படவில்லை. அதே குழப்பத்திலிருந்து வந்த அவள், இப்போது மீண்டும் அதுபற்றி எண்ணிப் பார்க்க முயன்றாள்:

'அந்த வாலிபன் யாராயிருப்பான்? அவன் யாருக்காக–எதற்காக–அஞ்சி, இங்கு வந்து அடைக்கலம் புகுந்திருப்பான்? இந்த நாட்டின் இன்றைய சூழ்நிலைகளை வைத்துப் பார்க்கும்போது சந்தேகமின்றி அவன் சளுக்கிய மாமன்னர் விக்கிரமாதித்தரை எதிர்த்துத் தோல்வியுற்றவனாகத்தான்

இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. அதிலும், பல்லவ அரசியலில் பங்குபெற்றிருந்த ஒரு பெரும் புள்ளியாகவும் இருக்கவேண்டும். இல்லையானால், இந்நாட்டிலே சமணப் பள்ளிகளையடுத்து எல்லோருக்கும் பொதுவாக எத்தனை யெத்தனையோ ‘அஞ்சினான் புகலிடங்கள்’ இருக்க, அங்கெல்லாம் அவன் போகாமல் இந்தப் புகழ் பெற்ற கலைஞரின் இல்லத்தில் வந்து புகல் அடைந்திருப்பானா? அத்தகையதொரு தகுதி இல்லாவிட்டால் அவனுக்கு இவர் தம் இல்லத்தில் இடம் தந்திருப்பாரா? அடைக்கல தானம் அளிப்பதில் அந்தஸ்து, பெருமை, தகுதி ஆகியவற்றைப் பார்க்கக் கூடாதென்பது அந்தத் தானத்துக்குரிய விதிமுறை களில் ஒன்று என்றாலும், அவ்வாலிபனுக்கு இங்கே அளித்திருக்கும் வழிபாட்டுச் சுதந்திரத்தையும் மற்ற சௌகரியங்களையும் பார்க்கும்போது அவனுடைய தகுதியின் உயர்வு தெற்றெனப் புலப்படுகிறதே! அறிவும் ஆற்றலும் வயதும் புகழும் நிரம்பப் பெற்றவரான பரவாதி மல்லரே அவனைப் பற்றிச் சொல்லும்போது ‘அவர்’ என்று பன்மைப் பிரயோகம் செய்கிறாரே! அப்படியானால் அவன் யாராயிருப்பான்...?’

இவ்வினாக்களிலிருந்து ஏதோ ஒரு பெரிய உண்மையைப் புலப்படுத்திக் கொண்டவள்போல் திடுக்குற்று நிமிர்ந்தாள் உத்தமசீலி.

‘அந்த வாலிபன் என் பெரிய தந்தையார் விக்கிர மாதித்த வல்லபரிடம் பல்லவ நாட்டைப் பறிகொடுத்து விட்டுத் தோற்றோடிய பரமேசுவரவர்மனாக இருப்பானோ அல்லது பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையிலிருந்து தப்பித் தலைமறைவாயிருக்கும் இளவரசன் கோவிந்தவர்ம னாக இருப்பானோ...?’

அவள் உடல் அதிர்ச்சியுற்று நடுங்கியது. நேற்றிரவு சளுக்கியத் தளபதி வில்வேலிக்குத் தவறான வழிகாட்டி அலையவிட்டதற்கும், இன்று காலை தன்னுடைய சிவிகை

காணாமற் போனதற்கும் இந்த வாலிபன்தான் காரண கர்த்தனாயிருப்பானோ என்று எண்ணியபோது அவளுடைய நடுக்கம் மேலும் அதிகமாகியது. பீதியுடன் அங்குமிங்குமாகத் திரும்பிப் பார்த்த அவள், ஒருகண நிதானத்துக்குப் பின், தனது அந்தச் சந்தேகம் சரியல்ல என்பதுபோல் தனக்குத் தானே மெல்லத் தலையசைத்துக் கொண்டாள்.

'அப்படியிருக்க முடியாது. இந்த வாலிபன் அவ்விரு வரில் யாரேனும் ஒருவனாக இருந்து, அவனுக்குப் பரவாதி மல்லர் அடைக்கலம் அளித்திருந்தால், அவனது மாபெரும் விரோதியின் தம்பி மகளான என்னைத் தம் இல்லத்துக்கு அழைத்து வருவாரா? என்னை அழைத்து வந்ததுமல்லாமல் வழி தடுமாறி வந்து சேர்ந்த வில்வேலியையும் அல்லவா அன்புடன் வரவேற்று உபசரித்தார்! அதுவுமின்றி, எதிர் பாராதவிதமாக என்னுடைய சிவிகை காணாமற்போனதால் மேற்கொண்டு பயணத்தைத் தொடர முடியாமலும் புதிய சிவிகை வரும்வரை எங்கே தங்கியிருப்பது என்று தெரியா மலும் குழம்பித் தவித்த என்னை அவர் தம் இல்லத்திலேயே இருக்கப் பரிவுடன் கேட்டுக்கொண்டாரே? எங்களுடைய எதிரி ஒருவனுக்குப் புகலிடம் தந்திருந்தால் இங்கே நான் தங்கியிருக்கச் சம்மதிப்பாரா?'

பதற்றம் நீங்கிய உத்தமசீலி மீண்டும் தன் சிந்தனையை நிதானமாக ஓட்டினாள்:

'பாவம்!...பல்லவர், சளுக்கியர்க்கிடையே ஏற்பட்ட போரினாலும், அதன்பின் நடந்த கொடுமைக் கெடுபிடி களாலும் பாதிக்கப்பட்ட எவனோ ஓர் அப்பாவி, உயிருக்கு அஞ்சி ஓடி வந்து இங்கே தஞ்சமடைந்திருப்பான். அந்த அபாக்கியவானின் நிலைமையை எண்ணிப் பரிதாபப் படாமல் அவனைப்பற்றி ஏதேதோ அதிகப்படியாகக் கற்பனை செய்து வீணாக என் மனத்தைப் போட்டு அலட்டி கொள்கிறேனே! அந்த வாலிபனின் மென்மையான எளிய தோற்றத்தைப் பார்த்தால், அவன் ஒரு சிற்பக்கலைஞ

னாகவோ, சித்திரக்காரனாகவோ இருப்பான் என்றே தோன்றுகிறது. அப்படிப்பட்ட ஒரு கலைஞன் என்பதால்தான் பரவாதிமல்லர் அவனுக்கு தம் இல்லத்தில் அடைக்கலம் தந்திருக்கலாம்.'

அவள் மனம் இளகி கரைந்தது. முகம் வாட்டமுற்றுக் கண்கள் இலேசாகப் பனித்தன. "போர், மிகக் கொடுமை யானது. அது மனித வாழ்க்கையின் எல்லா முனைகளையும் நாசமாக்கிச் சீரழித்து விடுகிறது" என்று நைந்த குரலில் முனகிக்கொண்டே மெல்லத் தலை நிமிர்ந்தாள்.

நெஞ்சைக் கவரும் இனிய காட்சிகள் அங்கு எத்தனையோ இருந்தும் அவளுடைய பார்வை அவற்றி லெல்லாம் பதியாமல், தொலைதூர ஆற்றங்கரையோரம் பச்சைக் கோபுரமென ஓங்கி நின்றுகொண்டிருந்த அந்தச் சவுக்கை மரத்தை நோக்கியே சென்றது. தன்னை மீறிய ஓர் ஆவலுடன் அம்மரத்தையே கண்ணிமைக்காமல் பார்த்தாள். அப்படிப் பார்க்கப் பார்க்க அவள் முகம் செவ்வரிபடரச் சிவந்து மலர்ந்தது. பளிங்கு நெற்றியில் பின்னிக் கிடந்த கவலைக் கீறல்கள் மறைந்து, குவளை மலர்க் கண்களில் தேங்கிச் சுழித்த குழப்பம் நீங்கி, கொவ்வைக் கனியிதழில் முன்போலக் குறுநகை தவழ்ந்தது. பழுத்த மூங்கிலின் பளபளப்போடு விளங்கிய தோளில், சரியாகவே சுற்றிக் கிடந்த பூந்துகிலை அவசரமாக இழுத்துவிட்டுச் சரி செய்து கொண்ட அவள் தன் மென்னுடலை நாணத்துடன் நெளித்துக் குறுக்கியபடி எழுந்து நின்றாள்.

தமது இல்லத்தையொட்டி அமைத்துக்கொண்டிருந்த சிறியதொரு கலைக்கூடத்தில் பரவாதிமல்லர் உலாவிக் கொண்டிருப்பது தெரிந்தது. அநேகமாக இன்றையப் பெரும் பொழுதையும் அவர் அங்கேதான் கழித்திருக்கிறார். இது அவருடைய அன்றாடப் பழக்கமாகவும் இருக்கலாம். முற்பகலில் ஒரு முறையும், பிற்பகலில் ஒரு முறையும் வந்து உத்தமசீலியிடம் சற்று நேரம் வாஞ்சையோடு பேசிக்

கொண்டிருந்துவிட்டுப் போனார்; அவ்வளவுதான், ஆயினும் அவளுக்குரிய எல்லாத் தேவைகளையும், வசதிகளையும், காலம் அறிந்து-குறிப்பறிந்து-செய்து கொடுப்பதில் அவர் மிகவும் விழிப்போடு இருக்கிறார் என்பதை, பணிப்பெண் அநந்தமதியின் பணிவிடைகளிலிருந்து அவளால் நன்கு புரிந்து கொள்ள முடிந்தது.

ஆனால், காலையில் பூசையறையிலே பார்த்த அந்த வாலிபன் மட்டும் அவள் கண்ணில் இன்னமும் தென்படவே இல்லை. அவன் எங்கே இருக்கிறான், என்ன செய்கிறான், எப்படி நேரத்தைக் கழிக்கிறான் என்னும் விவரங்களையும் அவளால் அறிந்துகொள்ள முடியவில்லை. தன்னை மீறிய ஏதோ ஓர் உணர்ச்சியால் உந்தப்பட்டு, அவனை மீண்டும் பார்க்க வேண்டும் என்பதற்காக, அவள் இரண்டொருமுறை எடுத்துக்கொண்ட முயற்சியும் பலிக்கவில்லை. ஆயினும் அவளுக்கு ஒன்று மட்டும் நிச்சயமாகத் தெரிந்தது. அவன் அவளைப் பூசையறையில் பார்த்தபின் இந்த இல்லத்தை விட்டு எங்கும் ஓடி விடவில்லை-இங்கேதான் இருக்கிறான் என்று!...

எழுந்த நின்ற உத்தமசீலியின் பார்வை மறுபடியும் அந்தச் சவுக்கை மரத்தை நோக்கிச் சென்றது. அம்மரத்தைப் பார்த்துக்கொண்டே அவள் மெல்ல நடக்கலானாள். ஆமாம்; அவளையறியாமலே அவள் கால்கள் தோட்டத்தைக் கடந்து, ஆற்றுக்குச் செல்லும் குறுகிய பாதையில் இறங்கி நடை போட்டன.

# 10

# மாலை மயக்கம்

நீலப் பட்டுத் துகிலை நெடுக நீட்டிவிட்டாற்போல் சலசலத்து ஓடிக்கொண்டிருந்த சிற்றாற்றின் மணல் மேடிட்ட கரைச் சரிவில் வந்து நின்றாள் உத்தமசீலி. தண்ணென்று வீசிய தென்றலில் அவளது மெல்லிய மேலாடை, கொழு கொம்பி லிருந்து நழுவிய மாதவிப் பூங்கொடியெனச் சரிந்து அலைந்து பறந்தது. எவ்விதக் கட்டுக்காவலுமின்றி அவ்வினிய சூழலில் தன்னந்தனியே நின்றிருப்பது அவளுக்குப் பேரானந்த சுகமாக இருந்தது. பரிமள கந்தச் செறிவுடன் சஞ்சீவித் தன்மை பெற்று வீசிய சீதளக் காற்றையும், ஆற்றங்கரையோர அழகுக் காட்சிகளையும் அநுபவித்து ரசித்த அவள், தன் உயரத்துக்கு இரண்டத்தனை நீள நிழலைக் கீழ்த்திசையில் சாய்த்துவிட்டு வானோங்கி நின்ற அந்தப் பச்சைப் பசியசவுக்கை மரத்தை வியப்பேறிய கண்களால் ஏறிட்டுப் பார்தாள்.

தொலைவிலிருந்து பார்த்தபோது மோனத் தவம் இயற்றும் ஞானிபோல் காணப்பட்ட அந்த மரம், இப்போது வாய் திறந்து ஓசைகூட்டி வேத·மந்திர கானம் இசைப்பது போலத் தோன்றியது. மேல் காற்றின் வேக வீச்சு அதன் ஊசியிலைச் செறிவின் ஊடாகப் பாய்ந்ததால் எழுந்த 'ஊய்ங் ஊய்ங்' என்ற ஒலியே அவளுக்கு அப்படியொரு பிரமையை உண்டு பண்ணியது.

நெஞ்சில் குதூகலம் நிரம்பி வழிய, பம்பரம்போல் ஒரு சுற்றுச் சுற்றித் திரும்பிய அவள், பொன்மணற் சரிவிலே தன் பூம்பாதங்கள் புதையப் புதைய அங்குமிங்குமாகத் துள்ளிக்

குதித்து ஓடினாள். அந்த மரத்தைச் சுற்றிச் சுற்றி வந்து கைக்கொட்டி நகைத்தாள். சிறுபிள்ளைபோல் தத்தித்தவழ்ந்து தள்ளாடி வீழ்ந்து எழுந்தாள். தெள்ளிய மணற் பரப்பில் கறுப்பும் பச்சையுமாக உதிர்ந்து கிடந்த சவுக்கைக் காய்களை ஓடி ஓடிப் பொறுக்கிக் கை நிறையச் சேர்த்துக் கொண்டு ஆற்றின் நீர் விளிம்பை நோக்கி விரைந்தாள்.

அவளுக்கு உற்சாகம் கரை புரண்டு விட்டது. ஈரம் சுவர்ந்த மணலில் அமர்ந்து, தான் பொறுக்கியெடுத்து வந்த சவுக்கைக் காய்களைப் பரப்பி அம்மானை ஆடினாள். அப்புறம் அந்தக் காய்களை ஒவ்வொன்றாக எடுத்து, அலைத்துப் புரண்டோடிய ஆற்று நீரில் வீசியெறிந்து, அதனால் உண்டான வட்ட அடுக்குகளையும் வெள்ளிக் குமிழ்களையும் கண்டு கலகலவெனச் சிரித்தாள்.

ஏழெட்டுக் காய்களை எறிந்தபின் கைசோர்ந்து போன அவள், செங்கதலித் தண்டுபோன்ற வலக்காலை மடித்துப் போட்டு இடக்காலை நீரில் நீட்டித் தொங்கவிட்டபடி, தன் மடியில் கிடந்த சவுக்கைக் காய்களில் ஒன்றை எடுத்து, செஞ்சாயச் சித்திரம் தீட்டிய உள்ளங் கையில் வைத்து உருட்டிக்கொண்டே அதன் அற்புத இயற்கை அமைப்பைக் கூர்ந்து பார்த்தாள்.

சற்று நேரம் அதையே பார்த்துக்கொண்டிருந்தவள் ஏதோ நினைத்துத் தனக்குள் புன்னகை பூத்தவாறு பக்கவாட்டில் திரும்பினாள். கை எட்டும் தொலைவில், அரை ஆள் உயரத்துக்கு ஒரு வழுக்குப் பாறை மண்ணில் பாதியும் நீரில் பாதியுமாகப் புதைந்து நிற்பது தெரிந்தது. அந்தப் பாறையின் அருகில் மரப்பட்டையொன்று நனைந்து நைந்து கிடந்தது. அப்பட்டையைத் தாவி எடுத்த அவள், அதிலிருந்து நூல் போன்ற நார் இழையொன்றைக் கிழித்துச் சுருட்டி வைத்துக்கொண்டாள். பின்னர், வாசமலர்ச்சூடி வனப்புறச் சீவி முடிந்திருந்த தன் கொண்டையிலிருந்து தங்கத்தால் ஆன ஊசியொன்றை உருவியெடுத்து அந்தச் சவுக்கைக்காய்களின்

நடுவிலே பக்குவமாகத் துளையிட்டாள். பிறகு, ஒவ்வொரு காயாக எடுத்து நார் இழையில் கோத்துச் சரமாக்கி அந்தச் சரத்தை மாலைபோல், வளைத்துக் கட்டினாள். எவ்விதக் காரண காரியமுமின்றி, மனத்தில் பெருக்கெடுத்த உற்சாகப் போக்கில், வெறும் விளையாட்டாகத்தான் இப்படிச் செய்து முடித்தாள்.

மகிழ்ச்சிக் குறுகுறுப்புடன் அந்தச் சவுக்கைக் காய்மாலையைத் தன் முகத்துக்கு நேரே தூக்கிப் பிடித்துப் பார்த்தபோது அதன் அழகுத் தோற்றம் அவளையே பிரமிப்பில் ஆழ்த்திவிட்டது. ஆமாம்; பச்சைக் காய் ஒன்றும் காய்ந்து கறுப்பான காய் ஒன்றுமாக மாற்றி மாற்றிக் கோக்கப்பெற்றிருந்த அந்த மாலை பார்ப்பதற்கு ஓர் அழகிய உருத்திராக்க மணி மாலைபோல் தோற்றமளித்தது!

ஆச்சரியமுற்ற நிலையில் அம்மாலையையே கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த அவள், மகர யாழைச் சுண்டி விட்டாற்போல் கலீரெனச் சிரித்தாள். ஏதோ ஒரு வெட்க உணர்ச்சியால் முகம் சிவக்க, தலைகுனிந்தபடி சிரித்தாள் அவள்.

ஏன் அப்படிச் சிரித்தாள்? எதை நினைத்து அவ்வாறு இதயம் குலுங்கி நகைத்தாள்?

அன்று காலை, இதே ஆற்றங்கரையோரம், நீராடிய கோலத்தில் கழுத்திலே உருத்திராக்க மாலையும் பூக்குடலையு மாக வந்தானே அந்த வாலிபன்–அவனை நினைத்துத்தான் அவள் அப்படி நாணச் செறிவுடன் நகைத்தாள்!

சட்டென்று அவளுக்கு ஒரு விசித்திர ஆசை பிறந்தது. சுற்றுமுற்றும் பார்த்துவிட்டுத் திரும்பிய அவள், கையிலிருந்த சவுக்கைக்காய் மாலையை, வெண்சங்கு போன்ற தன் கழுத்தில் அணிந்துகொண்டு சற்றே முன் தள்ளி நகர்ந்து போய்க் கீழே குனிந்து நோக்கினாள்.

பளிங்குப் பாளம்போல் தெளிந்து கிடந்த ஆற்று நீர்ப் பரப்பில் துறவுக் கோலம் பூண்ட ஓர் இளஞ் சைவச்

சந்தியாசினியின் அழகு உருவம் மிதப்பது தெரிந்தது! உருத்திராக்க மணிமாலை போன்ற அந்தச் சவுக்கைக் காய்ச்சரத்தை அணிந்திருந்த உத்தமசீலியின் தோற்றம்தான் அதிலே அவ்வாறு காணப்பட்டது.

"நல்ல வேடம்! நல்ல மாலை!" என்று கூறிக் கலகல வெனச் சிரித்துக்கொண்டே குதித்து எழுந்த அவள், அந்த மாலையைக் கழற்றிப் பக்கவாட்டிலிருந்த வழுக்குப் பாறைக்கு அப்பால் சுழற்றி வீசினாள்.

அதே சமயம், அப்பாறைக்கு மறுபுறத்திலிருந்து திடுமென ஒரு மனிதனின் தலை மேலெழும்பவே, சக்கர வட்டமாகச் சுழன்று வந்த அந்த மாலை சரேலென்று அவன் கழுத்தில் போய் இறங்கிச் சுற்றிக்கொண்டது!

இந்த எதிர்பாராத நிகழ்ச்சியினால் பலத்த அதிர்ச்சி யுற்றுவிட்ட உத்தமசீலி பரபரப்புடன் கண்களை மலர்த்திப் பார்த்தாள்.

சந்தேகமில்லை; பரவாதிமல்லரின் இல்லத்திலே புகலடைந்திருக்கும் வாலிபன்தான் அவ்வழுக்குப் பாறைக்குப் பின்னால் திகைப்பும் வியப்புமாக நின்றுகொண்டிருந்தான்!

நீரோட்டத்தில் சிக்கிய நாணலைப்போல் துவண்ட உத்தமசீலி, படபடத்த கண்களால் அவனைப் பார்த்துக்கொண்டே மெல்லப் பின்னால் நகர்ந்தாள். பிரமித்த நிலையில் நின்ற அந்த வாலிபனும் அவளையே விழியசைக் காமல் நோக்கியபடி பாறைக்குப் பின்னாலிருந்து வெளிப் பட்டு வந்தான். இப்போது அவன் முகத்தில் எழிலார்ந்த குறுநகையொன்று இதமாக நிரவலிட்டது.

நெஞ்சை உலுக்கிக் குலுக்கிய பயத்தால் நகரவும் சக்தியற்றுப்போன அவள் தட்டுத் தடுமாறி நின்றாள்.

தன் கழுத்தைச் சுற்றி மார்பில் தவழ்ந்துகொண்டிருந்த அந்தச் சவுக்கைக்காய் மாலையையும், அதனை வீசியெறிந்த அவளையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டு நின்றவாலிபன்,

அவளிடம் ஏதோ கேட்க ஓரடி முன்னால் வந்தான். தயங்கி நின்ற அவளும் அவனிடம் ஏதோ சொல்ல வாய் திறந்தாள்.

மறுகணம் அவள் என்ன நினைத்தாளோ, சடாரென்று திரும்பி, சேதியக் கலைஞரின் இல்லத்தை நோக்கிப் புள்ளிமானெனத் துள்ளிப் பாய்ந்து ஓடினாள்.

இதைக் கண்டு திகைப்புற்ற வாலிபன் மரமாய்ச் சமைந்து நின்றான்.

"**வா**ருங்கள், இளவரசி! உங்களைத்தான் இவ்வளவு நேரமாக எதிர்ப்பார்த்துக் கொண்டிருக்கிறேன்" என்று வாஞ்சையுடன் கூறிக்கொண்டே அறைக் கதவின் திரைச் சீலையை விலக்கினார் பரவாதிமல்லர்.

மூச்சுமுட்ட ஓடிவந்து நின்ற உத்தமசீலி அவரைப் பரபரப்புடன் பார்த்துவிட்டுத் தலைகுனிந்தாள். அவளது பொன்மேனியெங்கும் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் அரும்பி வழிந்தன.

'இளவரசியார் வெகுதூரம் உலாவப் போய்விட்டார் என்று நினைக்கிறேன்; அதனால்தான் இப்படி வேர்த்துக் களைத்து வந்திருக்கிறார்!"

'இல்லை' என்பதற்கு அறிகுறியாக மெல்லத் தலை யசைத்தாள் உத்தமசீலி.

"அப்படியானால் அந்த விஷயத்தை எனக்கு முன்னே இளவரசியார் தெரிந்துகொண்டு விட்டாரோ!"

அவள் சட்டென்று நிமிர்ந்து அவரை உள்ளார்ந்த பீதியுடன் நோக்கினாள். புன்முறுவல் பூத்த சேதியக் கலைஞர் நிதானமாகத் திரும்பி, சாளரத்து வழியே முன்வாசல் பக்கம் தமது பார்வையைச் செலுத்தினார்.

அங்கே, ஆந்திர இளவரசி உத்தமசீலியின் காணாமற் போன சிவிகை இறக்கி வைக்கப்பெற்றிருந்தது. அச்சிவிகைக்குப் பின்னால், இருபதுக்கும் மேற்பட்ட சளுக்கிய வீரர்கள் கூட்டமாகக் குழுமி நின்று கொண்டிருந்தனர்.

# 11

# இது என்ன வாழ்த்தொலி?

மண்டகப்பட்டு என்னும் சிற்றூருக்கு மேற்கே-சுமார் ஏழு நிவர்த்தன தொலைவுக்கு அப்பால்-ஜனசஞ்சாரமற்ற ஓரிடத்தில், கன்னங்கரிய களிறுபோல் தன்னந்தனியே நின்றிருந்தது ஒரு கற்பாறைக் குன்றம்.

அது வெறும் பாறைக் குன்றமல்ல; அயன், சிவன், மாலவன் ஆகிய மும்மூர்த்திகளுக்காக எடுப்பிக்கப்பெற்ற அற்புதத் திருக்கோயில்! கல்லிலே காவியம் கண்ட விசித்திர சித்தனான மகேந்திரவர்மன் எடுத்த குடைவரைக் கோயில் அது.

குன்றின் வடக்குப் பகுதியிலே அமைந்த அந்தக் குகைக்கோயிலின் மண்டபத்தில், சுமார் ஐம்பது வயது மதிக்கத்தக்க ஓர் அதிகாயபாகுவான மனிதர் ஆழ்ந்த கவலையுடன் கைகளைப் பின்னால் கோத்தவாறு மெல்ல உலாவிக் கொண்டிருந்தார். நேற்றிரவு உறையூர்ச் சாலைக்கு மேற்கேயுள்ள சிறிய சாலையொன்றின் சுமைதாங்கிக் கல் அருகில் யாரையோ தேடிப் பார்த்துவிட்டுப் போனார்களே, அந்த நான்கு பேரில் ஒருவர்தாம் அவர்.

தஞ்சைக்கு வடமேற்கே, அறுபது குடும்பங்களைத் தன்னகத்தே கொண்டு அமைந்த அழகிய ஊரான சந்திரலேகை சதுர்வேதி மங்கலத்தைப் பல்லவப் பேரரசின் மேலாதிக்கத்துக்கு உட்பட்டுச் சிற்றரசராயிருந்து ஆண்டு வரும் பெரும் பிடுகு முத்தரையர் என்பவரே அவர். களப்பாளராயர் என்னும் வம்சத்தினரான அவருடைய

இயற்பெயர் முதலாம் குவாவன்மாறன் என்பதாகும். இவரது பரம்பரையிலிருந்து பிரித்துபோன வேறொரு கிளையினர், வேளிர் என்னும் குடிப்பெயருடன், தஞ்சையையும் கொடும் பாளூரையும் குறுநில மன்னர் அந்தஸ்து பெற்று ஆண்டு வந்தனர். ஆனால் அவர்களைவிட இந்தச் சந்திரலேகை முத்தரையரே பல்லவர்க்கு மிகவும் வேண்டியவராயிருந்தார். இதனால்தான், 'பகாப்பிடுகு' என்னும் பட்டப் பெயரை மகேந்திரவர்மன் சூட்டிக் கொண்டதுபோல் 'பெரும்பிடுகு' என்னும் பெயரை பரமேசுவரவர்மன் சூட்டிக் கொண்ட போது, அதை முத்தரையரும் தம் சிறப்புப் பட்டமாக ஏற்றுப் 'பெரும் பிடுகு முத்தரையர்' ஆனார்.

மண்டபத்தின் முகப்பில் வரிசையாக நான்கு தூண்கள் அமைக்கப்பெற்றிருந்தன. அவற்றில் கடைசி இரு பக்கத் தூண்களையும் ஒட்டினாற்போல் அமைந்த வெளிப் பாறைச் சுவர்களில், துவாரபாலகர்களின் வடிவங்கள் அழகிய புடைப்புச் சிற்பங்களாகச் செதுக்கப்பட்டிருந்தன. இடக் கோடியிலிருந்த துவாரபாலர் ஒரு காலை மடித்து ஒயிலாக நிற்கும் கோலத்திலும், வலக் கோடியிலிருந்த துவாரபாலர் இரு கைகளையும் இடுப்பின்மேல் ஊன்றி ஒருகளித்து நிற்கும் நிலையிலுமாக விளங்க, அவ்விருவர் கழுத்திலும் பாம்பு அணிந்திருப்பதுபோல் காட்டியிருந்ததிலிருந்து அந்தக் கோயிலில் குடிகொண்ட மும்மூர்த்திகளில் சிவபிரானே முதலிடம் பெற்றிருக்கிறார் என்பது தெற்றெனத் தெளி வாயிற்று, இந்த காவல் தெய்வங்களான துவாரபாலர் சிற்பங்களின் கீழே-படிக்கட்டின் இரு பக்கமும்-வாட்ட சாட்டமான தோற்றத்துடன் காவல் வீரர்கள்போல் விளங்கிய இரண்டு வாலிபர்கள் குத்துக்காலிட்டு உட்கார்ந்து சுற்று முற்றும் கவனமாகப் பார்த்துக் கொண்டிருந்தனர். இவர்களும் நேற்றிரவு பார்த்த அந்நால்வரில் இருவர்தாம்!

அப்படியானால், நான்காமவர் எங்கே? கோயிலின் கருவறைக்குள்ளிருந்து யாரோ இருமும் சப்தம் கேட்டது.

மண்டபத்தில் உலாவிக்கொண்டிருந்த முத்தரையர் மேலும் உலாவப் பொறுமையழிந்தவராய்த் தளர்ந்து நின்று, தொலை தூரத்துக்கு அப்பால் தம் பார்வையைச் செலுத்திக் கூர்ந்து நோக்கினார். பிறகு சலிப்புடன் முகத்தைச் சுளித்தவாறு வந்து தூணில் சாய்ந்து நின்றார். எதிரேயிருந்த மற்றொரு தூண் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது.

சதுர வடிவில் அமைந்த அந்தத் தூணின் நடுப்பகுதியில் மட்டும் எட்டுப் பட்டைகள் தீர்க்கப்பெற்றது, அதற்குக் கீழே ஒரு தாமரைப் பூ சிற்பம் செதுக்கப்பெற்றிருக்க, அதன் அடியில் வடமொழி சாசனம் ஒன்று பொறிக்கப்பட்டிருந்தது.

'செங்கல்லோ, மரமோ, உலோகமோ, சுண்ணாம்போ இல்லாமல், பிரம ஈஸ்வர விஷ்ணுக்களுக்கு, விசித்திரசித்தன் என்னும் அரசனால் இக்கோயில் அமைக்கப்பட்டது' என்ற பொருளில் அமைந்த அந்தச் சாசனத்தைத் தன் வாய்க் குள்ளாகவே படித்துப் பார்த்த அவர், வேதனைக் கமறலுடன் நீண்ட பெருமூச்சு விட்டார்.

மாலைப் போதின் மஞ்சள் ஒளியில் இருட்புகை கலவையிடத் தொடங்கியதால் சுற்றுவெளிக் காட்சி களெல்லாம் மெல்ல மெல்ல மங்கி மறைந்துகொண்டிருந்தன.

தூணோடு தூணாகச் சாய்ந்து நின்றிருந்தவர் சட்டென்று நிமிர்ந்து ஏதோ முடிவுக்கு வந்தவர்போல் கோயிலின் உள்ளறையை நோக்கி நடந்தார்.

இலேசான இருள் படர்ந்திருந்த அந்த நீண்ட அறையின் தென்புறம், ஒன்றையடுத்து ஒன்றென மூன்று திருநிலை யறைகள் அமைந்திருந்தன. அவற்றுக்கு நேர் எதிர்ச் சுவரில் வெட்டப்பட்டிருந்த ஒரு முக்கோணப் புரையிலே அகல் விளக்கொன்று புகை திரியவிட்டு எரிந்துகொண்டிருந்தது. அங்கு தெய்வத் திருமேனிகள் ஏதும் இருப்பதாகத் தெரிய வில்லை. ஆனால், அவை இருந்தன என்பதற்கறிகுறியாக மூன்று கருவறைகளின் தரையிலும் மூன்று குழிகள் பறித்திருப்பது மட்டும் தென்பட்டன. சளுக்கியப் படை

யெடுப்பின்போது சிதைக்கப்பெற்றும் சீரழிந்தும் போன பல திருக்கோயில்களில் இதுவும் ஒன்று போலும்!

"பழையாறைச் சோழருக்குப் பொறுமை பறிபோய் விட்டதென்று நினைக்கிறேன்; புறப்படலாமா?" என்று கேட்டுக்கொண்டே, அகல் விளக்கின் மங்கலான ஒளியில் தம் பார்வையை நனைத்து அங்குமிங்கும் பார்த்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

"சந்திரலேகைச் சிற்றரசர் பெரும்பிடுகு முத்தரையரின் நிலையும் நினைப்பும்கூட அதுதானே?" என்று அடித் தொண்டையில் வினவியவாறு இருள் மூட்டத்திலிருந்து வெளிச்சத்தை நோக்கி வந்தார் ஓர் ஆஜானுபாகுவான மனிதர்.

"ஆமாம் நண்பரே! எவ்வளவு நேரம் இங்கே காத்திருப்பது? ஒரு நாள் பொழுது வீணே ஓடிவிட்டதே!" என்று அலுப்புடன் சொல்லிக்கொண்டே பழையாறைச் சோழரின் எதிரில் போய் அமர்ந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

"அப்படியானால் உறையூர்ச் சாலைப் பக்கம் போய் மீண்டும் அவரைத் தேடிப் பார்க்கலாம் என்கிறீர்களா?"

"அது இனி பயனற்ற காரியமாகும்."

"வேறு என்ன செய்யலாம் என்று நினைக்கிறீர்கள்?"

"பழையாறைக்கு நீங்கள் செல்ல வேண்டியது. நான் சந்திரலேகைக்குப் போகிறேன். ஒருகால் அவர் நம்மை அங்கே தேடி வந்தாலும் வரலாம்."

"எனக்கென்னவோ ஒரு சந்தேகம் தட்டுகிறது..."

முத்தரையர் அவரை அவசரமாக நிமிர்ந்து நோக்கி னார்.

"உறையூர்ப் பெருவழியின் மேற்குச் சாலையில் நம்மைச் சந்திப்பதாக அவர் எழுதியனுப்பிய ஓலை உண்மையான தாயிருக்குமா? அல்லது..."

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் அவர் எதிரிகளிடமிருந்து தப்பி வந்த விஷயமே மெய்யல்ல என்றாகிறதே?"

"ஆம், நண்பரே! அப்படித்தான் எனக்குத் தோன்றுகிறது."

"அம்மாதிரி சந்தேகப்படக் காரணமே இல்லை. ஏனென்றால், அவரிடமிருந்து ஓலை பெற்று வந்து நம்மிடம் கொடுத்தவர்கள் நமது நம்பிக்கைக்குரிய ஆபத்துதவிப்படை வீரர்கள். மேலும், அவர்கள் அந்த ஓலையைக் கொடுத்துவிட்டு எங்கும் போய்விடவில்லை; கடந்த மூன்று நாட்களாக நம்முடனே தான் நமக்குத் துணையாக இருந்து வருகிறார்கள். இப்போதும் இந்தக் குகைக் கோயில் வாயிலில் அவ்விரு ஆபத்துதவிகளும் நமக்குப் பாதுகாவலாக உட்கார்ந்திருக்கிறார்கள்."

முத்தரையரின் பேச்சைச் சரியென்று ஏற்பவர்போல் தலையை மேலுங்கீழுமாக ஆட்டிக்கொண்ட பழையாறைச் சோழர், "அப்படியானால் அவர் பெருவளநல்லூருக்குப் போயிருப்பாரோ?" என்று இழுத்தார்.

"சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் இல்லத்துக்கா? அங்கு ஏன் அவர் போகப் போகிறார்? அந்த விஷயம் நம் இருவரைத் தவிர வேறு யாருக்குமே தெரியாதே!"

சற்று நேரம் மௌனமாயிருந்த பழையாறைச் சோழர், "சரி; புறப்படுவோம். நாம் போன பின் அவர் இங்கு வந்தால், அவரை அழைத்து வந்து நம்மிடம் சேர்க்கும்படி அவ்விரு ஆபத்துதவிகளுக்குக் கட்டளையிட்டு அவர்களை இங்கேயே தங்கியிருக்கச் சொல்லிவிட்டுப் போவோம்" என்று சோர்ந்த குரலில் கூறிக் கொண்டே எழுந்தார். பெரும்பிடுகு முத்தரையரும் எழுந்து நின்றார்.

அதே சமயம், குகைக்கோயிலுக்கு வெளியேயிருந்து ஒரு விசித்திர ஒலி எழுந்தது. ஆபத்துதவிகளின் எச்சரிக்கைக் குரல் அது என்பதைப் புரிந்துகொண்ட அவ்விருவரும் ஒருவரை

யொருவர் பார்த்து விழித்தனர். உடைவாளை இறுகப் பற்றிய வண்ணம் சுவரோடு சுவராக ஒடுங்கிப் பதுங்கினர்.

"வாழ்க, விக்கிரமாதித்தர்! ஓங்குக, சளுக்கிய சாம்ராஜ்யம்!" என்று உரத்த குரலில் கூவிக்கொண்டே, கிழிந்து கந்தலான வராகக்கொடி கட்டிய துரட்டுக் கம்பு ஒன்றைத் தலை கீழாகத் திருப்பிப் பற்றித் தரையில் ஊன்றியவாறு அந்தக் குகைக் கோயிலின் திருநிலையறை வாயிற்படி மேல் வந்து ஏறி நின்றான் ஓர் இளம் வாலிபன்.

அவன் வேறு யாருமல்ல; நேற்றிரவு சளுக்கியத் தளபதி வில்வேலியை வழிமாற்றிவிட்டு, ஆந்திர இளவரசி உத்தமசீலியின் சிவிகையிலிருந்த ஓலைச் சுருளைக் கவர்ந்து சென்ற அந்த வாலிபனேதான்!

# 12

# இளவல் கோவிந்தவர்மன்

பாய்ந்து தாக்குவதற்குத் தயாரான நிலையிலே கால்களை உறுதியாக ஊன்றிக்கொண்டு மெல்லத் தலையை நீட்டி எட்டிப் பார்த்தார் பழையாறைச் சோழர். சந்திரலேகைச் சிற்றரசரும் அவ்வாறே கூர்ந்து நோக்கினார்.

கருவறை வாசலில் நின்ற வாலிபன் மெல்லச் சிரித்த வாறு சுற்றுமுற்றும் பார்த்துக்கொண்டே உள்ளே சென்று விளக்கொளி தன்மீது நன்கு படும்படியான ஓரிடத்தில் நின்றான்.

"வாருங்கள், கோவிந்தவர்மரே!" என்று வாஞ்சையும் வியப்பும் செறிந்த ஒரே குரலில் கூறிக்கொண்டே இருளை விட்டு வெளிச்சத்துக்குத் தாவி வந்தனர் பழையாறைச் சோழரும், பெரும்பிடுகு முத்தரையரும்.

யார் இந்தக் கோவிந்தவர்மன்? பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனின் சிறிய தந்தையான காலஞ்சென்ற ஆதித்தவர்மனின் மைந்தனா இவன்? சளுக்கியரால் பல்லவ புரம் அரண்மனைக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டு, அங்கிருந்து தப்பியோடிவிட்ட இளவரசன் கோவிந்தவர்மனா இவன்? ஆம்; அவனேதான்!

இரு கரங்களையும் குவித்து அவ்விருவருக்கும் தலை தாழ்த்தி வணக்கம் செலுத்தினான் கோவிந்தவர்மன். பிறகு வாயைத் திறக்காமலே புன்னகை பூத்தவாறு ஊமைச் சாடையில், 'குடிக்கத் தண்ணீர் இருக்கிறதா?' என்று கேட்டான்.

பழையாறைச் சோழரும் சந்திரலேகைச் சிற்றரசரும் அவனைத் திருதிருவெனப் பார்த்து விழித்தனர். 'இவன் ஏன் இப்படி ஊமைச் சாடை காட்டுகிறான்? சளுக்கிய நாட்டையும் விக்கிரமாதித்தனையும் வாழ்த்தியது ஏன்? அத்துடன் அவன் வராகக் கொடி கட்டிய கம்பையல்லவா வைத்துக் கொண்டிருக்கிறான்? எதிரிகளின் ஆசை வார்த்தையில் மயங்கி அவர்களுடைய கையாளாக மாறி, நம்மையெல்லாம் காட்டிக் கொடுக்க வந்திருக்கிறானோ? அதனால்தான் இவனைக் கோட்டைச் சிறையிலிருந்து விடுதலையாக்கி வெளியே அனுப்பியிருக்கிறார்களோ?'–

கோவிந்தர்மன் மீண்டும் அதே ஊமைச் சாடையில் தண்ணீர் கேட்டான்.

பெரும்பிடுகு முத்தரையர் அவனைக் குறி வைத்துப் பார்த்துக்கொண்டே மெல்லப் பின்னால் நகர்ந்து, கருவறையின் ஒரு மூலையிலிருந்த சுரைக் குடுக்கையொன்றை எடுத்து வந்து அவனிடம் நீட்டினார். நீர் நிறைந்த அந்தச் சுரைக்குடுவையை வாங்கிக்கொண்டு அமைதியாக வெளியே சென்றான் கோவிந்தவர்மன். குறுநில மன்னர்கள் இருவரும் அவனையே விழியசைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தனர்.

கோயில் மண்டபத்தின் படியோரம் போய் நின்ற கோவிந்தர்மன், வாய் நிறைய நீரை ஊற்றிக் கொப்புளித்து வெளியே உமிழ்ந்தான். ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணிக்கொண்டே ஆறு முறை வாய்க் கொப்புளித்து உமிழ்ந்த அவன், திருநிலையறையை நோக்கிக் கம்பீரமாக நடந்து வந்து, தன் கையிலிருந்த வராகக் கொடிக் கம்பை அகல் விளக்கின் தீக்கொழுந்தில் செருகிப் பிடித்தான். புழுதியேறிக் கிழிந்து கந்தலான அந்தச் சளுக்கியக் கொடி திகுதிகுவெனப் பற்றி எரிந்தது. “வாழ்க, பரமேசுவரவர்மர்! எழுக, பல்லவ சாம்ராஜ்யம்!” என்று வெறி பிடித்தவன்போல் உரத்த குரலில் கூவிக்கொண்டே, ஜ்வாலை விட்டு எரிந்த கொடிக் கம்பைச் சிலம்ப வட்டமாகச் சுழற்றித் தரையில் படீரென்று

.அடித்தான். பிறகு சோர்வுடன் போய், வெறுமையாயிருந்த ஒரு கற்பீடத்தின் மேல் துவண்டு உட்கார்ந்தான்.

திக்பிரமையுற்றவர்களாய் நின்றுகொண்டிருந்த பழையாறைச் சோழரும், சந்திரலேகைச் சிற்றரசரும் அவன் முகத்தைக் குனிந்து நோக்கினர். கோவிந்தவர்மன் அவர்களைப் பார்த்துக் குறுநகை புரிந்தான்.

"இளவரசே! என்ன இதெல்லாம்? எங்களுக்கு ஒன்றும் புரியவில்லையே?" என்று வறண்ட சிரிப்புடன் உள்ளிழுத்த குரலில் வினவினார் பெரும்பிடுகு முத்தரையர்.

"நாடகமாடுகிறேன் என்று நினைக்கிறீர்களா? நீங்கள் நினைப்பதுபோல் ஒரு நல்ல நாடகமே நடத்திக்கொண்டு தான் இங்கு வந்திருக்கிறேன்!" என்று கூறிக் கலகலவெனச் சிரித்தான் கோவிந்தவர்மன். "ஆம், ஐயா! நான் ஆடிய அந்த நாடகத்தை நினைத்தால் எனக்கே வெட்கமாயிருக்கிறது. ஆனால் அதைத் தவிர அப்போது வேறு வழி தோன்ற வில்லை."

சிற்றரசர்கள் இருவரும் அவனை வியப்புடன் ஏறிட்டு நோக்கினர்.

"பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருந்த நான் அங்கிருந்து தப்பி வந்தது ஒரு தனிக் கதை. அந்தக் கதையைப் பிறகு சொல்கிறேன். இப்போது உங்களிடம் வந்து சேர்வதற்காக நடத்தவேண்டியிருந்த நாடகத்தை மட்டும் கேளுங்கள்: சிறையிலிருந்து நான் தப்பியதைக் கேள்விப்பட்ட அன்றே, சளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தன் பல்லவபுரம் அரண்மனையிலிருந்து உறையூருக்குப் புறப்பட்டுப் போய்விட்டான். அவன் அப்படி இடம் மாறிப் போன காரணத்தை என்னால் ஊகிக்க முடியவில்லை. ஒருகால், தப்பியோடிய நான் பல்லவ நாட்டின் தெற்கு எல்லைக்குப் போய் அவனை எதிர்க்க முயற்சி செய்வேனோ என்று அஞ்சியே முன்னெச்சரிக்கை யாக அவன் அங்கு சென்றிருக்கலாம். நான் எதிர்பார்த்த

படியே, என்னைப் பிடிப்பதற்காக, நாடெங்கிலுமுள்ள சளுக்கியப் படை வீரர்கள் தீவிரமாயினர். இதனால் வெளியே தலைகாட்டாமல் இரண்டு நாட்கள் வரை ஓரிடத்தில் பதுங்கிக் கிடந்தேன். பிறகு உங்கள் இருவருக்கும் நமது ஆபத்துதவிப் படை வீரர்கள் மூலம் சேதி அனுப்பிவிட்டுத் துணிந்து கிளம்பினேன். இரண்டொரு ஊர்களைக் கடந்த பின்தான் என்னைச் சூழ்ந்துவரும் ஆபத்தான நிலைமையை நன்கு உணர முடிந்தது. அந்த நிலைமையைச் சமாளிக்க ஒரு யுக்தி செய்தேன். ஆட்டிடையன்போல் வேடமிட்டுக் கொண்டு நானே சித்திரித்துத் தயாரித்த வராகக்கொடியைக் கையில் ஏந்தியவாறு வழி நடக்க ஆரம்பித்தேன். இதனால் இன்னொரு சங்கடம் நேர்ந்துவிட்டது. வராகக் கொடியேந்திய என்னைக் கண்டு நம் பல்லவக் குடி மக்கள், நான் ஒரு தேசத்துரோகி என்பதாக நினைத்து விட்டனர். உண்ண உணவோ, குடிக்கத் தண்ணீரோ, தங்க இடமோ தராமல் என்னை விரட்டியடித்தனர். கோபாவேசம் கொண்ட சிலர் கொல்லவும் முயன்றனர். இதிலிருந்து ஒரு விஷயத்தை என்னால் புரிந்துகொள்ள முடிந்தது. நமது குடிமக்கள் அந்நிய ஆதிக்கத்தை அறவே வெறுக்கின்றனர் என்பதையும் சளுக்கிய அடிமைத் தளையிலிருந்து விடுதலைப் பெறத் துடியாய்த் துடிக்கின்றனர். என்பதையும் தமது நெஞ்சில் கனன்று கொண்டிருக்கும் சுதந்திரத் தீயைப் பயன்படுத்திக் கொள்ளத் தலைமறைவாயிருக்கும் பல்லவ மன்னர் முன்வர மாட்டாரா என்று ஏக்கத்தோடு எதிர்பார்த்துக் கொண்டிருப்பதையும் தெரிந்துக்கொண்டேன். எப்படியோ அவர்களிடமிருந்து தப்பி, உறையூர்ப்பெருவழியின் மேற்குச் சாலையிலுள்ள சுமைதாங்கி கல்லை வந்தடைந்தேன். உங்கள் வருகையை ஆவலுடன் எதிர்பார்த்துக் காத்திருந்த நான், களைப்பு மிகுதியால் என்னையறியாமலே அந்த சுமைதாங்கிக் கல்லின் மேல் படுத்துத் தூங்கிவிட்டேன். ஆழ்ந்த உறக்கத்திலிருந்த என்னை யாரோ தட்டி எழுப்பவே, நீங்கள்தாம்

வந்துவிட்டீர்களோ என்ற உற்சாகத்துடன் கண்விழித்தேன். ஆனால் என் எதிரே சளுக்கியத் தளபதி வில்வேலி வந்து நின்றுகொண்டிருந்தான்...”

“என்ன! வில்வேலியிடமே அகப்பட்டுக்கொண்டீர்களா?” என்று திடுக்குற்ற குரலில் கேட்டார் பழையாறைச் சோழர். “அவனும் உங்கள் கையிலிருந்த வராகக் கொடியைப் பார்த்து ஏமாந்துவிட்டானா?” என்று துடிப்புடன் வினவினார் முத்தரையர்.

கோவிந்தவர்மன் மெல்லச் சிரித்துவிட்டுக் கூறினான்: “ஒரு மாபெரும் நாட்டின் பிரதம தளபதி அத்தனை எளிதில் ஏமாந்துவிடுவானா? என்னுடைய கொடி நாடகமெல்லாம் அவனிடம் பலிக்கவில்லை. மேலும், நான் படுத்திருந்தபோது என்னுள் எரிந்துகொண்டிருக்கும் குடிமையுரிமை உணர்ச்சியால் என்வசமிருந்த வராகக் கொடியைக் காலடியில் போட்டு மிதித்துக் கொண்டிருந்ததை அவன் குறிப்பாகக் கவனித்துவிட்டான், அதனால் என்மீது அவனுக்குச் சந்தேகம் தட்டிவிட்டது. இதையறிந்த நான் உள்ளூறக் குலைநடுங்கிவிட்டேன். ஆயினும் தைரியத்தை இழக்காமல் என்னுடைய நாடகத்தின் உச்ச கட்டத்துக்குத் தாவினேன், ஆமாம்; கடும் விஷம்கொண்ட சர்பகந்தி வேரை, கடுமையான பல நோய்களைக் குணமாக்க உபயோகப்படுத்துவதில்லையா? அதுபோல் அந்த உயிராபத்தான நிலைமையிலிருந்து தப்பும் பொருட்டு என் ஜன்மப் பகைவனான விக்கிரமாதித்தனையும் அவனுடைய சளுக்கிய நாட்டையும் விண்ணதிர வாழ்த்திக் கோஷமிட்டேன். அப்படிக் கோஷமிட்ட எனது வாய் அக்கணமே காஞ்சிரங்காயை மென்றதுபோல் ஒரேயடியாகக் கசந்துவிட்டது. அந்தக் கசப்புக் கறையைக் கழுவிக் கொள்ளத்தான் இங்கு வந்ததும் உங்களிடம் தண்ணீர் வாங்கிக் கொண்டுபோய் வாய் கொப்புளித்துவிட்டு வந்தேன்.”

இளைஞனின் குரோதமும் குறும்புமான பேச்சைக் கேட்டுக் குபீரெனச் சிரித்த பழையாறைச் சோழர், "வில் வேலியிடமிருந்து தப்புவதற்காக விக்கிரமாதித்த வல்லபனை வாழ்த்திக் கோஷமிட்டீர்கள்; அது நியாயம்! ஆனால், இங்கு வந்த பின்னும் அதே கோஷத்தைச் சற்று முன் எழுப்பி னீர்களே, அது ஏன்?" என்று கேட்டார்.

"அதுவும் ஒரு நாடகம்தான் ஐயா!" என்று கூறிக் கடகடவெனச் சிரித்தான் கோவிந்தவர்மன். "உறையூர் மேற்குச் சாலையில் என்னை நீங்கள் சந்திக்க இயலாமற் போனால் இந்த மண்டகப்பட்டுக் குகைக் கோயிலில் வந்து காத்திருங்கள் என்று நான் அனுப்பிய ஓலையில் குறிப் பிட்டிருந்தேன் அல்லவா? அதன்படி நீங்களும் இங்கு இருப்பீர்கள் என்று நம்பியே வந்தேன். ஆயினும் எனக்கொரு சந்தேகம் எழுந்தது. என்னைப் பிடிப்பதற்காக நாடெங்கும் சுற்றித் திரிந்துகொண்டிருக்கும் சளுக்கிய வீரர்கள், நான் இங்கு வரப்போகும் விவரத்தை எப்படியேனும் அறிந்து, உங்களுக்கு முன் இக்குகைக் கோயிலில் வந்து மறைந்திருந்தால் என்ன செய்வது? நம்முடைய ஆபத்துதவி வீரர்கள் வெளியே இருந்தாலும், அவர்களையும் அறியாமல் இங்கு ஒளிந்திருக்கக் கூடுமே! எனவேதான் என்னுடைய வேஷத்தையும் கோஷத்தையும் மாற்றிக்கொள்ளாமல், வெள்ளோட்டம் பார்ப்பதற்காக, முதலில் சளுக்கிய வாழ்த்தொலி எழுப்பி னேன். நல்ல வேளையாக நான் சந்தேகப்பட்டது போல் இங்கு எதுவும் நடக்கவில்லை."

"மெய்யாகவே இது ஒரு சுவையான நாடகம் தான்" என்று கூறிக் குறும்பாகச் சிரித்த பழையாறைச் சோழர், "ஓ,...பல்லவ இளவரசர் இதுவரை சளுக்கிய விக்கிரமாதித் தனை ஆறு முறை வாழ்த்திக் கோஷமிட்டிருப்பார் என்று நினைக்கிறேன்; அதனால்தான் தம் வாயை ஆறு தடவை கொப்பளித்துக் கழுவிக் கொண்டு வந்தார் போலும்!" என்றார்.

ஆனால் முத்தரையரோ இந்த விவரங்களைக் கேட்டுத் தாள முடியாத அவமானமுற்றவர்போல் முகத்தை அஷ்டகோணலாகச் சுளித்துக்கொண்டு, "அது சரி, இளவரசே! வில்வேலியின் முன்னே அப்படிக் கோஷ மிட்டதன் பலன் என்ன?" என்று அடித் தொண்டையில் விளித்தார்.

"இதோ உங்கள் எதிரே உயிருடன் வந்து உட்கார்ந்து கொண்டிருக்கிறேனே, இதுதான் பலன்!" என்று வெட்கமும் வேதனையும் முட்டிய குரலில் கூறித் தலைகுனிந்தான் கோவிந்தவர்மன்.

"பல்லவ இளவரசர் இப்போது ராஜதந்திரக் கலையில் நன்கு தேர்ச்சி பெற்று வருகிறார்!" என்று உற்சாகத்துடன் கூறினார் பழையாறை சோழர்.

"ஆமாம்; உயிர்ப் பயம் ஏற்பட்டு வீர உணர்ச்சியும் மான உணர்ச்சியும் மழுங்கும்போது செய்யப்படும் காரியத்துக்குப் பெயர்தான் இராஜதந்திரம்!" என்று முணுமுணுத்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

இந்தக் குத்தல் மொழியைச் செவிமடுத்த கோவிந்த வர்மன் சாட்டையடி பட்டவன்போல் உடம்பை நெளித்துக் கொண்டு அவரைப் பரிதாபமாகப் பார்த்தான்.

# 13

## பரமேசுவரவர்மன்

அகல் விளக்கின் திரியைத் தூண்டிவிட்டுத் திரும்பிய பெரும்பிடுகு முத்தரையர் தொண்டையை மெல்லக் கனைத்துக் கொண்டு, "இளவரசே! காஞ்சிக் கோட்டையைக் காவல் காத்துக்கொண்டிருந்த வில்வேலி, உறையூர் மேற்குச் சாலைக்கு ஏன் வந்தான்? உங்களைத் தேடிப் பிடிப்பதற் காகவே வந்தானா?" என்று கேட்டார்.

"அப்படிச் சொல்ல முடியாது, ஐயா! சளுக்கிய விக்கிரமாதித்தன் ஏதோ ஒரு முக்கியமான காரியத்துக்காக அவனை உறையூருக்கு அழைத்ததன் பேரிலேயே அவன் காஞ்சியிலிருந்து புறப்பட்டிருக்கிறான். உறையூர்ப் பெரு வழியின் முச்சந்தியை அடைந்ததும் அவனுக்கு உறையூர் செல்லும் சாலை எது என்பதில் குழப்பம் ஏற்பட்டிருக்கிறது. அந்தக் குழப்பத்தை நிவர்த்தி செய்து கொள்ள ஓர் ஆளைத் தேடி வந்திருக்கிறான். அப்போதுதான் அவன் கண்ணில் நான் அகப்பட்டுக் கொண்டேன்" என்று கரகரத்த குரலில் கூறினான் கோவிந்தவர்மன்.

"உங்களிடம் வழி விவரம் கேட்டானோ?"

"கேட்டதோடு மட்டுமல்ல; காட்டச் சொல்லியும் என்னைப் பலவந்தமாக இழுத்துக்கொண்டு போனான்."

"அப்படியானால் அவன் உங்களுடைய நடிப்பில் ஏமாந்துவிட்டான் என்று சொல்லுங்கள்."

"முழுதும் ஏமாந்தான் என்று சொல்ல முடியாது. ஏனென்றால், என்னை அழைத்துப் போகும்போது

நடுவழியில், 'உனக்குக் குதிரையேற்றம் தெரியுமா?' என்று கேட்டுத் தன் குதிரைமீது ஏறிக்கொள்ளச் சொன்னான். விழிப்புடனிருந்த நான், குதிரையையே கண்ணால் பார்த்திராதவன் போல் நடித்துப் பேசி அவனை முட்டாளாக்கிவிட்டேன்."

"வில்வேலி, வெறும் தளபதி மட்டும் அல்ல; அவன் கடைந்தெடுத்த தந்திரசாலியாகவும் இருப்பான்போல் தோன்றுகிறது!" என்று வியப்புடன் கூறினார் பழையாறைச் சோழர்.

"அந்தக் கடைந்தெடுத்த முட்டாளுக்கு நீங்கள் உறையூர்ச் சாலையைக் காட்டினீர்களா?" என்று ஆத்திரத்துடன் கேட்டார் முத்தரையர்.

"இல்லை, ஐயா! பெருவளநல்லூர்ச் சாலையைக் காட்டி, அதுதான் உறையூர்ச் சாலையென்று அவனை வழிமாற்றி விட்டுவிட்டேன்!" என்று இளநகையுடன் அமைதியாகச் சொன்னான் கோவிந்தர்மன்.

"சரி; அதன்பின் நீங்கள் ஏன் உறையூர் மேற்குச் சாலைக்குத் திரும்பி வரவில்லை? நாங்கள் அங்கே உங்களுக்காக வந்து காத்திருப்போம் என்பதை அதற்குள் மறந்து விட்டீர்களா?"

"மறக்கவில்லை, ஐயா! நான் அங்கு வராமல் போனதற்கு இரண்டு முக்கிய காரணங்கள் உண்டு. உங்களைச் சந்திக்கக் குறித்தனுப்பிய நேரம் தவறிப் போனதால், என்னைத் தேடிவரும் நீங்கள் திரும்பிப் போய்விடுவீர்கள் என்று எண்ணினேன்-இது முதல் காரணம். என்னுடன் வந்த வில்வேலி அந்த முச்சந்தியை அடைந்ததும் ஏனோ திடுக்குற்று யாரையோ தேடுவது போல் அங்கு மிங்குமாக ஓடிப் பார்த்த பிறகு, நான் தவறாகக் காட்டிய பெருவளநல்லூர்ச் சாலையில் கண்மண் தெரியாமல் குதிரையைச் செலுத்திக் கொண்டு விரைந்தான். அவனுடைய அந்தப் பதற்றச் செயல் எனக்கு வியப்பையும் சந்தேகத்தையும் அளித்தன. என்னதான்

நடக்கிறதென்று பார்த்துவிட அவன் சென்ற அதே சாலையில் நானும் செல்ல ஆரம்பித்தேன். இது இரண்டாவது காரணம். நான் அப்படிப் போகாமல் இருந்திருந்தால் ஓர் அதிமுக்கிய மான விஷயத்தை நாம் அறிந்துகொள்ள வாய்ப்பே இல்லாமல் போய்விட்டிருக்கும்...”

“அது என்ன விஷயம், இளவரசே?”

“பெருவளநல்லூர் எல்லையை நான் அடைந்தபோது பொழுது புலரும் நேரமாகிவிட்டது. வழிமாறிச் சென்ற வில்வேலி சினத்தோடு திரும்பி வருவானே என்ற எச்சரிக்கையுடன் நடந்து கொண்டிருந்த எனக்கு அங்கே ஓர் அதிசயம் காத்திருந்தது. அந்தச் சாலையோரமிருந்த இல்லம் ஒன்றின் வாசலில் அவனுடைய குதிரை கட்டிப் போட்டிருக்க, அதன் அருகில் ஓர் அழகிய சிவிகையும் இறங்கியிருப்பதைக் கண்டேன்.”

பழையாறைச் சோழரும் பெரும்பிடுகு முத்தரையரும் அதிர்ச்சியுற்றவர்கள்போல் நிமிர்ந்து, ‘வராகச் சின்னம் பொறித்த சிவிகையா அது?'' என்று ஒரே குரலில் பரபரப்புடன் கேட்டனர்.

“நீங்களும் அதைப் பார்த்தீர்களா?” என்ற வியப்போடு வினவினான் கோவிந்தவர்மன்.

“உறையூர்ச் சாலையின் முச்சந்தியில் பார்த்தோம்...” என்று முனகிய முத்தரையர், “அது சரி; அந்தச் சிவிகை யாருடையது?” என்றார் படபடப்புடன்.

“சளுக்கிய விக்கிரமாதித்தனின் ஒன்றுவிட்ட தம்பியான வேங்கி மன்னன் விஷ்ணுவர்த்தனனுடைய செல்வ மகள் இளவரசி உத்தமசீலி என்பவரின் சிவிகை அது.”

திகைப்பிலாழ்ந்த முத்தரையர் ஒரு கண தடுமாற்றத் துக்குப் பின், “ஆமாம்! வில்வேலியின் குதிரையும், வேங்கி இளவரசியின் சிவிகையும் விடப்பட்டிருந்த அந்த இல்லம் யாருடையது?” என்று தம்மை மீறிய பதற்றத்துடன் கேட்டார்.

"முதலில் அந்த விவரம் தெரியாமலே அங்கு சென்றேன்: பிறகுதான் அது நம் சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் இல்லம் என்பதைத் தெரிந்துகொண்டேன்."

பழையாறைச் சோழரும், பெரும்பிடுகு முத்தரையரும் ஒருவரையொருவர் கலவரத்துடன் பார்த்துக்கொண்டனர். பிறகு சட்டென்று திரும்பிய முத்தரையர், "இளவரசே! அந்தச் சேதியக் கலைஞரின் இல்லத்தில் நீங்கள் வேறு யாரையாவது பார்த்தீர்களா?'' என்று கண்களை இடுக்கிக்கொண்டு வினவினார்.

"ஆந்திர இளவரசி, சளுக்கியத் தளபதி ஆகியோருடன் நமது அன்புக்கும் மதிப்புக்கும் உரியதாக இருந்து வரும் பரவாதிமல்லரையும் பார்த்தேன்!'' என்று முகத்தைச் சுளித்துக்கொண்டு கூறினான் கோவிந்தவர்மன்.

அவனுடைய பேச்சுத் தோரணையிலிருந்து, சேதியக் கலைஞர்மேல் அவன் ஏதோ குற்றம் கண்டிருக்கிறான் என்பதைப் புரிந்துகொண்ட முத்தரையர் குழப்பமடைந்தார். மேற்கொண்டு விவரம் கேட்கலாமா வேண்டாமா என்ற ஊமைத் தவிப்புடன் உடம்பை அப்படியும் இப்படியுமாக நெளித்தபடி அவன் முத்தை உற்று நோக்கினார்.

கோப உணர்ச்சியால் உந்தப்பட்ட கோவிந்தவர்மன் சற்றே முன்தள்ளி வந்து, பரவாதிமல்லரின் இல்லத்தில்தான் ஒற்றுக் கேட்ட உரையாடல்கள் அனைத்தையும் மளமள வெனக் கூறிவிட்டு, "கேட்டீர்களா, ஐயா? தேசம், இனம், மொழி, மதம் ஆகிய எல்லாவற்றையும் கடந்த மகா கலைஞர் என்று நாம் இத்தனைக் காலமாக நம்பி, மதித்து, போற்றிவரும் பரவாதிமல்லர் இப்போது எப்படி மாறிவிட்டார் பார்த்தீர்களா? சாலையோடு சென்ற வேங்கி இளவரசியை வலியத் தம் இல்லத்துக்கு அழைத்து வந்ததுமல்லாமல், சளுக்கியத் தளபதியையும் வரவேற்று உபசரித்திருக்கிறார். இதிலிருந்தே புலப்படவில்லையா, அவருடைய உள்ளத்தின் உண்மைச் சொரூபம்?... அடேயப்பா! அந்த வேங்கி

இளவரசியையும், சளுக்கியத் தளபதியையும் சந்தித்ததிலே தான் அவருக்கு எத்தனை மகிழ்ச்சி, எவ்வளவு குதூகலம்! இதையெல்லாம்விட, இன்னொரு விஷயத்தை நினைக்கும் போதுதான் என் மனம் எரிமலையாகக் குமுறுகிறது!... மாமல்லபுரத்திலே அவரால் உருவாகத் தொடங்கிய முற்றுப் பெறாமல் நிற்கும் கணேசர் கோயிலை முழுமையாக்கும் பணிக்கெனச் சளுக்கிய விக்கிரமாதித்தன் ஆக்கமும் ஆதரவும் அளிக்க முன்வந்தானானால் நமது பரமேசுவர போத்தரச னின் தோல்வியை அவர் ஒப்புக்கொண்டு விடுவாராம். அதாவது, விக்கிரமாதித்தனின் வெற்றியை வரவேற்றுப் பல்லாண்டு பாடுவாராம். எவ்வளவு பெரிய சுயநலவாதி யாக-சுதேசாபிமானியாக-இருந்தால் இப்படியொரு விடம் தோய்ந்த கருத்தை வெளியிடத் துணிவார்!'' என்றான் ஆத்திரம் செருமிய குரலில்.

வாயடைத்த நிலையில் வெலவெலத்து உட்கார்ந்திருந் தார் முத்தரையர். பழையாறைச் சோழரோ, கோவிந்தவர் மனையும் முத்தரையரையும் மாறி மாறிப் பார்த்து விழித்துக் கொண்டிருந்தார்.

தான் சொன்னவற்றுக்கு அவர்கள் ஏதும் மறுமொழி பேசாமல் மௌனமாக இருப்பதைக் கண்ட கோவிந்தவர்ம னின் மனம் வக்கிரமடைந்தது. அந்தச் சேதியக் கலைஞரைப் போல் இவர்களும் சுயநலவாதிகளாக மாறி விட்டிருப்பார் களோ என்று ஐயம் கொண்ட அவன் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், "சிற்றரசர்கள் இருவரும் என்னைப் பற்றிய விஷயங்களைத்தான் கிண்டிக் கிளறிக் கேட்டுக் கொண்டிருக்கிறார்களே தவிர, தம்மைப்பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே?'' என்றான் பொய்யான புன்முறுவ லுடன்.

''எங்களைப்பற்றி சொல்ல என்ன இருக்கிறது, இளவரசே? கோட்டை சிறையில் உங்களை அடைத்து வைத்ததுபோல் இந்த நாட்டையே சிறையாக்கி எங்களை

அடைத்து வைத்திருக்கிறான் விக்கிரமாதித்தன்! இல்லையென்றால், உங்களைச் சந்திப்பதற்காக, எங்கள் விண்முட்டும் அரண்மனைகளை மறந்து இந்தக் கண்முட்டும் இருள் கவிந்த கற்கோயிலைத் தேர்ந்தெடுத்திருப்போமா?" என்று சலிப்பும் சஞ்சலமும் நிறைந்த குரலில் கரகரத்தார் பழையாறைச் சோழர்.

"நமது குறுநில மன்னர்கள் அனைவரின் நிலையும் இதுதானா ஐயா?" என்று மனம் குமைந்து கேட்டான் கோவிந்தவர்மன்.

"ஆம், இளவரசே! எந்த ஒரு பேரரசுக்கும் வீறார்ந்த வலிமையூட்டும் அங்கங்களாக விளங்குபவை அதன் சிற்றரசுகள்தான். சிற்றரசுகளின் ஜீவத் துடிப்பை ஒடுக்கி விட்டால் பேரரசு தானாகவே செயலற்று வீழ்ந்துவிடும். இந்த உண்மையை அறிந்தவனான சளுக்கிய மன்னன், காஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றியதுமே தனது பெரும் படைகளைப் பகுதி பகுதியாகப் பிரித்து அனுப்பிப் பல்லவப் பேரரசுக்கு உட்பட்ட எல்லாக் குறுநில மன்னர்களின் அரண்மனைகளையும் வளைத்துக் காவல் போடச்செய்துவிட்டான். இத்தகைய முன்னெச்சரிக்கை ஏற்பாட்டினால்தான், போருக்குப் பின் நம் நாட்டிலே எந்த ஒரு மூலையிலும் எவ்வித எதிர்ப்புக் கலகமும் கிளர்ந்தெழாமல், உயிர்த் துடிப்பற்ற சவம்போல் அடங்கியொடுங்கிக் கிடக்கிறது. கோட்டைச் சிறையிலிருந்து தப்பிய நீங்கள் ஆபத்துதவி வீரர்கள் மூலம் கொடுத்தனுப்பிய ஓலையை நாங்கள் பெறுவதற்கும், அதில் கண்டபடி உங்களைச் சந்திக்க வருவதற்கும் எத்தனை உபாயங்களைச் செய்ய வேண்டியதாகிவிட்டது, தெரியுமா?"

நெடுமூச்செறிந்த பழையாறை சோழர் கவலை தேங்கிய கம்மிய குரலில் மீண்டும் தொடர்ந்து சொன்னார்: "இந்தக் கட்டுக்காவல் கெடுபிடிகளையெல்லாம்கூட நான் அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. ஆனால், இப்படியெல்லாம் நடக்குமென அஞ்சி என் அருமை மகள் இளங்கோப்பிச்சியை

முன்கூட்டியே பழையாறையிலிருந்து வெளியேற்றிவிட்டு இப்போது அவள் முகத்தைப் பார்க்கவும் முடியாமல் தவித்துக்கொண்டிருக்கிறேனே, இதுதான் எனக்குத் தாளவொண்ணா வேதனையாயிருக்கிறது."

கோவிந்தவர்மன் இதைக் கேட்டுக் குறுநகை புரிந்தான் "கவலைப்படாதீர்கள், ஐயா? உங்கள் அருமைச் செல்வி இளங்கோப்பிச்சி எவ்விதக் குறையுமின்றி நன்னலத்தோடு தான் இருக்கிறாள்."

வியப்புற்றுத் தலைநிமிர்ந்த பழையாறை சோழர், "என்ன சொன்னீர்கள், இளவரசே? என் மகளை நீங்கள் பார்த்தீர்களா?'' என்று ஆவலுடன் கண்களை அகல விரித்தார்.

"ஆம், ஐயா? பல்லவபுரம் கோட்டைச் சிறையிலிருந்து நான் தப்பி வர உதவி செய்தவளே, சோழ இளவரசி இளங்கோப்பிச்சிதான். அவள் தங்கியுள்ள ஆலம்பாக்கம் என்னும் ஊரில், அவளுடைய பாதுகாப்பிலே இரண்டு நாட்கள்வரை தலைமறைவாயிருந்த பின்னர்தான் இங்கு வந்து சேர்ந்திருக்கிறேன்."

திகைத்துவிட்டார் பழையாறைச் சோழர், மகிழ்ச்சியும் திகிலும் அவர் முகத்தில் மாறி மாறி ஏர் உழுதன. தம் மகளைப்பற்றி மேலும் விசாரித்து அறியச் சுறுசுறுப்புடன் சற்று முன்தள்ளி வந்தார்.

இவ்வளவு நேரம் இவர்கள் பேசிய பேச்சு எதிலும் கலந்துகொள்ளாமல் வேறு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து போய் உட்கார்ந்திருந்த பெரும்பிடுகு முத்தரையர் சட்டென்று திரும்பிப் பழையாறைச் சோழரின் தோளைப் பிடித்துக் குலுக்கி, ''நண்பரே! சளுக்கிய விக்கிரமாதித்தன் நம் பரமேசுவரவர்மரை யுத்த களத்திலோ அதற்கு முன்போ பார்த்ததே இல்லை என்ற விஷயம் உண்மைதானே? அதில் சந்தேகம் இல்லையே?" என்று தம்மை மீறிய பதற்றத்துடன் கேட்டார்.

இந்தத் திடீர் வினாவினால் ஒரு கணம் திகைத்துவிட்ட பழையாறைச் சோழர் மெல்லச் சிரித்தவாறு, "ஏன் இப்படிக் கேட்கிறீர்கள், அன்பரே? உங்களுக்கும் அது தெரிந்த விஷயம்தானே? சளுக்கியப் படைகளின் முதல் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் பல்லவப் படைகள் பின் வாங்கத் தொடங்கியதுமே, காஞ்சியிலிருந்த பரமேசுவரவர்மர் தாமே எல்லைப் போர்க்களத்தில் நேரிடையாகக் கலந்து கொள்ள யுத்த சன்னத்துக்களுடன் புறப்பட்டார். ஆனால் எதிரியின் அசுர பலத்தை உணர்ந்த நாம் அவரை அந்தப் போர்முனைக்குப் போகவிடாமல் தடுத்து நிறுத்திக் காஞ்சிக் கோட்டையைப் பலப்படுத்திக்கொண்டு எதிரியை உள்ளுக்கு இழுத்துத் தாக்கும்படி யோசனை கூறினோம். மின்னல் வேகத்தில் முன்னேறி வந்த சளுக்கிய விக்கிரமாதித்தனோ நமது அந்தப் போர்த் தந்திரத்தை ஒரே நாளில் தவிடு பொடியாக்கிக் காஞ்சிக் கோட்டையை வளைத்துக் கொண்டான். படை பலம் சிதறிய நிலையில் கோட்டைக் குள்ளே தனித்துச் சிக்கிக்கொண்ட பரமேசுவரவர்மன், சளுக்கிய விக்கிரமாதித்தனுடனோ-தளபதி வில்வேலி யுடனோ-நேருக்கு நேர் நின்று வாள் எடுத்துப் போரிட வாய்ப்பின்றிச் சுரங்க வழியே தப்பித் தலைமறைவானார். இதனால்தான் அவ்விருவரும் தமது ஜன்ம எதிரியின் முகத்தைப் பார்க்காமலாகி, அதுவே இப்போது அவர்களுக்கு ஒரு பெரும் பிரச்னையாகவும் நமக்குப் பேராறுதலாகவும் இருந்து வருகிறது" என்று கூறி நிறுத்தினார்.

இதைக் கேட்டு மேலுங் கீழுமாகத் தலையசைத்தபடி சற்றுநேரம் மௌனமாயிருந்த முத்தரையர் திடுமெனத் திரும்பி, "இளவரசே! பெருவளநல்லூரில் அந்த மூன்று பேரைத் தவிர வேறு யாரையாவது நீங்கள் பார்த்தீர்களா?" என்று கடுகடுத்த குரலில் கேட்டார்.

சற்றுமுன் இதே வினாவைக் கேட்ட அவர் இப்போது மீண்டும் அதையே திருப்பிக் கேட்கிறாரே என்று திகைப்படைந்த கோவிந்தவர்மன் மெல்லக் குனிந்து, "பரவாதிமல்லரின் இல்லத்தில்தானே ஐயா? அங்கு

அம்மூன்று பேரைத் தவிர வேறு யாரையும் நான் பார்க்க வில்லையென்று முன்பே சொல்லி விட்டேனே!” என்றான்.

“ஓகோ!” என்று தலையாட்டிக்கொண்ட முத்தரையர் தணிந்த குரலில், “ஆனாலும், அப்படி நீங்கள் செய்தது தவறுதான்” என்று முணுமுணுத்தார்.

கோவிந்தவர்மன் திடுக்குற்று நிமிர்ந்தான்.

“ஆம். இளவரசே! உறையூருக்கு வழிகேட்ட வில் வேலிக்கு நீங்கள் பெருவளநல்லூர்ச் சாலையைக் காட்டியது பெருந்தவறு.”

“ஏன், ஐயா? அப்படிச் செய்ததில் என்ன தவறு நேர்ந்துவிட்டது என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?”

முத்தரையர் இதற்கு மறுமொழி கூறாமல் வேறொரு வினாவைக் கேட்டார்: “வேங்கி இளவரசி இந்நாட்டுக்கு வந்திருப்பதன் காரணம் உங்களுக்குத் தெரியுமா இளவரசே?”

ஒருகணம் ஏதோ யோசனை செய்த கோவிந்தவர்மன் தன் இடுப்பில் மறைத்துச் செருகி வைத்திருந்த பட்டோலைச் சுருளை எடுத்து நீட்டி, “இதோ இந்த ஓலையைப் படித்துப் பாருங்கள்!” என்றான் கரகரத்த குரலில்.

வியப்புற்ற முத்தரையர், வேங்கி நாட்டின் முத்திரை பொறிக்கப்பட்டிருந்த அவ்வோலையை வாங்கிப் பரபரப் புடன் பிரித்து வாய்க்குள்ளாகவே படித்தார். பழையாறைச் சோழரும் அருகில் நெருங்கி வந்து கழுத்தை நீட்டிப் பார்த்தார்.

ஆத்திரத்துடன் பற்களை நறநறவெனக் கடித்துக் கொண்டே முத்தரையர் அப்பட்டோலையைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிய முயன்றபோது சடாரெனப் பாய்ந்து வந்த கோவிந்தவர்மன் அதை வெடுக்கெனப் பிடுங்கிக் கொண்டு கலகலவெனச் சிரித்தான். “இந்த ஓலையை வைத்துக் கொண்டு நான் சாதிக்கத் திட்டமிட்டிருக்கும்

பெரிய காரியமொன்றை ஒரே நொடியில் தகர்த்துவிடப் பார்த்தீர்களே!”

“ஆமாம்; இந்தப் பட்டோலை உங்களுக்கு எப்படிக் கிடைத்தது?”

“ஆந்திர இளவரசி உத்தமசீலியின் சிவிகையிலிருந்து எடுத்து வந்தேன், ஐயா!” என்று விஷமப் புன்னகையுடன் சொன்னான் கோவிந்தவர்மன்.

தலையைத் தாங்கிப் பிடித்தவாறு சற்றுநேரம் மௌனமாக இருந்த முத்தரையர் பீதியடைந்த குரலில், “இளவரசே! நீங்கள் சேதியக் கலைஞரின் இல்லத்தைவிட்டுப் புறப்படும்வரை சளுக்கியத் தளபதியும் ஆந்திர இளவரசியும் அங்கேதான் இருந்தார்களா?” என்று வினவினார்.

“வில்வேலி இந்நேரம் புறப்பட்டுப் போயிருப்பான்: ஆனால், வேங்கி இளவரசி மட்டும் அங்கேதான் இருந்தாக வேண்டும்.”

“ஏன் அப்படி, இளவரசே?”

“நான் தான் அவளை அவ்வாறு அங்கு தங்கித் தவிக்கும் படிச் செய்துவிட்டு வந்தேன்!” என்று பெருமையுடன் கூறினான் கோவிந்தவர்மன். “இந்த ஓலையைக்கொண்டு நான் சாதிக்கத் திட்டமிட்டிருக்கும் காரியத்துக்காக ஆந்திர இளவரசியின் பயணத்தை ஒரு நாள் பொழுதேனும் தடைப்படுத்த வேண்டியது அவசியம் என்று எண்ணினேன். அதற்கோர் உபாயம் தோன்றியது. மகிழ மரம் ஒன்றின் அடியில் கிடந்த ஒரு மரக்கட்டை ஆசனத்தைத் தூக்கி வந்து அந்தச் சிவிகையினுள் ஓசையின்றி வைத்துத் திரைகளைத் தொங்க விட்டுவிட்டு, சற்றுத் தள்ளிப் போய் நின்று கொண்டு, ‘சரி, புறப்படலாம்’ என்று பெண்ணின் குரல் போன்ற சன்னக் குரலெடுத்துக் கூறினேன். தூக்கக் கிறக்கத்தில் அரைப் பிரக்ஞையோடு உட்கார்ந்திருந்த சிவிகையாட்கள் துடித்துப் பதறி எழுந்து சிவிகையைத் தூக்கிக் கொண்டார்கள். உள்ளே கனம் இருக்கவே, இளவரசிதான் அமர்ந்திருக்கிறாள் என்று தீர்மானித்தவர்களாய், பூஞ்சை இருள் பூசிக் கிடந்த அந்த

விடியற்சாம வேளையில் உற்சாகமாகப் புறப்பட்டு போயே விட்டார்கள். சிறிதுநேரம் கழித்து நானும் அங்கிருந்து மெதுவாக நழுவி வந்து விட்டேன்.”

இடியால் தாக்குண்டவர்போல் அதிர்ச்சியுற்று எழுந்து நின்ற பெரும்பிடுகு முத்தரையர், “இளவரசே! இரண்டாவ தாக நீங்கள் ஒரு பெரிய தவற்றைச் செய்துவிட்டீர்கள். அந்தப் பரவாதிமல்லர் இல்லத்தில் தலைமறைவாகத் தங்கியிருக்கும் பல்லவக் கோமான் பரமேசுவரவர்மர் எதிரிகளின் கையிலே சிக்கிக்கொள்ள நீங்களே வழிவகுத்துக் கொடுத்து விட்டீர்கள்!” என்று பதறிக் குழறினார்.

கோவிந்தவர்மன் இதைக் கேட்டுக் கிடுகிடுத்து விட்டான். அவனால் ஒன்றுமே பேசமுடியவில்லை. முகத்தை இரு கைகளாலும் பொத்திக்கொண்டு விம்மிப் பொருமினான்.

“நண்பரே! நாம் இனி இங்கே ஒரு கணமும் தாமதிக்கக் கூடாது. இப்போதே பெருவள நல்லூருக்குப் புறப்பட்டாக வேண்டும்” என்று பழையாறைச் சோழரைப் பார்த்துப் படபடத்தார் முத்தரையர்.

பழையாறைச் சோழரோ அதற்கு உடன்பட விரும்பா தவர்போல் மிரட்சியுடன் அங்குமிங்குமாகப் பார்த்தார்.

அவருடைய தயக்கத்தைப் புரிந்துகொண்ட முத்தரை யர், “சரி; நீங்கள் பழையாறைக்குச் செல்லுங்கள். நானும் கோவிந்தவர்மரும் பெருவளநல்லூருக்குப் போய் அங்குள்ள நிலைமையைத் தெரிந்துக்கொண்டு பிறகு உங்களை வந்து சந்திக்கிறோம்” என்றவாறு கருவறையை விட்டு அவசரமாக வெளியே நடந்தார்.

முகத்தை இரு கைகளாலும் மூடிக்கொண்டு உட்கார்ந் திருந்த கோவிந்தவர்மனும் எழுந்து அவரைப் பின் தொடர்ந்தான்.

தம்மை அலட்சியப்படுத்துவது போல் பேசிவிட்டுச் செல்லும் பெரும்பிடுகு முத்தரையரை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்த பழையாறைச் சோழரின் முகம் பயங்கரமாகக் கறுத்துச் சிறுத்தது.

# 14

## உத்தமசீலியின் தவிப்பு

**கா**லை இளங் கதிரவனின் தங்கக் குழம்பொளியைப் பீலி போன்ற ஓலை அடுக்குகளில் தேக்கிக்கொண்டு நின்ற தென்னை மரங்களின் நீண்ட நிழற் சித்திரங்கள் சாய்ந்து கிடந்த பரவாதிமல்லரின் இல்லத்து வாசலிலே, ஆந்திர இளவரசி உத்தமசீலியின் சிவிகை, பயணத்துக்குத் தயார் செய்யப்பட்ட நிலையில் நிறுத்தப்பெற்றிருந்தது.

அந்தச் சிவிகைக்குச் சற்று அப்பால்-அதைத் தூக்கிச் செல்லப் புதிதாக அனுப்பப்பட்ட-ஆறு பேர் பணிவுடன் நின்றுகொண்டிருந்தனர். அவர்களுக்குப் பின்னால் சளுக்கியக் காவல் வீரர்கள் சிலர் அணிவகுத்து நின்றனர். வாசற்படியோரம், தாமரை வடிவிலே செதுக்கப் பெற்ற மரக்கட்டை ஆசனமொன்றைத் தூக்கித் தலையில் சுமந்த வாறு குற்றவாளிபோல் நடுநடுங்கிக்கொண்டு நின்றிருந்தான் இன்னொருவன். நேற்றுவரை சிவிகை தூக்கிகளில் ஒருவனாக இருந்துவந்த நாகோதரன் என்பவன்தான் அவன்!

அவர்கள் அனைவரும் இளவரசியின் வருகையைக் கவனப் பொறுப்புடன் எதிர்நோக்கியபடி அவள் இருந்த அறைப் பக்கமே தங்கள் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தனர்.

உத்தமசீலியும் தன்னைப் பிரயாணத்துக்கு ஆயத்தப் படுத்திக்கொண்டு, நீராடப் போயிருந்த பரவாதிமல்லருக் காகக் காத்திருந்தாள். அவள் மனம் ஒரு நிலையில் இல்லாது அலைபாய்ந்து கொண்டிருந்தது. காரணமில்லாத ஏக்கம், அர்த்தமற்ற பயம், புரிபடாத பிரிவுத் தாபம், விளங்காத இழப்பு உணர்ச்சி-இவையெல்லாமாகச் சேர்ந்து அவளை

ஓரிடத்தில் அமரவிடாமல் அங்குமிங்குமாக நடை பயில வைத்தன.

அவள் ஏன் இப்படி அமைதி இழந்து தவிக்கவேண்டும்? அளப்பரிய அன்பும் பண்பும் கொண்டு ஒரு தந்தையைக் காட்டிலும் மேலான பாசப் பரிவோடு தன்னை வரவேற்று உபசரித்ததுமல்லாமல், எதிர்பாராது ஏற்பட்ட சங்கட நிலையிலே தான் தங்கியிருக்க இடமும் அளித்து, அந்த ஒரு நாள் பொழுதில் தனக்கு ஒரு குறையும் நேரமால் கவனித்துப் போற்றிக் காத்த மாபெரும் சேதியக் கலைஞரான பரவாதிமல்லரை விட்டுப் போகிறோம் என்ற பிரிவுத் துயரால் மனம் பேதலித்துத் தவிக்கிறாளா? அல்லது நேற்று மாலை அவளுடைய சிவிகை தூக்கியான நாகோதரன் வந்து, அன்று விடியற்காலை தானும் தன் சகாக்களும் ஏமாற்றப்பட்ட விவரத்தைக் கூறினானே, அந்தச் சாமர்த்தியமான சதி நிகழ்ச்சியை நினைத்துக் குழம்பித் தவிக்கிறாளா? அதைப் பற்றித்தான் இரவெல்லாம் உறக்கத்தைக்கெடுத்துக் கொண்டு பலவாறாக எண்ணியெண்ணிப் பார்த்தும் ஒன்றும் புரிபடாமல் போகவே, அது ஒரு சாதாரணச் சம்பவம் என்பதாக மனத்தைத் தேற்றிக்கொண்டு அதைத் துப்புரவாக மறந்தும் விட்டாளே!...

ஓ,...நேற்று மாலை, அந்தச் சிற்றாற்றங் கரையோரம் நிகழ்ந்த நிகழ்ச்சியை எண்ணி இப்படி அலமந்து தவிக்கிறாளோ?-

அது ஓர் எதிர்பாராத சம்பவம். திட்டமிடாமல் நிகழ்ந்த ஒரு விநோத நிகழ்ச்சி. அதை எண்ணிச் சிரிக்கலாம்; அல்லது வருத்தப்படலாம். இவை இரண்டுக்கும் இடைப்பட்ட தவிப்புநிலை அடையக் காரணம்?...

உலாவிக்கொண்டிருந்த அவள் சரேலென்று போய்ச் சாளரத்துத் திரையை விலக்கிவிட்டு அந்தச் சிற்றாற்றங் கரையோரம் பொன் துகள் படிந்த மரகத வேல்போல் ஓங்கி நின்றுகொண்டிருந்த சவுக்கை மரத்தையே சிறுபொழுது கண்ணிமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தாள். அமைதி

பற்று வெளிறியிருந்த அவள் முகம் இப்போது சரத் கால விடியற்போதில் மடல் பிரிக்கும் செவ்வரவிந்தம் போல் மெல்ல மெல்ல மலர்ச்சியுற்று ஒளிர்ந்தது.

ஏதோ ஒரு முடிவுடன் அந்த அறையைவிட்டு வெளியே வந்த அவள், பரவாதிமல்லரைத் தேடுகிற பாவனையில், அங்குள்ள ஒவ்வோர் அறையாக எட்டிஎட்டிப் பார்த்துக் கொண்டு சென்றாள். அந்த இல்லத்தின் எந்த அறையிலும் யாருமே இருப்பதாகத் தெரியவில்லை. சோர்ந்து துவண்டு நின்ற அவள், ஒருகண சிந்தனைக்குப் பின் வெளிவாசலை நோக்கி நடந்தாள்.

வாசலில் நின்றிருந்த சிவிகை தூக்கிகளும் காவல் வீரர்களும் இளவரசி புறப்பட்டு போகிறாள் என்று எண்ணிச் சுறுசுறுப்படைந்தனர். ஆனால் அவளோ, அந்த இல்லத்தைச் சார்ந்த கலைக்கூடத்தை நாடி சென்றாள்.

கலாதேவியின் தவச்சாலைபோல் விளங்கிய அவ்வழகிய கலைக்கூடத்தில் பிரவேசித்த அவள் தன்னை மீறிய ஓர் அச்சக் குறுகுறுப்புடன் அங்குமிங்கும் பார்த்தவாறு தயங்கி நின்றாள். பிறகு, சிறிதே தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, முழுமைபெறாச் செப்புச் சிலை ஒன்று நிறுத்தப் பெற்றிருந்த ஓர் இடத்தை அடைந்தாள். மந்தமாருதத்தில் அசைந்தாடும் நாணற் பூச்செண்டுபோல் உடல் நடுங்கித் துடிக்க, வட்டமிட்டுப் பறக்கும் வண்ணத்தின் சிறகுகள் போல் மையுண்ட கண்ணிமைகள் படபடத்துச் சுழல, மெல்லக் கழுத்தை நீட்டி எட்டிப் பார்த்தாள்.

சேதியக்கலை சம்பந்தமான ஆகம நூற்சுவடிகள் அடுக்கி வைக்கப்பெற்றிருந்த ஓர் அறையில், அந்த அழகிய வாலிபன் கைகளைப் பின்னால் கோத்தபடி உலாவிக் கொண்டிருந்தான். அவன் எதிரே, முற்றுப்பெறா ஓவியத் திரையொன்று தொங்கிக் கொண்டிருந்தது. அதன் அருகில் பல்வேறு வண்ணக் கிண்ணங்களும் தூரிகைகளும் வைக்கப் பெற்றிருந்தன.

சிந்தனையில் ஆழ்ந்து உலாவிக்கொண்டிருந்த அவன் தன்மீது பூஞ்சையான நிழல் ஒன்று படிந்ததை உணரவே

மெல்லத் தலை நிமிர்ந்தான். அவனது துயரம் செறிந்த விழிகளில் ஒரு மின்னொளி தோன்றி மறைந்தது.

செப்புச் சிலையோரம் செம்பொற் பதுமையென நின்று கொண்டிருந்த உத்தமசீலி, அவ்வாலிபனின் எதிரேயிருந்த ஓவியத் திரையைப் பார்த்து ஏதோ ஒன்றைப் புரிந்து கொண்டு அதற்காகப் பெரிதும் திருப்தியடைகிறவள்போல் மெல்லத் தலையசைத்தவாறு மேலும் ஓரடி முன் நகர்ந்தாள். அழகேறிக் குளிர்ந்திருந்த அவள் கண்கள் அந்த வாலிபனின் பரந்த மார்பில் தவழ்ந்துகொண்டிருந்த-உருத்திராக்கம் போன்ற-சவுக்கைக்காய் மாலையைக் குறும்புடன் மொய்த்துவிட்டுத் திரும்பின.

மறுகணம், ஜலதரங்கத்தைச் சுண்டிவிட்டாற் போன்ற கலீர்ச் சிரிப்பொலி!

முற்றும் துறந்த யோகிபோல நின்றுகொண்டிருந்த வாலிபன் அவளை அமைதியாக ஏறிட்டு நோக்கினான்.

மாதவிக் கொடியிடையை ஒயிலாக வளைத்து, சங்கு நிறக் கழுத்தை ஒருக்களித்துச் சாய்த்து அழகோவியமாய் நின்ற அவள், தன் காயாம்பூ நயனங்களை மெல்லச் சுழற்றி அவனைப் பட்டும் படாததுமாகப் பார்த்துக்கொண்டே-குறுநகை பூசிய அதரங்களைப் பிரித்துக் கந்தர்வ ரசமான இனிய மென்குரலில், "சென்று வருகிறேன், வணக்கம்" என்றாள். பிறகு அங்கிருந்து சரேலெனத் திரும்பி நடந்தாள்.

மின்னல் நெளிவதுபோல் விரைந்து சென்ற அவளையே பார்த்துக்கொண்டு நின்றான் வாலிபன்.

"மாமன்னர் பரமேசுவரவர்மருக்குச் சிரம் தாழ்த்திய அஞ்சலி உரித்தாகும்!"

அவன் திடுக்குற்றுப் பின்னால் திரும்பினான்.

அங்கே, அந்தக் கலைக்கூடத்தின் பின்புறச் சாளரத்துக்கு வெளியே ஒரு நந்தியாவட்டைச் செடியோரம், களைத்துச் சோர்ந்த முகத்தினராய் ஒடுங்கிப் பதுங்கி நின்றுகொண்டிருந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

# 15

## அநந்தமதியின் சங்கடம்

தவத்துறைக்கும் பல்லவபுரத்துக்கும் இடையே இரண்டு குரோசம் தொலைவில், இருபத்தைந்து பூமிப் பரப்பளவு கொண்ட ஆலம்பாக்கம் என்னும் ஓர் அழகிய சிற்றூர் அமைந்திருந்தது. அச்சிற்றூரின் தெற்கு எல்லையில் பெரியதோர் ஏரியும், அந்த ஏரியின் கீழண்டைக் கரையை அடுத்துப் பல்லவபுரத்துக்குச் செல்லும் கிளைச் சாலையொன்றும், அதன் மருங்கே ஒரு தென்னந் தோப்பும், தோப்பின் பசுமைச் சூழலில் பழைமையான வீடு ஒன்றும் இருந்தன. வீட்டின் கதவு உட்பக்கம் தாழிடப்பட்டிருந்தது.

ஜன நடமாட்டம் அற்றுக் கிடந்த அந்தச் சாலையில் அவ்வப்போது சில சளுக்கிய வீரர்கள் குதிரைமீது போவதும் வருவதுமாக இருந்தனர். அவர்கள் ஒருவரோடொருவர் செய்துகொண்ட சமிக்ஞைகளிலிருந்து, யாரோ மதிப்பு வாய்ந்த ஒருவரை எதிர்சென்று அழைத்து வரும்படி பல்லவபுரத்திலிருந்து அனுப்பப்பட்டிருக்கிறார்கள் என்பது புலனாயிற்று.

முற்பகல் முதிரும் வேளை, கடுமையான வெயில் வறுத்துக் கொட்டிய அந்த மதிய வேளையில், ஊரின் ஒவ்வொரு தெருப் பக்கமிருந்தும் பெண்மக்கள் ஓலமிட்டு அழும் ஒலி இடைவிடாது கேட்டுக்கொண்டேயிருந்தது. சில சமயம் ஆண்கள் சச்சரவிட்டுக் கூப்பாடு போடும் ஒலியும் எழுந்து அடங்கியது.

சளுக்கியப் படை வீரர்களாயிருந்து அதிகாரிகளாக, மாற்றப்பட்டவர்கள்போல் தோன்றி மூன்று பேர் தமக்குள் ஏதோ பேசிக்கொண்டே அந்தத் தென்னந்தொப்பு வீட்டின் எதிரே வந்து நின்றனர். அவர்களில் பெரிய மூட்டை யொன்றைச் சுமந்து கொண்டிருந்த ஒருவன் செருக்காக முன்சென்று, சாத்திக் கிடந்த கதவைத் தட்டினான்.

சில விநாடிகளுக்குப்பின் கதவு திறக்கப்பட்டது. உள்ளிருந்து ஒரு மூதாட்டி, "யாரது?" என்று கேட்டுக் கொண்டே வெளியே வந்தாள்.

அந்த மூதாட்டி!-ஆமாம்; பெருவள நல்லூரிலே சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் சமையற்காரியாகப் பார்த்த அநந்தமதி என்பவள்தான் அவள்!

"ஆடுகோபதி இளங்காரிக்குடையான் இல்லம் இது தானே?" என்று அமர்த்தலாகக் கேட்டான் கதவைத் தட்டிய சளுக்கியன்.

"ஆம், ஐயா!" என்றாள் அநந்தமதி.

"அவர் உங்களுடைய மைந்தரா?"

"ஆமாம்...உங்களுக்கு என்ன வேண்டும்?"

"நாங்கள் அவரைப் பார்க்கவேண்டும்" என்று சொல்லிக் கொண்டே வீட்டினுள் புக முயன்றான் சளுக்கியன்.

அநந்தமதியின் முகத்தில் கலவரம் படர்ந்தது. வாசல் நிலையோரம் நின்றிருந்த அவள், அவனை உட்புகாமல் தடுப்பதுபோல் சற்றே முன்னால் நகர்ந்து வந்து, "என் மகன் வெளியூர் போயிருக்கிறான். விஷயத்தைச் சொன்னால் வந்ததும் அவனிடம் தெரியப்படுத்துகிறேன்" என்றாள் அமைதியான குரலில்.

ஒரு கணம் ஏதோ யோசித்த சளுக்கியன் முகத்தைக் கடுமையாக வைத்துக்கொண்டு, "பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையிலுள்ள எங்கள் சளுக்கிய காவல் வீரர்களின்

உணவுக்காக வெள்ளாடுகள் சஞ்சயம் பண்ணி வருவது உங்கள் மைந்தர்தானே?'' என்று அடித்தொண்டையில் கேட்டான்.

"இருக்கலாம், ஐயா! ஆனால் எனக்கு அந்த விவரம் தெரியாது."

''ஓகோ!'' என்று முனகிக்கொண்ட இன்னொரு சளுக்கியன், "அது சரி; உங்கள் மைந்தர் இப்போது எந்த ஊருக்கு என்ன காரிமாய்ப் போயிருக்கிறார்?" என்று தன் கழுத்தை நீட்டி மிகவும் அக்கறையாக விசாரித்தான்.

''அநேகமாக, அவன் சந்தையில் ஆடுகள் பிடித்து வருவதற்குப் போயிருக்கலாம்..." என்று இழுத்தாள் அநந்தமதி.

சளுக்கியர்கள் ஒருவரையொருவர் பார்த்து ஏமாற்றத் துடன் முகத்தைச் சுளித்துக்கொண்டனர். கதவைத் தட்டியவன் தன் சகாக்களை நோக்கி ஏதோ கண்ஜாடை காட்டி விட்டுத் திரும்பி, "சரி, அம்மணீ! நாங்கள் மிகவும் களைத்து வந்திருக்கிறோம். பருகுவதற்கு இளநீர் வேண்டும். பறித்துத் தர இயலுமோ?" என்று கேட்டான்.

முடிச்சு முடிச்சாகக் குலைகளைச் சுமந்து நின்ற தென்னை மரங்களையும் அந்தச் சளுக்கியர்களையும் மாறி மாறிப் பார்த்த அநந்தமதி, "இளநீர்தானே? காய் ஒன்றின் விலை இரண்டு மாடைக் காசு ஆகும். எத்தனை வேண்டுமோ அத்தனைக்குரிய அஃகத்தை எண்ணி வைத்து விட்டு நீங்களே மரத்தில் ஏறிப் பறித்துக்கொள்ளுங்கள். ஏனென்றால், என் வீட்டில் இப்போது ஆண்பிள்ளைகள் யாரும் இல்லை" என்றாள் புன்னகையுடன்.

சளுக்கியனின் முகம் வறண்டது. துளையிட்ட கரும் பொன் காசுகளைக் கொத்தாகச் சேர்த்துக் கட்டி இடுப்பில் செருகி வைத்திருந்த அவன், அதை எடுத்து எண்ணிப் பார்த்தவிட்டு அநந்தமதியின் கையில் தூக்கிப் போட்டான். உடனே மற்றச் சளுக்கியர்கள் தென்னந்தோப்பை நோக்கி விரைந்தனர். அடுத்த சில விநாடிகளில், போர்க்களத்திலே

மனிதத் தலைகள் வெட்டுண்டு உருள்வதைப் போலத் தென்னங்குலைகள் கீழே சரிந்தன. விடாய்த்துக் கிடந்த அவர்கள் ஆவலுடன் உட்கார்ந்து தம் குறுவாளால் இளநீர்க்காய்களைச் சீவிச் சீவிப் பருகத் தொடங்கினர்.

தேவைக்கு அதிகமான தென்னங்குலைகளை வெட்டிச் சாய்த்து வீணடித்துக் கொண்டிருந்த அந்த முரட்டுச் சளுக்கியர்களை வெறித்துப் பார்த்தவாறு வாசல் திண்ணை யோரம் மலைத்து நின்றிருந்த அநந்தமதி, தொலைதூரத்திலே சிறுமணிகள் குலுங்கியெழும் ஒலி கேட்டுச் சட்டென்று திரும்பினாள்.

அந்த இல்லத்தின் வலப் பக்கம் வேலிக்கு அப்பால், ஏரிப் புலனிலிருந்து வரும் கொடிப் பாதையொன்றில், ஏழெட்டுப் பசுக்களும் ஐந்நூறு கன்றுகளும் மந்தையாகக் குழுமி முன்னே வர, அவற்றின் பின்னால் ஆயர்குலப் பெண்போல் தோற்றமளித்த எழிலார்ந்த இளநங்கை யொருத்தி, தண்டுத் தாளோடு பறித்துச் செண்டாகச் சேர்த்த நீலோற்பல மலர்க்கொத்துக்களைத் தன் மார்பில் அணைத்துக்கொண்டு குதூகலத்துடன் துள்ளிக் குதித்து ஆடியவாறு வந்து கொண்டிருந்தாள்.

இந்தக் காட்சியைக் கண்ட அநந்தமதியின் கண்களில் மகிழ்ச்சியொளி மின்வெட்டியது. ஆனால், மறுகணமே அவள் கலவரமடைந்தவள்போல் அங்குமிங்குமாகப் பார்த்து விழித்தாள்.

இளநீர்ப் பருகி விடாய் தீர்ந்த சளுக்கியர்கள் பெரிதாக ஏப்பம் விட்டுத் தம் வயிற்றைத் தடவியபடி திரும்பி வந்தனர்.

"அம்மையாரின் உதவிக்கு நன்றி! இனி எங்களுடைய அடுத்த கோரிக்கையைத் தெரியப்படுத்தலாமா?" என்று விஷமச் சிரிப்புடன் கூறினான் ஒரு சளுக்கியன்.

ஆவினங்களின் பின்னால் அழகுநடை பயின்று வந்த அவ்விளம் பெண்ணைத் தவிப்புடன் பார்த்துக்கொண்டு நின்ற அநந்தமதி அவசரமாகத் திரும்பினாள்.

"இந்தத் தென்னந்தோப்பு உங்களுக்குச் சொந்தம் தானே அம்மணீ?"

"இது என்ன கேள்வி, ஐயா? எனக்குச் சொந்தமல்லாத பொருளை விலைக்கு விற்பேனா?"

"நல்லது; இந்தத் தொப்பில் எத்தனை தென்னைகள் இருக்கின்றன?"

"சுமார் இருநூறு மரங்கள் இருக்கலாம்..."

"இருநூறு மரங்களா? அதற்கு மேலும் இருக்கும்!" என்று சொல்லிக்கொண்டே அண்ணாந்து பார்த்த சளுக்கியன், கண்ணைச் செருகி மூக்கின்மேல் விரலை வைத்தவாறு ஏதோ யோசிப்பவன்போல் சற்றுநேரம் மௌனமாயிருந்துவிட்டு, "ம்...இருநூறு! இருநூறு கால்?...ஐம்பது!...ஆமாம்; ஐம்பது கழஞ்சுப்பொன் காசுகளை எண்ணிக் கொடுங்கள், அம்மணீ?" என்றான் விநயச் சிரிப்புடன்.

ஒன்றும் புரியாமல் விழித்த அநந்தமதி, "ஐம்பது கழஞ்சுப் பொன்னா? எதற்காக ஐயா, இவ்வளவு பெரிய தொகை?" என்று குழறிய குரலில் கேட்டாள்.

"தென்னைக் காணமாகச் செலுத்த வேண்டிய தொகை அம்மணீ! சீக்கிரமாகப்போய் எடுத்து வாருங்கள்; நேரமா கிறது" என்று அடித் தொண்டையில் கரகரத்தான் சளுக்கியன்.

திகைப்புற்ற அநந்தமதி, "நீங்கள்...நீங்கள்...யார்?" என்று கண்களை இடுக்கிக்கொண்டு கேட்டாள்.

"நாங்களா? யுத்த சக்கர இரண ரசிகர் விக்கிரமாதித்த வல்லபரின் கட்டளையைச் சிரமேல் தாங்கி வந்திருக்கும் வரித்தண்டல் அதிகாரிகள்!"-மமதையுடன் நெஞ்சைத் தட்டிக் காட்டிச் சொன்னான் சளுக்கியன்.

அன்று காலைமுதல் ஊரின் உள்ளே வீட்டுக்கு வீடு அழுகுரல் எழுந்துகொண்டிருப்பதன் காரணம் இப்போது தான் புரிந்தது அநந்தமதிக்கு. கைகளைப் பிசைந்தபடி சற்றுநேரம் தலை குனிந்திருந்த அவள், "மன்னிக்க வேண்டும்,

ஐயா! நீங்கள் விவரம் தெரியாமல் இந்த ஊரிலே வரி வசூலிக்க வந்திருக்கிறீர்கள்..." என்று தயவான குரலில் இழுத்தாள்.

"என்ன! விவரம் தெரியாமல் வந்திருக்கிறோமா?" என்று கண்களை உருட்டி விழித்துக் கேட்டான் சளுக்கியத் தண்டல்காரன்.

"ஆம், ஐயா! இது மறையவர்களுக்குப் பிரமதேயமாக விடப்பட்ட ஊரானதால் தென்னைக் காணம் வசூலிப்ப தில்லை. இங்குள்ள தென்னை மரங்களிலிருந்து கள்ளோ சாறோ இறக்கப்படுவதில்லையாகையால் ஈழம்பூட்சி வரியும் தண்டுவதில்லை."

இதைக் கேட்டுக் கடகடவெனச் சிரித்தான் சளுக்கியன். "பிரமதேயமாவது, தேவதானமாவது! அதெல்லாம் அந்தப் பைத்தியக்காரப் பல்லவ ஆட்சியோடு மலையேறி விட்டது அம்மணீ! இப்போது நீங்கள் நின்று கொண்டிருக்கும் மண், எங்கள் சளுக்கிய மாமன்னர் விக்கிரமாதித்தருக்குச் சொந்த மானது. அவருடைய வராகக் கொடியின் குளிர் நிழலிலே உயிர் வாழும் ஒவ்வொரு பிரஜையும் அவரால் விதிக்கப் பெறும் எந்த வரியையும் இல்லையென்னாமல் செலுத்தியே ஆகவேண்டும்."

ஏதும் பேசத் தோன்றாமல் கற்சிலையாய்ச் சமைந்து நின்ற அநந்தமதி, மாடுகளை ஓட்டிக்கொண்டு வரும் அவ்வழகிய இளம் பெண்ணைத் திகிலுடன் திரும்பிப் பார்த்தாள். அதே சமயம், சளுக்கிய அதிகாரிகளும் அவளைக் கவனித்து விட்டனர்.

"யார் அந்தப் பெண்? உங்கள் மகளா?"

"இல்லை, ஐயா! அவள் என் தம்பி மகள்..."

தலையைப் பலமாக ஆட்டி மோவாயை வருடிக் கொண்ட சளுக்கியன், "அவளுடைய கையில் இருப்பது என்ன? ஏரிப் புலனில் பறித்த நீலோற்பல மலர்தானே?" என்று மிகவும் கரிசனமாக வினவினான்.

"ஆம்" என்று மெல்லத் தலையசைத்தாள் அநந்தமதி.

"அப்படியானால், நீலோற்பலக் காணமாக ஐந்து கழஞ்சுப் பொன் சேர்த்துச் செலுத்த வேண்டும்! இதுவும் எங்கள் மன்னர்பிரான் விடுத்திருக்கும் புதிய வரியாகும்."

அரசாங்க ஆணை ஏதுமின்றிச் சளுக்கியப் படை வீரர்களே தான்தோன்றித்தனமாக வரி வசூல் என்ற பெயரில் மக்களைப் பயமுறுத்தி அவர்களது சொத்துக்களைக் சூறை யாடக் கிளம்பியிருக்கும் நிலைமை நாட்டிலே உருவாகி யிருக்கிறது என்பதையும், அதனால் தான் இவர்கள் இப்படிக் கண்ணில் படும் பொருள்களுக்குக்கெல்லாம் காணம் கேட்கிறார்கள் என்பதையும் புரிந்துகொண்டே அநந்தமதி உள்ளூரப் பொங்கிக் குமுறினாள்.

"என்ன தாயே, எங்களுக்கு நேரமாகவில்லையா?" என்று கடுகடுத்த சளுக்கியன் தன் முதுகில் சுமந்திருந்த மூட்டையைக் கீழே இறக்கி வைத்தான். அதில் ஏராளமான கழஞ்சுப் பொற்காசுகளும், பலவகைப் பொன்னாபரணங் களும் வரியாக வசூலித்துக் கட்டி வைத்திருப்பது தெரிந்தது.

"மன்னியுங்கள் ஐயா! என் கையில் இப்போது ஒரு கழஞ்சுப் பொன்னும் இல்லை; இளநீர்க் காய்களுக்காக நீங்கள் கொடுத்த கரும்பொற் காசுகள்தாம் இருக்கின்றன. அவற்றை வேண்டுமானால் பெற்றுக்கொள்ளுங்கள்."

சளுக்கிய வரியிலீடுகள் இதைக் கேட்டுக் 'கொல்' லென்று நகைத்தனர். "அந்தக் காசுகளை நாங்கள் கொடுப்போமே தவிர திரும்பப் பெறமாட்டோம்!" என்று குறும்பாகக் கூறினான் ஒருவன்.

அநந்தமதி தன் கையிலிருந்து காசுக் கொத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள். அப்போதுதான் அவளுக்குத் தெரிந்தது, அந்த நாணயங்கள் அனைத்தும் பல்லவ அரசாங்கத்தின் விடேல்விடுகு முத்திரையோ, நந்தி இலச்சினையோ பெறாத 'கறைகொள் காசு'கள் என்று!

கலங்கிய கண்களுடன் வானத்தை அண்ணாந்து நோக்கிய அவள், "இறைவா! எங்களை ஏன் இப்படிச் சோதிக்கிறாய்?" என்று பொருமிக்கொண்டே தன் கழுத்தணிகளையும் காதணிகளையும் கழற்றி வரித் தண்டல் அதிகாரிகளிடம் கொடுத்தாள்.

"ஐம்பத்தைந்து கழஞ்சுப் பொன்னுக்கு இவை ஈடாகாதே! சரி; மீதத் தொகையை உங்கள் மைந்தரிடம் வசூலித்துக்கொள்கிறோம். அவர் ஊரிலிருந்து திரும்பியதும் நேரே பல்லவபுரத்துக்கு வந்து எங்களைப் பார்க்க வேண்டும் என்று அதிகார தோரணையில் சொன்ன சளுக்கியர்கள் அங்கிருந்து வெளியேறினர்.

நெஞ்சின் ஆழத்திலிருந்து நெம்பியெழுந்த பெருமூச்சுடன் அவர்களை வெறித்துப் பார்த்தபடி நின்றிருந்தாள் அநந்தமதி.

"ஓ,...இளங்காரிக்குடையானின் அம்மையா? நீங்கள் எப்போது வந்தீர்கள்? நான் பார்க்கவே இல்லையே!" என்று மகிழ்ச்சியுடன் கேட்டுக்கொண்டே துள்ளிக் குதித்து ஓடி வந்த அந்தப் பெண், அப்போதுதான் சாலையில் இறங்கிப் போய்க்கொண்டிருந்த சளுக்கிய அதிகாரிகளைப் பார்த்துத் துணுக்குற்று நின்றாள்.

கண்களைத் துடைத்துக்கொண்டு அவசரமாகத் திரும்பிய அநந்தமதி, "வாருங்கள், இளவரசி! நலம்தானே!" என்றாள் அன்பும் பணிவும் கலந்த புன்னகையுடன்.

# 16

# இளங்கோப்பிச்சி

**யா**ர் இந்த இளவரசி? பழையாறைச் சோழரின் செல்வக் குமாரியான இளங்கோப்பிச்சியா? ஆம். ஆனால், இப்போதைய அவளது கோலத்தில் பழையாறைச் சோழரே வந்து பார்த்தாலும் அவளைத் தன் மகள் என்று அடையாளம் தெரிந்துகொள்ள முடியாத நிலையில் அத்தனை எளிமை யிலும் எளிமையாய்த் தோற்றம் அளித்தாள் அவள்.

"இவர்கள் ஏன் இங்கு வந்து போகிறார்கள்?" என்று குழப்பத்துடன் கேட்டுக்கொண்டே மெல்லத் திரும்பினாள் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி.

அவள் கேட்ட வினாவுக்கு விடை பகராமல் அவளுடைய மலர் முகத்தையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த அநந்தமதி, "இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தீர்கள், இளவரசி? ஊரிலிருந்து வந்ததும் உங்களை இங்கு காணாமல் நான் என்னென்ன எண்ணித் தவித்து விட்டேன் தெரியுமா?" என்றாள் உள்ளடங்கிய பதற்றத்துடன்.

மெல்லத் தலைகுனிந்த இளங்கோப்பிச்சி, "கோபித்துக் கொள்ளாதீர்கள், அம்மா! என்னுடைய பணிப்பெண்ணுக்கு இன்று உடல் நலமில்லை. வீட்டினுள் தன்னந் தனியே அடைந்து கிடப்பது கஷ்டமாக இருந்தது. மாடுகளுக்கு மேய்ச்சல் காட்டும் சாக்கில் ஏரிப்புலம் பக்கம் போய் வந்தேன்" என்று தணிந்த குரலில் கூறிக்கொண்டே ஒல்கி ஒசிந்து நடந்து போய், வில்லாக வளைந்திருந்த ஒரு தென்னை மரத்தின்மீது ஒயிலாகச் சாய்ந்து நின்றாள்.

"என்ன இருந்தாலும் இப்போதுள்ள சூழ்நிலையில் இப்படியெல்லாம் நீங்கள் தனியே எங்கும் போகக்கூடாது இளவரசி!" என்று பரிவுடன் சொல்லிக்கொண்டே அவள் அருகில் வந்த அநந்தமதி, "என் மகன் இளங்காரிக்குடையானும் வீட்டில் இல்லை! அவன் எங்கே சென்றிருக்கிறான்?" என்று கேட்டாள்.

"உங்கள் மைந்தர்தானே? சந்திரலேகைச் சிற்றரசர் பெரும்பிடுகு முத்தரையரிடம் போயிருக்கிறார்."

அநந்தமதி வியப்புற்றவளாய்க் கண்களை அகல விரித்தாள்.

"ஏனம்மா! சற்றுமுன் இங்கு வந்து போனார்களே, அவர்கள் சளுக்கிய வீரர்கள்தாமே?"

விரக்தியுடன் பெருமூச்சு விட்ட அநந்தமதி கசந்த குரலில் கூறினாள்: "ஆம், இளவரசி! அவர்கள் வெறும் வீரர்கள் மட்டுமல்ல, வரித்தண்டல் அதிகாரிகளும்கூட."

"அப்படியானால் இங்கே, வரி வசூல் செய்யவா வந்தார்கள்?"

"தென்னைக் காணம், நீலோற்பலக் காணம் என்று ஏதேதோ புது வரிகளைச் சொல்லிக் கேட்டார்கள். ஆனால் அவர்களின் ஆரம்பப் பேச்சையும் கடைசியாகச் சொல்லிப் போனதையும் சேர்த்து நினைத்துப் பார்த்தால் அவர்கள் வரி வசூலுக்காக மட்டும் வரவில்லை, வேறு ஏதோ ஒன்றை அறிந்து போவதற்காகவும் வந்திருக்கிறார்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது. இளங்காரிக்குடையானைப் பற்றித் துருவித் துருவி விசாரித்தார்கள். பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையைக் காவல் காக்கும் சளுக்கிய வீரர்கள் அவன் வெள்ளாடுகள் சஞ்சயம் பண்ணினானாம். அவ்விஷயமாக அவனிடம் ஏதோ விசாரணை செய்ய வந்தார்கள் என்று நினைக்கிறேன்."

"நீங்கள் என்ன சொன்னீர்கள்?"

"எனக்கு அதெல்லாம் ஒன்றும் தெரியாதென்று கூறி, அவன் ஆடுகள் பிடித்து வர வெளியூர்ச் சந்தைக்குப் போயிருக்கிறான் என்று ஒரு பொய்யையும் சொல்லி வைத்தேன்."

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டு முகம் மலர்ந்தாள்.

"இளங்காரிக்குடையான் சளுக்கிய வீரர்களுக்கு வெள்ளாடுகள் சஞ்சயம் பண்ணியது உண்மைதானா இளவரசி? அவன் ஏன் அந்தத் தகாத காரியத்தைச் செய்தான்?" என்று வெறுப்பும் வேதனையும் கலந்த குரலில் கேட்டாள் அநந்தமதி.

"நான்தான் அவருக்கு அப்படியொரு யோசனையைச் சொல்லிக் கொடுத்தேன்!" என்று கூறிக் கலகலவெனச் சிரித்தாள் இளங்கோப்பிச்சி. "உங்கள் மைந்தர் செய்த சாகஸச் செயலைக் கேளுங்கள், அம்மா! சளுக்கிய வீரர்களின் உணவுக்காக இவ்வூர் இடையன் ஒருவன் வாரந்தோறும் இருநூறு ஆடுகளைப் பல்லவபுரம் அரண்மனைக் கோட்டைக்குக் கொண்டுபோய் விற்பனை செய்துவந்தான். இதையறிந்த இளங்காரிக்குடையான் அந்த இடையனைக் கண்டு பேசி அவனிடமே அதிக விலை கொடுத்து ஆடுகள் வாங்கி சளுக்கியர்களுக்குக் குறைந்த விலையில் விற்கும் தொழிலை மேற்கொண்டார். இதற்கு ஏற்றாற்போல் தம் பெயருக்கு முன்னால் 'ஆடுகோபதி' என்னும் தொழில் பெயரொன்றையும் புதிதாகச் சேர்த்துக்கொண்டார். இதனால் பல்லவபுரம் அரண்மனைக் கோட்டைக்குள் சகஜமாகச் சென்றுவர அவருக்கு வாய்ப்புக் கிடைத்தது. சளுக்கிய வீரர்கள் அவர்மீது சந்தேகப்படாத அளவுக்கு நிலைமை உருவாகியதும், அரண்மனையிலுள்ள ஆடுவெட்டி யொருவனைக் கையில் போட்டுக்கொண்டு அவன் மூலம் தமது திட்டத்தைக் கோட்டைக்குள் சிறைப்பட்டிருந்த பல்லவ இளவரசர் கோவிந்தவர்மருக்குத் தெரிவித்து அவருடைய சம்மதத்தையும் பெற்றுக்கொண்டார். குறிப்பிட்ட நாளன்று,

தேவைக்கு இருமடங்கு அதிகமாக நானூறு ஆடுகளை வாங்கி ஓட்டிக்கொண்டு பல்லவபுரம் அரண்மனைக்குச் சென்றார். சளுக்கிய வீரர்களுக்குச் சஞ்சயம் பண்ண வேண்டிய இருநூறு ஆடுகளைக் கொடுத்துவிட்டு, மீதியிருந்த இருநூறு ஆடுகளுடன் வீடு வந்து சேர்ந்தார். இங்கு வந்தபின் ஆடுகளை எண்ணிப் பார்த்தபோது அவற்றில் ஓர் ஆடு அதிகமாய் இருப்பதைக் கண்டோம். ஆட்டுத் தோலைப் போர்த்திக் கொண்டு ஆடுகளோடு ஓர் ஆடாக அரண்மனை கோட்டையிலிருந்து வெளியே தப்பி வந்த பல்லவ இளவரசர் கோவிந்தவர்மர்தான் அந்த இருநூற்றோராவது ஆடு."

இளங்கோப்பிச்சி தன் பூவுடல் துவளக் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தாள். ஆச்சரியத்தால் பிரமித்து நின்ற அநந்த மதி, "அப்படியானால் இப்போது கோவிந்தவர்மர் எங்கே இருக்கிறார், இளவரசி?" என்று இரகசியமாகக் கேட்டாள்.

இதுவரை நிறைமதிபோல் விகசித்திருந்த இளங்கோப் பிச்சியின் எழில் வதனம் சட்டென வெளிறிச் சிறுத்தது. "அரண்மனைக் கோட்டையிலிருந்து தப்பி வந்த இளவரசர் இங்கேதான் இரண்டு தினங்கள் தங்கியிருந்தார் அம்மா! பிறகு என் தந்தையாரையும் பெரும்பிடுகு முத்தரையரையும் சந்தித்து, அவர்கள் உதவியால் தலைமறைவாக இருக்கும் தமது சகோதரரான மாமன்னர் பரமேசுவரவர்மரைப் பார்க்க வேண்டுமென்பதற்காக, இளங்காரிக்குடையானைச் சந்திர லேகைக்கும், சம்புவராயரைப் பழையாறைக்கும் ஓலை எழுதிக் கொடுத்து அனுப்பிவிட்டுத் தாமும் புறப்பட்டுப் போய்விட்டார். அம்மூவரும் போய் ஆறு நாட்களாகியும் இன்றுவரை ஒரு தகவலும் தெரியவில்லை."- அவள்குரல் கம்மிக் கரைந்தது.

குழம்பிக் கலங்கிய அநந்தமதி சற்றுநேர மௌனத் துக்குப் பின் மெல்ல நிமிர்ந்து, "இளவரசர் அவர்களிருவரை யும் சந்தித்திருந்தால் அவர்களை அழைத்துக்கொண்டு பெருவள நல்லூர் பரவாதிமல்லரின் இல்லத்துக்கு

வந்திருப்பாரே! நேற்று மாலைவரை அங்கு யாருமே வரவில்லையே!" என்று பீதிக் குரலில் இழுத்தாள்.

"அவர்கள் ஏன் அந்த சேதியக் கலைஞரின் இல்லத்துக்கு வர வேண்டும் என்கிறீர்கள்?" என்று ஒன்றும் புரியாமல் கேட்டாள் இளங்கோப்பிச்சி.

ஒருகணம் தயங்கிய அநந்தமதி மிகத் தணிந்த குரலில் கூறினாள்: "அந்த விஷயம் உங்களுக்குத் தெரியாதா, இளவரசி? பல்லவ மன்னர் பரமேசுவரவர்மர் இப்போது பெருவளநல்லூர்ச் சேதியக் கலைஞரின் இல்லத்தில்தான் தங்கியிருக்கிறார்."

இதைக் கேட்டுப் பெருவியப்புற்ற இளங்கோப்பிச்சி அவளைப் பரபரப்புடன் நோக்கினாள்.

"ஆம், இளவரசி! பரமேசுவரவர்மர் அங்கு இருப்பதால் தான் அவருடைய பாதுகாப்புக்காகவும் அவருக்குத் தேவை யான உபசரணைகள் செய்வதற்காகவும் என்னைக் கொண்டு போய்ப் பரவாதிமல்லரின் சமையற் பணிப்பெண் என்ற பெயரில் அமர்த்தி வைத்திருக்கிறார் சந்திரலேகைச் சிற்றரசர்."

"அவ்வாறானால் இன்று ஏன் இவ்வூருக்கு வந்திருக் கிறீர்கள்?"

"நேற்று காலை, வேங்கி இளவரசி உத்தமசீலி என்பவளும் சளுக்கிய தளபதி வில்வேலியும் எதிர்பாராத விதமாகப் பரவாதிமல்லரின் இல்லத்துக்கு வந்துவிட்டார்கள். அவ்விருவரும் சேதியக் கலைஞருடன் பேசிக்கொண்டிருந்த போது வாசலில் இறக்கி வைக்கப்படிருந்த சிவிகை எங்கோ மாயமாய் மறைந்துவிட்டது. அதனால் வேங்கி இளவரசியின் பயணம் தடைப்பட்டு வேறொரு சிவிகை வரும்வரையில் அங்கே தங்கும்படியாயிற்று, இந்நிலையில் அந்தப் பெண், அங்கு புகலடைந்திருக்கும் பரமேசுவரவர்மரை எப்படியோ பார்த்து அவரைப்பற்றி உள்ளூற ஏதோ சந்தேகப்பட்டு மிருக்கிறாள்; அந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக்கொள்ள அவள் மெல்ல என்னிடம் சாமர்த்தியமாக பேச்சுக் கொடுக்க

முயன்றதை அறிந்த பரவாதிமல்லர், உடனே என்னை ஊருக்கு அனுப்பவிட்டார். இனி அவருடைய அழைப்பு வரும்வரையில் நான் இங்கேதான் இருக்கவேண்டும்"

இந்த விவரங்களைக் கேட்டு இளங்கோப்பிச்சியின் அழகிய ஓவியக் கண்கள், நசுங்கிய நாவல் பழம்போல் அழன்று நீரை வழியவிட்டன. அவளுடைய அழுகையின் காரணத்தைப் புரிந்துகொண்ட அநந்தமதி பெருமூச் செறிந்தாள்.

சோழ இளவரசிக்கும் பல்லவ இளவரசன் கோவிந்த வர்மனுக்கும் இடையே உள்ள ஆழ்ந்த அன்பின் தொடர்பை அவள் நன்கு அறிவாள். அவர்களுடைய திருமணம் நிச்சயிக்கப்பட்ட சமயத்தில்தான் பல்லவ-சளுக்கியப் போர் மூண்டது. எதிரிகளால் சிறைப்படுத்தபட்ட தன் காதலனை எப்படியும் மீட்டுவிட வேண்டும் என்பதற்காகத்தான் அவள் அரண்மனைச் சுகபோகங்களையெல்லாம் உதறித் தள்ளி விட்டு இந்தச் சின்னஞ்சிறு ஊரில், இச்சிறிய இல்லத்திலே வந்து, இத்தனை எளிய-நிம்மதியற்ற வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறாள்.

கண்ணீர் சோர நின்ற இளங்கோப்பிச்சி நிதானமாக நிமிர்ந்து, "ஏனம்மா! சளுக்கிய அதிகாரிகள் இளங்காரிக் குடையானைப் பற்றி விசாரித்ததன் காரணம் என்ன? கோட்டையில் சிறைப்பட்டிருந்த பல்லவ இளவரசர் தப்பிச் செல்ல அவர்தான் உதவி செய்தார் என்பதைத் தெரிந்து கொண்டு இங்கு வந்திருப்பார்களா?" என்று நாக்குழறக் கேட்டாள்.

அநந்தமதி ஏதும் மறுமொழி கூறாமல் நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு விம்மிப் பொருமினாள்.

இந்தச் சமயம், அந்தச் சிறிய சாலை வழியே போன ஒரு கூண்டு வண்டியிலிருந்து கூலவாணிகன் போலிருந்த வாலிபன் ஒருவன் இறங்கி அநந்தமதியின் வீட்டை நோக்கி வந்தான்.

## 17

# வெண்ணெய் திரண்டது

துடிக்கும் மனத்துடன் திரும்பிப் பார்த்தாள் இளங்கோப்பிச்சி. துயரப்புகை படிந்திருந்த அவள் வதனம் அந்த ஒரே விநாடியில் முத்தொளி பெற்று மலர்ந்தது. மகிழ்ச்சிப் பரவசமடைந்தவளாய் அங்கிருந்து முன்னே பாய்ந்தோடத் தன் கால்களைப் பெயர்த்தவள் சட்டென்று நின்று, அநந்தமதியின் கரங்களைப் பற்றி அவள் காதில் ஏதோ இரகசியமாகச் சொன்னாள் திகிலடைந்து முகம் வெளிறி நின்றிருந்த அம் மூதாட்டியும் அவள் சொன்னதைக் கேட்டு வியப்புடன் கண்களை அகல விரித்தாள். பிறகு சோழ இளவரசியை அழைத்துக் கொண்டு பின்புற வாசற் பக்கமாக விரைந்தாள்.

கூண்டு வண்டியிலிருந்து இறங்கிய வாலிபன் அந்த இல்லத்தின் சித்திரத் திண்ணையோரம் வந்து தயங்கி நின்றான். கூலவாணிகன்போலிருந்த அவன் வேறு யாருமல்ல; பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனேதான்!

கோடைப் பகல் மழைக்குப் பின் வெளுத்த வானிலே தோன்றும் இந்திர தனுசு போல் எழிற் பிம்பமாய் விளங்கிய இளங்கோப்பிச்சி மெல்லக் கதவைத் திறந்து கொண்டு வெளிப்பட்டுத் தன் வைர மீன் கண்களை மலர்த்தி நிமிர்த்தி அவனை ஆவல் பொங்கப் பார்த்து, “வாருங்கள், இளவரசே!” என்றாள் கன்னற் சுவை சொட்டும் கனிவுக் குரலில்.

களைத்துச் சோர்ந்து நின்று கொண்டிருந்த கோவிந்த வர்மன் ஏதோ சஞ்சீவிப் பானம் பருகியவன் போல் உற்சாக

மலர்ச்சியுடன் நிமிர்ந்தான். தன்னை மறந்த நிலையில் அவளையே ஒரு கணம் விழியசையாமல் பார்த்தான். அவனது களை பொருந்திய முகத்தில் வாலிபத்தின் பரிபூரண கவர்ச்சிப் புன்னகை கம்பீரமாகப் படர்ந்து ஒளிர்ந்தது. “சோழ இளவரசியார் நன்னலம்தானே?” என்று ஆழ்ந்த அன்புக் குரலில் கேட்டுக் கொண்டே இடைகழிப் படிமீது ஏறினான் அவன்.

மகிழ்ச்சி மேவிய நாணத்துடன் அழகோவியமாய் நெறிந்து குழைந்து நின்றிருந்த இளங்கோப்பிச்சி ஏனோ துணுக்குற்றுத் தலைநிமிர்ந்தாள். அவள் கண்கள் பீதியால் படபடத்துச் சுழன்றன. உடனே தன்னைச் சமாளித்துக் கொண்டு மிடுக்குடன் ஓரடி முன் வந்து அவனை அலட்சியமாக ஏறிட்டு நோக்கி, “யாரய்யா நீர்? உமக்கு என்ன வேண்டும்?” என்று கீச்சுத் தொனியில் அதட்டிக் கேட்டாள்.

அவளுடைய இந்தத் திடீர் மிரட்டலால் திக்கித் திணறி விட்ட கோவிந்தவர்மன் தன் பார்வையை மெல்லப் பின்னால் திருப்பினான். அந்த இல்லத்துக்கு நேரெதிரே செல்லும் சாலையோரமிருந்த மரத்தடியில் சளுக்கிய வீரர்கள் இருவர் தம் குதிரைகளுடன் நின்று கொண்டிருப்பது தெரிந்தது. அவர்கள் அங்கே களைப்பாறுவதற்காக இறங்கினார்களா, அல்லது தன்னைக் கவனிப்பதற்காக நிற்கிறார்களா என்பதை அவனால் அநுமானிக்க முடியவில்லை. இளங்கோப்பிச்சியின் மிரட்டலுக்குரிய காரணத்தைப் புரிந்துகொண்ட அவன், அவளைப் போலவே அலட்சியமாக நிமிர்ந்து நின்று, “என்ன அம்மே, இப்படிக் கேட்கிறாய்? நேற்றுத்தானே ஏழு குறுணி நெல் அளந்து விட்டுப் போனேன்? அதை இதற்குள்ளாகவா மறந்து விட்டாய்? சரி, சரி; எனக்குச் சேர வேண்டிய இருபது கழஞ்சுப் பொன்னை எண்ணி வை. நான் பல்லவபுரம் நாளங்காடிக்குப் போக வேண்டும்” என்று உரத்த குரலில் கடுகடுத்துச் சொன்னான்.

“இருபது கழஞ்சுப் பொன்னா? என்னய்யா இது, பித்தலாட்டம்? நேற்று நீர் அளந்துவிட்டுப் போனது இரண்டு

குறுணி நெல்தானே? யாரை ஏமாற்றப் பார்க்கிறீர்?" என்று சீறினாள் இளங்கோப்பிச்சி.

"அநியாயம், அநியாயம்! ஏழு குறுணியை வாங்கிக் கொண்டு இரண்டு குறுணி என்கிறாயே, இது அடுக்குமா அம்மே?'' என்று கையை ஆட்டிக் கூப்பாடு போட்ட கோவிந்தவர்மன், "எங்கே உன் மாமன் இளங்காரிக் குடையான்? அவரைக் கூப்பிடு, பேசிக் கொள்கிறேன்" என்றான் ஆக்ரோஷமான குரலில்.

"அவர் எங்கே இருக்கிறார்? ஆடு பிடித்து வர வெளியூர் சந்தைக்குப் போயிருக்கிறாரே!"

"எப்போது வருவார், அம்மே?"

"அதெல்லாம் எனக்குத் தெரியாது. அவர் வந்ததும் அவரிடமே காசு வாங்கிக் கொள்; போ!" என்று வெடுக்கெனக் கூறிக்கொண்டே வீட்டினுள் சென்று கதவைப் படீரெனச் சாத்தினாள் இளங்கோப்பிச்சி.

"ஓகோ! இந்த ஏமாற்றுப் பேச்சு என்னிடம் பலிக்காதம்மே. எவ்வளவு நேரமானாலும் எனக்குச் சேர வேண்டிய நெல் கிரயத்தை வாங்காமல் இங்கிருந்து நகரவே மாட்டேன்" என்று அங்கலாய்ப்புடன் கூவிக் கொண்டே தன் தலையில் கட்டியிருந்த சிவப்புக் கச்சையை அவிழ்த்து உதறித் திண்ணையைத் தட்டிவிட்டு அதில் தாவியேறி உட்கார்ந்து கொண்டான் கோவிந்தவர்மன்.

கொன்றை மரத்தடியில் நின்று இந்த வாய்ச் சண்டையை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சளுக்கிய வீரர்கள் தமக்குள் ஏதோ பேசி நகைத்தவர்களாய்ப் புறப்பட்டுச் சென்றனர்.

ஓங்கிப் பெருமூச்சு விட்டுத் தலைநிமிர்ந்த கோவிந்தவர்மன் மெல்லச் சிரித்தவாறு, சாத்திக் கிடந்த கதவைத் தட்டினான். இரண்டு மூன்று முறை தட்டியும் கதவு திறக்கப் படவில்லை. களைப்பும் சோர்வுமாகச் சுற்றுமுற்றும் பார்த்து விட்டு அந்தச் சித்திரத் திண்ணைமீதே சுகமாகச்

சாய்ந்து கொண்டான். பல நாட்கள் உறக்கமின்மையால் நலிவடைந்திருந்த அவன் கண்ணிமைகள் ஒன்றுடன் ஒன்று உறவு கொள்ள முயன்றன. அரை நாழிகை நேரத்துக்குப் பின், அந்த இல்லத்து வலப்பக்க வேலியோரம் செழிப்பாக வளர்ந்து நின்ற கொகுடிச் செடியொன்றின் (ஒருவகை முல்லை) மறைவிலிருந்து வெளிப்பட்ட சோழ இளவரசி, அப்படியும் இப்படியுமாகச் சாய்ந்து சாலையின் கடைக்கோடி வரையில் தன் பார்வையை ஓட்டிப் பார்த்தாள். புழுதி படியப் புரவியைச் செலுத்திச் சென்ற அவ்விரு சளுக்கிய வீரர்களும் ஏரிக்கரைக்கு அப்பால் போய் மறைந்து விட்டிருந்தனர். மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்த அவள் வாயிலை நோக்கி ஓடிவந்தாள்.

சித்திரத் திண்ணையில் சாய்ந்து கொண்டிருந்த கோவிந்தவர்மன், அவள் அங்கு வந்ததைப் பார்த்ததாகத் தெரியவில்லை. உறக்கத்துக்கும் விழிப்புக்கும் இடைப்பட்ட ஓர் அவசர நிலையில் இருப்பவன் போல் பாதி விழிகளை மூடியவாறு சலனமற்றுக் காணப்பட்டான். வெண் சங்கு நிறமொத்த அவனது சுந்தர வதனத்தில் முத்து முத்தாக வியர்வைத் துளிகள் அரும்பியிருக்க, ஈரப் பசையோடிருந்த சிவந்த உதடுகளில் நெஞ்சைக் கவரும் இளநகையொன்று மென்மையாகத் தவழ்ந்து கொண்டிருந்தது.

இந்த நிலையில் அவனைக் கண்ட இளங்கோபிச்சிக்கு நெஞ்சம் நெகிழ்ந்துவிட்டது. ஏக்கமும் இரக்கமும் பொங்கிப் பெருமூச்சாக வெளிப்பட, இடைகழித் தூண் ஒன்றில் சாய்ந்து கொண்டு அவனையே சற்று நேரம் கண்ணிமைக்காமல் பார்த்தாள். வனப்புமிக்க அவளது நெஞ்சகங்கள் விம்மித் தாழ்ந்தன. தன் பூவுடலை நெட்டுயிர்த்து நிமிர்ந்த அவள் ஓசைப்படாமல் நடந்துபோய் அவனருகில் நின்றாள். அப்போதும் அவன் அசையாச் சிலையெனச் சாய்ந்தே கிடந்தான்.

அவள் மெல்லக் குனிந்து அவனது நெற்றியில் அரும்பியிருந்த வியர்வைத் துளிகளைத் தன் பூப்போன்ற

மென் விரல்களால் இதமாக வழித்துத் துடைத்தாள். அரைத்துக் குழைத்த சந்தனத்தின் சீதளத் தன்மை வாய்ந்த அவளுடைய கர ஸ்பரிசத்தால் சிலிர்ப்புற்றுக் கண் விழித்து நிமிர்ந்தான் கோவிந்தவர்மன். தன்னை மறந்த கிறக்க நிலையில் பசலைக் கொடியெனத் துவண்டு நின்ற அவள், அவனது திண்ணிய தோளின்மீது, தன் கஞ்சமலர்க் கரங்களைத் துவளப் போட்டபடி அவனைப் பட்டும் படாததுமாகப் பார்த்துப் புன்முறுவல் பூத்தாள். அந்த மதுர மோகனப் புன்னகையில் மெய்ம்மறந்து விட்ட அவனும் அவளை விழியிமை தட்டாமல் அண்ணாந்து நோக்கினான்.

கன்னற்சுவை நொடிகள் சில கரைந்து மறைந்தன.

சாத்தியிருந்த கதவின் தாழ் திறக்கும் ஒலி கேட்டுச் சட்டென்று விலகிப் போய் நின்றாள் இளங்கோப்பிச்சி, ஆனால், தாழ்நீக்கிய கதவைத் திறந்துகொண்டு யாரும் வெளியே வரவில்லை. நாணத்தால் கன்னம் குழிந்து சிவக்கத் தலைகுனிந்த அவள், "காலம், இடம், சூழலை மறந்து இப்படியா உறங்குவது? கண்ணில் எண்ணெயை விட்டுக் கொண்டு சுற்றித் திரியும் சளுக்கியப் புலிகளின் பார்வையில் பட்டுவிட்டால் என்ன செய்வது?" என்றாள் பொய்க் கோபத்துடன்.

"நானா தூங்கினேன்? யார் சொன்னது? என் இதய தேவதையை இங்கு வருவிப்பதற்காகத் தவமல்லவா இயற்றிக் கொண்டிருந்தேன்!" என்று குறும்புக் குரலில் கூறிக் குறுநகை புரிந்தான் கோவிந்தவர்மன், "அப்படியே நான் தூங்கிப் போனாலும் எனக்கு யாதொரு சங்கடமும் நேராமல் காத்து இரட்சிக்கக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் அன்புத் தெய்வம் ஒன்று இங்கே விழிப்புடன் இருந்து கொண்டிருக் கிறதே, அப்புறம் எனக்கென்ன கவலை?"

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டுக் கலீரெனச் சிரித்துக் கொண்டே அவன் அருகில் நெருங்கிவந்து இரகசியக் குரலில் கூறினாள்; "உங்கள் காவல் தெய்வத்தின் கண்காணிப்பையும்

மீறிப் போகும் வகையில் இப்போது காரியங்கள் நடை பெற்றுக் கொண்டிருக்கின்றன, இளவரசே! கோட்டைச் சிறையிலிருந்து உங்களை வெளிக் கொண்டுவந்த நம் இளங்காரிக்குடையான் மீது சளுக்கிய அதிகாரிகளுக்கு ஏதோ சந்தேகம் தட்டிவிட்டிருக்கிறது. சற்றுமுன் அவர்கள் திடீரென்று இங்கு வந்து அவரைப் பற்றி விசாரித்துவிட்டுச் சென்றார்கள்."

கோவிந்தவர்மன் இதைக் கேட்டு யோசனையில் ஆழ்ந்தான். பிறகு அலட்சியமாகத் தன் தோளைக் குலுக்கிக் கொண்டு, 'ஹூம்! இதெல்லாம் நாம் எதிர்பார்த்ததுதானே?" என்றவன் அந்தச் சாலை வழியே பல்லவபுரத்தை நோக்கிச் சளுக்கிய வீரனொருவன் புரவிமீது வெகு வேகமாக போய்க்கொண்டிருந்ததைக் கவனித்து, "இன்று என்ன, இங்கு சளுக்கிய வீரர்களின் நடமாட்டம் அதிகமாயிருக்கிறது?" என்று கரகரத்த குரலில் கேட்டான்.

"காலை முதலே இப்படித்தான் போய்க்கொண்டிருக் கிறார்கள். காரணம் புரியவில்லை. ஒருகால், அவர்கள் வரித் தண்டல் செய்யக் கிளம்பியிருக்கலாம்."

"என்ன? வரித் தண்டலா?"

"ஆமாம்" என்று தலையசைத்த இளங்கோப்பிச்சி சற்று நேரத்துக்கு முன்னால் அநந்தமதியிடம் சளுக்கிய அதிகாரிகள் வந்து வரி வசூல் செய்துகொண்டு போன விவரத்தை ஆத்திரத்துடன் கூறினாள். பல்லவ இளவரசன் அதைக் கேட்டு மனம் குமுறிப் பொங்கினான். தாங்கொணா அவமானமுற்றவன்போல் முகம் சுருங்கிக் கறுக்க, தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான். சில விநாடிகளுக்குப் பின் நிமிர்ந்து, "இளங்கோப்பிச்சி! நீ என்ன சொன்னாய்? எங்கள் ஆபத்துதவி வீரனின் தாயான அநந்தமதி இங்கேயா இருக்கிறாள்? கடந்த வாரம் நான் கோட்டைச் சிறையிலிருந்து தப்பி வந்தபோது, அவள் பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் சமையற் பணிக்காகப் போயிருக்கிறாள்

என்றல்லவா சொன்னாய்?" என்று தன்னை மீறிய துடிப்புடன் கேட்டான்.

"ஆம், இளவரசே! இன்று காலைதான் அந்த அம்மை இங்கு வந்தாள்."

"அவள் ஏன் பெருவளநல்லூரை விட்டு ஆலம்பாக்கத்துக்கு வந்தாள்?"

பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன் சேதியக் கலைஞரின் இல்லத்தில் தலைமறைவாகத் தங்கியிருப்பதை யும், அங்கு எதிர்பாராதவிதமாக ஆந்திர இளவரசி உத்தமசீலி வந்து சேர்ந்ததையும், அவளுக்கு ஏற்பட்ட பயணத் தடங்கலையும், அதனால் பல்லவ மன்னனைப் பார்க்க நேர்ந்து அவனைப் பற்றி அறிய அநந்தமதியிடம் முயன்றதை யும், அதன் பொருட்டு சேதியக் கலைஞர் அநந்தமதியை உடனே தம் இல்லத்திலிருந்து வெளியேற்றிவிட்டதையும் விளக்கமாகக் கூறிய இளங்கோப்பிச்சி, "இந்த விவரங் களெல்லாம் உங்களுக்குத் தெரியாதா இளவரசே?" என்று வினவினாள்.

"ஓரளவு அறிவேன்..." என்று ஏதோ யோசனையில் விரக்தியுடன் சொன்னான் கோவிந்தவர்மன்.

"அப்படியானால் பரமேசுவரவர்மரை நீங்கள் இன்னும் பார்க்கவில்லையா?"

அவன் மறுமொழி கூறாமல் மௌனமாயிருந்தான்.

ஒரு கணம் தயங்கிய சோழ இளவரசி அவன் முகத்தைக் கூர்ந்து நோக்கியவாறு, "என் தந்தையாரையும், சந்திரலேகைச் சிற்றரசர் பெரும்பிடுகு முத்தரையரையுமாவது பார்த்தீங்களா, இளவரசே?" என்று மிகுந்த ஆவலுடன் கேட்டாள்.

"மண்டகப்பட்டு குகைக் கோயிலில் அவர்களைச் சந்தித்தேன்" என்றான் கோவிந்தவர்மன் உற்சாகமற்ற குரலில்.

"நம் ஆபத்துதவி வீரர்களான இளங்காரிக்குடையானும் சம்புவராயனும்கூட அங்கு வந்திருந்தார்களா?"

"அவர்களையும் சந்தித்தேன். பிறகு சம்புவராயன் தன் மன்னரோடு பழையாறைக்குப் போய்விட்டான். இளங்காரிக் குடையான எனக்குத் துணையாக என்னோடு வந்தான்."

"அவர் ஏன் இங்கு இன்னமும் வந்து சேரவில்லை?"

"பெருவளநல்லூரில் வைத்து ஒரு கூலவாணிகனின் வண்டியில் நான் ஏறிக்கொண்ட பிறகு அவ்வண்டிக்குப் பாதுகாப்பாக அவன் முன்னும் பின்னுமாய் வந்து கொண்டிருந்தான். அப்புறம் ஆலம்பாக்கம் எல்லையை அடைந்த போது அவன் என் கண்ணில் படவில்லை. எங்கு சென்றான் என்றும் தெரியவில்லை."

"என் தந்தையார் என்னைப் பற்றி ஏதேனும் விசாரித்தாரா, இளவரசே?"

"உன்னைப் பிரிந்துள்ளதால் ஏற்பட்ட துன்பம் அவருடைய குணத்தையும் போக்கையுமே மாற்றிவிட்டிருக் கிறது என்று நினைக்கிறேன்!"

இளங்கோப்பிச்சியின் அழகிய நீலக் கண்கள் கலங்கிக் குளமாயின. "ஏன் இப்படிச் சொல்கிறீர்கள்?"

"உன்னுடைய உதவியால்தான் நான் பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையிலிருந்து தப்பிவர முடிந்தது என்ற விவரத்தைக் கேட்டு அவர் மகிழ்ச்சியடைவதற்குப் பதிலாக அதிர்ச்சியே அடைந்தார்."

"நல்ல வேடிக்கைதான்! உங்கள் மாதுலரின் மனப்போக்கை நீங்கள் இன்னும் சரியாகக் கணிக்கவில்லை போலிருக்கிறது. என் தந்தையார் எந்த விஷயத்தைக் கேட்டு மகிழ்ச்சியடைய மறுக்கிறாரோ அதுவே அவருக்கு மிகவும் உகப்பானதாயிருக்கும். 'இப்படியொரு நல்ல காரியத்தை நாம் செய்யவில்லையே' என்று அவர் உள்ளூற வருத்தப்படும்போது அந்த வருத்த உணர்ச்சியே அதை எதிர்க்கும் பேச்சாக வெளிப்பட்டுவிடும். ஒரு கலைஞனின் மகத்தான படைப்பை இன்னொரு கலைஞன் குறைத்துப் பேசுவதும், ஒரு கவிஞனின் சிறந்த பாடலில் இன்னொரு

கவிஞன் குற்றங்கண்டு கூறுவதும், ஒரு வீரனின் அரிய செயலை இன்னொரு வீரன் அலட்சியப்படுத்துவதும் இல்லையா? தம்மால் சாதித்திருக்கக்கூடிய ஒரு காரியத்தைத் தமக்குமுன் இன்னொருவர் சாதித்து விட்டாரே என்ற தாளாமையுணர்ச்சியால் எழும் செளந்தர்ய எதிர்ப்புக்கள் இவை. இவற்றைக்கொண்டு அவர்களை உண்மையாகவே அவர்கள் எதிர்த்துக் குறைத்து மதிப்பிடுகிறார்கள் என்று நாம் எண்ணி விடலாமா?"

அவளுடைய இந்த வித்தார வாதத்தைக் கேட்ட கோவிந்தவர்மன் உள்ளூற வியந்து கொண்டான் என்றாலும், அதை ஒப்புக் கொள்ள மறுப்பவன் போல் தலையசைத்தான். "சோழ இளவரசி தன் தந்தையாரின் மனப்போக்கைப் பற்றி அளந்து கூறியது நேற்றுவரையில் சரியாகவே இருக்கலாம். ஆனால், இன்று அது முற்றும் மாறியிருக்கிறது என்பதே என் கருத்து. இல்லையானால், நான் செய்த ஒரு பெருந் தவற்றின் காரணமாய் என் தமையனாருக்குப் பல இக்கட்டுகள் நேர்ந்திருக்கலாம் என்ற நிலைமையில் அவரைப் போய்ப் பார்க்க நானும் சந்திரலேகைச் சிற்றரசரும் அவசரமாக அழைத்தபோது, அவர் எங்களுடன் வரப்பயந்து, ஏதோ சாக்குப் போக்குச் சொல்லிப் பழையாறைக்குத் திரும்பிப் போய்விட்டிருப்பாரா?"

இளங்கோப்பிச்சியின் முகம் வாடித் துவண்டது. "வேங்கி இளவரசியும் சளுக்கியத் தளபதியும் சேதியக் கலைஞரின் இல்லத்துக்கு வந்ததால், அங்கு தலைமறைவா யிருக்கும் பரமேசுவரவர்மருக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்திருக்குமோ என்பதை அறிய என் தந்தையார் உங்களுடன் வர மறுத்து விட்டார் என்கிறீர்கள், அப்படித் தானே?"

"அதுதான் காரணம் என்று நாங்கள் நினைக்கிறோம். நாடு, நகரம், ஆட்சி, அதிகாரம் ஆகிய அனைத்தையும் இழந்து பஞ்சைப் பராரியாக ஒளிந்து கிடக்கும் பரமேசுவரவர்மருடன்

உறவு கொண்டிருப்பதைவிட., எல்லாம் வல்ல ஏகாதிபதியான விக்கிரமாதித்தனுக்கு நல்ல பிள்ளையாக நடந்து கொள்வதில் எத்தனையோ தன்மைகள் உண்டு என்று உன் தந்தையார் எண்ணியிருக்கலாம். அவரைப் பொறுத்த வரையில் அது தவறல்லவே?"

சோழ இளவரசி இந்தக் குத்தல் மொழியைக் கேட்டுப் புழுவாய்த் துடித்து விட்டாள். "இளவரசே! உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்; தயைசெய்து இன்னொரு முறை இப்படிப்பட்ட கூரம்பான சொற்களைச் சொல்லி என் நெஞ்சைப் புண்ணாக்காதீர்கள். என் தந்தையார் ஒருபோதும் இத்தகைய இழிவான மனநிலைக்கு மாறியே இருக்கமாட்டார். இது நிச்சயம், நிச்சயம்!" என்று விம்மினாள்.

அவளுடைய பரிதாப நிலையைக் கண்டு மனம் பதறிப் போன கோவிந்தவர்மன் சட்டென்று அவள் கரத்தைப் பற்றி தன் மார்பில் புதைத்துக் கொண்டு, "இளங்கோப்பிச்சி! என்ன இது சிறுபிள்ளைத்தனம்! உன்னைவிட உன் தந்தையாரைப் பற்ற நான் நன்கு அறிவேன். இந்தப் பழம் பெருமை வாய்ந்த நாட்டின் மானாபிமானத்தில் அவருக்கு இல்லாத அக்கறையா எங்களுக்கு வந்துவிடப் போகிறது? அவர் எங்களுடன் வரத் தயக்கம் காட்டியதற்குப் பரமேசுவர வர்மரின் நலனைச் சார்ந்த வேறு ஏதேனும் ஒரு காரண மாகவும் இருக்கலாம். அப்படியும் நாங்கள் நினைத்துப் பார்க்கத் தவறவில்லையே?" என்றான் பரிவுப் புன்னகை யுடன்.

இளங்கோப்பிச்சிக்கு இப்போதுதான் போன உயிர் திரும்பி வந்த மாதிரி இருந்தது. அவள் தன் செந்தூர வண்ண அதரங்களை நெளித்து அழகாக முறுவலித்தாள். சற்றுநேர மௌனத்துக்குப் பின், "அது சரி, இளவரசே! மண்டகப் பட்டிலிருந்து பெருவளநல்லூருக்குப் புறப்பட்டுப் போன நீங்கள் பரமேசுவரவர்மரைச் சந்தித்தீர்களா? அவருடைய நிலைமை என்ன? அதுபற்றி ஒன்றுமே சொல்லவில்லையே!" என்று வினவினாள்.

பெருமூச்சு விட்டுத் தலைகுனிந்த கோவிந்தவர்மன் கம்மிய குரலில், "நான் பெருவளநல்லூருக்குப் போகவில்லை. சந்திரலேகைச் சிற்றரசர் மட்டுமே சேதியக் கலைஞரின் இல்லத்துக்குப் போயிருக்கிறார்" என்றான்.

"நீங்கள் ஏன் பரமேசுவரவர்மரைப் பார்க்காமல் வந்து விட்டீர்கள்?"

"நான் அவரைப் பார்க்க விரும்பவில்லை..."

"இளவரசே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"ஆமாம், இளங்கோப்பிச்சி! பரமேசுவரவர்மரின் அருமை அன்னையாரும, என்னைத் தம் சொந்த மகனைப் போல் வளர்த்து ஆளாக்கிய என் அன்புத் தாயாருமான காடவன் மாதேவி போற்றிநங்கைப் பிராட்டியார் பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருக்க, நான் மட்டும் அங்கிருந்து தப்பி வந்திருக்கிறேன். இந்த நிலையில் என் தமையனாரின் முகத்தில் எப்படிப் போய் விழிப்பேன்? அப்படியே போனாலும் அவர் என்னைப் பற்றி என்ன நினைப்பார்?"-துக்க மேலீட்டால் பேச முடியாமல் மூச்சுத் திணறினான் கோவிந்தவர்மன்.

இளங்கோப்பிச்சிக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. மனம் குழம்பி நின்றாள் அவள்.

ஏதோ யோசனையில் மூழ்கிக் கற்சிலையாய் அமர்ந்திருந்த கோவிந்தவர்மன் மெல்லத் தலைநிமிர்ந்து, "இளங்கோப்பிச்சி! எங்கள் முன்னறி தெய்வமான காடவன் மாதேவிப் பிராட்டியாரைச் சிறையிலிருந்து மீட்க ஓர் அருமையான திட்டத்தோடும் அதற்கான சாதனத்தோடும் இங்கு வந்திருக்கிறேன். அந்தத் திட்டத்தை நிறைவேற்றும் பொறுப்பை நீங்கள் முழுக்க முழுக்க ஏற்றுக் கொள்ள வேண்டும். உன்னால்தான் அது சாத்தியமாகும். உன் இதய அன்பனுக்காக அதை நீ சாதித்துத் தருவாயா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டுக்கொண்டே, தன் இடுப்பில் மறைத்துச் செருகி வைத்திருந்த-வேங்கி இளவரசியின்

சிவிகையிலிருந்து கவர்ந்து வந்த-அந்தப் பட்டோலைச் சுருளை வெளியே எடுத்தான். அதே சமயம், அவனுடைய கையை மற்றொரு வலுமிக்க இரும்புக் கரம் வெடுக்கெனப் பற்றி வீட்டின் உள்ளே இழுத்தது. இதனால் நிலை தடுமாறிப் போன கோவிந்தவர்மன் கதவுக்குப் பின்னால் தடாலெனச் சாய்ந்தான். அவன் கையிலிருந்த பட்டோலைச் சுருள், இளங்கோப்பிச்சியின் காலடியில் போய் விழுந்து உருண்டது.

அதிர்ச்சியுற்று மிரண்டு நின்ற இளங்கோப்பிச்சி அந்தப் பட்டோலைச் சுருளை அவசரமாக எடுத்துக் கொண்டு நிமிர்ந்தாள். அடுத்த விநாடி அவள் மீண்டும் ஓர் அதிர்ச்சிக்கு உள்ளானாள்.

ஆமாம்; அவ்வீட்டின் எதிரேயிருந்து சாலையோரத்தில் வராகச் சின்னம் பொறித்த ஓர் அழகிய சிவிகை வந்து நிற்க அதன் திரையை விலக்கி வெளியே எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தாள் வேங்கி இளவரசி உத்தமசீலி!

# 18

# தாழி உடைந்தது

**சி**த்திரத் திண்ணையில் அமர்ந்திருந்த கோவிந்த வர்மனை வீட்டுக்குள்ளே இழுத்து மறைத்துக் கொண்டவன் இளங்காரிக்குடையான் என்பதையும், ஆந்திர இளவரசி உத்தமச்சீலியுடன் மற்றச் சளுக்கிய வீரர்கள் வருவதைப் பார்த்தே அவன் இவ்வாறு செய்திருக்கிறான் என்பதையும் புரிந்துகொண்ட இளங்கோப்பிச்சி நெஞ்சம் நடுங்கினாள். பெருவளநல்லூரிலிருந்து பல்லவபுரத்துக்கு ஆந்திர இளவரசி வரப்போகிறாள் என்பதை முன்கூட்டியே தெரிந்து கொண்டு அவளை வரவேற்று அழைத்துப் போகத்தான் இன்று காலை முதலே அந்தச் சாலையில் சளுக்கிய வீர்களின் கண்காணிப்பு உலா நடந்திருக்கிறது என்பதையும் இப்போது அவள் புரிந்து கொண்டாள்.

சிவிகையின் முன்னும் பின்னும் நின்ற சளுக்கிய வீரர்களில் ஒருவன் இளங்கோப்பிச்சியை நோக்கிச் செருக்குடன் வந்து, "அம்மணீ! எங்கள் வேங்கி இளவரசியாரின் தாகசாந்திக்கு நல்ல இளநீராக ஒன்று வேண்டும்; பறித்துக் கொள்ளலாமா?" என்றான்.

பேசவும் சக்தியற்றுப் போன இளங்கோப்பிச்சி அவனைப் பயப் பிராந்தியுடன் விழித்துப் பார்த்தாள்.

"நீ கொடுத்து வைத்தவள் அம்மணி! இல்லையானால், இன்று எங்கள் இளவரசியாரைத் தரிசிக்கும் பாக்கியம் உனக்குக் கிடைத்ததுமல்லாமல், அவர் உன் வீட்டு இளநீரைப் பருகவும் விரும்பியிருப்பாரா?"

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டு உள்ளூரச் சினந்து பொங்கினாள். சிவிகை இருக்கும் பக்கம் மெல்லத் திரும்பினாள். அங்கு நின்ற காவல் வீரர்கள் அவ்வளவு பேரும் அவளையே கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தனர். அதைத் தவிர இன்னொரு காட்சி அவளுக்கு மிகவும் வியப்பை அளித்தது. ஆமாம்; வேங்கி இளவரசியின் சிவிகைக்குப் பின்னால் தனியே நின்றிருந்த ஒருவன் தாமரைப் பூ வடிவிலிருந்த மர ஆசனமொன்றைத் தலையில் சுமந்து கொண்டிருந்தான். அவனைப் பார்க்க மிகவும் பரிதாபமாக இருந்தது.

அந்த ஆசனத்தை அவன் ஏன் சுமந்துகொண்டு நிற்கிறான்?-

"நான் கேட்டது காதில் விழவில்லையா? அம்மணீ?" என்று கடுமையான குரலில் அதட்டினான் சளுக்கியன்.

"இளநீர்தானே? பறித்துப் போங்கள்."

உடனே தென்னை மரமொன்றில் தாவியேறிய சளுக்கிய வீரன், பச்சைப் பசிய இளநீர்க்காயைப் பறித்துச் சீவி எடுத்து வந்து, "இதோ, அம்மணீ! இதை நீயே கொண்டு போய் எங்கள் இளவரசியாருக்குக் கொடு! உனக்குச் சொந்தமான பொருளை உன் கையால் வழங்குவதுதான் நியாயம்!" என்றான் கோணல் சிரிப்புடன்.

அநியாயக்காரர்கள்தாம் தர்ம நியாயத்தைப் பற்றி அழகாகப் பேசுவார்கள் என்று எண்ணிக் குமுறிய இளங்கோப்பிச்சி, அவன் வேண்டுகோளை மறுக்கத் துணிவின்றி-தலைக்கு வந்த ஆபத்து தெங்கிளநீரோடு போகட்டும் என்ற முடிவுடன் தன் கையிலிருந்த பட்டோலைச் சுருளை இடுப்பில் செருகிக்கொண்டு இளநீர்க்காயை ஏந்தியவாறு ஆந்திர இளவரசியின் சிவிகையை நோக்கி இடை துவள நடந்து சென்றாள்.

பட்டுத் திரையை இடக் கரத்தால் விலக்கிப் பற்றிக் கொண்டு சிவிகையில் அமர்ந்திருந்த உத்தமசீலி, தன் குவளை

மலர்க்கண்களை மலர்த்தி அவளைக் குறுகுறுவெனக் கூர்ந்து நோக்கினாள். தும்பியின் மெல்லிய சிறகுகள் துடிப்பதுபோலக் காயாம்பூக் கண்ணிமைகள் படபடக்க ஒல்கி ஒடுங்கி வந்து நின்ற இளங்கோப்பிச்சியும் அவளைத் தலை நிமிர்ந்து பார்த்தாள். ஒரு முழு மதியும், கிழக்கில் ஒரு நிறை நிலாவும் தோன்றி ஒன்றையொன்று எதிர்ப்பட்டு வந்து சந்தித்தாற் போல் இருந்தது அந்த அரிய காட்சி!

வட்ட மதியை அரைத்துக் குழைத்து வானத் தாரகையைப் பொடித்துத் தூவீ உருவாக்கிய கந்தர்வப் பதுமை போல் விளங்கிய ஆந்திர இளவரசியின் அற்புதப் பேரழகைக் கண்டு இளங்கோப்பிச்சி வியப்பின் எல்லையைத் தொட்டாள். பிரம்ம சிருஷ்டித் திறனெல்லாம் ஒருங்கு சேர்ந்து அதற்கு மேல் ஒன்றுமில்லையென்று எல்லை கட்டி விட்டாற்போல் அத்தனை பேரெழிற் பாவையாய் நின்ற இளங்கோப்பிச்சியைப் பார்த்துப் பிரமிப்பில் ஆழ்ந்தாள் ஆந்திர இளவரசி.

இதுவரை நடுங்கியொடுங்கி நின்ற இளங்கோப்பிச்சி சட்டென்று நிமிர்ந்தாள். 'இவளைப்போல் நானும் ஓர் இளவரசிதானே?' என்ற செருக்கான எண்ணம் உந்தியதால் அவள் மிடுக்காகத் தலைதூக்கித் தன் கையிலிருந்த இளநீரை ஆந்திர இளவரசியின் எதிரே அலட்சியமாக நீட்டினாள்.

ஒண்முல்லைப் பல்வரிசை ஒளிகாட்டத் தண்ணென்று முறுவலித்த உத்தமசீலி அவ்விளநீரை வாங்கிப் பருகி முடித்து விட்டு நிமிர்ந்து, "நன்றி, சகோதரி! உன் உதவிக்கு மிக்க நன்றி!" என்று தீஞ்சுவைக் குரலில் கூறிக்கொண்டே அவளை இதமாக ஏறிட்டு நோக்கியவள் ஏனோ திடுக்குற்று அதிர்ந்தாள். இதைக் கவனியாத இளங்கோப்பிச்சி சர்வ அலட்சியத்துடன் அங்கிருந்து திரும்பி நடந்தாள்.

சற்றைக்கெல்லாம் ஆந்திர இளவரசியின் சிவிகைப் புறப்பட்டுச் சென்றது.

சாலையைக் கடந்து வீட்டின் வேலியோரமிருந்த ஒரு பவழமல்லி மரத்தடியில் போய் நின்ற இளங்கோப்பிச்சி மெல்லப் பின்னால் பார்த்தாள். உத்தமசீலியின் சிவிகை தொலைதூரத்துக்கு அப்பால் சென்று மறைய, அச்சிவிகை யுடன் சென்ற சளுக்கிய காவல் வீரனொருவன் குதிரை மீது வெகு வேகமாகத் திரும்பி வந்து கொண்டிருந்தான்!

சோழ இளவரசியை மீண்டும் பயம் பற்றிக் கொண்டது. ஏதும் செய்யத் தோன்றாமல் திகைத்து நின்றாள் அவள்.

அம்பெனப் பாய்ந்து வந்த புரவி அவள் எதிரே திமிற விட்டு நின்றது. கீழே குதித்து இறங்கிய சளுக்கிய வீரன் பணிவோடு அவளை நோக்கி, "அம்மணீ! எங்கள் இளவரசியார் உன்னிடம் ஏதோ ஓர் ஓலையைக் கை தவறுதலாகக் கொடுத்து விட்டாராம்; அதைத் திரும்ப வாங்கிக் கொண்டு வரச் சொல்லி என்னை அனுப்பினார்" என்றான் மூச்சு முட்டும் குரலில்.

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டு வெலவெலத்துப் போனாள்;

'இது என்ன, விந்தை! அவள் என்னிடம் எந்த ஓலையையும் கொடுக்கவில்லையே! கோவிந்தவர்மரின் கையிலிருந்து தவறி விழுந்த அந்தப் பட்டோலைச் சுருளைத்தானே என் இடுப்பில் செருகி வைத்திருக்கிறேன்? இதைப் பார்த்துவிட்டுத்தான் அவள் தன் காவல் வீரனை அனுப்பிக் கேட்கிறாளோ? அவ்வாறானால் இது யாருடைய ஓலை? இதிலே அப்படி என்ன முக்கியச் சேதி இருக்கும்?''-ஒன்றும் புரியாமல், தவித்தவளுக்குத் தலை சுற்றுவதுபோல் ஆகிவிட்டது.

"சீக்கிரம் கொடு, அம்மணீ! எனக்கு நேரமாகிறது!" என்று படபடத்தான் சளுக்கிய வீரன்.

இளங்கோப்பிச்சி நடுங்கித் துடித்தாள். 'இப்போது என்ன செய்வது? இந்த ஓலைச் சுருளை இவனிடம் கொடுத்து விடலாமா? அல்லது ஆந்திர இளவரசி என்னிடம் ஓலை

எதையும் கொடுக்கவில்லை என்று கூறிவிடலாமா? அப்படிக் கூறினால் அதன் விளைவு என்ன ஆகும்? இந்த முரட்டுச் சளுக்கியன் வீட்டினுள் புகுந்து சோதனையிட முயன்றால்,- உள்ளே மறைந்திருக்கும் கோவிந்தவர்மர் அகப்பட்டுக் கொள்வாரே!' அவள் சட்டென்று இடுப்பில் செருகி வைத்திருந்த பட்டோலைச் சுருளை எடுத்து அவளிடம் நீட்டி, "இதோ, பாருங்கள், ஐயா! இதுதான் என்னிடம் இருப்பது. ஆனால், இதை உங்கள் இளவரசியார் என்னிடம் கொடுக்க வில்லை. சற்றுமுன் எங்களிடம் நெல் கிரயம் வசூல் செய்ய வந்த கூலவாணிகன் ஒருவன் மறந்து வைத்துவிட்டுப் போனதை எடுத்து வைத்திருந்தேன். வேண்டுமானால் இவ்வோலையை வாங்கிப் போங்கள்'' என்றாள் குழறிய குரலில்.

சந்தேகத்துடன் அவளை விழித்துப் பார்த்த சளுக்கிய வீரன், அரை மனதோடு அந்த ஓலையைப் பெற்றுக் கொண்டு தன்புரவியை வளியெனச் செலுத்திச் சென்றான்.

# 19

# இலவந்திகைப் பள்ளியில்?

**வெ**ண்பனி கவிந்த விந்தியம்போல் வனப்பும் வன்மையுமாக விளங்கியது பல்லவபுரம் அரண்மனைக் கோட்டை. காலஞ்சென்ற மாமல்லன் நரசிம்மவர்மனால் கட்டப்பெற்ற அந்த அரண்மனைக் கோட்டையின் கோபுரக் குடுமியில், அவனது விறல் மணம் ஏறித் தடித்த வீரக் கரங்களைக் கொண்டு வானுற ஏற்றிப் பறக்க விடப்பட்ட பல்லவ சாம்ராஜ்யத்தின் புகழ் மண்டிய நந்திக் கொடி மறைந்து, அங்கே குருதி வண்ணச் சளுக்கிய வராகக் கொடி கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்தது.

நான்கு பட்சங்களுக்கு முன்னால் இதே அரண்மனைக் கோட்டை இருந்த கோலம் என்ன? இப்போது இருக்கும் நிலை என்ன? பல்லவப் பேரரசின் இரண்டாம் கோநகரில் அமைந்த புதிய அரண்மனை என்ற பெருமைப் பொலிவுடன் விளங்கிய அது இன்று அந்நிய நாட்டுக் கொடியைத் தன் தலையில் சுமந்து நிற்கும் ஓர் அவமானச் சின்னமாய்-சளுக்கியப் படை வீரர்களின் இறுமாந்த கண்காணிப்புக் கிடையே-களையிழந்து இருண்டு காணப்பட்டது.

அரண்மனையைச் சார்ந்து பல்லவ அரச பரம்பரை யின் குலதெய்வமான ஜேஷ்டாதேவி கோயில் ஒன்று அமைந்திருக்க, அதற்கு நேரெதிரே-கோட்டைக்கு வெளிப் புறம், சுமார் அரை குரோசத் தொலைவுக்கப்பால்-பச்சைப் பசேலென்ற பூஞ்சோலையொன்றும், அதன் நடுவே ஓர் அழகிய மாளிகையும் இருப்பது தெரிந்தன. சமண சமயத்

துறவிகளும் குரத்திகளும் தங்குவதற்காகப் பல்லவ அரசாங்கமே அமைத்துக் கொடுத்த இலவந்திகைப்பள்ளி என்னும் சமண மடம் அது.

ஒரு காலத்தில் அந்த இலவந்திகைப்பள்ளி சமணர்களின் சமயப் பிரசாரப் பெருமன்றமாக விளங்கியதுண்டு. ஆனால், மகேந்திரவர்மனுக்குப் பின் தமிழகத்தில் சைவ சமயம் புத்தெழுச்சி பெற்றுத் தலைதூக்கிச் சமணத்தின் பேராதிக்கத்தைச் சிதைக்கத் தொடங்கியதுமே அங்கிருந்த சமணர்கள் மெல்ல மெல்ல கலைந்து சென்று, கடைசியில் அது வெறும் பள்ளியாக பாழடைந்தே போயிற்று. அப்படிப் பாழ்பட்டுக் கிடந்த அந்த இலவந்திகைப் பள்ளிக்கு இன்று என்ன வந்துவிட்டது? கவனிப்பாரற்றுக் காடு மண்டிப்போன பூந்தோட்டம், புள்ளிருப்புச் சோலை எல்லாம் புத்தெழில் பெற்று விளங்க, செய்குன்றம் செய்குளம் செய்யருவி முதலானவை சீராக்கித் தூரெடுத்துத் தோன்ற, பள்ளி மாளிகையின் ஒவ்வொரு பகுதியும் அதற்குரிய பூம்பாதைகளும் சித்திரப் படிகளும் துப்புரவுடன் துலங்க-எங்கு நோக்கினும் ஒரு புதுக் கவர்ச்சியும் புதிய சோபையுமாக அல்லவா காட்சியளிக்கிறது?

ஆம், பெருவளநல்லூரிலிருந்து உறையூருக்குப் புறப்பட்ட ஆந்திர இளவரசி உத்தமசீலி இந்தப் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளியில் வந்து தங்கியிருப்பதால்தான் இத்தனை கலகலப்பாக அது விளங்குகிறது.

"வணக்கம் இளவரசியாரே! தாங்கள் வரச் சொல்லிக் கட்டளையிட்டதன் பேரில் வந்திருக்கிறேன்."

இலவந்திகைப் பள்ளியின் எதிரே, பிண்டி மரமொன்றைப் பின்னணியாகக் கொண்டு பாங்குற அமைந்திருந்த ஒற்றைத் தூண் குடை மண்டபத்தில் தன்னந்தனியாக அமர்ந்து ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்த இளவரசி உத்தமசீலி மெல்லத் தலைநிமிர்ந்தாள். சற்றுத்

தொலைவில் ஒரு சளுக்கிய வீரன் வந்து பணிவுடன் கைகட்டி நின்று கொண்டிருந்தான்.

"என் பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தாயிற்றா?"

"விடியற்போதிலிருந்தே நாங்கள் தயாராக இருக்கிறோம் தாயே! ஆனால், தளபதியாரிடமிருந்து இன்னமும் உத்தரவு வரவில்லை..."

"வில்வேலி இப்போது எங்கே இருக்கிறார்?"

"அரண்மனைக் கோட்டையில் படையதிகாரிகளுடன் ஏதோ ஆலோசனை நடத்திக் கொண்டிருக்கிறார்."

உத்தமசீலி இதைக் கேட்டுச் சலிப்புடன் முகத்தைச் சுளித்தாள். தன் விஷயத்தில் சளுக்கியத் தளபதி அளவுக்கு அதிகமாகவே கவனம் செலுத்திக் காலத்தை வீணாக்குகிறார் என்று அவள் மனம் கசப்படைந்தது. நேற்று மாலை பல்லவபுரத்துக்கு வந்து சேர்ந்த அவளை, எதிர்சென்று வரவேற்ற வில்வேலி, இரவு நேரத்தில் மேற்கொண்டு பயணத்தைத் தொடர வேண்டாம் என்றும், பொழுது விடிந்ததும் உறையூருக்குப் புறபட்டுவிடலாம் என்றும் கூறி, இந்த இலவந்திகைப்பள்ளியில் தங்கியிருக்கச் செய்தார். ஆனால் விடிந்து இவ்வளவு நேரமாகியும் அவரிடமிருந்து ஒரு தகவலும் வரவில்லை.

சாந்தி மயமான அந்தச் சமண மடத்தில் தங்கி யிருப்பதிலே அவளுக்கு எவ்வித சிரமமும் இல்லை யென்றாலும், தன் பெரிய தந்தையாரைச் சந்திப்பதில்- அவரைச் சந்தித்த பின் தான் மேற்கொள்ள வேண்டிய மகத்தான காரியத்தில் அநாவசிய தாமதம் ஏற்படுவதைத் தான் அவளால் சகித்துக் கொள்ள முடியவில்லை. மேலும், அந்த இல்வந்திகைப் பள்ளியில் தனக்கெனச் செய்யப் பட்டிருந்த பலத்த பாதுகாப்புகளையும் விரிவான வசதிகளையும் பார்க்கும் போது, அவை ஒரு நாள் மட்டுமே தங்கிப் போவதற்காகச் செய்த ஏற்பாடுகளா, அல்லது பல

நாட்கள் வரையில் இருக்க வேண்டுமென்பதற்காக முன்கூட்டியே திட்டமிட்டு நடத்தப் பெற்றிருக்கும் காரியங்களா என்ற சந்தேகம் எழவே, தான் ஏதோ ஒரு வகையில் அங்கு சிறைப்பட்டிருப்பது போன்ற மன உறுத்தலை அடைந்தாள் உத்தமசீலி.

"இளவரசியார் இன்னும் ஏதாவது கேட்க விரும்பு கிறார்களா?";-வினயமாக விளித்தான் சளுக்கிய வீரன்.

எங்கோ தன் பார்வையைச் செலுத்திக்கொண்டு மௌனமாயிருந்த உத்தமசீலி, "ஆமாம்; இன்னொரு விஷயமும் கேட்க வேண்டும்" என்றவாறு அவன் பக்கம் திரும்பினாள்; "நேற்று நான் பெருவளநல்லூரிலிருந்து வரும்போது ஓரிடத்தில் சிவிகையை நிறுத்தி இளநீர் பருகினேனே, அந்த ஊரின் பெயர் என்ன?"

"ஆலம்பாக்கம், தாயே!"

"எனக்கு அங்கே இளநீர் கொண்டுவந்து கொடுத்த பெண் யாரென்று உனக்குத் தெரியுமா?"

"அவள் ஒரு யாதவகுலப் பெண் என்று கேள்விப் பட்டேன், அம்மா! இங்குள்ள நமது சளுக்கியப் படைவீரர் உணவுக்கு வெள்ளாடுகள் சஞ்சயம் பண்ணிவரும் இடையனொருவனுடைய மாமன் மகளாம். அந்த இடையனின் பெயர் ஆடுகோபதி இளங்காரிக்குடையான்."

"நான் அங்கிருந்து புறப்பட்டபின் அந்தப் பெண்ணிட மிருந்து ஓர் ஓலையைப் பெற்று வரும்படி உன்னைத்தானே அனுப்பினேன்?"

"ஆம், தாயே!"

"அவள் அந்த ஓலையை உன்னிடம் கொடுத்துவிட்டு என்ன சொன்னாள்?"

"அதைத் தங்களிடமிருந்து அவள் பெறவில்லை என்றும், யாரோ ஒரு கூலவாணிகன் கைதவறிப் போட்டு விட்டுப் போனதை எடுத்து வைத்திருந்ததாகவும் கூறினாள்."

–தன் மீது ஏதேனும் குற்றம் சுமந்துவிடுமோ என்று அஞ்சிய சளுக்கிய வீரன் தொடர்ந்து சொன்னான்; "அவள் கூறியது உண்மை என்றே எனக்குப் படுகிறது, தாயே! ஏனென்றால், அவ்வழியே தாங்கள் வருவதற்குமுன் கண்காணிப்புப் பணியில் ஈடுபட்டிருந்த நானும் என் தோழன் ஒருவனும் அந்தப் பெண்ணின் இல்லத்துக்கு எதிரேயுள்ள கொன்றை மர நிழலில் இளைப்பாறுவதற்காக நின்றிருந்தோம். அப்போது ஒரு கூலவாணிகன் வந்து அவளிடம் நெல் அளந்த கிரயத்தைக் கேட்டு வெகு மூர்க்கமாய்ச் சண்டை போட்டுக் கொண்டிருந்ததை எங்கள் கண்ணாலேயே பார்த்தோம்."

உத்தமசீலி அவனை வியப்புடன் ஏறிட்டு நோக்கினாள். பிறகு, தனக்குள் மெல்லத் தலையசைத்தவாறு, "சரி, நீ போகலாம்" என்றாள். சளுக்கிய வீரன் அங்கிருந்து மெதுவாக நழுவினான்.

அந்தச் சம்பவங்களை நினைக்க நினைக்க அவளுக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

"சேதியக் கலைஞரின் இல்லத்திலிருந்து என்னுடைய சிவிகையைக் கடத்திச் சென்றவன்தான் பட்டோலைச் சுருளையும் கவர்ந்து போயிருக்க வேண்டும். சிவிகை தூக்கியான நாகோதரனின் வாக்குமூலத்திலிருந்து அந்தச் சதிகாரன் ஓர் இடையனைப் போல் இருந்தான் என்று தெரிய வருகிறது. அப்படியானால், அவனுக்கும் நேற்று ஆலம் பாக்கத்தில் பார்த்த இடையப் பெண்ணுக்கும் ஏதாவது தொடர்பு இருக்குமோ? இல்லையானால், அவளிடம் என் பட்டோலை எப்படி வந்தது? யாரோ ஒரு கூலவாணிகன் கைதவறி விட்டுப் போனதை எடுத்து வைத்திருந்ததாக அவள் சொல்கிறாள். ஆந்திர மன்னரின் கைச்சாத்து இட்டுச் சளுக்கிய மாமன்னருக்கு எழுதப் பெற்ற ஓலை என்று தெரிந்து அதைக் கவர்ந்து சென்றவன் அத்தனை அசிரத்தையாகப் போட்டுவிட்டுப் போயிருப்பானா? ஆயினும் அவள் சொல்வதை நம்பாலும் இருக்க முடியவில்லை. ஏனென்றால்,

களவாடப்பட்ட ஓலையைக் கையில் எடுத்துக் கொண்டே அந்தப் பெண் எனக்கு இளநீர் கொடுக்க வந்தாளே! உண்மையில் அவ்வோலையின் முக்கியத்துவத்தை அவள் அறிந்திருந்தால் அதைப் பயமின்றி என் கண்ணில்பட வைத்திருப்பாளா?"

தளபதி வில்வேலியிடம் இந்த விவரத்தைக் கூறி அந்தப் பெண்ணைப் பிடித்து வந்து விசாரிக்கச் சொல்லலாமா என்று ஒருகணம் எண்ணினாள் உத்தமசீலி, உடனே, 'அது கூடாது' என்பதுபோல் தலையசைத்துக் கொண்டாள். காரணம், அந்த ஓலை காணாமற்போனதும், பிறகு அது கிடைத்து விட்டதும் வில்வேலிக்குத் தெரியாது. பல்லவ நாட்டுக்குத் தான் வந்திருக்கும் நோக்கத்தின் முக்கிய சேதிகள் அடங்கிய ஓலையையே பறிகொடுத்துவிட்டவள் இங்கு என்ன பெரிய காரியத்தைச் சாதித்து விடுவாள் என்று அவர் ஏளனமாக எண்ணிவிடுவதுமல்லாமல், அந்த ஆலம்பாக்கம் இடையப் பெண்ணைப் பிடித்து வந்து வீணான கெடுபிடிகள் செய்து விசாரிப்பதிலேயே நாட்களைக் கடத்தித் தான் வந்த காரியம் தாமதப்படவும் வைத்து விடுவார் என்பதாலேயே அவ்விஷயத்தை அவரிடம் அவள் சொல்ல விரும்பவில்லை. மேலும், நிச்சயமாகத் தெரியாத ஒரு விஷயத்தைக் கூறி நிரபராதியான பெண்ணொருத்தியை இம்சைக்குள்ளாக்கி னால் நீக்க முடியாத பாவம் வந்து சேருமே என்று அவளது சமண சமயத்தில் தோய்ந்த உள்ளம் எச்சரித்தாலும் அதை அவள் வில்வேலியிடம் தெரிவிக்கத் துணிவு கொள்ளவில்லை.

'சுதந்தரமிழந்த ஒரு நாட்டின் மண்ணிலே அந்நியர் நடமாடுவது கத்தி மேல் நடப்பதைவிடக் கடினமானது போலும்' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டே எழுந்து நின்ற அவள், அந்த ஒற்றைத்தூண் குடை மண்டபத்தை அசந்தர்ப்பமாக அண்ணாந்து நோக்கினாள். மிகப் பெரிய வெண்தாமரைப் பூவொன்றைக் குப்புறக் கவிழ்த்து நிறத்தினாற்போல் விளங்கிய விதானத்தின் உள்ளே

எழிலார்ந்த ஓவியங்கள் பல வரையப் பெற்றிருந்தன. கண்ணைக் கவரும் விதமாகக் காட்சியளித்த அவ்வோவியங் களைத் தன்னை மறந்து நின்று பார்த்துக் கொண்டிருந்தாள் உத்தமசீலி. அவற்றைப் பார்க்கப் பார்க்க அவளது குழம்பிச் சோர்ந்த உள்ளம் மகிழ்ச்சியுற்று மலர்ந்தது. வட்ட வடிவமான அந்த மண்டபத்தைச் சுற்றி வந்தபடி ஒவ்வொரு சித்திரமாகப் பார்த்துக் கொண்டிருந்த அவள் ஏதோ ஓர் இனிய நினைவால் கிளர்ச்சியுற்றுத் தயங்கி நின்றாள். பொன் மலரெனப் புஷ்பித்த வதனத்தில் நாணத்தின் செம்மை படர நளினப் புன்னகை யொன்று ஊர்ந்து ஒளிர்ந்தது. கூச்சத்துடன் உடலைக் குறுக்கி நெளித்துக் கொண்டே மண்டபத்தின் ஒற்றைத் தூணில் போய் ஒருக்களித்துச் சாய்ந்தாள்.

ஆமாம்; சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் கலைக் கூடத்தில் முற்றுப்பெறா ஓவியமொன்றின் எதிரே முனிகுமாரன்போல் நின்றிருந்த நிலையில் பார்த்த அந்த வாலிபனைப்பற்றிய நினைவு இப்போது நெஞ்சில் நிழல் பரப்பி நீவியதால்தான் அப்படி நெக்குருகி நெகிழ்ந்து குழைந்தாள் அவள்!

'அவனைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் என் நெஞ்சு ஏன் இப்படிப் படபடத்து மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதக்கிறது? அந்த மகிழ்ச்சியின் தன்மையே ஒரு புது விதமாய், இத்தனை காலம் உணர்ந்தறியாத ஒரு விநோத அநுபவமாய் இருக்கிறதே! அவனைப் பற்றி நான் ஏன் நினைக்க வேண்டும்? அந்த நினைப்பிலே இவ்வளவு குதூகலச் சுகம் கொள்ள வேண்டும்? இல்லை, இல்லை; நானே அவனை நினைக்க வில்லை! அது தானே பிறந்து, தானே வளர்ந்து, தனக்குத் தானே ஏதேதோ இன்ப உணர்வுகளைத் தோற்றுவித்துக் கொள்கிறது! இதற்கு, நான் என்ன செய்வேன்?... பெற்று வளர்த்த தந்தையாரைப் பிரிந்து வந்த இரண்டு பட்ச காலத்துக்குள் அவருடைய முகத்தோற்றம் இப்போது

மங்கலாகவே என் மனக் கண்ணில் தெரிகிறது; ஆனால் மூன்றே முறை முப்பது விநாடிகளுக்கும் குறைவாகவே பார்த்த அந்த வாலிபரின் மோகன உருவமோ என் கண் எதிரில் இதோ முழுமையாக, தெள்ளத் தெளிவாகத் தெரிகிறதே, இது என்ன வித்தை!'–

அவள் நெட்டுயிர்த்துச் சோர்ந்தாள்.

'சேதியக் கலைஞரின் இல்லத்திலிருந்து புறப்படும் போது அவனிடம் ஏன் போய் விடை பெற்றுக் கொண்டு வந்தேன்? அதைப் பற்றி அவன் என்ன நினைப்பான்?'

தன்மீதே கோப்பட்டுக் கொள்கிறவள்போல் முகத்தைச் சுளித்தவாறு தூணைவிட்டு அப்படியே சரிந்து அமர்ந்த அவள், முட்டிக் கால்களில் முகத்தைப் புதைத்துக் கொண்டு ஓங்கிப் பெருமூச்சு விட்டாள்.

"இளவரசியாரின் தனிமையில் குறுக்கிடுவதற்காக மன்னிக்க வேண்டும்!"

சட்டென்று தலை நிமிர்ந்தாள் உத்தமசிலி, அங்கே, சளுக்கியத் தளபதி வில்வேலி புன்னகையுடன் வந்து நின்று கொண்டிருந்தார்.

# 20

## ஓவியனுக்கு ஓலை!

"**வா**ருங்கள், ஐயா! உங்கள் வருகையைத்தான் எதிர்பார்த்துக் காத்திருக்கிறேன்" என்றவாறு மெல்ல எழுந்து நின்றாள் உத்தசீலி.

வில்வேலியின் கூரிய கண்கள் அந்தக் குடை மண்டபத்தைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டுத் திரும்பின. "இளவரசியாரிடம் முக்கியமான சேதியொன்றைத் தெரிவிக்க வந்திருக்கிறேன்'' என்று கலகலப்பான குரலில் கூறிக் கொண்டே மண்டபத்தில் அமர்ந்தார் தளபதி வில்வேலி.

உறையூர்ப் பயணத்தைத் தள்ளிப்போட ஏதோ சாக்குப் போக்குச் சொல்லப் போகிறார் என்று எண்ணிய உத்தமசீலி அவரை உற்று நோக்கினாள்.

''ஆம் அம்மணி! தங்கள் இலட்சிய விஜயத்தின் வெற்றிக்கு ஓர் உறுதியான அஸ்திவாரம் அமைத்துக் கொடுக்க வேண்டும் என்பதற்காக நாங்கள் ஏற்கனவே திட்டமிட்டு முயன்று வந்த காரியம் ஒன்று கைகூடி விட்டதற்கான நற்சேதி இன்று கிடைத்திருக்கிறது–"

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை; மௌனமாக அவரைப் பார்த்தாள்.

"கங்க நாட்டின் சிரவணபௌகுளத்துச் சமண சங்கத் தலைவர் அகளங்க அடிகளைப் பற்றி நீங்கள் கேள்விப் பட்டிருக்கிறீர்களா, இளவரசி!"

இந்தப் பெயரைக் கேட்டதும் தன்னையறியாமலே ஒரு பக்தி விநய உணர்ச்சியால் ஒடுக்கமுற்றுத் தலைநிமிர்ந்தாள்

உத்தமசீலி, "நான் அவரைப் பற்றி நிறைய கேள்விப் பட்டிருக்கிறேன், ஐயா! ஆருகதராக உள்ள ஒவ்வொருவரும் அந்த மகா ஞானியை அறியாமல் இருக்க முடியாது. கங்க மன்னர்\ பூவிக்கிரமனைச் சமண சமயத்தில் சேர்த்தது மல்லாமல், கங்க நாட்டின் அரசாங்க மதமாகவே சமணத்தை ஆக்கிய பெருமை அவரைச் சார்ந்ததுதானே?"

"ஆம், அம்மணீ!" என்று பலமாகத் தலையசைத்த வில்வேலி, "அந்த அகளங்க அடிகளை நீங்கள் எப்போ தாவது நேரில் சந்தித்திருக்கிறீர்களா?" என்று கேட்டார்.

"எனக்கு அந்தப் பாக்கியம் இன்னமும் கிடைக்க வில்லை, ஐயா! என் தந்தையாருடன் ஒரு முறை சிரவண பௌகுளத்துக்கு விஜயம் செய்தபோது சங்கத்தின் விதி முறைகளையொட்டிப் பெண் மகளான என்னை மடத்துக்குள் விட மறுத்துவிட்டார்கள்."

"கவலைப்படாதீர்கள், இளவரசி! நம் மதிப்புக்குரிய அகளங்க அடிகளே உங்களை நேரில் சந்திக்க இங்கு வரப் போகிறார்!"

வியப்பால் வெலவெலத்துப் போன உத்தமசீலி அவரைப் பரபரப்புடன் நோக்கினாள்.

"அது மட்டுமல்ல; உங்கள் இலட்சியக் கனவின் திட்டங்கள் அனைத்தையும் தாமே பொறுப்பேற்றுக் கொண்டு செயல்படுத்தி வைக்கவும் அவர் சம்மதம் தெரிவித்திருக் கிறார்."

மகிழ்ச்சிப் பெருக்கால் பேச்சிழந்து மௌனமானாள் ஆந்திர இளவரசி. சற்று நேரம் கழித்து அவள், "அந்தப் பொறுப்பை இங்குள்ள திரமிள சமணச் சங்கத் தலைவர் சமந்தபத்திரர் என்பவரிடம் ஒப்படைக்க வேண்டும் என்றல்லவா எண்ணிக் கொண்டிருக்கிறேன்..." என்று இழுத்தாற் போல் கூறினாள்.

"நாங்களும் முதலில் அப்படித்தான் நினைத்தோம். ஆனால், பல்லவ நாட்டைச்சேர்ந்த தமிழ்ச் சமணத் தலைவர்

ஒருவரை முற்றும் நம்பிவிட முடியாதல்லவா? இன உணர்ச்சியானது சில சமயம் மத உணர்ச்சியையும் வென்றுவிடக் கூடியதாயிற்றே! எனவேதான் இந்த அருமையான யோசனையை உருவாக்கி, கங்கநாட்டு அகளங்க அடிகளை இங்கு வரும்படி செய்திருக்கிறார் நம் விக்கிரமாதித்த வல்லபர். அவரைச் சகல மரியாதை களுடனும் பாதுகாப்புடனும் அழைத்து வரும்படி சற்று முன்னதாக நமது படை வீரர்களில் பத்துப் பேரைச் சிரவணபௌ குளத்துக்கு அனுப்பி வைத்தேன்."

"அப்படியானால் இப்போதே என் பெரிய தந்தையாரைச் சந்திக்கப் புறப்பட வேண்டும்; புறப்படுங்கள், ஐயா!" என்று உற்சாகத்துடன் கூறிக்கொண்டே அவசரமாக எழுந்தாள் உத்தமசீலி.

வில்வேலி மெல்லச் சிரித்தவாறு சொன்னார்: "ஆந்திர இளவரசியாரைச் சந்திக்க அகளங்க அடிகள் இந்தப் பல்லவ புரத்துக்கே வரப் போகிறார் என்று சொன்னேனே, அதைக் கவனிக்கவில்லையா?"

"அதனால் இப்போது உறையூருக்குப் போக வேண்டாம் என்கிறீர்களா? என் பெரிய தந்தையாரைச் சந்திக்காமல் அகளங்க அடிகளை மட்டும் நான் பார்த்து என்ன பயன்?"

சளுக்கியத் தளபதி இதற்கு மறுமொழி ஏதும் கூறாமல் மோவாயை வருடியபடி யோசனையில் ஆழ்ந்தார். பிறகு தயக்கத்துடன் நிமிர்ந்து, "இளவரசியார் சொல்வதும் சரிதான். ஆனால்..." என்று இழுத்தார்.

"நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?" என்று படபடத்த குரலில் புருவக் கொடிகளை மேலுயர்த்திக் கேட்டாள் உத்தமசீலி.

"உங்களை உறையூருக்குத் தனியே அனுப்பக்கூடா தென்பது எங்கள் மன்னர்பிரானின் கட்டளை; ஆனால், எனக்கோ உங்களுடன் வர முடியாத சங்கட நிலை!"

"உறந்தைக்கு என்னை அழைத்துச் செல்லவே நீங்கள் காஞ்சியிலிருந்து வந்ததாக முன்பு சொன்னீர்களே?"

"அன்றைய நிலைமை வேறு; இன்று அது தலைகீழாக மாறிவிட்டிருக்கிறது.

"உறையூர்ச் சாலை முச்சந்தியிலும், பெருவளநல்லூர் சேதியக் கலைஞர் இல்லத்திலும் நடைபெற்ற சம்பவங்களை வைத்துத்தான் நீங்கள் இப்படிச் சொல்கிறீர்களா?"

"ஆமாம், அம்மணீ! அந்தச் சம்பவங்களைச் சாதாரண மாக எண்ணித் தள்ளிவிட முடியாது. ஏனென்றால், நாங்கள் பெற்ற வெற்றியின் பலனை அநுபவிக்கா முன்பே எங்களை விரட்டியடித்துவிட வேண்டுமென்ற பெரிய திட்டத்துக்கு ஓர் ஒத்திகையாகவே அவை நடத்தப்பட்டிருக்கின்றன என்று நான் எண்ணுகிறேன். போருக்குப் பின் எங்களுடைய புத்தி பலம், புஜபலம், படைபலம் எந்நிலையில் இருக்கின்றன என்று மதிப்பிட்டுப் பார்க்கவே அந்தச் சிறிய சதிக் காரியங்களைச் செய்திருக்கிறார்கள். போரில் தோல்வியுற்று அடிமையாகும் எந்த நாட்டிலும் முதலில் இம்மாதிரி சதிக் காரியங்கள் நடைபெறுவது சகஜம்தான் என்றாலும் அவற்றை முளையிலேயே கிள்ளியெறிவதில்தான் வெற்றி பெற்றோரின் உண்மையான வெற்றி அடங்கியிருக்கிறது. நாங்கள் இந்தப் பல்லவநாட்டுப் படையெடுப்பில் அடைந்த மகத்தான வெற்றியின் கூடவே ஒரு மாபெரும் தலைவலியையும் சேர்த்து எடுத்துக் கொண்டு விட்டோம். அதாவது, எங்கள் ஜன்மப் பகைவனான பரமேசுவரவர்மன் எங்களிடமிருந்து தப்பித் தலைமறைவாகிவிட்ட விஷயத்தைத்தான் குறிப்பிடுகிறேன். அத்துடன், இவ்வூர் அரண்மனைக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருந்த பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனும் எப்படியோ நழுவி ஓடிவிட்டிருக்கிறான். அவ்விருவரையும் வெளியே விட்டு வைத்துவிட்டு நாங்கள் எப்படி நிம்மதியாக இருக்க முடியும்? இதை உத்தேசித்துத்தான் எங்கள் மாமன்னர் விக்கிரமாதித்தர், பல்லவபுரத்திலிருந்து உறையூருக்குத் தம்

ஓலக்கத்தை மாற்றிக் கொண்டு போய் விட்டிருக்கிறார். இப்போது உங்களையும் நான் இங்குள்ள அரண்மனையில் தங்கியிருக்கச் செய்யாமல் இந்த இலவந்திகைப் பள்ளியில் இருத்தியிருப்பதற்கும் அதுவேதான் காரணம்."

அதிர்ச்சியடைந்த நிலையில் உட்கார்ந்திருந்த உத்தமசீலி, "அப்படியானால் என் பெரிய தந்தையாரை இப்போதைக்கு நான் சந்திக்க இயலாது என்கிறீர்களா?" என்று கவலை தோய்ந்த குரலில் கேட்டாள்.

"ஆம், இளவரசி! ஆனால் உங்களைப் பார்ப்பதற்காக விக்கிரமாதித்த வல்லபரே உறையூரிலிருந்து இங்கு வந்தாலும் வந்துவிடுவார்" என்று விஷமப் புன்னகையுடன் கூறினார் வில்வேலி.

சற்று நேரம் ஏதோ சிந்தனையிலிருந்த இளவரசி ஒரு புதிய முடிவுக்கு வந்தவள் போல் நிமிர்ந்து, "ஏனய்யா! தலை மறைவாகத் திரிந்து வரும் பரமேசுவரவர்மனைக் கண்டு பிடிப்பதற்காக நீங்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகள் என்ன ஆயின?" என்று மிகவும் அக்கறையாக வினவினாள்.

"நன்கு தேர்ச்சி பெற்ற நாலாயிரம் ஒற்றர்கள் கொண்ட பெரும் படையே எங்களிடமிருந்தும் இன்றுவரையில் அவனைப் பற்றி எவ்விதத் தகவலும் என் செவிக்கு எட்டவே இல்லை, அம்மணி! இதற்கு முக்கியமான காரணம் உண்டு. எங்களில் யாருமே அந்தப் பரமேசுவரவர்மனை நேரில் பார்த்தது கிடையாது. அவனுடைய உருவத் தோற்றம் எப்படி இருக்கும் என்பதும் தெரியாது. இதுதான் அவனைக் கண்டுபிடிக்க முடியாமல் இருப்பதிலுள்ள பெரிய சங்கடம்."

உத்தமசீலியின் பனிமதி வதனத்தில் ஓர் இளநகை படர்ந்தது. மிக மெல்லிய குரலில், "எனக்கு யோசனை தோன்றுகிறது..." என்று இழுத்தாள்.

"என்ன யோசனை? சொல்லுங்கள், இளவரசி!" என்று ஆவலும் அவசரமுமாகக் கேட்டுக் கொண்டே கழுத்தை நீட்டினார் வில்வேலி.

மனத்தில் இருப்பதை வாய்விட்டுச் சொல்லத் தயங்குபவள்போல் அதரங்களைக் குவித்துக் குழைத்த அவள், அந்தக் குடை மண்டபத்தின் விதானத்திலுள்ள வண்ணச் சித்திரங்களைப் பார்த்தவாறு கூறினாள்; "தலைமறைவா யிருக்கும் பல்லவ மன்னன் பரமேசுரவர்மனை நேரில் கண்ட ஓவியன் எவனாவது இந்த நாட்டில் இருக்க மாட்டானா? அப்படி ஒருவனைத் தேடிப் பிடித்து அவனுடைய உருவத்தை வரைந்து காட்டச் சொல்லித் தெரிந்து கொள்ளலாமே!"

வில்வேலி இதைக் கேட்டுக் கடகடவென்று நகைத்தார். "நல்ல யோசனை! ஆனால், அப்படி ஓர் ஓவியனைத் தேடிப் பிடிப்பதைவிட முயற் கொம்பைக் கொண்டு வருவது மிகவும் எளிது. இந்த நாட்டு மக்களின்-குறிப்பாக இந்நாட்டுக் கலைஞர்களின்-இராஜபக்தியை அறியாமல் பேசும் ஆந்திர இளவரசியாருக்காக நான் அநுதாபப்படுகிறேன்" என்று கூறி மீண்டும் சிரித்தார் அவர்.

உத்தமசீலியின் முகம் ஜிவ்வென்று சிறுத்துச் சிவந்தது. எனக்கென்னவோ அது முடியும் என்றுதான் தோன்றுகிறது ஐயா! என்றாள் உறுதியான குரலில்.

குறும்புப் புன்னகையுடன் அவளைக் குனிந்து நோக்கிய தளபதி வில்வேலி, "அப்படியானால், அதற்கான ஒரு சிறு வழியைச் சுட்டிக் கட்டினால் அதை நன்றியுடன் ஏற்பேன் அம்மணீ!" என்று கூறினார்.

தலை கவிழ்ந்திருந்த உத்தமசீலி சட்டென்று நிமிர்ந்தாள். "பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்தில் அவருடைய மாணாக்கர் ஒருவர் இருக்கிறார். அவர் ஒரு சிறந்த ஓவியர் என்று அறிந்தேன். பல்லவ மன்னனுடன் நெருங்கிப் பழகிய பரவாதிமல்லரின் மாணாக்கரானதால் அவர் அவனை நேரில் ஒரு முறையேனும் பார்த்திருக்கக் கூடும். அந்த ஓவியரை இங்கு அழைத்து வந்து, நான் சொன்னபடி முயன்று பாருங்களேன்."

வில்வேலிக்கு ஒரே வியப்பாகிவிட்டது. பிரமித்த நிலையில் சிறிது நேரம் மௌனமாயிருந்த அவர் கரகரத்த குரலில், "இது நல்ல யோசனைதான்!... ஆனால், பரவாதி மல்லர் தம் மாணாக்கரை நம்மிடம் அனுப்பச் சம்மதிக்க வேண்டுமே?" என்று இழுத்தார்.

"நாம் அந்த ஓவியரை எதற்காக அழைக்கிறோம் என்ற விவரத்தைக் கூறாமலே அனுப்பச் சொல்லிக் கேட்டால் அவர் மறுக்க மாட்டார் என்றே நினைக்கிறேன்."

உற்சாக மகிழ்ச்சியுடன் எழுந்து நின்ற வில்வேலி, "ஆந்திர இளவரசியாரின் அரசியல் ஞானத்தை இன்றுதான் அறிந்தேன்! உங்கள் யோசனைப்படியே சேதியக் கலைஞருக்கு ஓலையொன்றை எழுதி அனுப்பிவிடுகிறேன் அம்மணீ!" என்று கூறிக்கொண்டே அங்கிருந்து விரைந்து நடந்தார்.

# 21

# முத்தரையரின் சந்தேகம்

மூன்று நாட்களாகச் சேதியக் கலைஞரின் இல்லத்தில் தங்கியிருந்து முயற்சி செய்தும், பல்லவ பரமேசுவரவர்மனின் எண்ணத்தையோ அவனது போக்கையோ புரிந்து கொள்ள முடியாமல் தவித்துக் கொண்டிருந்த பெரும்பிடுகு முத்தரையர், இன்றைக்கு எப்படியும் அவனைக் கண்டு பேசித் தாம் வந்த காரியத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு புறப்பட்டுவிட வேண்டுமென்று தீர்மானித்தவராய், கலைக்கூடத்தை நோக்கிச் சென்றார்.

அந்தக் கலைக்கூடத்தின் தனிப் பகுதியொன்றில் தூரிகையும் கையுமாக ஏதோ சிந்தனையில் அமர்ந்திருந்த பரவாதிமல்லர் எழுந்து வாஞ்சை நிறைந்த விநயத்துடன், 'வாருங்கள், சிற்றரசே! இப்படி அமருங்கள்" என்றார்.

அங்குமிங்கும் பார்த்தவாறு உள்ளே வந்த முத்தரையர் தமக்காக எழுந்து நின்ற பரவாதிமல்லரை அன்புடன் பற்றி முதலில் அமரச் செய்துவிட்டுப் பின் தாம் ஓர் இருக்கையில் உட்கார்ந்து, "கலைஞரவர்களின் தனிமையிலே குறுக்கிட்டு விட்டேனோ?" என்று மெல்லச் சிரித்துக் கேட்டுக் கொண்டே மீண்டும் அந்தக் கலைக்கூடத்தைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டார்.

"பரமேசுவரவர்மரைத்தானே பார்க்கிறீர்கள்? அவர் பூஜையறையில் இருக்கிறார் என்று நினைக்கிறேன். இங்கு வர இன்னும் கொஞ்ச நேரமாகலாம்" என்றார் சேதியக் கலைஞர்.

பெருமூச்சு விட்டுத் தலையசைத்துக் கொண்ட முத்தரையர் மௌனமானார். எதிரே தொங்கிய ஓவியச் சீலையொன்றை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்த பரவாதிமல்லர் தூரிகையுடன் சட்டென எழுந்து, வரி வடிவமாய் தீட்டப் பெற்றிருந்த அரைகுறை ஓவியத்தில அவருக்கு மட்டுமே புரியக்கூடிய சில கோடுகளை இழுத்து விட்டு மீண்டும் அவ்வோவியத்தைக் கவனிப்பதில் முனைந்தார்.

"ஓ,... எங்கள் பரமேசுவரவர்மரால் வரையப்பெற்ற இந்த ஓவியத்தை நீங்கள் திருத்திச் சரி செய்கிறீர்களா?" என்று ஆவலுடன் கேட்டார் பெரும்பிடுகு முத்தரையர்.

"இல்லையே!..... இது பரமேசுவரவர்மர் தீட்டிய ஓவியம் என்று யார் உங்களுக்குச் சொன்னது?" என்று சற்றே வியப்புக் கலந்த குரலில் வினவினார் கலைஞர்.

"மூன்று நாட்களுக்கு முன் நான் இங்கு வந்து அதோ அந்தச் சாளரத்துக்கு வெளியேயிருக்கும், நந்தியாவட்டைச் செடியருகில் நின்று உள்ளே எட்டிப் பார்த்தபோது பல்லவ மன்னர் இந்த ஓவியத் திரைக்கு முன்னால்தான் உலாவிக் கொண்டிருந்தார். அதனால் இது அவரால் வரையப்பெற்ற ஓவியமாயிருக்குமோ என்று எண்ணினேன். அத்துடன் அவரது பாதுகாப்புக்காகவும் பொழுதுபோக்குக்காகவும் தாங்களே அவரை இந்தக் கலைப் பணியில் ஈடுபடச் செய்திருக்கலாம் என்று எண்ணிக் கொண்டேன்."

"சுவையான கற்பனை!" என்று கூறித் தம் பூப்போன்ற தாடியைக் கோதியவாறு மெல்லச் சிரித்தார் பரவாதிமல்லர். "ஆயினும் இது ஒரு நல்ல யோசனைதான். ஓவியக் கலையில் மிகுந்த பற்றும் ஓரளவு பயிற்சியும் கொண்ட அவரை நான் இந்தத் துறையில் ஈடுபடுத்தியிருக்கலாம். ஆனால், இதற்கெல்லாம் அவருக்கு நேரம் இருக்க வேண்டுமே! இங்கே அவர் அன்றாடம் செய்துவரும், காரியங்கள் மூன்றே மூன்றுதாம். கால அளவின்றிப் பூஜையறையில் தியானம்.

பிறகு சைவ சித்தாந்த ஆகம நூல்களைப் படித்தல், ஆராய்தல்; அதன்பின் தனிமையிலே அமர்ந்து ஆழ்ந்த சிந்தனை. இவற்றைத் தவிர வேறு எதிலுமே கவனம் செலுத்தியதை நான் இதுவரையில் கண்டதில்லை. இத்தனை நாட்களாக அவர் இந்த இல்லத்தில் தங்கியிருந்தும் இரண்டொரு முறைதான் அவரிடம் பேசியிருக்கிறேன்–அதுவும் ஒரு சில வார்த்தைகள்."

முத்தரையரின் முகம் சாம்பிச் சிறுத்தது. சேதியக் கலைஞர் மீண்டும் எழுந்து அந்த ஓவியச் சீலையில் ஒரு கோட்டை இழுத்துவிட்டு உட்கார்ந்து சற்று நேரம் அதையே பார்த்துக் கொண்டிருந்தவர் ஏக்கப் பெருமூச்சுடன் மெல்லிய குரலில் சொன்னார்; "மாமல்லபுரத்திலே முழுமை பெறாமல் நிற்கும் கணேசர் கோயிலின் தூண் ஒன்றில் சிற்பமாகச் செதுக்குவதற்காக வரையத் தொடங்கிய 'மாதிரி சித்திரம்' இது. இந்த வரி வடிவச் சித்திரத்தை வைத்துதான் அங்கே வனப்பு மிக்கதொரு சிற்பத்தை உருவாக்க வேண்டும. ஆனால், அந்தக் கோயில் வேலை அரைகுறையாய் நிற்பது போலவே இந்தச் சித்திரமும் நீண்ட நாட்களாக நிறைவுறாமலே நிற்கிறது. பலமுறை முயன்றும் ஏனோ என் மனம் இதில் ஈடுபடவே இல்லை. இன்று எப்படியும் இதனை முடித்துவிடுவது என்ற தீர்மானத்தோடு இங்கு வந்திருக்கிறேன்."

ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து போய் உட்கார்ந்திருந்த முத்தரையர் மெல்ல நிமிர்ந்து, "இப்போதைக்கு இந்த ஓவியத்தை முடிக்க வேண்டிய அவசியம் என்ன கலைஞரே?" என்று கேட்டார்.

"சிருஷ்டியாவேசம் என்பது கால தேச வர்த்தமானங் களையொட்டி எழுவதில்லை. இன்று ஏனோ என் உள் மனம் இதை முடிக்க வேண்டுமென்று உணர்த்துகிறது; முயன்று பார்க்கிறேன்."

'அப்படியானால் இளவரசர் கோவிந்தவர்மர் சந்தேகப் பட்டது சரிதானோ?' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்ட முத்தரையர் விஷமச் சிரிப்புடன் நிமிர்ந்து,

"தங்களின் இந்த உள்மன உறுத்தலுக்கு உட்பொருள் ஏதும் இல்லையே" என்று கண்களை இடுக்கிக் கொண்டு கேட்டார். "அதாவது, மாமல்லபுரக் கணேசர் கோயிலை நிறைவாக்கி முடிப்பதற்கான புதிய திட்டம், அல்லது புதிய ஆதரவு ஏதேனும் தங்களுக்குக் கிடைத்திருக்கிறதோ என்று கேட்கிறேன்?"

ஒன்றும் புரியாமல் திகைப்புற்ற பரவாதிமல்லர் தம் பார்வையை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு அமைதியாகச் சொன்னார்; "சந்திரலேகைச் சிற்றரசரின் இந்த வினா மிகவும் விசித்திரமானது! காலத்தை வெல்லத் தக்க அந்தக் கலைக்கோயில் பணிக்கு ஆதரவும் ஆக்கமும் அளிக்கக்கூடிய முதல்வரே இன்று நாடிழந்து நலமிழந்து விதியின் கரிய நிழலில் முடங்கி மறைந்து கிடக்கும் போது நான் எவ்வாறு அதை மேற்கொள்ள இயலும்? அப்படிக் கனவு காண்பது கூடப் பைத்தியக்காரத்தனமாயிற்றே?"

முத்தரையர் அவரைக் கூர்ந்து நோக்கி ஒரு மிடுக்கான சிரிப்புடன், "ஏன் முடியாது? மனச்சாட்சியைச் சிறிதே ஒதுக்கி வைத்துவிட்டால் இந்த உலகத்தில் முடியாத காரியம் ஒன்றுமே இல்லை. அதிலும், தங்கள் கலையையே பெரிதெனக் கருதும் கலைஞர்களுக்கு அது மிகமிகச் சுலபமானது" என்றார் அலட்சியமாக.

திடுக்குற்றுத் திரும்பிய பரவாதிமல்லர், "அன்பரே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்று படபடப்புடன் வினவினார்.

"என் மதிப்புக்குரிய சேதியக் கலைஞரிடம் இப்படியொரு கேள்வி கேட்க நேர்ந்துவிட்டதே என்பதற்காக நான் மிகவும் வருந்துகிறேன்" என்று கூறித் தலைகுனிந்த முத்தரையர் சட்டென்று நிமிர்ந்தார். "கடல்மல்லையில் அரை குறையாய் நிற்கும் கணேசர் கோயிலை மீண்டும் தொடங்கி முடிக்கச் சளுக்கிய விக்கிரமாதித்தன் முன் வந்தால் அவனுடைய வெற்றியை வரவேற்கத் தயார் என்று தாங்கள் சொன்னது உண்மைதானே?"

பரவாதிமல்லர் இதைக் கேட்டு கடகடவென்று நகைத்தார். இதுவரையில் தமக்குப் புரியாமலிருந்த விஷயத்தை இந்த ஒரே விநாடியில் புரிந்து கொண்டவர்போல் குலுங்கிச் சிரித்த அவர், "ம்...இனி அடுத்த கேள்வியையும் கேட்கலாமே!" என்றார்.

முத்தரையரின் மூக்கு முனிவுற்றுச் சிவந்தது. "அந்தக் கற்கோயிலைக் கட்டிமுடிப்பதற்கான எல்லா உதவிகளையும் தானே முன்னின்று தருவதாக ஆந்திர இளவரசி உத்தமசீலி உங்களிடம் சொன்னது உண்மைதானே?"-ஆத்திரத்துடன் சொற்கள் வெளிப்பட்டன.

"மூன்றாவது கேள்வியொன்றும் கேட்கப் போகிறீர்கள் என்று நினைக்கிறேன்; அதையும் கேட்டுவிடுங்கள்."

"அப்படி அவளுடைய உதவிகளைப் பெறுவதாயிருந் தால் அந்தக் கணேசர் கோயிலைச் சமணர்களின் ஜினாலயமாக மாற்றியமைக்க வேண்டுமென்று அவள் நிபந்தனை விதித்ததும் உண்மைதானே?"

'ஆம்' என்று பலமாகத் தலையாட்டிய பரவாதிமல்லர் கள்ளங் கபடற்ற குழந்தைபோல் சில்லென்று சிரித்தார். "இதனாலெல்லாம் நான் பல்லவநாட்டுக்கும் பரமேசுவர வர்மருக்கும் துரோகம் இழைத்துவிட்டேன் என்றோ, துரோகியாக மாறப்போகிறேன் என்றோ நீங்கள் சந்தேகப் படுகிறீர்கள், அப்படித்தானே?... இந்தச் சந்தேகத்தை நிவர்த்திக்கும் பொருட்டு நான் ஏதேனும் மறுமொழி கூறுவேன் என்று இப்போதைக்கு எதிர்பார்க்காதீர்கள். ஆனால், ஒன்றை மட்டும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டுமென ஆசைப்படுகிறேன். மனச்சாட்சியை விற்கத் துணியும் எந்தக் கலைஞனும் உண்மையான கலைஞனா யிருப்பதில்லை; அப்படிப்பட்ட கலைஞனிடம் கலாதேவி கோயில் கொள்வதுமில்லை."

சேதியக் கலைஞர் சிரித்துக் கொண்டுதான் இப்படிச் சொன்னார் என்றாலும், அதில் தொனித்த வேதனைக்

கமறலைப் புரிந்து கொண்ட முத்தரையர் மிகவும் சங்கடப் பட்டுப் போனார். ஆயினும் அவர் மனத்தில் பதிந்திருந்த சந்தேகக் கறை என்னவோ முற்றும் அழிந்துவிடவில்லை. சற்றுநேர மௌனத்துக்குப் பின், "சரி; இந்த விஷயத்தை இப்பொழுது விட்டுவிடுவோம். ஆனால், இன்னொன்றுக்கு நீங்கள் அவசியம் விளக்கம் சொல்லித்தான் ஆகவேண்டும். உங்களை நம்பி உங்களுடைய முழுப்பொறுப்பில் ஒப்படைத் திருக்கும் எங்கள் பரமேசுவரவர்மருக்கு ஆபத்து ஏற்படக் கூடிய வகையிலே அந்த வேங்கி நாட்டு இளவரசியை இங்கு ஏன் அழைத்து வந்தீர்கள்? அவளை அழைத்து வந்தது மல்லாமல், சளுக்கியத் தளபதி வில்வேலியையுமல்லவா வரவேற்று உபசரித்திருக்கிறீர்கள்? இதற்கு நீங்கள் என்ன சமாதானம் கூற முடியும்?' என்று படபடத்த குரலில் கேட்டார்.

"இவை நல்ல வினாக்கள். இவற்றுக்கு நான் அவசியம் மறுமொழி கூறியே ஆகவேண்டும்" என்று புன்முறுவல் பூத்த பரவாதிமல்லர், அமைதியாகச் சொன்னார்; "கேளுங்கள், அன்பரே! ஆந்திர இளவரசியையும் சளுக்கியத் தளபதியையும் என் இல்லத்தில் வரவேற்று உபசரித்து அனுப்பியதற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. அது பரமேசுவரவர்மரின் பாதுகாப்பை உத்தேசித்துச் செய்யப்பட்ட காரியம். அதாவது, என்னுடைய இல்லத்திலே பல்லவ மன்னர் புகலடைந்திருக் கிறார் என்ற இரகசியம் வெளிப்படாமல் இருக்க அது ஒரு கவசமாய் அமையும் என்று கருதியே அப்படிச் செய்தேன். துரதிருஷ்டவசமாக அந்த இரகசியம் வெளிப்பட்டாலும் அதைச் சளுக்கிய விக்கிரமாதித்தனோ அவனைச் சார்ந்த வர்களோ உடனடியாக நம்பமாட்டார்கள். ஏனென்றால், என் இல்லத்திலே பரமேசுவரவர்மர் மறைந்திருப்பின் அவரது எதிரிகளை நான் வரவேற்று உபசரித்திருக்கமாட்டேன் என்று அவர்கள் எண்ணி ஏமாறலாம் அல்லவா? அத்துடன், கடந்த

சில நாட்களாக இந்தப் பக்கமே மோப்பம் பிடித்துச் சுற்றித் திரிந்து கொண்டிருக்கும் சளுக்கிய ஒற்றர்கள், வில்வேலியும் வேங்கி இளவரசியும் இங்கு வந்து போனதை அறிவார்களானால் தங்கள் கவனத்தை வேறு திசையில் திருப்பிக் கொண்டு போய்விடலாம். இதையெல்லாம் மனத்தில் கொண்டே அந்த விஷப் பரீட்சையை நான் நடத்தத் துணிந்தேன்.”

இருளடைந்து கிடந்த முத்தரையரின் முகம் இந்த விளக்கத்தைக் கேட்டுப் பளிச்சென்று மலர்ந்தது. “கலைஞரவர்களிடம் ஏதேதோ கேட்டு மனம் நோகச் செய்துவிட்டேன்; மன்னியுங்கள்” என்று தாழ்ந்த குரலில் கூறித் தலைகுனிந்தார் அவர்.

பரவாதிமல்லர் அவரை அன்புடன் ஏறிட்டு நோக்கி, “மன்னிக்கவோ, மன்னிப்புக் கேட்கவோ இதில் ஒன்றுமில்லை, அன்பரே! மனிதன் எவ்வளவு பலவீனமானவன் என்பதை அவ்வப்போது அவனுக்கு உணர்த்தத்தான் அவன் மனத்தில் சந்தேகங்கள் முளைக்கின்றன. அவற்றை வாய்விட்டு வெளிப்படுத்தி விளக்கம் பெறும்போது பலவானாகிறான்; அப்படி விளக்கம் பெற அஞ்சி, உள்ளுக்குள்ளேயே வைத்து, ஒன்றைப் பத்தாகப் பெருக்கிக் கொள்ளும்போது மேலும் மேலும் மெலிவடைந்து தேய்ந்து போகிறான்” என்று இதமாகக் கூறியவர் ஒரு கண மௌனத்துக்குப் பின் துயரம் படிந்த குரலில், “நான் இப்போது வருத்தப்படுவதெல்லாம், துடிப்பு மிக்க இளவரசனான கோவிந்தவர்மர் என்மீது தப்பபிப்பிராயம் கொண்டு விட்டிருக்கிறாரே என்பதற்காகத் தான்! வேங்கி இளவரசியுடனும் வில்வேலியுடனும் நான் பேசிக்கொண்டிருந்ததை அவர் அரைகுறையாக ஒற்றுக் கேட்டதால் நேர்ந்த விபரீதம் இது!” என்று கரகரத்தார்.

“அது அவர் குற்றமல்ல கலைஞரே, அந்தச் சூழ்நிலையில் யாரையும் அப்படித்தான் எண்ணத் தூண்டும்” என்று பரிவுடன் கூறிய முத்தரையர், “இருந்தாலும்

இதுபோன்ற சமயங்களில் நாம் எச்சரிக்கையோடு நடந்துகொள்ள வேண்டியது அவசியம் என்றே சொல்வேன்" என்றார்.

இதை மறுப்பவர்போல் மெல்லத் தலையசைத்தார் பரவாதிமல்லர், "எச்சரிக்கையான நடத்தையைக் கொண்டே ஒருவனை உத்தமன் என்று கூறிவிட முடியாது. ஏனென்றால், விழிப்பு மிக்கவனிடம் உண்மைகள் குறைவாகவே இருக்கும். அவன் தன் விழிப்பான பேச்சாலும் நடத்தையாலும் தான் செய்யும் தவறுகளை எளிதில் மறைத்து விடுவான்."

# 22

## 'ஈசன் செயல்'

முத்தரையர் எழுந்து சாளரத்து வழியே எட்டிப் பார்த்துவிட்டுத் திரும்பி, "மன்னர் இன்னும் வரக் காணோமே?" என்று முணுமுணுத்தவாறு உட்கார்ந்தார். பிறகு எதையோ நினைத்துக் கொண்டவர்போல் நிமிர்ந்து, "கலைஞரே, இதைக் கேட்க மறந்துவிட்டேனே!... ஆந்திர இளவரசி உத்தமசீலி இங்கு தங்கியிருந்தபோது நம் பரமேசுவரவர்மரைப் பார்த்திருப்பார்களா?" என்று ஒருவித அச்சக் குறுகுறுப்புடன் கேட்டார்.

"இரண்டு நாட்கள் என் இல்லத்திலே தங்கியிருந்த அவள் அவரைப் பார்க்காமல் போகமுடியுமா, அன்பரே? அவரை அவள் பார்த்து, அவர் யாரென்று தெரிந்து கொள்ள முயன்று, பின் யாரோ ஒரு சாதாரண மனிதன் என்ற முடிவோடு போக வேண்டுமென்பதற்காகத்தானே அவளை நான் இங்கு தங்கியிருக்க அநுமதித்தேன்! என் எண்ணப் படியே எல்லாம் நடந்து முடிந்தது. பரமேசுவரவர்மரைப் போக்கிடமற்றுப் புகல் அடைந்திருக்கும் ஒரு பராரிக் கலைஞனாக எண்ணிக்கொண்டு அவள் போயிருக்கிறாள். இது நம் மன்னருக்கு எவ்வளவு பெரிய பாதுகாப்பாயிருக்கும் தெரியுமா?" என்று குறுநகை புரிந்து சொன்னார் பரவாதிமல்லர்.

இதைக் கேட்டுத் திருப்தியடைந்த முத்தரையர் மீண்டும் எழுந்து வெளியே எட்டிப் பார்த்துவிட்டு உட்கார்ந்தார்.

"சிற்றரசே! தங்கள் ஆத்ம நண்பரான பழையாறைச் சோழர் தங்களுடன் இங்கு ஏன் வரவில்லை? தாங்களே அவரை அழைத்து வரவில்லையா? அல்லது..." என்று தயக்கத்துடன் வினவினார் சேதியக் கலைஞர்.

முகத்தைச் சுளித்தவாறு சற்றுநேரம் மௌனமாயிருந்த முத்தரையர் ஆத்திரம் செருமிய குரலில், "நான் ஏன் அவர் வருவதைத் தடுக்கப் போகிறேன்? அவரேதான் இங்கு வரமறுத்துவிட்டார்!" என்றார். "சிறையிலிருந்து தப்பிய கோவிந்தவர்மரைச் சந்திப்பதற்காக நானும் அவரும் ஒன்றாகவே மண்டகப்பட்டுப் போனோம். கோவிந்த வர்மரையும் பார்த்தோம். இங்கு நடந்த சம்பவங்களையும் தாம் செய்துவிட்டு வந்த காரியங்களையும் அவர் சொல்ல, அவற்றினால் ஏற்படக்கூடிய சிக்கல்களையும் சங்கடங்களை யும் பற்றி நான் சஞ்சலப்பட-இப்படி நாங்கள் இருவரும் பேசிக்கொண்டிருந்தபோது அதுவரை சுமுக பாவத்துட னேயே இருந்த பழையாறைச் சோழரின் போக்குத் திடீரென்று மாறுதல் அடைந்தது. சளுக்கியத் தளபதி வில்வேலியிடம் பரமேசுவரவர்மர் அகப்பட்டுக் கொள்ளும்படியான நிலைமை உருவாகிவிட்டது என்பதை அறிந்தே அவர் அவ்வாறு குணபேதமடைந்தார். பல்லவ மன்னரை இனி நம்பிப் பயனில்லை என்ற முடிவுக்கு அவர் வந்திருக்க வேண்டும்-அதனால்தான், இங்குள்ள நிலைமையை அறியவும் ஆவன செய்யவும் நான் புறப்பட்ட போது என்னுடன் வர மறுத்துப் பழையாறைக்கே திரும்பிப் போய்விட்டார்."

இந்த விவரங்களைக் கேட்டுப் பெரிதும் கவலை யடைந்தவராய்ச் சிறிது நேரம் மௌனமாயிருந்த பரவாதிமல்லர், "அப்படியானால் பழையாறைச் சொழரைப் பற்றி நீங்கள் இப்போது என்ன முடிவில் இருக்கிறீர்கள்?" என்று தணிந்த குரலில் கேட்டார்.

"பலவீனமான உறவினனை நம்புவதைவிட, பலம் பொருந்திய எதிரியின் நட்பைத் தேடிக்கொள்வது நல்லது

என்ற முடிவுக்கு அவர் வந்துவிட்டிருக்கிறார் என்றே நான் நினைக்கிறேன். இனிமேல் அவரது கூட்டுறவை நாங்கள் எதிர்பார்ப்பது பைத்தியக்காரத்தனம் என்றும் எனக்குத் தோன்றுகிறது. எந்த விநாடியும் பழையாறையிலிருந்து ஏதேனுமோர் அதிர்ச்சி தரத்தக்க சேதி வரலாம்-அதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை" என்றார் முத்தரையர்.

வாயடைந்த நிலையில் உட்கார்ந்திருந்த பரவாதிமல்லர் தம் பார்வையை மேலே உயர்த்தி ஒரு கணம் ஏதோ யோசித்துவிட்டுப் பூஞ்சிரிப்புடன் திரும்பி, "சந்திரலேகைச் சிற்றரசருக்கு நான் புத்தி சொல்வதாக நினைக்கக்கூடாது. பழையாறைச் சோழர் ஒரு விசித்திரமான மனிதர். எதையோ நினைப்பார்; அதைச் சாதிக்க என்னமோ செய்வார். அவரைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். புரிந்து கொண்டதாக எண்ணி அவசரப்பட்டு அவர்மீது எவ்வித முடிவையும் இதற்குள் எடுக்கவேண்டாம். வலுமிக்க வேங்கை மரத்தை உடைத்தெறிய வேண்டுமானால் சுள்ளி மிலாறுகள் ஒரே கட்டாக இருக்க வேண்டும். அவை தமக்குள் முரண்டிக் கொண்டு தனித்தனியே பிரிந்தால் அவற்றின் கூட்டுப்பலம் சிதறுண்டு போகும். விளைவு, பரிதாபத்துக்குரியதாகும்" என்றார் மிகமிக நிதானத்துடன்.

பெரும்பிடுகு முத்தரையர் இதற்கு மறுமொழி ஏதும் கூறாமல் தலையை ஆட்டிக் கொண்டு மௌனமாகவே இருந்தார். இந்தச் சமயம் அவரைப் பேசாதிருக்கவிட்டால் அவரது சிந்தனை மேலும் பல விபரீத முடிவுகளைக் காணச் செல்லும் என்று எண்ணிய பரவாதிமல்லர் அவருடைய கவனத்தைத் திருப்பும் பொருட்டு, "ஆமாம், அன்பரே! நீங்கள் இங்கே பரமேசுவரவர்மரின் நிலைமையை அறிந்து போக மட்டும்தான் வந்தீர்களா? அல்லது..." என்று இழுத்தாற்போல் வினவினார்.

"நான் வந்ததற்கு அதுதான் காரணம் என்றாலும், அதைவிட இன்னொரு முக்கியமான விஷயத்துக்காகவும்

அவரைக் காணவந்தேன்” என்று எங்கோ யோசனையாகச் சொன்னார் முத்தரையர்.

“அப்படியானால் அவ்விஷயமாய்ப் பல்லவ மன்னரைப் பார்த்தீர்களா?”

‘பார்த்தேன் கலைஞரே, நன்றாகப் பார்த்தேன். என்னைப் பார்த்ததும், ‘நலமா?’ என்றார்; ‘நம் நண்பர்களும் பிறரும் நலம்தானே?” என்று கேட்டார்; ‘நானும் நலமே’ எனத் தெரிவித்தார்: ‘அதற்குமேல் ஒன்றுமில்லை’ என்றார்; ‘நீர் போகலாம்’ என்றும் கூறிவிட்டார்.”

“இவ்வளவும் அவர் பேசினாரா? நீங்கள் இருவரும் நேருக்கு நேர் சந்தித்துப் பேசியதை நான் இன்னும் பார்க்கவே இல்லையே?”

“ஆமாம்; ஆனால், இதையெல்லாம் அவர் என்னிடம் வாய்திறந்து பேசிச் சொல்லவில்லை; ஒரே ஒரு பார்வைதான் பார்த்தார். அந்தப் பார்வையே இவ்வளவையும் முடித்தது. பிறகு, அவர் போய்விட்டார்.”

பரவாதிமல்லருக்குச் சிரிப்பு வெடித்துக்கொண்டு வந்து விட்டது. முத்தரையரோ வேதனையால் முகம் வெந்து சிவந்தார்.

“பல்லவ மன்னரிடம் என்ன விஷயமாகப் பேசவந்தீர்கள், அன்பரே?” என்று கேட்டு மீண்டும் அவரது சிந்தனையைக் கலைக்க முயன்றார் சேதியக் கலைஞர்.

‘அந்த விஷயத்தை இவரிடம் சொல்லலாமா, வேண்டாமா?’ என்று யோசிப்பவர்போல் ஒரு விநாடி அவர் முகத்தையே உற்றுப் பார்த்த முத்தரையர், ‘அதைச் சொல்லலாம்’’ என்று தீர்மானித்தவராய் நிமிர்ந்து உட்கார்ந்தார். “அது ஒரு பரம இரகசியமான விஷயம். அதை நீங்களும் தெரிந்து வைத்துக்கொள்வது நல்லதென்றே நினைக்கிறேன். பல்லவ-சளுக்கியப் போருக்குப் பின் நாட்டின் நிலைமை மிகவும் சீர்குலைந்து விட்டிருக்கிறது. மக்கள் சொல்லொணா அவதிக்குள்ளாகித் தவிக்கின்றனர்.

ஆட்சியைக் கைப்பற்றிய விக்கிரமாதித்தன் அதை நிலைநிறுத்திக் கொள்வதற்காக ஒரு புதிய காரியத்தில் இப்போது இறங்கத் திட்டமிட்டுக்கொண்டிருக்கிறான். அதற்காகவே தன் தம்பிமகளான ஆந்திர இளவரசியை இங்கு வரவழைத்திருக்கிறான். அந்த விவரத்தைப் பிறகு ஒரு சமயம் சொல்கிறேன். அவளைக் கொண்டு அவனுடைய அந்தத் திட்டம் வெற்றி பெறுமானால், அப்புறம் இந்தப் பல்லவ நாட்டை அவனிடமிருந்து கைப்பற்றுவதென்பது வெறும் கனவாகவே ஆகிவிடும். அது மட்டுமல்ல; இந்தப் பழம் பெருமை வாய்ந்த தமிழ் நிலத்தின் திருமிக்க வடிவமே அழிந்து ஒரு கோர ரூபத்தில் அது காட்சியளிக்கத் தொடங்கிவிடும். அந்த நிலைமையை நாம் காணத் தயாரா? அப்படித் தயார் என்றால், பரமேசுவரவர்மரை இத்தனை பாதுகாப்போடு மறைத்துப் பராமரிக்க வேண்டிய அவசியம் என்ன? குடிமையுரிமையை இழந்து புழுவினும் கீழாகப் புன்மை வாழ்வு வாழும் பல்லவக் குடிமக்கள் தமக்கு நேர்ந்த-நேரவிருக்கும்-அந்தக் கொடிய நிலையிலிருந்து மீளும்பொருட்டு இப்போதே பொங்கியெழத் தயாராக இருக்கிறார்கள். ஆனால் மேய்ப்பனில்லா ஆடுகள் மலையேற முடியுமா? தங்கள் மேய்ப்பன், மலையுச்சிக்குத் தங்களை யெல்லாம் ஓட்டிக் கொண்டு போக வருவான், வருவான் என்று ஒவ்வொரு நாளும் நம்பிக்கையோடு அவை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றன. அவற்றின் நம்பிக்கை நலிவடையுமுன்னே மேய்ப்பன் அவைகளை ஒன்று திரட்டிகொள்ள முன்வர வேண்டும். அப்படி வரவில்லை யாயின் அந்த ஆடுகள் மட்டுமல்ல; அவை அடைந்து கிடக்கும் பட்டியும் சிதறுண்டு அழிந்து போகும். இந்த உண்மையைப் பரமேசுவரவர்மரிடம் எடுத்துக் கூறி, இதோ இந்தத் திருமுக ஓலையில் அவரது கைச்சாத்தைப் பெற்றுப் போகவே நான் இங்கு வந்திருக்கிறேன். இந்த ஓலையில் அவர் கைச்சாத்து இட்டு விட்டாரானால், மலையேறத் துடிக்கும் ஆடுகளை

ஒன்று திரட்டும் வேலையையும், அவற்றைக் கொண்டு அந்த மலை உச்சியிலே ரிஷபக் கொடியைப் பறக்கவிடும் பணியையும் நானும் கோவிந்தவர்மருமே ஏற்று முடிக்க முயல்வோம்."

முத்தரையரின் உணர்ச்சிமிக்க இப்பேச்சைக் கேட்டுப் பிரமித்து உட்கார்ந்திருந்த பரவாதிமல்லர் ஏனோ திடுக்குற்று எழுந்து வெளியே எட்டிப் பார்த்தார். அதே சமயம் அந்தக் கலைக்கூடத்தின் முற்பகுதியில் உயிர்ச்சிருஷ்டிகளாய் உருவாக்கி நிறுத்தி வைக்கப்பெற்றிருந்த பல்வேறு வகையான செப்புச் சிலைகளுக்கிடையே ஓர் அழகிய வாலிபன் மெல்ல எழுந்து நின்றான். அவன் வேறு யாருமல்ல; பரமேசுவர வர்மன்தான்!

இவ்வளவு நேரம் அவன் இங்கேயா அமர்ந்திருந்தான்? எப்போது இங்கு வந்தான்? பரவாதிமல்லரும் பெரும்பிடுகு முத்தரையரும் அவன் வந்ததைப் பார்க்கவே இல்லையே! பேச்சு மும்முரத்தில் அவனை அவர்கள் கவனிக்க வில்லையா? அப்படியானால் அவர்களுடைய பேச்சு முழுவதையும் அவன் கேட்டுக்கொண்டுதான் இருந்தானா?...

பரபரப்புடன் முத்தரையர் பரமேசுவரவர்மனை நோக்கிச் செல்ல முயன்றபோது பரவாதிமல்லர் அவரைத் தடுத்துக் காதருகில் குனிந்து ஏதோ இரகசியமாகச் சொன்னார். அடுத்த கணம், முத்தரையரின் முகம் பீதியால் கறுத்துச் சிறுத்தது. அவர் சரேலென்று பாய்ந்து போய் அந்த ஓவியச் சீலைக்குப் பின்னால் ஒளிந்து கொண்டார்.

பரவாதிமல்லர் அங்கிருந்து வெளியே நடந்தார். அப்படிச் செல்லும்போது சிலைகளிடையே நின்றிருந்த பரமேசுவரவர்மனுக்கும் ஏதோ சமிக்ஞை செய்துவிட்டே சென்றார்.

"வணக்கம், ஐயா! சளுக்கியத் தளபதி வில்வேலிய வர்களின் சமூகத்திலிருந்து நாங்கள் வந்திருக்கிறோம்."

கலைக்கூடத்தின் வாசலில் புன்னகையுடன் வந்து நின்ற சேதியக் கலைஞர் கம்பீரமாக நிமிர்ந்தார். அங்கே, சளுக்கிய வீரர்கள் இருவர், விநயத்துடன் தலைவணங்கி நின்றனர். அவர்களுக்குப் பின்னால் இரட்டைப் புரவிகள் பூட்டிய ஓர் அழகான ரதம் நின்றுகொண்டிருந்தது.

"என்ன சேதி?" என்று அமைதியாக விளித்தார் சேதியக் கலைஞர்.

"எங்கள் தளபதியார் தங்களுக்கு ஓர் ஓலை கொடுத்தனுப்பியிருக்கிறார், ஐயா!'' என்று பணிவுடன் கூறிக் கொண்டே ஓலை நறுக்கு ஒன்றை அவரிடம் நீட்டினான் சளுக்கிய வீரன்.

அந்த ஓலையைப் பெற்றுப் படித்துப் பார்த்த பரவாதி மல்லரின் முகத்தில் எவ்வித சலனமும் ஏற்படவில்லை. சற்று நேரம் எதைப்பற்றியோ ஆழ்ந்து யோசித்தவாறு நின்ற அவர், ''சரி; இங்கேயே இருங்கள்'' என்று சொல்லிக் கலைக் கூடத்துக்குள் திரும்பி நடந்தார்.

"என்ன கலைஞரே, யார் அவர்கள்?" என்று திகிலுடன் கேட்டுக் கொண்டே ஓவியத் திரைக்குப் பின்னாலிருந்து அவசரமாக வந்தார் முத்தரையர்.

ஆனால், பரவாதிமல்லரோ அவரிடம் ஏதும் சொல்லாமல், அங்கு அமைதியாக உலாவிக் கொண்டிருந்த பரமேசுவரவர்மனிடம் அந்த ஓலையைக் கொடுத்துவிட்டு தலையைத் தாங்கிப் பிடித்தவண்ணம் சோர்வுடன் போய் ஒரு தூணில் சாய்ந்து நின்றார்.

பரமேசுவரவர்மன் ஓலையிலிருந்து சேதியைத் தன் வாய்குள்ளாகவே படித்துப் பார்த்துவிட்டு அதை முத்தரை யரிடம் நீட்டினாள். அவன் முகத்தில் ஒரு சுந்தரப் புன்னகை ஊர்ந்து மறைந்தது. தன் கழுத்தில் உருத்திராக்க மணிச்சரம் போல் தவழ்ந்து கொண்டிருந்த சவுக்கைக் காய் மாலையை மெல்லத் தொட்டுப் பார்த்துக் கொண்டான்.

''சளுக்கியத் தளபதி வில்வேலி அல்லவா இவ்வோலையை எழுதியிருக்கிறான்?'' என்று முனகிக் கொண்டே அவசரப் பரபரப்புடன் வாங்கிப் படித்தார் முத்தரையர். அவர் முகம் வெளிறியது. கரங்கள் நடுங்கின கண்களில் செவ்வரி படர்ந்தது. "இது என்ன வேடிக்கை. இங்கே ஓவியக் கலைஞன் யார் இருக்கிறான்?" என்று குழறிக் கேட்டார்.

"பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரைத்தான் ஓவியராக எண்ணிக் குறிப்பிட்டிருக்கிறான் வில்வேலி!'' என்றார் பரவாதிமல்லர் அடைத்த குரலில்.

"நம் மன்னர்பிரானை ஓவியன் என்று அவன் எப்படிக் குறிப்பிடுவான்?"

''ஆந்திர இளவரசியின் வாயிலாகத் தெரிந்து கொண்டிருக்கலாம்."

"அவள் எவ்வாறு அவரை ஓவியக் கலைஞர் என்று தீர்மானித்திருப்பாள்?"

"மூன்று நாட்களுக்கு முன் இந்த ஓவியத் திரைக்கு எதிரே அவர் உலாவிக் கொண்டிருந்ததைப் பார்த்த நீங்கள் அவரே இவ்வோவியத்தை வரைந்திருப்பார் என்று எண்ணிக் கொள்ளவில்லையா? அதுபோல் அவளும் அவரை இங்கே பார்த்தபோது அப்படியொரு முடிவுக்கு வந்திருக்கலாம்."

"பல்லவ மன்னர்தான் ஓவியக் கலைஞனாக இங்கு புகலடைந்திருக்கிறார் என்று அவள் தெரிந்து கொண்டிருப் பாளோ? அந்த விவரத்தை வில்வேலியிடமும் சொல்லி விட்டிருப்பாளோ?"

"அப்படிச் சொல்லியிருந்தால், இங்கே இந்த அழகிய ரதம் வந்திருக்காது; ஒரு பெரும் படையே திரண்டு வந்திருக்கும்."

" 'தங்களிடமுள்ள ஓவியரைப் பல்லவபுரத்துக்கு அனுப்பி வையுங்கள்' என்று இத்தனை விநயத்துடன் வில்வேலி கேட்டிருப்பது ஏன்?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை, அன்பரே!"

"இப்போது நீங்கள் என்ன செய்வதாக உத்தேசம்?"

"வில்வேலியின் வேண்டுகோளுக்கிணங்க என்னிடமுள்ள 'ஓவியரை' அனுப்பித்தான் ஆகவேண்டும்."

"என்ன! நம் மன்னரை அனுப்பப் போகிறீர்களா?"

"அதைத் தவிர வேறு வழியில்லை."

"நான் அதற்கு ஒருகாலும் சம்மதிக்க மாட்டேன்!"

"அவரை அனுப்ப மறுத்தால் வீணான தொல்லைகளை நாமே விலை கொடுத்து வாங்குவதுபோல் ஆகிவிடும்."

"பரமேசுவரவர்மருக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்தால்?"

"அனுப்பாமலிருந்தால் அதைவிடப் பெரிய ஆபத்து அவருக்கு நேரலாம்."

தலையில் ஓங்கி அறைந்து கொண்டு அப்படியே தரையில் உட்கார்ந்துவிட்டார் முத்தரையர். கண் கலங்க முகத்தைப் பொத்திக் கொண்டு வேறு பக்கம் திரும்பினார் பரவாதிமல்லர்.

இதுகாறும் மௌனமே உருவாக உலாவிக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன் இப்போதுதான் முதன் முதலாக வாய் திறந்து பேசினான்: "எல்லாம் ஈசன் செயல்! நான் பல்லவபுரம் சென்று வருகிறேன்."

கம்பீரக் களை சொட்ட வாசலை நோக்கி நடந்த அவன், அங்கு நின்றிருந்த ரதத்தில் ஏறி அமர்ந்தான். சகட ஒலியெழுப்பி விரைந்தது ரதம்.

# 23

## பல்லவபுரம் சாலையிலே...?

ஆலம்பாக்கத்துக்கு வடப்புறத்தே நீலாம்பரமாக விசாலித்துக் கிடந்த மிகப் பெரிய ஏரியின் கீழண்டைக் கரையோரம்-தாழம்புதரையொட்டிச் சென்ற கொடிப் பாதையொன்றில்-சோர்வுடன் நடந்து கொண்டிருந்த கோவிந்தவர்மன தயங்கி நின்று, "இளங்காரி! நாம் எதிர்பார்த்தது போல் எதுவும் நடக்கவில்லை என்றா சொல்கிறாய்?" என்று, பலமுறை கேட்ட கேள்வியையே மீண்டும் கேட்பது போன்ற ஓர் அழுத்தத்துடன் கேட்டான்.

உடம்பெல்லாம் கண்ணாகச் சுற்றுமுற்றும் பார்த்தபடி பின்னால் வந்துகொண்டிருந்த ஆபத்துதவி வீரனான இளங்காரிக்குடையான், "ஆம், இளவரசே! இன்று காலை என் அன்னையைச் சந்தித்து விசாரித்து அறிந்து வந்த விவரத்தையே தங்களிடம் கூறினேன்" என்றான் பணிவும் துணிவுமான குரலில்.

கோவிந்தவர்மன் இதைக் கேட்டு யோசனையில் ஆழ்ந்தவனாய் மேலே நடந்தான். அவனுடன் விநயமாக நடந்து கொண்டே தொடர்ந்து சொன்னான் இளங்காரிக் குடையான்: "சோழ இளவரசியாரிடமிருந்து வேங்கி இளவரசி அந்தப் பட்டோலையைக் கைப்பற்றிச் சென்றதால் பல விபரீத விளைவுகள் ஏற்படப் போகின்றன என்று நாம் எதிர் பார்த்தோம். ஆனால், அப்படி எதுவுமே இதுவரையில் நடைபெறாமல், அவ்விஷயம் கிணற்றிலே கல்லைப் போட்ட

மாதிரி அமுங்கிப் போய் இருப்பதை நினைக்க ஆச்சரிய மாகவே இருக்கிறது."

மூன்று தினங்களுக்கு முன் சோழ இளவரசி இளங்கோப்பிச்சியிடமிருந்து வேங்கி இளவரசி உத்தமசீலி தன் பட்டோலைச் சுருளைத் தந்திரமாகப் பெற்றுச் சென்றாள் அல்லவா? அந்தச் சம்பவம் வெளியே நடந்து கொண்டிருந்த அதே நேரத்தில், வீட்டுக்குள்ளே ஒளிந்திருந்த பல்லவ இளவரசனும் ஆபத்துதவி இளங்காரியும் அங்கிருந்து பின்புற வாசல் வழியே மறைந்து வெளியேறி, ஓர் இடையனின் சிறு குடிலில் போய்த் தங்கியிருந்து, இன்றுதான் வெளிப்பட்டு வந்திருக்கிறார்கள்.

ஏதோ சிந்தனையில் மௌனமாக நடந்து கொண்டிருந்த கோவிந்தவர்மன், "அது சரி; வேங்கி இளவரசி உறையூருக்குப் போய்விட்டாளா? அல்லது பல்லவபுரத்தி லேயே தங்கியிருக்கிறாளா?" என்று புருவங்களை நெறித்துக் கொண்டு கேட்டான்.

"பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளியில்தான் இப்போது அவள் தங்கியிருக்கிறாள், இளவரசே!" என்றான் இளங்காரி இரகசியக் குரலில்.

"உறையூருக்குப் போவது அல்லவா அவளுடைய பயணத் திட்டம்? அதை மாற்றிக் கொண்டு பல்லவபுரத்தில் தங்கியிருக்கக் காரணம் என்ன?"

"அதுதான் எனக்கும் புரியவில்லை..."

"ஒருகால், சளுக்கியத் தளபதி மட்டும் உறையூருக்குச் சென்றிருக்கலாம்: அதனால் ஆந்திர இளவரசி அந்தப் பட்டோலை விஷயத்தை அவனிடம் தெரிவித்து உடனடியாக நடவடிக்கை எடுக்க முடியாமலிருக்கலாம்."

"இல்லை, இளவரசே! தளபதி வில்வேலியும் இப்போது பல்லவபுரத்தில்தான் தங்கியிருக்கிறான். அவனுடைய யோசனையின் பேரிலேயே அவள் தன் பயணத்தை நிறுத்தி விட்டு இலவந்திகைப் பள்ளியில் இருந்து வருகிறாள்."

"அப்படியானால், உறையூரிலிருக்கும் சளுக்கிய மன்னன் விக்கிரமாதித்தனே ஆந்திர இளவரசியைச் சந்திப்பதற்காகப் பல்லவபுரத்துக்குப் புறப்பட்டு வருவானோ? அவனிடமும் அந்த ஓலை காணாமற்போய் மீண்டும் கிடைத்த சம்பவங்களைக் கூறி விரிவான நடவடிக்கைகள் எடுக்கக் காத்திருக்கிறார்களோ?"

"எனக்கு அவ்வாறு தோன்றவில்லை. ஏனென்றால், இம்மாதிரி காரியங்களைத் தானே சாதித்துத் தன் மன்னனிடம் நல்ல பெயர் சம்பாதித்துக் கொள்ள வேண்டுமென்ற துடிப்போடு இருப்பவன் வில்வேலி. இந்தச் சந்தர்ப்பத்தை விட்டுவிட்டு விக்கிரமாதித்தனின் உத்தரவுக் காகக் காத்திருப்பான் என்று கருத முடியாது."

"நீ சொல்வதைப் பார்த்தால் ஆந்திர இளவரசி அவ்விஷயத்தை வில்வேலியிடம் தெரிவித்திருக்கவே மாட்டாள் என்றல்லவா ஆகிறது?"

"அப்படித்தான் நினைக்கத் தோன்றுகிறது இளவரசே!" என்று பணிவுடன் சொன்ன இளங்காரிக்குடையான் தன் கழுகுக் கண்களை அங்குமிங்குமாகச் செலுத்தித் திருப்பிக் கொண்டு மேலும் கூறினான்: "அவள் ஒரு நாட்டு யுவராணி. மிகப் பெரிய காரியம் ஒன்றைச் சாதிப்பதற்காகத் தேசம் விட்டுத் தேசம் வந்திருப்பவள். அவளுடைய அறிவிலும் திறமையிலும் மிகுந்த நம்பிக்கை வைத்தே சளுக்கிய விக்கிரமாதித்தன் அவளை இங்கு வரவழைத்திருக்கிறான். இந்நிலையில் அவள் தான் செய்யும் தவறுகளையோ, தன்னிடமுள்ள பலவீனங்களையோ வெளிப்படையாகச் சொல்லி அவற்றுக்குப் பரிகாரம் காண முயலுவாளா? அப்படி முயன்றால் அவள் மீதே நம்பிக்கையற்ற அபிப்பிராயத்தை உண்டு பண்ணி விடுமே! இதை உத்தேசித்துத்தான் அவள் அந்த விஷயத்தை வில்வேலியிடம் தெரிவிக்காமல் மறைத்துவிட்டிருகிறாள் என்று எனக்குப் படுகிறது. இப்படி நான் நினைப்பதற்குக் காரணம் இல்லாமலுமில்லை, அன்று நம் சோழ இளவரசியாரிடம்

அந்தப் பட்டோலை இருப்பதை அவள் நேருக்கு நேர் பார்த்தும், அதனை உடனடியாக அவரிடமிருந்து பறிக்கவோ, அல்லது அவருக்கு கிடைத்த விவரத்தை விசாரிக்கவோ செய்யாமல், அங்கிருந்த நேரே புறப்பட்டுப் போய், அப்புறம் தன் காவல் வீரனை அனுப்பிப் பெற்று வரச் செய்திருக்கிறாள். அதுவும் அந்த ஓலையைத்தான் கை மறதியாய்க் கொடுத்து விட்டதாக ஒரு சௌந்தர்யப் பொய்யையும் கூறியிருக்கிறாள். இது தவிர, தன்னுடைய சிவிகையையும், தான் கொண்டு வந்த முக்கியமான ஓலையையும் கடத்திச் சென்றவர்களை உடனடியாகக் கண்டுபிடிக்ககூடிய ஒரு நல்ல வாய்ப்புக் கிடைத்தும் அதைப் பயன்படுத்திக் கொள்ளாமல் ஒதுங்கிப் போய் விட்டிருக்கிறாள். அவள் நினைத்திருந்தால் அந்தக் கணமே இளங்கோப்பிச்சியைச் சிறைப் பிடித்து, அவர் தங்கியிருக்கும் இல்லத்தையும் சோதனையிடுமாறு தன் காவல் வீரர்களுக்குக் கட்டளையிட்டிருக்கலாம். அவ்வாறு செய்யாமல் போனதற்கு, நான் முதலில் சொன்ன காரணத்தைத் தவிர வேறென்ன இருக்க முடியும்?"

கோவிந்தவர்மன் அவனை வியப்புடன் திரும்பிப் பார்த்தான். பணிவும் குழைவுமாகத் தலைகுனிந்து வந்த இளங் காரிக்குடையானோ தன் பேச்சை நிறுத்தாமல் தொடர்ந்து சொன்னான்: "ஆனாலும் இளவரசே! இதனாலெல்லாம் அந்தச் சம்பவத்தை அவள் அடியோடு விட்டுவிடுவாள் என்றோ, அதுபற்றி எவ்வித நடவடிக்கையும் எடுக்கச் செய்யமாட்டாள் என்றோ நான் கூறத் தயாரில்லை. ஏனென்றால், தான் மேற்கொண்டு வந்துள்ள இலட்சியத்துக்கு இம்மாதிரி சம்பவங்கள் தட்டுத் தடங்கலாக அமையும் என்பதைக் கருதி அவற்றை மேலும் வளர விடக்கூடாது என்பதற்காகத் தானே தனிப்பட்ட முறையில் கண்டுபிடிக்க முயற்சி செய்யலாம்; அப்படிக் கண்டறிந்த விஷயங்களைத் தனக்குத் தொடர்பு இல்லாத வகையிலே தளபதி வில்வேலியிடம் தெரிவித்துத் தகுந்த நடவடிக்கை எடுக்கவும் கூறலாம்..."

பேச்சை நிறுத்திவிட்டுச் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான் இளங்காரி. பிறகு, தான் அதிகப்பிரசங்கித் தனமாகப் பேசிவிட்டோமோ என்ற அச்சக் குறும்புடன் பல்லவ இளவரசனைக் கடைக் கண்ணால் கவனித்தபடி சற்றே தயங்கி நடந்தான்.

அவன் சொன்னதெல்லாம் சரி என்று ஒப்புக் கொள்பவன்போல் மெல்லத் தலையசைத்துக் கொண்டே கோவிந்தவர்மன் நீண்ட பெருமூச்சு விட்டு, "எது எப்படியிருந்தாலும் நான் இப்போது கவலைப்படுவது எனக்காகவோ என் தமையனார் பரமேசுவரவர்மருக் காகவோ அல்ல; ஆந்திர இளவரசியிடமிருந்து கைப்பற்றிய அந்தப் பட்டோலையின் மூலம் என் பெரிய அன்னையார் காடவன் மாதேவியை மீட்டு வரப் போட்ட திட்டம் பாழானதுமல்லாமல், எனக்காகத் தன் தந்தையைப் பிரிந்து அரண்மனைச் சுகபோகங்களையெல்லாம் ஒதுக்கித் தள்ளி அநாதைப் பெண்போல் இந்தச் சிற்றூரில் இருந்து வரும் சோழ இளவரசி இளங்கோப்பிச்சிக்கும் இன்னல் ஏற்படும்படியான ஒரு பயங்கரச் சூழ்நிலை உருவாகிவிட்டதே என்பதற்காகத் தான் பெரிதும் கவலைப்படுகிறேன். கடந்த மூன்று தினங்களுக்கு முன்வரையில் எங்களுடன் தோளோடு தோள் சேர்ந்து எந்தத் தியாகமும் புரியக்கூடிய உத்தம நண்பராக விளங்கி வந்த பழையாறைச் சோழரின் போக்கு திடீரென்று ஏனோ இப்போது மாறுதல் அடைந்திருக்கிறது. இந்நிலையில், அவருடைய மகளுக்கு ஏதேனுமொரு சிறு துன்பம் ஏற்பட்டாலும் அவர் என்ன நினைப்பார்? எங்களுடைய சுயநலத்துக்காக நாங்கள் அவளைப் பலியிட்டு விட்டோம் என்று எங்கள் மீது பழி சுமத்தித் தீராப் பகைகொண்டு விடுவாரே!" என்றான் கம்மிக் கரகரத்த குரலில்.

அவனுடைய துயரமொழிகளைக் கேட்டுத் திகிலடைந்து போன இளங்காரிக்குடையான் உடம்பை வளைத்துக் கைகளைப் பிசைந்துகொண்டு, "இந்தச்

சங்கடங்களுக்கெல்லாம் மூல காரணனே நான்தான்! முன்பின் யோசியாமல் முரட்டுத்தனமாகத் தங்களை வெளிவாசல் திண்ணையிலிருந்து வீட்டுக்குள் இழுத்ததால் தான் தங்கள் கையிலிருந்த அந்தப் பட்டோலைச் சுருள் தவறிக் கீழே விழவும், அதைச் சோழ இளவரசியார் எடுக்கவும், பிறகு அது ஆந்திர இளவரசியின் கண்ணில் படவுமான விபரீதங்கள் நிகழலாயின!" என்று தன்னையே வெறுத்துக் கொள்பவனைப் போல் முணுமுணுத்தான்.

பிறகு சட்டென்று நிமிர்ந்து, "இளவரசே! நான் செய்த இந்தத் தவற்றினால் தங்களுக்கோ, சோழ இளவரசிக்கோ ஒரு சிறு துன்பம் நேர்ந்தாலும் என் கடமையிலிருந்து வழுவிய குற்றம் புரிந்தவனாகக் கருதி, நேரே கருக்கிலமர்ந்தாளின் சந்நிதிக்குப் போய்த் 'தலைத் தண்டம்' செய்து கொள்வேன்: இது சத்தியம்" என்றான் மூர்க்கமான குரலில்.

கோவிந்தவர்மன் இதைக் கேட்டு மெல்லச் சிரித்தான். "என்ன, இளங்காரி! இவ்வளவு நேரம் ஏதேதோ புத்திசாலித் தனமாகப் பேசிக் கொண்டிருந்துவிட்டு இப்போது, 'அதையெல்லாம் பேசியவன் நானல்ல' என்பது போல் உளற ஆரம்பித்து விட்டாயே?..." என்று கூறி மீண்டும் நகைத்த அவன், "அந்தச் சமயம் நீ மட்டும் அப்படிச் செய்திரா விட்டால் நான் அவ்விடத்திலேயே சளுக்கிய வீரர்களிடம் சிக்கிக்கொண்டு விட்டிருப்பேன். ஏனென்றால், அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருந்தபோது என்னைக் காவல் காத்து வந்த வீரர்களே அன்றைய தினம் ஆந்திர இளவரசியை அழைத்துப் போக வந்திருந்தார்கள். சற்றே தாமதித்திருந்தாலும் அவர்கள் என்னை வெகு எளிதில் அடையாளம் கண்டுகொண்டிருக்கலாம்" என்றான்.

"அது தெரிந்துதான் நானும் அத்தகைய பரபரப்பு அடைந்துவிட்டேன், இளவரசே! பெருவளநல்லூரிலிருந்து தங்களுக்குப் பாதுகாவலாக வந்த நான், வேங்கி இளவரசி அவ்வழியே சிவிகையில் சென்றுகொண்டிருப்பதைக்

கவனித்துத் தங்களை எச்சரிக்கைப்படுத்துவதற்காக என்னுடைய இல்லத்துக்கு விரைந்தேன். அங்கே தாங்களும் சோழ இளவரசியாரும் சித்திரத் திண்ணையில் பேசிக் கொண்டிருந்தீர்கள். தங்கள் பேச்சுக்கிடையே குறுக்கிட்டுச் சிரமம் தர விரும்பாமல் பின்புற வழியே இல்லத்தினுள் சென்றேன். நான் சந்தேகப்பட்டதுபோல் வேங்கி இளவரசியின் சிவிகை என் வீட்டெதிரே வந்து நின்றது. பேச்சு மும்முரத்தில் இருந்த நீங்கள் அதைக் கவனிக்கவில்லை. இந்நிலையில் எனக்கு வேறெதுவும் விழ தோன்றாமற் போகவே சடாரென்று பாய்ந்து தங்கள் கையைப் பற்றி வீட்டுக்குள் இழுத்துக் கொண்டேன்...'' என்று மென்று விழுங்கியபடி சொன்னான் இளங்காரி.

சிறுபொழுது மௌனமாகச் சென்ற கோவிந்தவர்மன், "அதெல்லாம் சரிதான்; ஆனால், இளங்கோப்பிச்சி அந்தச் சமயத்தில் இன்னும் கொஞ்சம் முன்யோசனையோடு நடந்து கொண்டிருக்கலாம் என்றே எனக்குத் தோன்றுகிறது'' என்றான் சலிப்படைந்த குரலில்.

"அதாவது, அந்தப் பட்டோலையைக் கீழேயிருந்து எடுத்த சோழ இளவரசி அதை அத்தனை மிதப்பாக வைத்திருந்தது தவறு என்கிறீர்களா? அவருடைய நிலையில் வேறு யார் இருந்தாலும் அப்படித்தான் நடந்து கொண்டிருக்க முடியும். ஏனென்றால், அவ்வோலையில் என்ன சேதி இருக்கிறதென்பதோ, அது வேங்கி இளவரசியிடமிருந்து கவர்ந்து வரப்பட்டதென்பதோ அவருக்குத் தெரியாது. தாங்களும் அதை அவரிடம் தெரிவிக்கவில்லை. எனவேதான் அவ்வோலையை மறைக்க வேண்டுமென்று அவருக்குத் தோன்றவில்லை.''-பரபரப்புடன் இவ்வாறு கூறிய இளங்காரிக்குடையான் மேலும் சொன்னான்: "ஆனாலும், சளுக்கிய வீரன் வந்து அந்தப் பட்டோலையைக் கேட்டதுமே அதன் முக்கியத்துவத்தை உணர்ந்துகொண்ட அவர், அவ்விக்கட்டான நிலைமையைச் சமாளித்த விதத்தை

இப்போது நினைத்தாலும் எனக்கு மிகவும் ஆச்சரியமாகவே இருக்கிறது!"

"ஆமாம்" என்று தலையாட்டிக்கொண்ட கோவிந்த வர்மன், "அவள் அந்த ஓலையைச் சளுக்கிய வீரனிடம் அப்போது கொடுக்க மறுத்திருந்தால், அங்கிருந்து நாம் தப்பிச் செல்லவே முடிந்திராது" என்றான்.

"அது மட்டுமல்ல, இளவரசே! தன்னிடமிருந்து காணாமற் போன பட்டோலை இந்தப் பெண்ணிடம் எப்படி வந்தது என்பதைத் தந்திரமாக அறியும்பொருட்டே, அதைத் தான் கைதவறிக் கொடுத்துவிட்டதாகச் சொல்லியனுப்பி யிருக்கிறாள் வேங்கி இளவரசி, அவளுடைய அந்தக் கூற்றை நம் சோழ இளவரசியார் மறுத்து, அங்கு வந்த யாரோ ஒரு கூலவாணிகன் மறந்து விட்டுப்போனதை எடுத்து வைத்திருந்த தாகச் சொல்லியிருக்காவிட்டால், அவர்மீது ஏற்பட்ட சந்தேகம் அப்போதே உறுதிப்பட்டுப் போயிருக்கும், அதனால் அவருக்கு மட்டுமல்ல, நமக்கும் ஆபத்து நேர்ந்திருக்கும்..."

இளங்காரிக்குடையான் திடுமெனப், பேச்சை நிறுத்தி விட்டு அவசரமாக அங்குமிங்கும் திரும்பிப் பார்த்தான். முன்னால் நடந்துகொண்டிருந்த கோவிந்தவர்மனோ அவனுடைய அந்தப் பரபரப்பைக் கவனியாமல், "இளங்காரி! இன்றோடு மூன்று நாட்களாகியும் சந்திரலேகைச் சிற்றரசரைப் பற்றிய தகவல் எதுவுமே தெரியவில்லையே? அவருக்காக நாம் இங்கே காத்திருக்க, அவர் பெருவள நல்லூரிலிருந்து நேரே பழையாறைக்குப் போய்விட்டாரா என்ன?" என்று கவலையுடன் கேட்டுக்கொண்டே ஏரிக்கரை யோரமிருந்த ஒரு வெண்ணாவல் மரத்தடியில் உட்காரப் போனான்.

பின்னால் வந்த இளங்காரி சடாரென முன்னால் பாய்ந்து பல்லவ இளவரசனைப் பிடித்து அப்பால் தள்ளி வெடுக்கென்று வாளை உருவி வெண்ணாவல் மரத்தின் வலப் பக்கவாட்டை நோக்கி வேகமாகச் சுழற்றி வீசினான். அதே

சமயம், அங்கிருந்து மற்றொரு கத்தி 'விர்'ரெனச் சுழன்று வந்து இளங்காரி எறிந்த குறுவாளுடன் பளீரென்று மோதவே, தீப்பொறி உதிர அவ்விரு கத்திகளும் தெறித்துப் போய்த் தொலைவில் வீழ்ந்தன.

இந்த மின்னல் வேகப் பயங்கர நிகழ்ச்சியால் மிரண்டு நின்று கோவிந்தவர்மன் பரபரப்போடு நிமிர்ந்து நோக்கினான்.

"மகிழ்ச்சி, இளங்காரி! மெத்த மகிழ்ச்சி! எங்கள் பல்லவ இளவரசருக்கு ஆபத்துதவியாக இருக்க, நீயே தகுதி வாய்ந்தவன்!'' என்று கடகடவெனச் சிரித்துக் கூறிக் கொண்டே அந்த வெண்ணாவல் மரத்தின் பின்னாலிருந்து வெளிப்பட்டார் பெரும்பிடுகு முத்தரையர்.

அவரைக் கண்டு அதிர்ச்சியுற்று நடுங்கிய இளங்காரிக் குடையான் கூனிக் குறுகி ஒதுங்கிப் போய் நின்று, "மன்னியுங்கள், ஐயா! யாரோ சளுக்கிய ஒற்றன் அங்கு ஒளிந்திருப்பதாக எண்ணி அவசரப்பட்டுக் கத்தியை எறிந்துவிட்டேன்" என்று குழறினான்.

"கவலைப்படாதே! நீ செய்ததுதான் சரி'' என்று புன்முறுவலுடன் கூறிய முத்தரையர், "வாருங்கள், இளவரசே! உங்களைத் தேடிக்கொண்டு அநந்தமதியின் இல்லத்துக்குப் போய், அங்கிருந்து நேரே இங்கு வந்திருக்கிறேன்" என்றவாறு நிழல் விழுந்த ஏரிக்கரைச் சரிவில் அமர்ந்தார்.

பிரமை நீங்கி உற்சாகமடைந்த கோவிந்தவர்மன், "நானும் உங்களை எதிர்பார்த்துத்தான் இவ்வழியே புறப்பட்டு வந்தேன், ஐயா!" என்று சொல்லிக்கொண்டே அவர் அருகில் சென்று ஒருக்களித்து உட்கார்ந்து, "பரமேசுவரவர்மரைப் பார்த்தீர்களா? அவர் என்ன சொன்னார்? எப்படி இருக்கிறார்? எதிர்ப்பு அணி திரட்டும் பொருட்டுத் தாங்கள் எழுதிச் சென்ற திருமுக ஓலையில் அவர் கைச்சாத்து இட்டாரா?" என்று ஆவல் செருமிய குரலில் கேள்வி மேல் கேள்வியாக அடுக்கிக் கேட்டான்.

முத்தரையரின் முகத்தில் துயரக் கறை படிந்தது. ஒரு கணம் மௌனமாக இருந்த அவர், "அந்த விவரங்களை யெல்லாம் பிறகு சொல்கிறேன், இளவரசே! நீங்கள் இங்கு வந்த காரியம் என்ன ஆயிற்று? அதை முதலில் கூறுங்கள்" என்றார் உயிரற்ற புன்னகையுடன்.

தொலைவில் நின்ற இளங்காரிக்குடையானை மெல்லத் திரும்பிப் பார்த்துவிட்டுத் தலைகுனிந்த கோவிந்தவர்மன், "நானும் அந்த விவரங்களை அப்புறம் சொல்கிறேனய்யா!" என்று கரகரத்தான்.

"நீங்கள் அதுபற்றி ஏதும் சொல்ல வேண்டாம்; அதையெல்லாம் நான் அநந்தமதியிடம் கேட்டுத் தெரிந்து கொண்டுதான் இங்கு வந்திருக்கிறேன்" என்று இதமாகச் சிரித்துச் சொன்ன முத்தரையர், "சரி; புறப்படுங்கள் இளவரசே! ஓர் அவசர காரியமாக நாம் இப்போதே பழையாறைக்குப் போயாக வேண்டும்" என்றவாறு எழுந்தார்.

"அவசரமாகப் போக வேண்டுமா? அப்படி என்ன அவசியம் நேர்ந்தது?" என்று கேட்டுக்கொண்டே கோவிந்த வர்மனும் எழுந்தான்.

"முதலில் புறப்படுங்கள்; வழிச்செலவில் அந்த விவரங்களைக் கூறுகிறேன்."-புதர் மறைவில் விட்டு வைத்திருந்த தம் புரவியை நோக்கி நடந்தார் முத்தரையர்.

கோவிந்தவர்மன் அவர் கையைப் பற்றி நிறுத்தி, "ஒரு விஷயம்..." என்று தயக்கத்துடன் இழுத்தான்.

"சொல்லுங்கள், இளவரசே!" என்று அன்போடு விளித்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

"இளங்காரியின் இல்லத்தில் சோழ இளவரசியை நீங்கள் பார்த்திருப்பீர்கள்; என்னைப் பற்றி அவள் ஏதேனும் சொன்னாளா?"

"அழுதுகொண்டே கிடக்கும் அந்தப் பெண் என்னிடம் வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசவே இல்லை."

"அவள் ஏன் அழுது கொண்டிருக்கிறாள்?..."

"பல்லவ இளவரசருக்குத் தான் ஏதோ பேராபத்து நேரும்படியான காரியம் செய்துவிட்டதாக எண்ணிப் புலம்பிக் கொண்டிருக்கிறாளாம், மூன்று தினங்களாக!"

கோவிந்தவர்மன் இதைக் கேட்டு மனம் துடித்தான். அவன் கண்கள் இலேசாகக் கலங்கிச் சிவந்தன. "ஐயா! சிறுபொழுது எனக்கு அவகாசம் கொடுங்கள். ஓடிப் போய் அவளைப் பார்த்துவிட்டு உடனே திரும்பி வந்து விடுகிறேன்."

முறுவல் பூத்த முத்தரையர், 'சரி' என்று தலையசைத்தார். அங்கிருந்து வேகமாகப் புறப்பட்ட கோவிந்தவர்மன் ஏனோ தயங்கி நின்றான். அந்த ஏரிக் கரையோரம் தழைத்துக் கிளைத்து வளர்ந்திருந்த தாழம்புதர்களின் மேல் அவனுடைய பார்வை படர்ந்து சென்றது. பச்சைப் பசேலென்று கீற்றிலைகளைச் சரியவிட்டிருந்த ஒவ்வொரு தாழங்கிளையிலும் பொன் வண்ணப் பூமடல்கள் நறுமணம் கமழ நிமிர்ந்து நின்றதைச் சற்றுநேரம் பார்த்துக் கொண்டிருந்த அவன், "என்ன அழகான மலர்கள்! இளங்கோப்பிச்சிக்குத் தாழம்பூ என்றால் கொள்ளைப் பிரியம்" என்று கிறக்கக் குரலில் கூறிக்கொண்டே போய், கர்ப்பம் வெடிக்காத ஒரு பூமடலை வளைத்துப் பறிக்கத் தாவினான்.

இதைக்கண்ட முத்தரையர் கடகடவெனச் சிரித்து, "ஹூம்! இளவரசருக்குத் தாழம்பூவைக் கண்டதும் அவருடைய காதலியின் விருப்பம் நினைவுக்கு வருகிறது! ஆனால் நானோ, கருங்கு முட்களுடன் விளங்கும் இந்தத் தாழங் கீற்றிலைகள் அனைத்தும் சளுக்கிய விக்கிரமாதித்தனின் நெஞ்சைக் கிழித்தெறியக்கூடிய போர் வாட்களாக இருக்கக் கூடாதா என்று ஏங்குகிறேன்!" என்றார் குத்தலாக.

கோவிந்தவர்மனின் உடல் ஒரு குலுங்குக் குலுக்கியது. கையிலிருந்த தாழம்பூ மடலை வீசியெறிந்துவிட்டு அநந்தமதியின் இல்லத்தை நோக்கி விரைந்தான். சற்றுத் தொலைவில் கைகட்டி நின்றுகொண்டிருந்த இளங்காரியைப்

பார்த்து முத்தரையர் ஏதோ சமிக்ஞை செய்யவே, அவனும் அங்கிருந்து இளவரசனைப் பின்தொடர்ந்து சென்றான்.

களைப்பும் சோர்வுமாக இடுப்பின் மீது இரு கைகளையும் ஊன்றிக் கொண்டு நின்ற முத்தரையர், அவ்விருவரும் தம் கண்ணிலிருந்து மறையும்வரையில் பார்த்துக் கொண்டிருந்து விட்டு அந்த வெண்ணாவல் மரத்தடியில் போய் உட்காரத் திரும்பியவர், எங்கோ வெகு தூரத்தில் இரண்டு குதிரைகள் வேகமாக ஓடிவரும் குளம்பொலி கேட்டுச் சட்டென்று நிமிர்ந்து நோக்கினார்.

அந்த ஏரிக்கரைக்குத் தென்மேற்கே, பல்லவபுரத்தி லிருந்து தவத்துறைக்குச் செல்லும் பெருவழியொன்றில், யாரோ இருவர் முன்னும் பின்னுமாகக் குதிரைகளைச் செலுத்தி வந்துகொண்டிருந்தனர். கோட்டைச் சுவர் போல் அடர்ந்து வளர்ந்திருந்த தாழம்புதருக்குப் பின்னால் நின்றுகொண்டிருந்த முத்தரையர் அவர்களைச் சரியாகப் பார்க்க முடியாமல் தவித்தார். பிறகு உயரமான ஏரிக் கரைக்குத் தள்ளிப் போய் அங்கிருந்தவாறு அவ்விருவரையும் கூர்ந்து நோக்கினார்.

அடுத்த கணம், அவர் உள்ளமும் உடலும் ஒருசேர அதிர்ந்து குலங்கின. அளவுக்கு மீறிய பரபரப்புடன் அப்படியும் இப்படியுமாகச் சாய்ந்து அவர்களை மீண்டும் கவனித்தார்.

சந்தேகமில்லை. முன்னால் பழையாறைச் சோழர் குதிரையைச் செலுத்திக் கொண்டு வர, அவருக்குப் பின்னால் அவரைப் பாதுகாப்பவன்போல் ஈட்டி ஏந்தியவண்ணம் ஒரு சளுக்கிய வீரன் குதிரைமேல் வந்துகொண்டிருந்தான்! அவர்கள் பல்லவபுரத்திலிருந்து தவத்துறை வழியே பழையாறைக்குப் போகிறார்கள் என்று தோன்றியது.

முத்தரையருக்கு ஒன்றும் புரியவில்லை. 'இவர் ஏன் பல்லவபுரத்துக்குப் போய் வருகிறார்?' என்று எண்ணிக் குழம்பிகொண்டே நின்றார் அவர். இதற்குள் அவ்விரு புரவிகளும் தொலை தூரத்துகது அப்பால் சென்று மறைந்து விட்டன.

## 24

# பழையாறைக்கு அழைப்பு!

அஷ்டபாயா கட்டிலின் பூம்பஞ்சணையில் படுத்துச் சுகம் கண்டு வளர்ந்தவளான சோழ இளவரசி இளங்கோப்பிச்சி, அந்தச் சின்னஞ்சிறு அறையிலே சிறியதொரு நார்க் கட்டிலில், வாடித் துவண்ட பூமாலையெனச் சாய்ந்து விம்மிப் புலம்பிக் கொண்டிருந்தாள்.

"இளவரசி!"

திடுக்குற்றுத் தலைதூக்கினாள் இளங்கோப்பிச்சி.

"என்ன இது, சிறுபிள்ளைத்தனம்! ஏன் இப்படி அழுது கொண்டிருக்கிறாய்?" என்று அன்பும் பரிவும் குழையக் கேட்டுக்கொண்டே அறைக்குள் பிரவேசித்த கோவிந்த வர்மன், அவளை ஆதரவுடன் மெல்லத் தூக்கி உட்கார வைத்துத் தானும் அவள் அருகில் அமர்ந்தான்.

பரபரப்புடன் கண்களைத் துடைத்துக் கொண்டு அவனை மிரள மிரளப் பார்த்து விழித்த இளங்கோப்பிச்சி, "வந்து விட்டீர்களா, இளவரசே! உங்களுக்கு ஒன்றும் ஆபத்து நேரவில்லையே?" என்று நடுங்கித் துவண்ட குரலில் கேட்டாள்.

கோவிந்தவர்மன் அவளையே ஒரு விநாடி உற்றுப் பார்த்துவிட்டுக் கலகலவெனச் சிரித்தான். "எனக்கு ஆபத்து நேர்ந்திருந்தால் இங்கே எப்படி நான் வந்திருக்க முடியும்?"

அவள் தன் இரு கரங்களாலும் நெஞ்சைப் போர்த்திக் கொண்டு நிம்மதியாகப் பெருமூச்சு விட்டாள். மறுகணமே அவளது மதிவதனம் வெளிறிச் சிறுத்தது. கண்களில்

அருவியென நீர் வழிந்தது. "இல்லை, இல்லை! நான் செய்த அந்தத் தவற்றினால் தங்களுக்கு இன்றில்லாவிட்டாலும் என்றாலும் ஒரு நாள் ஏதேனும் ஒரு பேராபத்து ஏற்பட்டே தீரும்!" என்று பொருமினாள் அவள்.

"என்றோ ஒரு நாள் ஏற்படப்போகும் ஆபத்துக்கு இன்று ஏன் இப்படி அழுது புலம்புகிறாய்? அந்த ஆபத்து நேர்ந்தபின் அழுவதற்காகவேனும் இப்போதே கொஞ்சம் கண்ணீரைச் சேமித்து வைத்துக் கொள்வது நல்லதில்லையா?" என்று குறும்பாகக் கூறிச் சிரித்த கோவிந்தவர்மன், அவளது பளிங்குக் கன்னத்தில் வழிந்தோடிய நீரை இதமாகத் துடைத்துவிட்டுக் கொண்டே தொடர்ந்து சொன்னான்; "இங்கே பார், இளங்கோப்பிச்சி! அந்தச் சம்பவங்களுக்காக நீ இந்த அளவு அஞ்ச வேண்டிய அவசியம் இல்லை. அன்று நீ நடந்து கொண்ட முறையிலும் எவ்விதத் தவறும் இல்லை. அதனால் நமக்கு எத்தகைய இன்னலும் ஏற்படப் போவதுமில்லை. இன்னும் சொல்லப் போனால், அந்த இக்கட்டான சமயத்திலே வியக்கத்தக்க விதமாக உன் அறிவைப் பயன்படுத்தி நம் இருவருக்கும் நேரவிருந்த ஆபத்தைத் தகர்த்தெறிந்து விட்டாய். இனிமேல் எது வந்தாலும் சமாளித்துக் கொள்ள என்னால் இயலும்."

கதிரவனின் ஒளிபட்டு நிமிரும் கமல மொட்டுப்போல் மெதுவாகத் தலைநிமிர்ந்த இளங்கோப்பிச்சி அவனைப் பட்டும் படாததுமாகப் பார்த்தவாறு, "இதெல்லாம் இளவரசரின் கூற்றுப்படி சரியாக இருக்கலாம்; ஆனால், பல்லவ மன்னரின் அன்னையாரைச் சிறையிலிருந்து மீட்பதற்காகத் தாங்கள் அந்த வேங்கி இளவரசியின் பட்டோலையைக் கொண்டு செய்யவிருந்த முயற்சி பாழாகி விட்டதே! அதை எப்படி நான் சரியென்று ஏற்பேன்?" என்று நெஞ்சு உயர்ந்த குரலில் முணுமுணுத்தாள்.

கோவிந்தவர்மன் அவளுடைய பூங்கரத்தை மெல்லப்பற்றித் தன் அருகில் இழுத்துக் கொண்டு, "ஒரு

முயற்சி தோல்வியானால் இன்னொரு முயற்சியைத் தொடர்ந்து கொண்டால் போகிறது! இதற்கு ஏன் இத்தனை கலக்கம்?" என்றான் அலட்சியமாக.

ஏதோ சிந்தனையில் மௌனமாயிருந்த இளங்கோப் பிச்சி மெல்லத் திரும்பி, "இளவரசே! தங்களைத் தேடிக் கொண்டு சந்திரலேகைச் சிற்றரசர் இங்கு வந்து போனாரே, அவரைப் பார்த்தீங்களா?" என்று கேட்டாள்.

"பார்த்துவிட்டுத்தான் நேரே இங்கு வந்திருக்கிறேன். இன்று நாங்கள் பழையாறைக்குப் புறப்படப் போகிறோம்."

"என் தந்தையாரைப் பார்க்கத்தானே?"

"ஆமாம்" என்று சொன்ன கோவிந்தவர்மன் ஒருகணம் தயங்கிவிட்டு, "உன்னையும் இங்கிருந்து அழைத்துப் போய் விடலாமா என்று யோசிக்கிறேன்..." என்றான் இழுத்தாற் போல.

"என்னை ஏன் அழைத்துப் போக நினைக்கிறீர்கள்?"

"இனிமேலும் இந்த இல்லத்திலே நீ தங்கியிருந்தால் வேங்கி இளவரசியின் மூலம் உனக்கு ஏதேனும் சங்கடம் நேரலாம் என்று தோன்றுகிறது."

"அப்படி ஒன்றும் நேராதென்று சற்றுமுன் நீங்கள் தானே சொன்னீர்கள்."

"எதற்கும் நாம் முன்னெச்சரிக்கையோடு இருப்பது நல்லதல்லவா?"

"நல்லதுதான் இளவரசே! ஆனால், நான் பழை யாறைக்கு வரச் சம்மதிக்க வேண்டுமே!"

"ஏன் இப்படிச் சொல்கிறாய், இளங்கோப்பிச்சி?"

"பழையாறையைத் தவிர வேறு எங்கு அழைத்தாலும் நான் வரத் தயார்."

"எனக்கு ஒன்றும் புரியவில்லையே!"

"உங்களுக்கு ஒன்றுமே புரியாது" என்று கொஞ்சலும் கோபமுமாகக் கூறி அழகாக முகத்தைச் சுளித்த

இளங்கோப்பிச்சி தன் பார்வையைக் கீழே தாழ்த்திக் கொண்டு, "ஆயிரம் கட்டுக்காவலுடன் கூடிய எங்கள் அரண்மனையில் கொண்டு போய் என்னை அடைத்துவிடப் பார்க்கிறீர்களா? அங்கு போய்விட்டால் அப்புறம் தங்களைச் சந்திக்க என்னால் இயலாதே! அப்படியொரு நிலையில் அங்கே நடைபிணமாய் வாழ்வதைவிட, தங்களைச் சந்திக்கவும் தங்களோடு சுதந்தரமாகப் பேசவும் வாய்ப்புள்ள இந்த எளிய இல்லத்தில், எத்தகைய துன்ப துயர ஆபத்துக்களையும் சகித்துக் கொண்டு எத்தனை காலம் வேண்டுமானாலும் தங்கியிருந்து விடுவேன்!" என்றாள் உறுதி பாய்ந்த குரலில்.

அவளுடைய ஆழ்ந்த அன்பில் தோய்ந்த இப்பேச்சைக் கேட்டு உள்ளம் கிளர்ந்து உணர்ச்சி வயப்பட்ட கோவிந்த வர்மன் அவளை அப்படியே தன் கரச் சிறைக்குள் வளைத்து மார்பில் சாய்த்துக் கொண்டான்.

தேனாகத் துளித்த விநாடிகள் சில தீர்ந்து மறைந்தன.

வெளியே நின்றிருந்த இளங்காரிக்குடையான் நேரமாகி விட்டதை அறிவிக்க ஒரு விசித்திரக் குரல் எழுப்பியதைக் கேட்டு அவசரமாக எழுந்தான் கோவிந்தவர்மன்.

மலரின் இதழ் அடுக்கிலிருந்து வெளிப்படும் பொன் வண்டுபோல் மெல்ல எழுந்து நின்ற இளங்கோப்பிச்சி அவனை ஏக்கத்துடன் ஏறிட்டு நோக்கினாள். பிறகு ஏதோ நினைத்துக் கொண்டவள் போலத் தயக்கத்துடன் தலையைச் சாய்த்து, "இளவரசே! உங்களிடம் ஒரு விஷயம் கேட்க வேண்டுமென்றிருந்தேன். அதாவது, என்னைக்கொண்டு தங்கள் பெரிய அன்னையாரைச் சிறையிலிருந்து மீட்க ஏதோ ஒரு திட்டம் போட்டிருந்ததாக அன்று சொன்னீர்களே; அந்தத் திட்டத்தைச் சிறிதே என்னிடம் விளக்கிச் சொல்லிவிட்டுப் போகிறீர்களா?" என்று கேட்டாள்.

கோவிந்தவர்மன் அவளை வியப்புடன் உற்றுப் பார்த்தான். "அந்தத் திட்டத்தின் மூலப்பொருள்

பறிபோனபின் அதைச் சொல்லிப் பயன் என்ன? அது அன்றோடு தகர்ந்து போயிற்று. இனி புதிய சந்தர்ப்பங்களை ஏற்படுத்திப் புதிதாக ஒரு திட்டம் கண்டுபிடித்தாக வேண்டும்" என்று கூறிக் கலகலவெனச் சிரித்தான் அவன். "சரி, நான் போய் வரட்டுமா இளங்கோப்பிச்சி?" என்று கேட்டவாறு அறையை விட்டு வெளியே வந்து சுற்றுமுற்றும் பார்த்துக் கொண்டே, "அநந்தமதி எங்கே? அந்த அம்மையாரை நான் இன்னும் பார்க்கவில்லையே?" என்றான்.

"சற்றுமுன் இங்கு வந்துபோன சந்திரலேகைச் சிற்றரசர், அவளை ஏதோ முக்கியமான காரியமாகப் பல்லவபுரம் இலவந்திகைப்பள்ளிக்கு அனுப்பி வைத்திருக்கிறார் இளவரசே!'' என்று உள்ளார்ந்த பீதியுடன் கூறினாள் இளங்கோப்பிச்சி.

"அப்படியா? என்னிடம் அவர் இந்த விவரத்தைத் தெரிவிக்கவே இல்லையே! என்று குழப்பத்துடன் முணுமுணுத்த கோவிந்தவர்மன் அங்கிருந்து புறப்பட்டுச் சென்றான். இளங்காரியும் அவனை நிழல்போல் பின் தொடர்ந்தான்.

அவர்கள் போன சற்றுநேரம் கழித்து, பல்லவபுரம் சாலை வழியேயிருந்து வேர்க்க விறுவிறுக்க வந்து சேர்ந்த சோழிய ஆபத்துதவி வீரனான சம்புவராயன் இளங்கோப் பிச்சியைப் பார்த்து, "இளவரசி! தங்கள் தந்தையார் தங்களை உடனே பழையாறைக்கு அழைத்து வந்து சேர்க்கும்படி எனக்கு அவசரக் கட்டளையிட்டு அனுப்பியிருக்கிறார்" என்று பணிவுடன் கூறினான்.

# 25

# மனத்தில் ஒரு மாயம்

இளைய உஷையாள் எழிலரங்கு அமைக்க எழுந்த போதே ஆந்திர இளவரசி உத்தமசீலியும் அன்று எழுந்து விட்டாள்.

இரவெல்லாம் ஏதேதோ நினைவுகள், கனவுகள், விழிப்பு போன்ற உறக்கத்தில் நினைவுகள் படர்வதும், உறக்கம் போன்ற விழிப்பில் கனவுகள் தொடர்வதுமான ஒரு விசித்திர அநுபவம். அன்றிரவு அவள் உறங்கினாளா. விழித்துக் கிடந்தே நேரத்தைப் போக்கினாளா என்பது அவளுக்கே புரியாத புதிராக இருந்தது. அந்தப் புதிரிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளவே, விடிந்தும் விடியாத கன்னிக் காலைப் போதில் மஞ்சம் நீங்கி எழுந்தாள் அவள்,

அவளுக்கு முன்னே அந்த இலவந்திகைப்பள்ளியும் எழுந்து விட்டிருந்தது. பணிப்பெண்களும் பணியாட்களும் தத்தமது காரியங்களைச் சுறுசுறுப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தனர். பள்ளி மாளிகையைச் சார்ந்த மிகப்பெரிய நந்தவனத்தைச் சுற்றி கடந்த நான்கு நாட்களாக இருந்ததை விட இன்று அதிக எண்ணிக்கையுள்ள காவல் வீரர்கள் ஈட்டியும் கத்தியும் ஏந்தியவர்களாய் வளைய வந்துகொண் டிருந்தனர்.

இந்தக் காட்சிகளைப் பார்த்து உள்ளூற வியப்படைந் தாள் உத்தமசீலி. ‘நான்தான் எனக்கே புரியாத ஏதோ ஒரு மனக்குறளியால் உலுப்பப்பட்டு எழுந்துவிட்டேன் என்றால், இவர்கள் ஏன் இப்படித் துறுதுறுப்பும் பரபரப்புமாக இயங்கிக்

கொண்டிருக்கிறார்கள்? எதை உத்தேசித்து, அல்லது எவரை முன்னிட்டு இத்தனை தீவிரம் காட்டுகிறார்கள்?' -தனக்குள் அவள் மெல்ல நகைத்துக் கொண்டாள். 'அதெல்லாம் ஒன்றுமில்லை. அவர்கள் எப்போதும் போலவே தங்கள் அலுவல்களில் ஈடுபட்டிருக்கலாம்; என் மனத்தின் சலனத்தை அவர்கள் மீது படரவிட்டுப் பார்ப்பதால் அவ்வாறு தோற்றமளிக்கலாம்.'

உற்சாகமடைந்த அவள் நந்தவனத்தின் நடுவேயிருந்த பூம்பொய்கைக்குப் பறந்தோடினாள். சீதளச் சுகம் செறிந்த அந்தச் சிங்காரப் பொய்கையிலே அளைந்து உளைந்து நீந்தி நீராடி எழுந்து, செய்குன்றத்தின் மேலேறி நின்று காலை இளங்கதிரவனின் பொன்னொளிக் கதகதப்பில் தன் கார்குழலை உலர்த்திக் கொண்டு இறங்கி, நறுமண மண்டலமாய் விசாலித்துக் கிடந்த நந்தவனத்தினுள் புகுந்து நான்முகனின் வண்ணக் கற்பனைக் களஞ்சியம் போல் பூத்துக் குலுங்கிய புத்தம் புது மலர்களைக் கொய்து பூக்குடலையில் நிறைத்துக்கொண்டு மாளிகைக்கு விரைந்து திரும்பினாள்.

இத்தனை நாட்களாக எளிய ஆடையணிமணிகளே புனைந்து வந்த அவள், அன்று ஆடம்பர அலங்காரங்கள் செய்து கொள்வதில் நாட்டம் கொண்டாள். பூட்டிக் கிடந்த ஒரு தந்தப் பேழை திறக்கப்பட்டது. அதிலிருந்து விலையுயர்ந்த பட்டாடைகளும் விலை மதிப்பற்ற ஆபரணங்களும் வெளியே வந்தன. நறுமணப் புகையேற்றிய சுரிகுழலை வாரிப் பின்னிக் கலாப வடிவிலே கொண்டையிட்டு முடிந்து, வண்ண மலர்ச்சூடி, கண்ணுக்கு மையிட்டு, மார்பிலே சந்தனம் பூசி, கைத்தலங்களிலும் கால் பாதங்களிலும் செம்பஞ்சுக் குழம்பால் சித்திரம் தீட்டி, இடையிலே சிவப்புப் பட்டுச் சிற்றாடையும், மார்பகத்திலே மரகத வண்ணப் பட்டுக் கச்சையும், அதன்மேல் மெல்லிய நீலநிற மல்மல் துகிலும் புனைந்துகொண்டு முழு உருவையும் பிரதிபலித்துக் காட்டக்கூடிய நீண்டதொரு பளிங்குச் சட்டத்தின் எதிரே வந்து அமர்ந்த அவள், அற்புத வேலைப்பாடுகளுடன்

விளங்கிய அணிகலன்களையெல்லாம் ஒவ்வொன்றாக எடுத்துத் தன் பூமேனியில் பூட்டத் தொடங்கினாள்.

பூரப்பானை, புல்லகம், பொன்னரி மாலை, தென்பல்லி, வடபல்லி, மகரப் பகுவரங்க முஞ்சகம் முதலான அணிகளைச் சீவி முடிந்த சிரசிலே அணிந்து,—வீரச்சங்கிலி, நேர்ச்சங்கிலி, நுண்ஞாண் சவடி, சரப்பள்ளி, முத்தாரம், கண்டநாண், புல்லிகைக் கண்டநாண், பாசமாலை, மாணிக்கச்சரம், வாகுவலயம், வயிரப் பதக்கம், ஏகாவல்லி, திரிசரம், திரள்மணி வடம் முதலான மாலையணிகளைக் கழுத்திலே புனைந்து, -கொக்கு வாய் எனப்படும் நவரத்தினப் பிற்றாலியைப் பிடரிக்குப் பின்னால் தொங்கவிட்டு,-நீலக் குதம்பை, மகரக்குழை, தாளுருவி, வல்லிகை, மரகதத்தோடு, வடுகவாளி, திருக்களாவம், பொற்கொப்பு முதலான ஓடாணி (சுரை) யணிகளைச் செவிகளில் கோத்து,—மேகலைக் காஞ்சி, விரிசிகை, கலாபம், பருமம், ஸ்ரீசந்தம் முதலான சுற்றணிகளை இடையிலே கட்டி, சூடகம், பொன்வளை, முத்துவளை, மாணிக்கவளை, சங்கவளை, பவழக்கடகம், திருக்கைக்காறை, திருப்பட்டிகை முதலான வளையணிகளைக் கைகளில் பூட்டி, -இரத்தின அடுக்காழி, அரதன மோதிரம், வாளைப்பாகுவாய் மோதிரம் முதலானவற்றைக் கைவிரல்களிலே இட்டு, -பொற்பாதசாலம், முத்துச்சிலம்பு, முறுக்குக்காப்பு, தண்டைக்கிண்கிணி, குறங்குசெறி முதலான காப்பணிகளைக் கால்களில் பூட்டி, கான் மோதிரம், மகரவாய் மோதிரம், பொற்காலாழி, பீலி முதலான மோதிர அணிகளைக் கால் விரல்களில் அணிந்து இவற்றுக்கெல்லாம் மேலாகப் புன்னகையென்னும் தெய்வ ஆபரணமொன்றை முகத்திலே பூசிக்கொண்டு நிமிர்ந்த அவள் பளிங்குச் சட்டத்தில் தன்னுடைய பார்வையை ஓட்டினாள்.

யார் இந்த மோகினி? ஆந்திர இளவரசி உத்தமசீலியா இவள்? அவளுக்கே அதில் சந்தேகம் வந்துவிட்டது!

அவள் கலகலவெனச் சிரித்தாள். சிரித்துச் சிரித்துத் தன் சிங்காரிப்பை ரசித்த அவள் சட்டென்று சிரிப்பை நிறுத்திவிட்டுப் பளிங்குச் சட்டதை உற்று நோக்கினாள். அவளுடைய அழகிய முகம் வெளிறியது. அதிருப்தியுடன் தலையை ஆட்டிக்கொண்டு எதைப் பற்றியோ ஆழ்ந்து சிந்தித்தாள். மறுகணம், ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளாய் இந்நேரம் வரை எண்ணியெண்ணித் தேர்ந்து எடுத்துப் பூட்டிய எல்லா அணிமணிகளையும் மளமளவெனக் கழற்றிப் பேழைக்குள் போட்டுவிட்டு வெற்றுடம்பாய் எழுந்து நின்று பட்டாடைகளைக் களைந்து எளிய பஞ்சாடைகளை உடுத்துக்கொண்டு மீண்டும் அந்தப் பளிங்குச் சட்டத்தில் தன் பிம்பத்தைப் பார்வையிட்டாள்.

யார் அந்தத் தேவதை? சுரமண்டலத்திலிருந்து இறங்கி நரமண்டலம் காண வந்த தெய்வ நங்கையா அவள்? ஆகா, அவள்தான் இப்போது என்ன அழகாகத் தோற்றமளிக்கிறாள்!

சாந்தம் தவழப் புன்முறுவல் பூத்த உத்தமசீலி சற்றுத் தள்ளிப்போய் அமர்ந்துகொண்டு அந்தப் பள்ளி மாளிகையின் சூழ்நிலையைக் கவனித்தாள். அது முன்னைவிட அதிகப் பரபரப்புடன் காணப்பட்டது. முன்போல், அதன் காரணத்தைத் தன் மனப்போக்கின் மீது சாய்த்துக்கொண்டு அமைதியுற இப்போது அவளால் இயலவில்லை. எனவே, மீண்டும் அதுபற்றிய சிந்தனையில் மூழ்கினாள்:

'இங்குள்ள ஏவலாட்களும் காவலாட்களும் எனக்காகவே தான் இத்தனை கரிசனக் கண்காணிப்புடன் காரியம் ஆற்றுகிறார்களா? அல்லது வேறு எவரை முன்னிட்டேனும் இப்படிப் பம்பரமாய்ச் சுழன்று கொண்டிருக்கிறார்களா? கடந்த நான்கு நாட்களாக இல்லாத திடீர்த் தேவை இன்று என்ன அப்படி எனக்கு அவசியமாகி விட்டது?...இல்லை; இந்தத் தீவிர நடவடிக்கைகளெல்லாம் எனக்காக என்று தோன்றவில்லை. வேறு யாருக்காகவோதான் நடைபெறுகின்றன. அப்படியானால், இங்கு வரப்போவது

யார்? ஓ... அந்தப் பெருவளநல்லூர் ஓவியன் இன்று வரப்போவதையொட்டி அவனுக்காகத்தான் இத்தனை ஏற்பாடுகளும் செய்யப்படுகின்றனவா? இது என்ன வேடிக்கை! அவனைப் பற்றி இவர்களுக்கென்ன தெரியும்? அவன் இங்கு வரப்போகும் சேதியையே இவர்கள் அறிந்திருக்க முடியாதே! அவனுடைய வருகையின் முக்கியத்துவத்தையும் இவர்களால் தெரிந்துகொண்டிருக்க இயலாதே! அப்படித் தெரிந்திருந்தாலும் அந்த எளிய கலைஞனை வரவேற்க இத்தனை பரபரப்பா? வில்வேலியே அவன் வருகையை உத்தேசித்து இங்குள்ள ஏவலர்க்கும் காவலர்க்கும் விசேஷ உத்தரவு ஏதேனும் பிறப்பித்திருப் பாரோ? அப்படியொரு கட்டளைக்கு அவசியமே இல்லையே! ஏனென்றால், அவன் இங்கு வந்து போகும் விஷயம் இரகசியமாகவே இருக்க வேண்டுமென்பது எங்கள் திட்டமாயிற்றே? ஒருகால், சிரவணபெள்குளத்துச் சமண சங்கத் தலைவர் அகளங்க அடிகளை வரவேற்பதற்காகவா? இங்கு வந்து சேர இன்னும் சில நாட்களாகுமே! அப்படியே இன்று வந்தாலும் அந்தத் தூய துறவியை வரவேற்பதில் எவ்விதமான அநாவசிய ஆடம்பரங்களும் இருக்கக்கூடாது என்ற விதிமுறை தளபதி வில்வேலிக்குத் தெரிந்திருக்குமே!'

இவ்வாறு சிந்தனையை ஓட்டிக்கொண்டிருந்த உத்தம சீலி திடுக்குற்றவள்போல் நிமிர்ந்தாள். 'உறையூரிலிருந்து என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்த வல்லபரே இன்று இங்கு வரப்போகிறாரோ? பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனின் உருவத்தை அந்த ஓவியக் கலைஞன் வரையும்போது அதை அவர் நேரிலிருந்து கவனிக்க வேண்டுமென்பதற்காகவும், பிறகு அவ்வோவியத்தைக்கொண்டு எடுக்க வேண்டிய நடவடிக்கை கள் பற்றி அவரிடம் ஆலோசிப்பதற்காகவும் வில்வேலியே அவரை வரும்படி இரகசியமாக அழைத்திருப்பாரோ? அதனால்தான் இந்த இலவந்திகைப்பள்ளி இத்தனை தீவிரமடைந்து காணப்படுகிறதோ?'–குழம்பிக் கிடந்த அவள் மனம் மேலும் குழப்பமடைந்தது. தான் ஏதோ ஒரு

பெருந்தவறு செய்துவிட்டாற்போல் திகிலுடன் அங்கு மிங்குமாகப் பார்த்து விழித்தாள்.

‘அந்த ஓவியக்கலைஞன் தன் உயிருக்கு அஞ்சிச் சேதியக் கலைஞரின் இல்லத்திலே புகலடைந்திருக்கிறான். அவரும் அவனுக்கு அடைக்கல தானம் அளித்து வைத்திருக்கிறார். அடைக்கலம் கோரி வந்திருப்பவரைப்பற்றிய விவரங்களை மட்டுமின்றி, அடைக்கலம் அளித்த தகவலையும் வெளியிடக் கூடாதென்பது சமண சமயம் வகுத்திருக்கும் விதிமுறை. அந்த விதியை மீறிச் சேதியக் கலைஞர் அவ்வாலிபனைப்பற்றி என்னிடம் சொன்னதே தவறு. நான் அவரைத் துருவித் துருவிக் கேட்டதாலும், என்மீது கொண்ட ஆழ்ந்த நம்பிக்கை யாலுமே அவர் அவ்விவரத்தைத் தெரிவித்திருப்பார். ஆனால் நான் அதைக் காப்பாற்றி வைக்காமல் மூன்றாம் மனிதரான வில்வேலியிடம் வெளியிட்டுவிட்டேனே! அவன் அடைக்கலம் புகுந்த ஒரு கலைஞன் என்ற இரகசியத்தை வெளியிடவில்லையென்றாலும் அவனை அங்கிருந்து வெளியே வரும்படியான சங்கடத்துக்கு உள்ளாக்கியிருப்பதன் மூலம் நான் அந்த அடைக்கல தானத்தின் விதியை மீறியவளாகிறேனே! தம்மிடமுள்ள ஓவியக் கலைஞனைப் பல்லவ புரத்துக்கு அனுப்பிவைக்கும்படி தளபதி வில்வேலி எழுதியிருக்கும் ஓலையைப் படித்துப் பரவாதிமல்லர் என்ன நினைப்பார்? அந்தத் தகவலை நான் சொல்லித்தான் அவ்வோலை எழுதப் பெற்றிருக்கிறது என்பதை அவர் உடனே புரிந்துகொள்வார். சமண சமய ஒழுக்க விதிகளின்படி நடக்கும் ஓர் உத்தமப்பெண் என்று அவர் என்னைப்பற்றிக் கொண்டிருந்த நல்ல எண்ணத்தையும் அந்தக் கணமே மாற்றிக்கொண்டிருப்பார். இதெல்லாம் ஒரு புறமிருந்தாலும் அந்த ஓவியக் கலைஞனைப் பற்றிய உண்மைகளை என்னிடமே சொல்ல மறுத்த அவர் வில்வேலியின் வேண்டு கோளுக்கு இணங்கி அவனைப் பல்லவ புரத்துக்கு அனுப்பி

வைக்கச் சம்மதிப்பாரா? அப்படி அனுப்ப மறுத்தால் அவரை வில்வேலி பகைத்துக் கொள்வதுமின்றித் தமது அதிகார பலத்தை அவரிடமே காட்ட ஆரம்பித்துவிடுவாரோ? என்னை அறியாமலே அந்த மாபெரும் கலைஞருக்கு எவ்வளவு பெரிய சங்கடங்களை ஏற்படுத்திவிட்டேன்!'

நெஞ்சம் துடிதுடித்த உத்தமசீலியின் எண்ண அலைகள் மேலும் ஆரவாரித்தன: 'என்னை நம்பிப் பரவாதிமல்லர் அந்த ஓவியனை அனுப்பி வைத்தாலும், அவன் எங்கள் விருப்பப் படி பல்லவ மன்னனின் உருவத்தை வரைந்து கொடுக்க ஒப்புக்கொள்வானா? அப்படியொரு காரியத்தைச் செய்ய அவன் மறுத்துவிட்டால்?—அதிலும் விக்கிரமாதித்தவல்லபர் இங்கு வந்து, அவர் முன்னே அவ்வாறு கூறிவிட்டால்—நிலைமை இன்னும் மோசமாகிவிடுமே! இதையெல்லாம் முன்கூட்டியே சிந்திக்காமல் என் உள்ளத்தில் ஏற்பட்டிருக்கும் ஏதோ ஒரு விபரீத ஆசையின் எழுச்சியிலே—அந்த ஓவியனைச் சந்திக்கவேண்டுமென்ற ஒரு விசித்திர ஏக்கத்திலே — அவனை இங்கு வரச் செய்வதற்காக வில்வேலியிடம் அப்படியொரு யோசனையைத் தெரிவித்தது எவ்வளவு பெரிய தவறாகிவிட்டது! மனம் கவர்ந்த ஜீவ மலரைப் பறிக்கும் ஆவலில் அதன் கொடியே அறுந்து விழும்படி செய்து விட்ட விதமாக அல்லவா நான் நடந்துகொண்டு விட்டேன்?...அந்த ஓவியன் இங்கு வந்து திரும்பிச் செல்ல முடியாத பேராபத்தில் சிக்கிக் கொள்வதைவிட வராமலிருப்பதே நல்லதென்று இப்போது என் உள்ளம் ஏங்கித் தவிக்கிறதே!... இந்த இருதலைக்கொள்ளி நிலைமையை நான் எப்படிச் சமாளிப்பேன்?'

நெட்டுயிர்த்துச் சோர்ந்த அவள் நெஞ்சின் வேதனையைத் தாளமாட்டால் கண்களை இறுகமூடிக்கொண்டாள். எவ்வளவு நேரம் அப்படி இருந்தாளோ, அது அவளுக்கே தெரியாது.

பனித்த இமையோரங்களில் ஏதோ ஒரு குறுகுறுப்பு உணர்ச்சி தோன்றவே மெல்லக் கண் விழித்த உத்தமசீலி திடுக்குற்று எழுந்தாள்.

இது என்ன விந்தை! இந்தப் பளிங்குச் சட்டத்தில் படிந்திருக்கும் அவளது எழில் பிம்பத்துக்கு அருகே இன்னோர் அழகிய கம்பீர உருவம் தெரிகிறதே! அது... அது... அந்த ஓவியக் கலைஞனின் உருவம் அல்லவா?-

அவள் பரபரப்புடன் கண்களைத் துடைத்துக் கொண்டு பின்னால் திரும்பிப் பார்த்தாள்.

அங்கே, அவள் இருந்த அறையை அடுத்திருந்த சித்திரக் கூடத்தை நோக்கி அந்த ஓவியக் கலைஞன்—பரமேசுவரவர்மன்—முன்னே வர, அவனுக்குப் பின்னால் சளுக்கியத் தளபதி வில்வேலியும் வந்துகொண்டிருந்தார்.

# 26

# அத்தியந்த காமன்

இளவரசி உத்தமசீலியை நோக்கி வெற்றிப் புன்னகை பூத்தவாறு ஓர் இருக்கையில் செருக்குடன் அமந்தார் தளபதி வில்வேலி.

அளவு மீறிய மகிழ்ச்சியும் அளவு கடந்த பயமும் ஒரு சேரத் தோன்றிப் புரள, வேர்த்து விறுவிறுத்து வாசல் நிலையோரம் வந்து நின்ற உத்தமசீலி மிரட்சியுடன் அங்குமிங்குமாகப் பார்த்தாள்.

ஆனால், அந்த வாலிபனோ அவர்களில் யாரையுமே பார்க்கவில்லை; பல காலம் இருந்து பழகிய ஓர் இடத்துக்கு வந்திருப்பவன் போன்ற பாவனையில் சர்வ அலட்சியமாகக் கைகளைப் பின்னால் கோர்த்துக் கட்டிக்கொண்டு, விசாலமான அவ்வறையின் சுவரில் பாங்குறத் தீட்டப் பெற்றிருந்த பழையனூர் நீலிச் சரித சித்திரத்தைப் பார்த்து ரசிப்பதில் கவனமாயிருந்தான்.

"நிற்கிறீர்களே இளவரசி, இப்படி வந்து அமருங்கள்!" என்று பரிவுடன் ஓர் ஆசனத்தைக் காட்டினார் வில்வேலி.

அவர் சொன்னதைச் செவிமடுக்காதவள்போல் தலை குனிந்து நின்று கொண்டிருந்தாள் வேங்கி இளவரசி.

வில்வேலியின் முகம் வறண்டது. சற்றுநேரம் மௌனமாக இருந்த அவர் மெல்லத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, "இளவரசி! இந்த ஓவியனைத்தானே நீங்கள் வரவழைக்கும்படி யோசனை சொன்னீர்கள்?" என்று கன்களை இடுக்கிக்கொண்டு கேட்டார்.

ஒல்கி ஒசிந்து ஓரடி முன் வந்த உத்தமசீலி தன் காவியக் கண்களை மலர்த்தி அவ்வாலிபனை இதமாக ஏறிட்டு நோக்கினாள். அவனது திண்மையான கழுத்தில் தவழ்ந்து கொண்டிருந்த அந்த உருத்திராக்கம் போன்ற சவுக்கைக் காய் மாலையை ஒரு கணம் உற்று நோக்கிய அவள் ஒண்முறுவல் பூத்தவாறு, "ஆம், ஐயா!" என்றாள் மென்மையான பூங்குரலில்.

தொண்டையை மீண்டும் செருமிவிட்டுக்கொண்டு அலட்சிய மிடுக்குடன் நிமிர்ந்த வில்வேலி, "ஏ, வாலிபனே! உன் பெயர் என்ன?" என்று கேட்டார்.

அவன் அவரது கேள்விக்குப் பதில் ஏதும் கூறாமல் அந்தச் சுவர் ஓவியங்களையே பார்த்துக்கொண்டிருந்தான்.

வில்வேலியின் முகம் சுண்டிச் சுருங்கியது. சற்றே கடுகடுத்த குரலில், "ஏ, சித்திரக்காரா! நீ சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் மாணவன்தானே?" என்று வினவினார்.

இப்போதும் அந்த வாலிபன் தன் போக்கிலேயே பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தான்.

உத்தமசீலியின் மனம் வேகமாக அடித்துக்கொண்டது.

"மரியாதை தெரியாத பாமரனே! உன்னை நாங்கள் எதற்காக இங்கு அழைத்திருக்கிறோம் என்பதையாவது நீ அறிவாயா?" என்று உரத்த குரலில் அதட்டிக் கேட்டார் தளபதி வில்வேலி.

அமைதியாகத் திரும்பிய வாலிபன் அவரை ஏறிட்டு நோக்கி, "முதலில் நீ மரியாதையைத் தெரிந்துகொண்டு நான் அமருவதற்கு ஆசனமொன்றைக் கொண்டு வந்து போடச் செய்யும்!" என்று கூறினான்.

வில்வேலியின் கண்கள் சிவந்தன. அவனை அவர் விழித்துப் பார்த்தார். பரபரப்படைந்த உத்தமசீலி கையொலி எழுப்பி ஒரு பணியாளை அழைத்தாள். அந்த ஓவியன் உட்கார ஆசனமொன்றை எடுத்து வந்து போடுமாறு தன்

கண்ணாலேயே அவனுக்குக் கட்டளை பிறப்பித்தாள். மறுகணமே அங்கு ஓர் அழகிய ஆசனம் வந்து சேர்ந்தது.

"நன்றி" என்று சொன்னவாறு ஆசனத்தில் போய் அமர்ந்த வாலிபன் சட்டென்று நிமிர்ந்து, "என் பெயர் ஸ்ரீநிதி அத்தியந்த காமன்! ஒரு காலத்தில் குருவாக இருந்த நான் இப்போது சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் மாணவனாக இருக்கிறேன். இங்கு என்னை அழைத்துள்ள காரணத்தை அறியேன்" என்றான் கம்பீரக் குரலில்.

வில்வேலி அவனை ஒரு கணம் கூர்ந்து நோக்கிவிட்டு உத்தமசீலியின் பக்கம் திரும்பிப் புன்னகை பூத்தார். ஆனால் அவளோ உள்ளம் துடிதுடிக்க நின்ற அவ்விருவரையும் மாறிமாறிப் பார்த்தாள்.

"ஸ்ரீநிதி அத்தியந்த காமன்!... அப்படியென்றால் என்ன பொருள்?" என்று அலட்சியக் குறும்புடன் வினவினார் தளபதி வில்வேலி.

"பரம ஈசுவரனைத் தலைமேல் தாங்கி அவனையே எந்நேரமும் தியானித்துக் கொண்டிருக்கும் ஓர் எளிய பக்தன் என்று அதற்குப் பொருள்!"

இதைக் கேட்டுச் சளுக்கியத் தளபதி குதிரை கனைப்பது போல் குபீரெனச் சிரித்தார். "பரம ஈசுவரன்—பரமேசுவரன்— அவனைத்தான் நீ எப்போதும் தியானித்துக் கொண்டிருப் பதோ?"

"ஆமாம்."

"இப்படிப்பட்ட ஓர் ஆளைத்தான் நாங்கள் தேடிக் கொண்டிருந்தோம்; மெத்த மகிழ்ச்சி" என்று விஷமப் புன்னகை புரிந்த வில்வேலி, "அந்தப் பரமேசுவரனை நீ எப்போதாவது பார்த்ததுண்டா?" என்றார் கசந்த குரலில்.

"அகக் கண்ணால் அவனைப் பார்த்திருக்கிறேன்; புறக் கண்ணால் தரிசிக்கப் புண்ணியம் பல செய்ய வேண்டும்.

'ஹோ' வென்று நகைத்த வில்வேலி தம் புஜத்தை மூர்க்கமாகக் குலுக்கிகொண்டு, "நான் கேட்பது சிவப் பரமேசுவரனை அல்ல; எங்கள் சளுக்கியச் சக்கரவர்த்தி விக்கிரமாதித்தரிடம் பல்லவப் பேரரசைப் பறிகொடுத்து விட்டுத் தலைமறைவாகத் திரிந்துகொண்டிருக்கிறானே, அந்தப் பரமேசுவரனை!" என்று குத்தலாகக் கேட்டார்.

ஓவியக் கலைஞனாக அங்கு உட்கார்ந்திருந்த பரமேசுவரவர்மன் தன்னையே ஒரு கணம் ஏற இறங்கப் பார்த்துவிட்டு இளஞ்சிரிப்போடு நிமிர்ந்தது, "பார்த்திருக் கிறேன்!" என்றான் அமைதியாக.

உற்சாகமடைந்த வில்வேலி உத்தமசீலியைத் திரும்பிப் பார்த்தார். அவளோ பனிப்பதுமையெனச் சில்லிவிட்டு நடுங்கிக் கொண்டு நின்றாள்.

"அவனைப் பார்த்திருக்கிறாயா? அவனுடன் பேசியும் இருக்கிறாயா?" என்று கழுத்தை நீட்டி வெகு அக்கறையாக விசாரித்தார் வில்வேலி.

"ஆம்" என்று தலையசைத்தான் அத்தியந்த காமன்.

சற்றுநேரம் ஏதோ யோசித்த வில்வேலி தம் இருக்கையை விட்டு எழுந்து மெல்ல உலாவிக்கொண்டே, "அன்புள்ள கலைஞனே! எங்களுக்கு நீ ஓர் உதவி செய்ய வேண்டும்; செய்வாயா?" என்று தணிந்த குரலில் குழைவாகக் கேட்டார்.

"எத்தகைய உதவி எனக் கூறினால் அது இயலுமா, இயலாதா என்று சொல்வேன்."

தலையசைத்தவாறு மீண்டும் சிறுபொழுது சிந்தனை யில் திளைத்த தளபதி வில்வேலி மமதை நிறைந்த மிடுக்குடன் கூறினார்: "இங்கே பார், கலைஞனே! நீ அந்த உதவியைச் செய்தால் உனக்கு மண் அளிப்போம், பொன் அளிப்போம், மாபெரும் பதவி அளிப்போம் என்றெல்லாம் நான் வாக்களிக்க மாட்டேன். ஏனென்றால், கௌரவத்தைத் தேடும் கலைஞனான நீ அத்தகைய அன்பளிப்புக்களையெல்லாம்

ஏற்க மாட்டாய் என்பது எனக்குத் தெரியும். எனவே, இப்போது என் கையிலிருக்கும் உன் உயிரையே உனக்குப் பரிசாகத் தரத் தீர்மானித்திருக்கிறேன், அந்த உதவியைச் செய்தால்!"

அவன் இதைக் கேட்டு அழகாகச் சிரித்தான். "ரசனை மிக்க பயமுறுத்தல்!" என்று கூறி மீண்டும் நகைத்த அவன் புருவக் கொடிகளை மேலுயர்த்திக்கொண்டு, "என்னால் எதிர்பார்க்கப்படும் அந்த உதவி என்னவோ?" என்றான் அலட்சியமாக.

ஒரு கணம் தயங்கிய வில்வேலி விருட்டென்று அவன் எதிரே வந்து நின்றார். "நீ ஒரு சிறந்த ஓவியன் என்று நான் கேள்விப்பட்டதாலேயே உன்னிடம் இந்த உதவியைக் கேட்கிறேன்: அழிந்துபட்ட பல்லவ சாம்ராஜ்யத்தின் பார்த்திபனாக இருந்த பரமேசுவரவர்மனுடைய உண்மை உருவத்தை ஓவியமாகத் தீட்டித் தரவேண்டும்; என்ன சொல்கிறாய்?"

அவன் எவ்விதச் சலனமுமின்றி ஆழ்ந்து சிந்திப்பவன் போல் மௌனமாயிருந்தான்.

"நேரம் எனக்குப் பொன்னானது. நான் கேட்டதற்கு விரைவில் மறுமொழி வேண்டும்." —அடித் தொண்டையில் கரகரத்தார் வில்வேலி.

அமைதியாகத் தலைநிமிர்ந்த அத்தியந்த காமன், "ஆமாம்; உம்முடைய எதிரியான அவனது உருவச் சித்திரம்' உமக்கு ஏன்?" என்று வினவினான்.

"ஓ,... அந்தக் காரணமும் உனக்குத் தெரிய வேண்டுமா?... பல்வளம் கொழிக்கும் இந்தப் பல்லவ நாட்டை எங்களுக்குத் தாரை வார்த்துக் கொடுத்துவிட்ட பெருமகன் அவன்! அதனால் அவனுடைய திருவுருவச் சித்திரத்தைத் தேரில் ஏற்றித் தெருத் தெருவாக இழுத்துக்கொண்டு போய் விழாக் கொண்டாட விரும்புகிறோம்!"

வில்வேலியின் இந்த ஏளனப் பேச்சைக் கேட்டு உடல் அதிர்ந்தான் அத்தியந்த காமன். அவனது களை சொட்டும் முகம் ஜிவ்வெனச் சிவந்து பாறைபோல் இறுகியது. கண்களில் செவ்வரி படர அனற்செறிவுடன் பெருமூச்சு விட்ட அவன் மெல்ல நிமிர்ந்து ஆந்திர இளவரசியை நேரிட்டு நோக்கினான்.

புயலில் சிக்கிய பூமாலையென வெலவெலத்து நின்றிருந்த உத்தமசீலி, 'மறுக்காதே, மறுக்காதே' என்று கெஞ்சுவது போல அவனைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

அவன் முகத்தில் பழைய சாந்தக்களை வந்து சேர்ந்தது. தன் கழுத்திலே தவழ்ந்த சவுக்கைக்காய் மாலையை மெல்ல வருடிக்கொண்டே புன்முறுவலுடன் எழுந்து, "அப்படியே ஆகட்டும்!" என்றான்.

எல்லை கடந்த மகிழ்ச்சியால் ஒரு துள்ளுத் துள்ளி நிமிர்ந்தார் வில்வேலி. வேங்கி இளவரசியோ ஆனந்த விம்மலிட்டு வாசல் நிலையில் சாய்ந்தாள்.

அவசரப் பரபரப்புடன் பணியாட்களை அழைத்த வில்வேலி, "இதோ, இந்த ஓவியக் கலைஞனை ஒற்றைத் தூண் குடை மண்டபத்துக்கு அழைத்துப்போய், அங்கிருந்தவாறு ஓவியம் தீட்டுவதற்கான எல்லா வசதிகளையும் செய்து கொடுங்கள்!" என்று கட்டளையிட்டார்.

பணியாட்கள் பின் தொடர்ந்து வர, நந்தவனச் சூழலில் அமைந்த குடை மண்டபத்தை நோக்கி நடந்தான் அத்தியந்த காமன் என்ற பரமேசுவரவர்மன்.

"இளவரசி! உங்களுடைய அருமையான யோசனை பலித்துவிட்டது. எங்களைப் பிடித்த பெரியதொரு தொல்லையும் நீங்க வழி பிறந்துவிட்டது" என்று சந்தோஷக் கேவலிட்டுச் சொன்ன தளபதி வில்வேலி, "இது மட்டுமல்ல, அம்மணீ! நான் விரித்த வலையில் இன்னும் ஒரு பெரிய புலியும் வந்து சிக்கிக்கொண்டிருக்கிறது. அவ்விஷயமாய் அலைந்து கொண்டிருந்ததால்தான் கடந்த இரண்டு நாட்களாக உங்களை வந்து காண இயலவில்லை. இப்போது ஒரு முக்கியமான காரியமாக நமது அதிகாரிகளுடன் மந்திராலோசனை செய்யப் போகவேண்டும். நீங்கள் மிக

எச்சரிக்கையுடன் அந்த ஓவியனைக் கண்காணித்துக் கொள்ளுங்கள். இன்று மாலைக்குள் இங்கு திரும்பி வந்து மற்றக் காரியங்களை நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்றவாறு அவளிடம் விடைபெற்றுச் சென்றார்.

ஒற்றைத் தூண் குடை மண்டபத்துக்கு எதிரே நீர் ஊற்றால் நிரம்பப் பெற்ற ஓர் அழகிய சிறு தடாகம் இருந்தது. மலர்ச் செடி கொடிகளின் இனிய சூழலில் அமைந்த அந்தத் தடாகக் கரையிலே தன்னந் தனியாக அமர்ந்திருந்தான் பரமேசுவரவர்மன்.

அவனருகில் ஓவியம் தீட்டுவதற்கான வெண்ணிறச் சீலையொன்று சட்டத்தில் சார்த்தி வைக்கப் பெற்றிருந்தது. மற்றும், வண்ணக் கலவைக் கிண்ணங்களும், தூரிகைகளும், கடற்பஞ்சு, மாக்கிளிஞ்சல் முதலானவையும் இருந்தன.

அவன் அங்கு தனியாகத்தான் இருந்தான். ஆனால், அவனைச் சுற்றித் தொலை தூரத்துக்கு அப்பாலிருந்த மரங்களின் மேலிருந்து பலநூறு கண்கள் அவனையே வட்டமிட்டு மொய்த்துக் கொண்டிருந்தான்.

இடக் கை ஊற்றலில் ஒருக்களித்துச் சாய்ந்து உட்கார்ந்திருந்த அவன் நெடுநேரங் கழித்து மெல்ல அசைவுற்று நிமிர்ந்தான். களைப்பும் சோர்வுமாக வெளுத்துச் சாம்பியிருந்த அவனைப் பார்க்கவே மிகவும் பரிதாபமாக இருந்தது. தன் எதிரேயிருந்த வெறும் ஓவியக் கிழியைக் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தவன், ஏதோ ஒரு திடமான முடிவுக்கு வந்தவனாய் எழுந்து தடாகத்தின் கரைச் சுவர் விளிம்பிலே வலக் காலைத் தூக்கி வைத்துக் குனிந்தவாறு, பளிங்குப் பாளமாகத் தெரிந்திருந்த நீர்ப்பரப்பில் எதையோ தேடுவதுபோல் உற்றுப் பார்த்தான். ஆடாது அசையாது அப்படியே பார்த்துக்கொண்டிருந்தான் அத்தியந்த காமன்.

நிறமற்ற நிறமாக விசாலித்திருந்த அந்த நீல நீர்ப் பரப்பில் சகல புருஷ இலட்சணங்களும் பொருந்திய சுந்தரமுகம் ஒன்று தோன்றி மிதவையிட்டது. ஆமாம்; அது பரமேசுவர்மனின் முக விலாச பிம்பம்தான்!

நீரில் கிடந்து மிதந்த தன் நிழற்பிம்பத்தின் சாயல் அனைத்தையும் மனத்துக்குள் வாங்கிப் பதித்துக்கொள்ள முயல்கிறவனைப்போல் அதையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்த அவன் கண்களில் இரு சொட்டுக் கண்ணீர் துளித்து அந்த நீர்ப் பரப்பில் தெறிக்கவே ஒரு சிறு சலனம் தோன்றி அதில் மதவையிட்டிருந்த எழிற் பிம்பத்தை அலைத்துக் கலைத்தது.

சட்டென்று நிமிர்ந்த பரமேசுவரவர்மன் ஏதோ உணர்ச்சிவயப்பட்டவன்போல் தூரிகையொன்றை எடுத்துக் கொண்டு அந்தச் சித்திரச் சீலையின் எதிரே போய் நின்றான்.

இலவந்திகைப் பள்ளியில் தவியாய்த் தவித்துக் கொண்டு நேரத்தைக் கடத்தி வந்தாள் இளவரசி உத்தமசீலி. அவளால் அங்கு இருப்புக் கொள்ளவே முடியவில்லை. மகிழ்ச்சியும் திகிலும் மாறிமாறித் தோன்றி அவள் மனத்தை மலர்த்துவதும் உலர்த்துவதுமாக இருந்தன.

மேற்கு வானில் மாலைச் சூரியன் பொன்வலை பின்னத் தொடங்கி விட்டான். அதற்கு மேலும் அவளால் தன் நெஞ்சத் தவிப்பை அடக்கிக்கொண்டிருக்க இயலாமற் போகவே அங்கிருந்து கீழே இறங்கி அந்த ஒற்றைத் தூண் குடை மண்டபத்தை நோக்கி அன்னமென நடந்து சென்றாள்.

எண்ணத்தில் ஆயிரம் இன்பக் கனவுகள் ஊற்றெடுக்கத் தயங்கித் தயங்கி வந்த அவள், மண்டபத்தின் அருகில் சென்று மெல்லத் தன் பார்வையை மேலுயர்த்தினாள். அடுத்த கணம், அவளது கண்ணின் கருமணிக்குள் மின்னலொன்று பாய்ந்தாற்போல் பேரதிர்ச்சியுற்றுப் பின்னால் நகர்ந்தாள்.

அங்கே, அந்தக் குடை மண்டபத்தின் தூணில் பரமேசுவரவர்மன் பிரக்ஞை இழந்தவன்போல் சாய்ந்திருக்க அவன் எதிரேயிருந்த ஓவியச் சீலையில், அவனையே உரித்து வைத்தாற்போன்ற சாயலுடன் ஓர் அழகான ஓவியம் தீட்டப் பெற்றிருந்தது.

சந்தேகமில்லை; அது அவனுடைய உருவ ஓவியமே தான்!

# 27

# சிறைப்பட்டான் ஓவியன்!

உயரக் கிளையில் கண்ணுக்கு எதிரே பழுத்துத் தொங்கும் கனியை ஒரே கல்லில் அடித்து வீழ்த்தி விடுவதும் உண்டு; ஐந்தாறு கல்லெறிக்குப் பின் அம்முயற்சி கைகூடுவதும் உண்டு. சில சமயம் குறிவைத்து எறிந்த கல் குறித்த பழத்தை விட்டுவிட்டு, எங்கோ இலை மறைவில் தொங்கும் பிஞ்சை அடித்துச் சாய்ப்பதும் உண்டு. இப்படித்தான் ஏதேனும் ஒரு விஷயம்பற்றிய முடிவை எடுக்க முயலும் மனித சிந்தனையும் செயல்படுகிறது எனலாம். சில சமயம் அது அந்த முடிவை நேராகவே போய்த் தொட்டுக் காட்டிவிடும்; சிலபோது பலமுறை முயன்ற பிறகே சரியான முடிவை ஸ்பரிசிக்கும். இன்னும் சில சமயமோ, மெய்யான முடிவு அருகிலே இருந்தாலும் அதை விட்டுத் தாண்டிச் சென்று அதற்குப் புறம்பான முடிவு ஒன்றைத் தேடி அதையே இறுகப் பற்றிக்கொள்ளும். குறித்த இலக்கை நோக்கி எறியப்படும் கல் இன்னோர் இலக்குக்குச் சென்றுவிடக் கையின் தவறான அசைவோ கண்ணின் கோளாறான குறி வைப்போ காரணமாய் அமைவதுபோல, மனித மனத்தில் அவ்வப் போது விளையும் சில விந்தையான மாற்றங்களினால் ஆற்றல் மிக்க சிந்தனைகூட அதற்குரிய முடிவைத் தொடத் தவறி அப்பால் செல்லக் காரணமாகிறது.

அத்தியந்தகாமன் என்ற பெயரோடு அந்த இலவந்தி கைப் பள்ளிக் குடைமண்டபத் தூணிலே சோர்வுற்றுக் கண் மூடிச் சாய்ந்திருக்க பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன் தன்னையே ஓவியமாகத் தீட்டி வைத்திருந்ததைப் பார்த்து

அதிர்ச்சியடைந்தவளாய் நின்று கொண்டிருந்த ஆந்திர இளவரசி உத்தமசீலியின் சிந்தனையும் இப்போது அப்படித்தான் இலக்கு விட்டு இலக்குப் பாய்ந்தது.

'தலைமறைவாக இருக்கும் பல்லவ மன்னனின் உருவ ஓவியத்தை வரைந்து கொடுக்கும்படி கேட்டதற்கு இவன் ஏன் தன்னையே ஓவியமாகத் தீட்டி வைத்திருக்கிறான்?' என்று அவள் சிந்தனை எழுப்பிய சரியான வினாவுக்கு, அவளது மனம் தேடித் தந்த விசித்திர விடை இது: 'அன்று நான் அந்த யோசனையை வில்வேலியிடம் கூறியபோது, பல்லவ நாட்டுக் கலைஞர்களின் இராஜ பக்தியையும் தேச பக்தியையும் அறியாமல் சொல்லப்படும் யோசனை அது என்று அவர் சொன்னது எவ்வளவு சரியாகி விட்டது! இல்லையானால் இவ்வோவியக் கலைஞன் இவ்வாறு செய்யத் துணிவானா? ஒளிந்து திரியும் பல்லவ மன்னனைக் கண்டுபிடிப்பதற்காகச் செய்யப்பட்ட இந்த முயற்சியை எத்தனை எளிதாக இவன் தகர்த்தெறிந்துவிட்டான்! தன் நாட்டு மன்னனைக் காட்டிக் கொடுக்க முடியாதென்று வாய்ப்பேச்சில் அல்லாமல் செயலின் மூலமே தெளிவாகத் தெரிவித்துவிட்டானே! இதனால் தன் உயிருக்கு ஆபத்து நேரிடும் என்பதை அறிந்திருந்தும் இப்படிச் செய்யத் துணிந்திருக்கிறானென்றால் இவனுடைய தேச பக்தியும் இராஜ பக்தியும் எத்தனை தீவிரம் வாய்ந்தவையாக இருக்க வேண்டும்! அத்துடன், தன்னையே ஓவியமாகத் தீட்டிக் காட்டும் அளவுக்குத் திறன் பெற்ற இவன் இந்தக் கலையிலே எத்தனை விரிந்த ஞானம் படைத்தவனாய் விளங்க வேண்டும்!'

அதிர்ச்சி நீங்கிய அவள் அவனை ஆச்சரியத்துடன் திரும்பிப் பார்த்தாள். உலகையெல்லாம் வென்று வந்த ஒரு மாபெரும் வீரனைப் பார்ப்பதுபோல், மகத்தான சத்தியம் ஒன்றைக் காக்கும் பொருட்டுத் தன் இன்னுயிரைப் பலியிட்டுக் கொள்ள முன்வந்த ஒரு தீரமிக்க தியாகியைத் தரிசிப்பதுபோல் பார்த்தாள் அவள். இதற்குமுன் அவனைப்

பற்றி அவளது மனத்தில் ஏதோ ஒரு புதுமை வாய்ந்த இனிய கவர்ச்சிதான் உருவாகியிருந்தது. ஆனால் இப்போதோ அந்த உணர்ச்சி மயமான கவர்ச்சித் தன்மை பல்வேறு வடிவங்களாகக் கிளை பிரிந்து அவை ஒவ்வொன்றும் அவள் உள்ளத்தின் அடியாழம் வரையில் வன்மையும் வனப்புமாக வேரூன்றிச் செல்வதை அவளே நன்கு உணரலானாள். அது மட்டுமின்றி, அந்தப் புனித வடிவங்கள் அனைத்தும் ஜன்ம ஜன்மாந்தரத்துக்கு முன்பிருந்தே தன்னுள் தோன்றித் தொடர்ந்து வருவதாகவும், அதனை இந்நாள்வரை அறியாமலிருந்து இன்றுதான் திடீரெனத் தெரிந்துகொண்டது போலவுமான ஒரு திகைப்பில் ஆழ்ந்தாள் அவள். இவ்விந்தை நிலைக்கு உள்ளான அவளது மனத்திலே, தான் ஒரு யுவராணி என்ற செருக்கோ ஒரு மாபெரும் சக்கரவர்த்தியின் தம்பி மகள் என்ற மமதையோ சிறிதுமில்லாமல் போனதன்றி, அவன் ஓர் அடிமை நாட்டுப் பிரஜை என்ற இழிவு எண்ணமும், ஆதரவற்ற ஓர் அநாதைக் கலைஞன் என்ற அலட்சிய நினைப்பும் கூட அற்றுப்போயின. இதனால் அவளையு மறியாமலே அவள் பார்வையில் ஒரு பக்தியும், பரிவும், விநயமும், கனிவும் பரிமளித்து வழிய அவளது நெஞ்சப் பிராந்தியத்திலே ஒருவிதப் பெருமையும் பூரிப்பும் நிரம்பிச் சேர, நன்றாக நிமிர்ந்து அவனைப் பார்த்தாள் அவள்.

இப்படித் தன்னை மறந்து பார்த்துக்கொண்டிருந்த உத்தமசீலி ஏனோ சட்டென்று திரும்பினாள். ‘ஆமாம்; இப்போது வில்வேலி இங்கு வந்துவிட்டால்-இந்த ஓவியத்தை அவர் பார்த்துவிட்டால்—இவனுடைய கதி என்னவாகும்?’

அவன் அடையக்கூடிய அந்தப் பயங்கர கதிக்குத் தானே ஆட்பட்டுவிட்ட மாதிரி நடுங்கித் துடித்த அவள் சிறிது நேர சிந்தனைக்குப் பின் ஏதோ ஒரு திடமான முடிவுக்கு வந்தவளாய்ச் சரேலெனப் பாய்ந்து போய் சட்டத்தில் பொருத்தியிருந்த அவ்வோவியச் சீலையை வெடுக்கென்று

பிடுங்கி அதை வேகமாகச் சுற்றிக் கையில் வைத்துக்கொண்டு திகிலுடன் அங்குமிங்குமாய்த் திரும்பிப் பார்த்தாள். பிறகு ஒருவாறு அமைதியடைந்து மீண்டும் அவனை நோக்கித் தன் பார்வையைச் செலுத்தினாள்.

இன்னமும் அவன் அதே நிலையில்தான் களைத்துக் கண்மூடிச் சாய்ந்திருந்தான். கோடான கோடி மானிட உருவங்களைப் படைத்துப் படைத்துச் சலித்துப்போன பிரமன், அந்தச் சலிப்பைப் போக்கிக் கொள்வதற்காக, தன் தந்தையின் வடிவத்தையே செதுக்கியெடுத்துக் கொண்டு வந்து இந்தக் குடை மண்டபத்தில் சாய்த்து வைத்துவிட்டுப் போயிருக்கிறானோ என்று சந்தேகிக்கும் விதமாக அத்தனை சுந்தரப் பொலிவோடு விளங்கினான் அவன்.

அவனைப் பார்க்கப் பார்க்க உத்தமசீலியின் உள்ளம் பூரண சந்திரனைக் கண்டு பொங்கியெழும் கடலைப்போல் பூரித்து வீங்கிப் புளகிதமடைந்தது. கந்தர்வ சாகரத்தில் கடைந்தெடுத்த ஜீவப் பிரசாதத்தைத் தன் கண்களாலேயே உண்டு முடித்தவள் போன்ற இன்பக் கிறக்கத்தினால் தளர்ச்சியுற்றுத் துவண்டு நின்ற அவள் அசைந்தாடி நகரும் பொன் விளக்குப்போல் அந்த மண்டபத்தை நோக்கித் தயங்கித் தயங்கிச் சென்றாள்.

சலனமற்ற சயனத்தில் ஆழ்ந்திருப்பவன் போலத் தூணிலே சாய்ந்திருந்த அவனை அருகில் நெருங்கி உற்றுப் பார்த்த அவளுக்கு அவனுடைய விசாலமான நீண்ட நெற்றியை ஸ்பரிசிக்க வேண்டுமென்ற ஒரு விசித்திர ஆவல் எழவே, மெல்லக் குனிந்து தன் பூங்கரத்தை நீட்டியவள் சட்டென்று பின்னால் நகர்ந்தாள். அவள் முகம் வெட்கத்தால் குப்பென்று சிவந்தது. அத்துடன் ஒரு பயபக்தியான உணர்ச்சியும் தோன்றவே அவனைத் தன் கரங்களால் தீண்ட அஞ்சித் தனது கூந்தலிலே சூடியிருந்த புத்தம் புதுப் பொன்னலரிப் பூவொன்றை எடுத்து அதன் மென்மையான இதழ்களால் அவனது வெண்ணீறணிந்த நெற்றியை இதமாக

வருடினாள். அப்போதும் அவன் உணர்வு பெறாமல் கண்ணயர்ந்தே கிடந்தான்.

உத்தமசீலியின் செவ்வதரங்களில் ஒரு குறுநகை தவழ்ந்தது. தன் சிரத்திலிருந்து எடுத்த மலரை அவனுடைய பாதங்களில் வைத்து, மீண்டும் அதைச் சிரத்திலேயே சூட்டிக்கொண்டு அங்கிருந்து சற்றுத் தள்ளிப்போய் நின்ற அவள், "ஓவியக் கலைஞரே! உறங்கியது போதும்; எழுந்திருக்கலாம்!" என்றாள் இனிமை சேர்ந்த குறும்புக் குரலில்.

அவன் மெல்லக் கண் திறந்தான். தன்னைச் சுற்றி என்ன நிகழ்ந்திருக்கிறது என்பதை அறியமுயலும் பாவனையில் அமைதியாகப் பார்வையைப் படர விட்டவாறு எழுந்தான். தான் தீட்டியவாறு எழுந்தான். தான் தீட்டி வைத்திருந்த தன் உருவ ஓவியம் சட்டத்திலிருந்து நீக்கப்பட்டிருந்ததையும், ஆந்திர இளவ:ரசி உத்தமசீலியின் கையிலே அது சுருண்டு இருந்ததையும் கவனித்த அவன் முகத்தில் ஓர் அழகிய புன்னகை மலர்ந்தது. "மன்னிக்க வேண்டும்! எனக்கு இட்ட பணியைச் சரிவர நிறைவேற்றியிருக்கிறேனா என்ற சிந்தனையில் ஆழ்ந்திருந்ததால், இங்கு இளவரசியார் வந்ததை நான் கவனிக்கவில்லை."

முகத்தில் பொய்யான மிடுக்கையும் கண்களில் போலியான செருக்கையும் தோற்றுவித்துக்கொண்டு நிமிர்ந்த உத்தமசீலி அவனை அலட்சியமாக ஏறிட்டு நோக்கினாள்.

"அப்படியாயின் நாங்கள் இட்ட பணியைச் செவ்வனே செய்து முடித்திருப்பதாக எண்ணமோ?"

"ஆமாம்; உண்மையை உபாசித்து ஒழுங்காகவே என் காரியத்தை நிறைவேற்றியிருக்கிறேன்."

அவள் அவனை வியப்புடன் உற்றுப் பார்த்தாள். பிறகு கலகலவெனச் சிரித்துக்கொண்டே, "மெத்த மகிழ்ச்சி! நீங்கள் இங்கிருந்து போகலாம்" என்றாள் துடுக்கான குரலில்.

"போக வேண்டுமா...? எங்கே போவது?" என்று கேட்டான் அவன்.

"இருந்து வந்த இடத்துக்குத் திரும்பிப் போகலாம் என்கிறேன்."

"நான் ஆற்றிய பணிக்குப் பரிசு பெற வேண்டுமே!"

"என்ன பரிசை நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள்?"

"அதிக பட்சமாக ஒரு கழுமரம்! அல்லது குறைந்த பட்சமாக ஒரு காராக்கிருக வாசம்!"

அவன் மிகமிக அமைதியாகவே இவ்வாறு சொன்னான். ஆனால் உத்தமசீலியோ இதைக் கேட்டு நடுங்கித் துடித்து விட்டாள். "போங்கள்! இங்கிருந்து சீக்கிரம் போய்விடுங்கள்!" என்று கழுத்து நெரிபட்ட குயில்போல் திடீரெனக் கூவினாள் அவள்.

அத்தியந்தகாமன் அவளை ஆச்சரியத்தோடு புருவங்களை உயர்த்திப் பார்த்தான். "இது ஆந்திர இளவரசியாரின் கட்டளையா? அல்லது சளுக்கியத் தளபதி வில்வேலியின் உத்தரவா?"

"ஓர் அடிமையின் வேண்டுகோள் இது! இங்கிருந்து உடனே போய்விடுங்கள்."

அவன் அவளை முதன் முறையாகத் தன் முழுப் பார்வையையும் செலுத்தி நோக்கினான். அந்தக் கம்பீரக் களை பொருந்திய குளிர்ந்த நோக்கை எதிரிட இயலாமல் சில்லிட்டுத் தலைகுனிந்தாள் உத்தமசீலி.

ஒரு நீண்ட பெருமூச்சுடன் நிமிர்ந்த அவன், மண்டபத்தைவிட்டுக் கீழே இறங்கிச் செல்ல முற்பட்டான்.

"சற்று இருங்கள்! ரதத்துடன் ஆட்களை அனுப்பி வைக்கிறேன்; வந்தவாறே போய்ச் சேருங்கள்!" என்று படபடத்தாள் உத்தமசீலி.

பூவைப் பார்ப்பது போன்ற ஒரு புனிதப் பார்வையுடன் அவளை நோக்கித் திரும்பி, "நான் தனியே செல்ல விரும்பு

கிறேன்! இளவரசியாருக்கு இதில் தடையேதும் இல்லையே?" என்று அமைதியாக வினவினான் அத்தியந்தகாமன்.

மிரட்சியுற்ற அவள் மௌனமாக நின்றுகொண்டிருக்கவே, அவன் மேலே நடக்கலானான்.

மீண்டும் எதையோ நினைத்துக் கொண்டவள்போல் சடாரென்று தாவி அவன் முன்னே ஓடிப்போய் நின்ற உத்தமசீலி, "ஒரு விஷயம்..." என்று தயங்கி இழுத்தாள். பிறகு கர்வ செருக்குடன் தலைதூக்கி ஒயிலாக அவனைப் பார்த்தவாறு, "நீங்கள் இப்போது மரண தண்டனையிலிருந்து தான் தப்பிச் செல்கிறீர்களே தவிர, சிறைத் தண்டனையிலிருந்து தப்பவில்லை. இது உங்கள் நினைவில் எப்போதும் இருக்கட்டும்" என்று வீணை முரல்வது போன்ற இனிய குரலில் கூறினாள்.

"சிறைவாசமா?... எனக்கா?" தடுமாற்றத்துடன் கேட்டான் அத்தயந்தகாமன்.

"ஆமாம்; இதோ, இந்தச் சிறையில்?"-அழகோவியமாய் நின்ற ஆந்திர இளவரசி உத்தமசீலி தன் காந்தள் மலர் விரலால் தனது நெஞ்சகத்தையே அவனுக்குச் சுட்டிக் காட்டிவிட்டு இலவந்திகைப் பள்ளியை நோக்கி மானெனத் துள்ளி ஓடினாள்.

பன்னீர்ப் பொய்கையில் மூழ்கி எழுந்து பனிச்சாரலில் வெடவெடத்து நிற்பதுபோல் நின்று அவளையே பார்த்துக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன் மெய்யாகவே தன் உடலை ஏதோ ஒரு கனத்த இரும்புச் சங்கிலியால் பிணைத்துக் கட்டிவிட்டாற்போன்ற பார உணர்ச்சியுடன் தலைகுனிந்தவாறு அங்கிருந்து வெளியேறினான்.

# 28

# இருளில் ஒரு வெளிச்சம்

இலவந்திகைப் பள்ளியின் மேன்மாடத்துக்கு வந்து சேர்ந்த இளவரசி உத்தமசீலி அங்கு இருப்புக்கொள்ளவே இயலாமல் தவித்தாள். தான் எடுத்து வந்த ஓவியச் சீலையைப் பிரித்துப் பார்ப்பதும் சுருட்டி வைப்பதுமாகச் சிறு பொழுதைக் கழித்த அவள் சட்டென்று எழுந்து சாளரத்துக்கு அருகில் போய் நின்று தொலைதூரத்துக்கு அப்பால் தன் பார்வையை வீசினாள்.

மாலைப் போது மங்கி வந்த அந்த நேரத்தில், பல்லவ புரத்திலிருந்து ஆலம்பாக்கம் வழியே பெருவளநல்லூர் செல்லும் சாலையில் தன்னந்தனியாக அவ்வோவியக் கலைஞன் சென்றுகொண்டிருந்தது கனவுக் காட்சிபோல் கலங்கலாகத் தெரிந்தது. அவனுக்குச் சற்றுப் பின்னால் இப்பள்ளி மாளிகையின் பணிப் பெண்களுக்குரிய பகுதியிலிருந்து வெளியேறிய ஒரு கூடைக்காரி அந்தச் சாலையோரமாகச் சென்று கொண்டிருந்ததும் புலனாகியது.

ஏக்கப் பெருமூச்சுடன் சாளரத்துமேல் சாய்ந்தவாறு, தொலைவிலே சென்ற அவ்வாலிபனையே பார்த்துக்கொண்டிருந்தாள் உத்தமசீலி. தன்னுடைய உயிரின் ஒரு பகுதியே அங்கு நடந்துபோவதுபோல் இருந்தது அவளுக்கு.

'இப்படியே அவன் எவ்வளவு தூரம் நடந்து செல்வான்?' என்று எண்ணிக் கவலையடைந்த அவள் மனத்திலே இன்னொரு பீதி மயமான கேள்வியும் எழுந்தது: 'அவன் ஏன் தனக்கு வாகனமோ, வேறு காவல் துணையோ

வேண்டாமென்று சொன்னான்? சம்பிரதாய மரியாதைக்காக அவ்வாறு மறுத்துச் சொல்லியிருப்பானோ? நானும் அதை உண்மை என்று நினைத்துத் தனியாகச் செல்ல அநுமதித்து விட்டேனே! ஏதோ ஒரு காரணத்தால் வெளியே நடமாட முடியாத சங்கடம் அவனுக்கு ஏற்பட்டதால் தானே சேதியக் கலைஞரிடம் போய்ப் புகலடைந்திருக்கிறான்? அப்படிப் பட்ட பரிதாப நிலையில் இருப்பவன் தன்னந்தனியே இத்தனை நெடுந்தூரப் பயணத்தை மேற்கொள்ளலாமா? பெருவளநல்லூர் போய் சேர்வதற்குள் இடைவழியிலே அவனுடைய சொந்த எதிரிகளால் அவனுக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்துவிட்டால் என்ன செய்வது? ஒருகால் கட்டவிழ்த்துவிட்டிருக்கும் சளுக்கிய வீரர்களே கூடக் கண்மூடித்தனமாக அவனுக்கு இன்னல்கள் விளைவித்து விடலாமே?'

பதறித் துடித்த அவள், என்ன செய்வதென்று தெரியாமல் அங்குமிங்குமாக அலை மோதினாள். பளீரென்று அவளுக்கோர் எண்ணம் தோன்றியது. 'பல்லவபுரம் எல்லை வரையிலாவது அவனைப் பின்தொடர்ந்து போய், திரும்பி வந்தால் என்ன? அப்படிச் செய்தால்தான் என் மனமும் ஆறுதல் பெறும்; அவனுக்கும் அது பாதுகாப்பாக அமையும்.'

அவள் அவசரமாகத் தன் கையிலிருந்த ஓவியச் சுருளை ஆபரணப் பேழைக்குள் வைத்துப் பூட்டி அதன் தாழ்க்கோலை (சாவி) இடுப்பிலே செருகிக்கொண்டு ஒரு பச்சை நிறப் போர்வையால் தன்னை நன்றாகப் போர்த்தியவாறு மேன்மாடத்தைவிட்டு மளமளவெனக் கீழே இறங்கி வந்தாள். அங்கு நின்ற பணிப்பெண்ணைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு பல்லவபுரம் சாலையை நோக்கிப் புறப்பட்டாள்.

பூஞ்சை இருள் பூசத் தொடங்கியிருந்த அந்நேரத்தில் பல்லவபுரத்திலிருந்து ஆலம்பாக்கம் செல்லும் அந்தச் சிறிய சாலை வெறிச்சோடிக் காணப்பட்டது. பணிப்பெண் பின் தொடர விரைந்து வந்து சாலையில் ஏறிய உத்தமசீலி

தொலைதூரத்துக்கு அப்பால் தன் பார்வையை எறிந்து நோக்கினாள்.

அதோ, அந்த ஓவியன் நடந்து செல்வது நிழலாட்டம் போல் தெரிகிறது. அவனுக்குப் பின்னால் அந்தக் கூடைக்காரியும் போய்க்கொண்டிருக்கிறாள். அவள் பக்கம் திரும்பி அவன் ஏதோ கேட்கிறான். பிறகு, மேலே நடக்கிறான்!...

உற்சாகமடைந்த உத்தமசீலி தன் கண்ணின் பார்வையிலிருந்து அவன் கடந்து சென்றுவிடக் கூடாதே என்ற பரபரப்புடன் வெகுவேகமாக நடக்கலானாள். அந்த அமைதியான இனிய சூழலில் நடந்து செல்வது அவளுக்கு ஓர் இன்ப அநுபவமாக இருந்தது. அத்தியந்தகாமன் முன்னே செல்ல அவனைத் தான் பின்தொடர்ந்து செல்கிறோம் என்ற எண்ணம் அவள் மனத்துக்குப் பெருமகிழ்ச்சியை அளித்தது. இனம் புரியாத ஒரு சுவை செறிந்த கிளுகிளுப்பையும் அது ஊட்டியது. இப்படியே அவனைப் பின்தொடர்ந்து காலமெல்லாம் போய்க்கொண்டிருக்க மாட்டோமா என்ற விந்தையான ஏக்கமும் அவளது நெஞ்சத்திலே ஊறிப் படர்ந்தது.

அவனைவிட அவள் வேகமாக நடந்ததால் அவளுடைய பார்வையிலிருந்து அவன் மறைய முடியவில்லை. இருளின் ஆதிக்கம் மேலோங்கிச் சென்றாலும் அவளது தீட்சண்யமான கண்கள் அவன் உருவத்தை ஸ்பரிசித்துக் கொண்டேதான் இருந்தன.

அடேயப்பா, எவ்வளவு சீக்கிரம் அவள் எத்தனை தூரத்தைக் கடந்து வந்து விட்டிருக்கிறாள்! அதோ, ஆலம்பாக்கம் என்னும் அந்தச் சிற்றூர்கூடக் கண்ணுக்குப் புலனாகிறது!...

'ஆமாம்! இந்நேரத்திலே என்னையும் இந்த ஓவியன் வரைந்து கொடுத்த ஓவியத்தையும் பார்ப்பதற்காகத் தளபதி வில்வேலி இலவந்திகைப்பள்ளிக்கு வந்திருப்பாரோ? இன்று

மாலைக்குள் அவர் திரும்பி வருவதாகச் சொல்லிவிட்டுப் போனாரே!'

இவ்வாறு ஓர் எண்ணம் தோன்றவே உத்தமசீலி தன் நடைவேகத்தைக் குறைத்துக்கொண்டு தயங்கி நின்றாள். 'திரும்பி விடலாமா? இன்னும் கொஞ்ச தூரம் போகலாமா?... வேண்டாம்; இதுவரையில் அவனைப் பின் தொடர்ந்து வந்ததே போதும். இனித் திருப்தியுடன் திரும்பிவிடுவதுதான் நல்லது.'

அவள் மிரட்சியுற்று நிமிர்ந்தாள். எங்கே அந்த வாலிபன்? இதற்குள் அவன் எங்கு போய் மறைந்தான்? அவனுக்குப் பின்னால் சென்று கொண்டிருந்த அந்தக் கூடைக்காரியும் இப்போது காணோமே?...

பரபரப்படைந்த உத்தமசீலி விரைந்து நடந்து கொண்டே சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தாள்.

அதோ, அந்த ஓவியனின் உருவம் தெரிகிறது!... ஆனால்... ஆனால்... அவன் சாலையைவிட்டு வலப்பக்க வாட்டில் திரும்பி நடக்கிறானே?... இதுவரை அவனுக்குப் பின்னால் வந்துகொண்டிருந்த கூடைக்காரி இப்போது முன்னே சென்று அவனை அழைத்துப் போவதுபோல் தோன்றுகிறதே!...

சட்டென்று நின்ற அவள் தன் கண்களை நிமிண்டி விட்டுக் கொண்டு மீண்டும் அவர்களைக் கவனித்தாள்.

அவ்விருவரும் அந்தச் சாலையோரத்திலிருந்த சிறிய இல்லம் ஒன்றை நோக்கிச் சென்றுகொண்டிருந்தனர்.

திகைப்பும் வியப்புமாகப் பிரமித்து நின்ற உத்தம சீலியின் நினைவிலே பளிச்சென்று ஒரு விஷயம் வந்து மோதியது. 'ஓ... இது, அந்த ஆடுகோபதி இளங்காரிக் குடையான் என்பவனின் இல்லம் அல்லவா? அன்றொரு நாள் பெருவள நல்லூரிலிருந்து பல்லவபுரத்துக்கு நான் பயணமாகி வந்த போது இவ்விடத்தில் சிவிகையை நிறுத்தித்தானே அந்த இடையப் பெண்ணிடம் இளநீர் வாங்கிப் பருகினேன்? அது மட்டுமின்றி, அவளிடமிருந்து என்

பட்டோலையைப் பெற்றுச் சென்ற நிகழ்ச்சியும் இங்குதானே நடந்தது?'

பயப்பிராந்தியுடன் தலையசைத்துக்கொண்ட அவள் இன்னொரு வினாவையும் தன்னுள்ளே எழுப்பினாள். 'நேரே பெருவளநல்லூருக்குப் போக வேண்டிய அத்தியந்தகாமன் இந்த இல்லத்துக்கு ஏன் செல்கிறான்? அவனை அழைத்துச் செல்லும் அந்தக் கூடைக்காரி யார்?' —இவ்விஷயத்தை எப்படியும் தெரிந்துகொண்டுதான் இங்கிருந்து போக வேண்டும் என்ற திடமான முடிவுடன், தனக்குத் துணையாக வந்த பணிப்பெண்ணைச் சற்றுத் தொலைவிலேயே நிற்கச் சொல்லிக் கட்டளையிட்டுவிட்டு, இருளோடு இருளாக ஓசையின்றி நடந்து போய் அந்த இல்லத்துக்கு எதிரேயிருந்த பவழமல்லி மரமொன்றின் இருட்செறிவில் மறைந்து நின்று தன் பார்வையைத் தீர்க்கமாகச் செலுத்திக் கவனித்த உத்தமசீலியின் உள்ளமும் உடலும் அதிர்ச்சியுற்றன.

ஆம்; அந்த இல்லத்தைச் சார்ந்த சித்திரத் திண்ணையிலே அவ்வோவியனை அழைத்துப் போய் அமரச் செய்த கூடைக்காரி, சேதியக் கலைஞரின் சமையற்காரியான அநந்தமதி என்பவளேதான்!

அம் மூதாட்டி பரபரப்புடன் உள்ளே சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம், இடையப் பெண் கோலத்திலிருந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சி வியப்பும் மகிழ்ச்சியுமாக வெளியே வந்து, "பல்லவ மன்னர் பரமேசுவரவர்மருக்கு என் பணிவன்பான வணக்கம்!" என்று கூறிக் கரங்குவித்தாள்.

கையிலொரு சிறு விளக்குடன் அவளைப் பின் தொடர்ந்து வந்த சோழிய ஆபத்துதவி வீரனான சம்புவராயனும் அவ்வாறே கூறி வணங்கி எழுந்தான்.

# 29

# எங்கே பயணம்?

மலராத மொட்டொன்றும் மலர்ந்த பூவொன்றுமாக நிமிர்ந்து நிற்கும் அரவிந்தக் கொடிபோல், அஞ்சலித்துக் குவிந்த கரமும் அழகு நகை பூத்த முகமுமாய் வந்து நின்ற இளங்கோப்பிச்சியை மென்மையாக ஏறிட்டு நோக்கிய பரமேசுவரவர்மன், "யார்?... சோழ இளவரசியா?... அடையாளமே தெரியவில்லையே!" என்று உள்ளடங்கிய வியப்புடன் கண்களை மலர்த்தினான்.

அவனைப் பார்த்த இளங்கோப்பிச்சியின் மனத்திலும் அதே போன்ற கேள்விதான் எழுந்தது. காஞ்சியிலே அவனுக்கு முடிசூட்டு விழா நடந்தபோதும், அதன்பின் தனது ஒன்று விட்ட இளவலான கோவிந்தவர்மனின் திருமண விஷயமாய்ப் பேசவேண்டிப் பழையாறைக்கு வந்தபோதும் அவனை நேரிலே பார்த்திருந்த அவள், இப்போதைய அவனது கோலத்தைக் கண்டு நெஞ்சம் நெகிழ்ந்து கரைந்தாள்.

"நலம் தானே இளவரசி? உன் நலன்பற்றி விசாரித்துப் போகவே இங்கு வந்தேன்."

தன் நலம் தவறிக் கிடக்கும் நிலையிலும் பிறர் நலம் விழைந்து வினவும் அப்பெருந்தகையாளனைப் பக்தி சிரத்தையுடன் பார்த்துக் கண்கலங்கிய இளங்கோப்பிச்சி, 'நலமே' என்பதுபோல் மெல்லத் தலையசைத்தாள்.

சற்று நேரம் அவளையே பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் ஆழ்ந்த பெருமூச்சு விட்டுக் கரகரத்த குரலில் கூறினான்: "விதியின் கொடிய கரங்கள் சிலரைத்

வந்து அணைத்துக்கொள்கின்றன; மற்றும் சிலரோ அதன் பிடியில் தாமே வலியச் சென்று சிக்கிக்கொள்கின்றனர். விந்தையான உலகம். வேடிக்கையான மனிதர்கள்."

தான் பழையாறை அரண்மனையிலிருந்து வெளியேறி இந்தச் சிறுகுடிலில் வந்து தங்கியிருப்பது பற்றியே அவன் இவ்வாறு சொல்கிறான் என்பதை உடனே புரிந்துகொண்ட இளங்கோப்பிச்சி கண்ணிமைகள் படபடக்க அவனை நிமிர்ந்து நோக்கினாள்.

ஆனால் பரமேசுவரவர்மனோ அந்தப் பேச்சை அதோடு நிறுத்திவிட்டு, "அநந்தமதி எங்கே?" என்று கேட்டுக் கொண்டே மெல்லத் திரும்பினான். கதவுக்குப் பின்னால் ஒதுங்கி நின்றுகொண்டிருந்த அநந்தமதி அவசரமாக வெளியே வந்து பணிவுடன் அவனைப் பார்த்தாள்.

"நான் பல்லவபுரத்துக்குச் சென்ற சேதி உனக்கு எப்படித் தெரியும்? எங்கிருந்து நீ என்னைப் பின் தொடர்ந்து வந்தாய்?"

"இன்று காலை இங்கு வந்த பெரும்பிடுகு முத்தரையர் என்னை அங்கு அனுப்பி வைத்தார், அரசே! காய்கறி விற்பவளாக இலவந்திகைப்பள்ளிக்குச் சென்று தங்களைக் கண்காணித்துக் கொண்டிருந்தேன்..."

"என் பொருட்டு எவருடைய உயிரையும் பணயம் வைத்து எவ்வித காரியமும் செய்ய வேண்டாம் என்று பலமுறை நான் சொல்லியிருந்தும் அவர் ஏன் அதைக் கேளாமல் இம்மாதிரி அநாவசியமான கண்காணிப்புகளைச் செய்கிறார்?" என்று கடுமையான குரலில் கேட்டான் பரமேசுவரவர்மன்.

பயந்து நடுங்கிய அநந்தமதி, "மன்னியுங்கள், அரசே! தங்களுக்காக மட்டுமல்ல, எங்களின் நல்வாழ்வுக்காகவும் நாங்கள் இத்தகைய உயிராபத்தான பணிகளில் ஈடுபட வேண்டியிருக்கிறது!" என்று குழறிச் சொன்னாள்.

"ஓ!... நீ ஆபத்துதவி இளங்காரிக்குடையானைப் பெற்றவள் அல்லவா? அப்படித்தான் பேசுவாய்!" —விரக்தியுடன் சொன்ன பல்லவ மன்னன் இளங்கோப் பிச்சியின் பக்கம் திரும்பி, "இங்கு என் இளவல் கோவிந்தவர்மன் வந்ததாகக் கேள்விப்பட்டேனே, அவன் இருக்கிறானா?" என்று வினவினான்.

அவன் குரலில் அவனையும் மீறிய ஓர் ஆவலும் பாசமும் கலவையிட்டதை அறிந்து உள்ளூற வியப்புற்ற இளங்கோப்பிச்சி, "இன்று காலையில் அவர் பெரும்பிடுகு முத்தரையருடன் சேர்ந்து பழையாறைக்குப் போயிருக்கிறார், அரசே!" என்றாள்.

"அவர்கள் ஏன் அங்கு போக வேண்டும்? எல்லாம் வீண் முயற்சி!" என்று முணுமுணுத்துக்கொண்டே எழுந்து நின்ற பரமேசுவரவர்மன் அவளைப் பார்த்து அமைதியாகக் கூறினான்: "இளவரசி! உன்னுடைய மாசற்ற நோக்கத்தையும், அதற்காக நீ மேற்கொண்ட பல துணிகர காரியங்களையும் நான் ஓரளவு அறிவேன். அவை அனைத்தும் விழலுக்கு இறைத்த நீராகப் போகப்போகிறதே என்பதை நினைக்கும் போது மெய்யாகவே என் மனம் வருந்திக் கலங்குகிறது. பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருந்த என் அருமைத்தம்பியை நீ வெளியேற்றிக் கொண்டுவராமல் இருந்திருந்தால் அவன் இன்னும் கொஞ்ச காலமாவது பகைவரின் பாதுகாப்பிலே பத்திரமாக உயிர் வாழ்ந்திருப் பான். அந்தப் பாதுகாப்பைவிட்டு அவன் வெளியே வந்ததால் இப்போது ஒவ்வொரு விநாடியும் உயிராபத்தை எதிர்நோக்கிக் கொண்டே ஊர் ஊராகச் சுற்றியலைய வேண்டிய பரிதாப நிலை அவனுக்கு ஏற்பட்டு விட்டிருக்கிறது. இதற்காகக்கூட நான் கவலைப்படவில்லை; எதையும் எண்ணிப் பாராமல் உணர்ச்சி வயப்படக்கூடிய அந்த அவசரக்காரன் உன்னை ஏதேனும் ஆபத்தில் சிக்கவைத்து, அதனால் அவனுக்கும் எனக்கும் தீராப் பழியை உண்டு பண்ணிவிடுவானோ என்று

எண்ணியே பெரிதும் கவலையுறுகிறேன். இவ்வளவையும் இங்கே சொல்வதற்குக் காரணம், நீங்களெல்லாம் ஏதோ ஒன்றைப் பெரிதாக எண்ணிக்கொண்டு அதன்மீது உங்களின் தீவிர முயற்சிகளைத் தொடர முற்படுகிறீர்கள். ஆனால், அந்த 'ஒன்றோ' நீங்கள் நினைப்பதுபோல் இருக்கவில்லை. அது வேறு முடிவில் இருந்து வருகிறது. இப்போதைக்கு நான் சொல்ல விரும்புவது இவ்வளவே."

அனலிடைப்பட்ட மெழுகுச் சிலையென உருவழிந்து நின்ற இளங்கோப்பிச்சி துயரம் தாளமாட்டாமல் விம்மிப் பொருமினாள்.

பரமேசுவரவர்மனின் கண்களும் நீர்ப் போர்வை யிட்டுப் பளிச்சிட்டன. அந்தப் பளபளப்பைத் தன் இமைகளைத் தாழ்த்தி மறைத்துக்கொண்ட அவன் அங்கிருந்து புறப்படத் திரும்பினான்.

கூனிக் குறுகி நின்றுகொண்டிருந்த அநந்தமதி சட்டென்று முன்னால் போய், "மன்னரவர்கள் இப்போது பெருவளநல்லூர்ச் சேதியக் கலைஞரின் இல்லத்துக்குத்தானே போகிறார்கள்?" என்று நடுங்கிய குரலில் கேட்டாள்.

"இல்லை; அவருடைய இல்லத்தில் இனியும் நான் தங்கியிருந்து அவருக்குச் சிரமம் தர விரும்பவில்லை."

"அவ்வாறானால், இப்போது மன்னரவர்கள்?..."

"எங்கே போகிறேன் என்று எனக்கே தெரியாது."

அவன் மெல்ல நடக்கலானான்.

"சளுக்கியத் தளபதி தங்களைப் பல்லவபுரத்துக்கு அழைத்த காரணம் என்ன என்று முத்தரையர் வந்து கேட்டால்?"—அநந்தமதி அவனைப் பின்தொடர்ந்து கொண்டே இவ்வாறு வினவினாள்.

"என்னைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காக, என்னுடைய உருவத்தை வரைந்து கொடுக்கும்படி, என்னிடமே கேட்டான் என்று சொல்!"

"மன்னரவர்கள் அதற்கு?..."

"மறுப்புச் சொல்லவில்லை."

"தாங்களே தங்கள் உருவ ஓவியத்தைத் தீட்டிக் கொடுத்து விட்டீர்களா?"

'ஆம்' என்று புன்னகை பூத்தான் பரமேசுவரவர்மன்.

"அப்படியானால் அரசரவர்கள்..."

"அங்கிருந்து உயிருடன் வெளியே வந்திருக்கிறேனே என்று ஆச்சரியப்படுகிறாயா? வரிப் புலிகள் வாழும் காட்டில் மாசற்ற மான்களும் இருப்பதுண்டு என்ற உண்மையை என் மனத்திலே பதியவைப்பதற்காக இறைவன் ஓர் அதிசயத்தை இன்று நிகழ்த்திக் காட்டியிருக்கிறான்!" —கழுத்தில் கிடந்த சவுக்கைக்காய் மாலையைக் கையில் எடுத்து வருடிக் கொண்டே தன்னை மறந்து சிரித்தான் பரமேசுவரவர்மன்.

இவ்வளவு நேரம் எழுதி நிறுத்திய சித்திரம்போல் எவ்வித ஆட்ட அசைவுமின்றி நின்றுகொண்டிருந்த அந்தச் சாலையோரப் பவழமல்லி மரம் ஏனோ இப்போது கலகலவேனக் குலுங்கிப் பூக்களை உதிர்த்தது.

தனக்குப் பின்னால் திக்பிரமையுற்று நின்று கொண்டிருந்தவர்களைப் பார்த்துப் புன்முறுவல் பூத்த பரமேசுவரவர்மன் அங்கிருந்து சாலையில் இறங்கி நடந்தான்.

அவனது நெடிய உருவம் இருளில் மறையும்வரையில் சிலையாகச் சமைந்து நின்ற அநந்தமதி சரேலெனத் திரும்பி இல்லத்துக்குள் விரைந்தாள். சித்திரத் திண்ணத் தூணில் வாடித் துவண்டு சாய்ந்துகொண்டிருந்த இளங்கோப்பிச்சியும் அவளைப் பின்தொடர்ந்தாள்.

"இளவரசி! நான் இப்போதே பெருவளநல்லூருக்குப் புறப்பட வேண்டும்" என்று சொல்லிக்கொண்டே தன் ஆடையணிகள் சிலவற்றை எடுத்து மூட்டை கட்ட ஆரம்பித்தாள் அநந்தமதி.

இதைக் கேட்டுத் திகிலடைந்த இளங்கோப்பிச்சி, "என்ன! இந்த இரவு நேரத்திலா புறப்படப் போகிறீர்கள்?" என்று அடைத்த குரலில் கேட்டாள்.

"ஆம், அம்மணீ! பல்லவ மன்னர் கடைசியாகச் சொல்லிச் சென்ற விவரத்தை நான் உடனடியாகச் சேதியக் கலைஞரிடம் போய்த் தெரிவித்தாக வேண்டும். அவர் மூலம் அதை முத்தரையரின் செவிக்கு எட்டும்படியும் செய்ய வேண்டும். இல்லையானால், ாம் எண்ணிப் பார்க்க முடியாத பல விபரீதங்கள் நிகழ்ந்துவிடும்போல் தோன்றுகிறது."

அநந்தமதி சொன்னதை ஒப்புக்கொள்ளும் பாவனையில் தலையசைத்துக்கொண்ட இளங்கோப்பிச்சி சற்று நேரம் எதைப்பற்றியோ ஆழ்ந்து சிந்திப்பவளாய் இருந்துவிட்டுப் பின் தணிந்த குரலில், "நீங்கள் சொல்வது சரிதானம்மா! அத்துடன் எனக்கும் ஒரு யோசனை தோன்றுகிறது..." என்று இழுத்தாள்.

"சொல்லுங்கள், இளவரசி!"

"சேதியக் கலைஞரிடம் நீங்கள் தெரிவித்தாகவேண்டிய அந்தச் சேதியை எங்கள் ஆபத்துதவி வீரனான சம்புவராயனிடம் சொல்லி அனுப்பினால் அதை அவன் உங்களைவிடச் சீக்கிரமாகவும் பத்திரமாகவும் எடுத்துப் போய்ச் சேர்த்துவிடுவான் அல்லவா?"

"இது நல்ல யோசனைதான்; ஆனால், சம்புவராயர் இதற்குச் சம்மதிக்க வேண்டுமே!"

"பழையாறைக்கு என்னை அழைத்துப் போவதற்காக வந்திருக்கும் அவன், இந்தச் சேதியைப் பெருவளநல்லூருக்கு எடுத்துச் செல்ல மாட்டான் என்கிறீர்களா?"

"ஆம், அம்மணீ! இன்று காலை முதலே உங்களைப் பழையாறைக்குப் பயணப்படும்படி அவர் வற்புறுத்திக் கொண்டிருக்கிறார். என்னிடம் சொல்லிக்கொண்டு புறப்படவேண்டும் என்பதற்காக, என் வருகையை

எதிர்பார்த்து அவரை நீங்கள் நிறுத்தி வைத்திருக்கிறீர்கள். இந்நிலையில், அவர் இப்போது பெருவளநல்லூருக்குப் போக ஒப்புக் கொள்வாரா?"

"இல்லை; நான் பயணப்படாமல் இருந்ததற்குக் காரணமே வேறு!" என்றுமெல்ல முணுமுணுத்த இளங்கோப் பிச்சி, "சரி; அந்தக் கவலை உங்களுக்கு வேண்டாம். நான் அவனைப் பெருவளநல்லூருக்குப் போய் வரும்படி செய்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே வாசல் பக்கம் சென்றாள்.

அநந்தமதி நினைத்தது போலவே ஆபத்துதவி சம்புவராயன் பெருவளநல்லூருக்குப் போக மறுத்து விட்டான். பழையாறைச் சோழரின் கட்டளையை நிறைவேற்ற வேண்டும் என்பதிலேயே அவன் பிடிவாத மாயிருந்தான். இளங்கோப்பிச்சியோ, தான் இடும் பணியை நிறைவேற்றிவிட்டு வந்தால்தான் அவனுடன் பழை யாறைக்குப் பயணப் பட முடியும் என்று உறுதியாகச் சொல்லிவிடவே, அவன் அங்கிருந்து அரைமனத்தோடு சேதியக் கலைஞரின் இல்லத்துக்குப் புறப்பட்டுச் சென்றான்.

ஓரளவு மன அமைதி பெற்ற அநந்தமதி உறங்கப் போய்விட்டாள். ஆனால் இளங்கோப்பிச்சி உறங்கியே அறியாதவள்போல் தன் அறையில் உட்கார்ந்து, விம்முவதும் பொருமுவதும் ஓங்கிப் பெருமூச்சு விடுவதுமாக நேரத்தைக் கரைத்துக் கொண்டிருந்தாள்.

இராச் சாமம் கழிந்து விடியற்போது மலரப் போகிறது என்பதற்கு அறிகுறியாக எங்கோ ஓர் ஒற்றைக் கோழி கூவும் ஒலி கேட்டது.

அந்தக் கோழியின் கூவலுக்காகவே காத்திருந்தவள் போல் துடிப்புற்று எழுந்தாள் இளங்கோப்பிச்சி. கண்ணீரால் நனைந்திருந்த தன் முகத்தைத் துடைத்துக்கொண்டு அடிமேல் அடி வைத்துப் போய் அநந்தமதி படுத்திருந்த அறைக்குள் எட்டிப் பார்த்தாள். அவள் அயர்ந்து உறங்கிக்

கொண்டிருக்கிறாள் என்பதை நிச்சயப்படுத்திக் கொண்டு தன் அறைக்கே திரும்பி வந்து, இரவெல்லாம் சிந்தித்தது போதாதென்று இப்போதும் சிறுபொழுது சிந்தனையில் ஆழ்ந்தாள். பிறகு தன்னையே உறுதிப்படுத்திக் கொள்கிறவள் போல் விரக்திப் புன்னகையொன்று பூத்துக் கொண்டவளாய், அங்கிருந்து வெளியேறும் நோக்கத்துடன், தான் இருந்த அறையைக் கடந்து, கூடத்து அறையில் காலெடுத்து வைத்தாள்.

அதே சமயம், அந்த இல்லத்தின் வெளி வாசல் கதவை யாரோ முரட்டுத்தனமாகத் தடதடவென்று தட்டும் சப்தம் கேட்டது.

**30**

# எதிர்பார்த்த பேரிடி!

'தேரின் மேவிய செழுமணி வீதிகள் சிறந்து, பாரில் நீடிய பெருமைசேர் பழம்பதி' யான பழையாறை நகரின் 'சோழமாளிகை' என்னும் பகுதியிலே அமைந்த அரண்மனை ஆலோசனைக் கூடத்தில்–

"இறுதியாகத் தங்கள் முடிவுதான் என்ன?" என்று அழுத்தந் திருத்தமாகக் கேட்டுக் கொண்டே தம் ஆசனத்தைவிட்டு எழுந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

"இவ்வளவு நேரம் நான் சொன்னவற்றையெல்லாம் என் முடிவான முடிவுகளாகவே நீங்கள் எடுத்துக்கொள்ளலாம்!" என்று அலட்சியமாகவே சொல்லித் தம் இருக்கையில் ஒருக்களித்துச் சாய்ந்தார் பழையாறைச் சோழர்.

இடுப்பின்மேல் இடக்கையை ஊன்றிக்கொண்டு அவரையே ஒருகணம் உற்றுப் பார்த்த முத்தரையர், "அதாவது, எங்கள் கூட்டுறவிலிருந்து கழன்று போய் சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் ஒட்டிக்கொள்ளப் போகிறீர்கள், அப்படித்தானே?" என்று அடித் தொண்டையில் விளித்தார்.

"அதுதான் எனது முடிவான முடிவு!" என்று சர்வ அலட்சியமாக விளம்பினார் சோழச் சிற்றரசர்.

"பல்லவ மன்னருடன் இனிப் பங்காளியாக இருந்து பயனில்லை என்பதால்தானே?"

"அதில் எள்ளத்தனையும் எனக்குச் சந்தேகமில்லை."

"பரமேசுவரவர்மர் இப்போது வில்வேலியால் வரவழைக்கப்பட்டுப் பல்லவபுரம் போயிருக்கிறார்

என்பதாலும், அங்கே அவர் எப்படியும் எதிரிகள் கையில் சிக்கிக் கொள்வார் என்பதாலும்தான் நீங்கள் இந்த முடிவுக்கு வந்திருக்கிறீர்களோ?"

"இல்லை, நண்பரே! இவ்வாறெல்லாம் நடக்கும் என்று எனக்கு ஏற்கனவே தெரியும். மண்டகப்பட்டுக் குகைக் கோயிலில் உங்களையும் பல்லவ இளவரசனையும் சந்தித்த அன்றே நான் இந்தத் தீர்மானத்துக்கு வந்துவிட்டேன்."

"பரமேசுவரவர்மரின் மேல் நீங்கள் நம்பிக்கை இழந்ததற்குக் காரணம் என்ன?"

"அவர் வயதில் மிக இளைஞர். வாழ்க்கையின் உண்மைகளை மேலோட்டமாகப் பார்ப்பவர். அரசியல் விவேக மற்றவர். நீதி—நேர்மை—தர்மம் நியாயம் என்ற பெயரிலே கோழைத்தனத்தை வளர்ப்பவர். அடிமைப்பட்டுக் கிடக்கும் மக்களின் துயரத்தை ஆற்ற வேண்டுமென்ற எண்ணமே இல்லாதவர். தாம் மட்டும் நிம்மதியாக இருந்தால் போதும் என்று நினைக்கும் சுயநலக்காரரர். புகலிடம் தேடிப் புகுந்திருக்கிறோமே என்பது பற்றிச் சிறிதும் வெட்கப் படாதவர். இவை எல்லாவற்றுக்கும் மேலாக அளவு மீறிய தெய்வ பக்தியால் தம்மிடமிருந்த கொஞ்ச நஞ்ச வீர உணர்ச்சியையும் வழித்தெறிந்துவிட்டு நிற்பவர். தமக்காக மற்றவர்கள் செய்யும் நன்முயற்சி காரியங்களுக்குக்கூட ஊக்கமோ உற்சாகமோ உடன்பாடோ தராமல் அலட்சியப் படுத்திவிட்டு ஒதுங்கிப் போக நினைப்பவர். ஆட்சி பீடத்துக்குச் சிறிதும் ஒவ்வாத துறவு மனப்பான்மை கொண்டவர். இத்தகைய ஒரு வெறும் மனிதரை யார்தாம் நம்ப முடியும்? என் மன மாற்றத்துக்கு இவையே காரணங்கள்."

பல்லவ மன்னன்மீது பழையாறைச் சோழர் வரிசைப் படுத்திக் காட்டிய இந்தக் குணக் கேடுகள் அனைத்தும் தம்மையே குறிப்பிட்டுச் சொன்னாற்போல் மனம் குமுறிக் கொந்தளித்த பெரும்பிடுகு முத்தரையர், தீயுருண்டைகளாகச்

சிவந்த தன் கண்களை உருட்டிப் புரட்டி அவரை விழித்துப் பார்த்தவாறு, "ஆமாம்; சளுக்கிய விக்கிரமாதித்தனே உங்களைத் தன்னுடன் வளைத்துக்கொள்ள முயற்சி செய்தானா? அல்லது நீங்களே அவனிடம் போய்ச் சரணடைந்தீர்களா?" என்று வெறித்த குரலில் வினவினார்.

கடகடவென்று நகைத்த பழையாறைச் சோழர் செருக்குடன் தலைநிமிர்ந்து சொன்னார்: "விக்கிரமாதித்தனுக்கும் எனக்கும் இதுவரையில் யாதொரு தொடர்பும் ஏற்படவில்லை. பல்லவபுரத்தில் தங்கியிருக்கும் தளபதி வில்வேலியிடம் நானே நேரில் சென்று எனது இந்த மனமாற்றத்தை மிகத் தாழ்மையாகத் தெரிவித்தேன். மகிழ்ந்துபோன அவன் உடனே என் விண்ணப்பத்தை ஏற்றுக்கொண்டான். உறையூரில் இருக்கும் விக்கிரமாதித்தன் இன்னும் சில தினங்களில் பல்லவபுரத்துக்கு விஜயம் செய்யப் போகிறான் என்றும், அப்போது அவனிடம் இதுபற்றிக் கலந்துபேசி ஓர் உயர்வான முடிவுடன் எனக்கு அழைப்பு அனுப்புவதாகவும் உறுதியளித்தான்."

அனற் சுவாலையால் சுட்டுப் பொசுங்கியவர்போல் அப்படியும் இப்படியுமாகத் தம் உடம்பை நெளித்து முறுக்கிய முத்தரையர், "ஓகோ! நேற்றைய தினம் இந்த உறுதி மொழியை வாங்கிக்கொண்டுதான் பல்லவபுரச் சாலையிலே சளுக்கிய வீரர்களின் பக்கத் துணையோடு அத்தனை படுவேகமாகப் பறந்து வந்தீர்களோ?" என்று சினம் செறிந்த ஏளனத்துடன் கேட்டார். "பழம்பெரும் சூரிய குலத்தில் தோன்றியவர் என்றும், பார் புகழ்கொண்ட மனுநீதிச் சோழன், கரிகால் பெருவளத்தான் ஆகியோரது பரம்பரையில் வந்தவரென்றும் அடிக்கடி பெருமை பேசிக்கொள்ளும் நீங்கள், கேவலம் இந்தக் கையகலச் சிறுநாட்டின் அரசு கட்டிலை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டும் என்பதற்காக, ஆதிக்க வெறி கொண்ட அந்நியனொருவனிடம் போய் மண்டியிட்டு உறவு கொள்ளத் துணிந்தது பற்றிக் கொஞ்சமும் வெட்கப்படாமல் இருப்பது

எனக்கு விந்தையாக மட்டுமல்ல; வேதனையாகவும் இருக்கிறது.”

சடாரெனத் துள்ளி எழுந்தார் பழையாறைச் சோழர். “ஆஹாஹ்ஹா! வெட்கமாம், வேதனையாம்! எதற்காக நான் வெட்கமும் வேதனையும் படவேண்டும்? சளுக்கிய விக்கிரமாதித்தன் ஓர் அந்நியனென்றால் இந்தப் பல்லவ பரமேசுவரவர்மரும் எனக்கு அந்நியர்தாம். இவருடைய மூதாதையர் ஸ்தாபித்து வைத்த பல்லவ சாம்ராஜ்யம் எங்கிருந்து வந்ததாம்? எல்லாம் எங்கள் சோழ-பாண்டியரது சொத்தைப் பறித்துத்தானே பேரரசு கண்டான் சிம்ம விஷ்ணு? ஒரு காலத்தில் சாம்ராட்டுகளாக விளங்கிய நாங்கள், இந்தப் பல்லவர்களின் தலையெடுப்பால் சிற்றரசர் நிலைக்குத் தாழ்ந்து, கடந்த பல தலைமுறைகளாக அவர்களுக்குக் கப்பம் கட்டிச் சேவகம் செய்கிறோமே, இதற்காக அல்லவா நான் வெட்கமும் வேதனையும் கொள்ள வேண்டும்? பல்லவ நாட்டைக் கைப்பற்றியிருக்கும் விக்கிர மாதித்தனை விரட்டிவிட்டு மீண்டும் பரமேசுவரவர்மரைச் சக்கரவர்த்தியாக்கிவிட்டால் மட்டும் என்னுடைய நிலை உயர்ந்து விடுமா? அப்போதும் இந்தப் பல்லவரின் கீழ் நான் குறுநில மன்னனாகத்தானே இருந்தாக வேண்டும்? அப்படியிருப்பதற்காக, இப்போதுள்ள ஒரு பலம் பொருந்திய மன்னனைப் பகைத்துக் கொள்வதும் அதனால் பல தொல்லைகளை ஏற்றுக்கொள்வதும் பைத்தியக்காரத்தனம் அல்லவா? இன்றைய அரசியல் போக்கில் என்னுடைய திட்டம் வெற்றி பெற்றால், நானேகூடப் பழையாறைச் சிற்றரசன் என்ற நிலை மாறி, சோழ சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி என்னும் பெருமைக்கு உயர்ந்தாலும் உயரலாம். அந்த அரிய சந்தர்ப்பத்தை நான் ஏன் இழக்கவேண்டும்? வெட்கமாம், வெட்கம்! யாருக்கு வெட்கம்? யாருக்கு வேதனை? வழி வழியாகச் சிற்றரசர்களாகவே இருந்து, பேரரசர்களுக்குத் திறை செலுத்திப் பழக்கப்பட்டுப் போன

உங்களைப் போன்றவர்களுக்குத்தான் அது வெட்கமாகவும் வேதனையாகவும் இருக்கலாம்; ஆனால், பாராண்ட பரம்பரையிலே வந்த எனக்கு அதில் எள்ளத்தனை இழிவு தாழ்வும் இல்லை.''மிடுக்கும் செருக்குமாக இவ்வாறு பொழிந்து தள்ளிய அவர் தம் ஆசனத்தில் போய்க் கம்பீரமாக அமர்ந்தார்.

முத்தரையரின் முகம் சுண்டிச் சுருங்கியது. 'இந்த இருதயமற்ற மனிதரைப் பற்றியா அன்று சேதியக் கலைஞர் அத்தனை உயர்வாகப் பேசினார்? இவரைப் புரிந்து கொள்வது கடினம் என்று சொன்னாரே, இனிப் புரிந்து கொள்ள என்ன இருக்கிறது?' என்று எண்ணி உள்ளூறப் புழுங்கி மறுகிய அவர், "அது சரி, அன்பரே! உங்களுடைய இந்தச் சுயநல முடிவினால் உங்களிடமுள்ள மண்ணளவும் பொன்னளவும் ஆட்சியதிகார அளவும் விரியலாம், பெருகலாம், உயரலாம். ஆனால் உங்கள் சமய வாழ்வு சீரழியப் போகிறதே, அதைப்பற்றி நீங்கள் சிந்தித்துப் பார்த்தீர்களா? விக்கிரமாதித்த வல்லபன் தன் தம்பி மகளான உத்தமசீலி என்பவளைக் கொண்டு இந்நாட்டிலே செய்யவிருக்கும் காரியம் என்ன என்பதை வேங்கி மன்னனது ஓலையின் வாயிலாக அறிந்திருக்கும் நீங்கள் அதுபற்றி எண்ணிப் பார்க்கவே இல்லையா? தலைமுறை தலைமுறையாகச் சைவசமயத்தை ஏற்றுப் போற்றிப் பேணி வரும் நீங்கள், -சைவப் பணியே தம் பிறவியின் நோக்கமாக வாழ்ந்து மறைந்த மணிமுடிச் சோழர் என்னும் செங்கதிர்ச் சென்னியின் செல்வக் குமாரரான நீங்கள், -சைவத்துக்காகச் சர்வ பரித்தியாகமும் செய்து வரும் பாண்டியப் பேரரசி மங்கையர்க்கரசியின் சகோதரரான நீங்கள், -சமணராக இருந்து பின் சைவராக மாறி, ஞானப் பிள்ளையாம் திருஞானசம்பந்தப் பெருமானைக்கொண்டு சமணருடன் அனல் வாதம் புனல் வாதம் நடத்தச் செய்து சைவத்தைத் தம் நாட்டிலே குன்றிலிட்ட விளக்காக்கி வைத்திருக்கும்

பாண்டியப் பேரரசரான நின்றசீர் நெடுமாறரை மைத்துனராகக் கொண்ட நீங்கள், -இங்கே விக்கிரமாதித்த னின் ஆட்சி வேரூன்றினால் என்ன நடக்கும் என்பதை யோசித்துப் பார்க்கவே இல்லையா?" என்று உணர்ச்சிக் கரையேறிய குரலில் விம்மிக் கேட்டார்.

இடி இடிப்பது போன்ற கடகடவென்ற சிரிப்பொலி— பழையாறைச் சோழர்தான் அப்படிச் சிரித்தார். "என் அருமை நண்பரே! சைவத்தைப்பற்றியும் அதன் எதிர்கால வாழ்வைப் பற்றியும் எனக்கு நினைவூட்ட நீங்கள் யார்? வழிவழியாகச் சமணராக இருக்கும் நீங்களா அதை என்னிடம் வந்து சொல்வது? சமயத்தின் பெயரால் எனது மாட்சி மிக்க எதிர்காலத்தைச் சாய்க்கப் பார்க்கிறீர்களோ?"

அவமானத்தால் உடல் குன்றிப்போன முத்தரையரின் முகம் பாறையாக இறுகிக் கறுத்தது. பேச்சிழந்த நிலையில் சற்று நேரம் மௌனமாயிருந்தே அவர் எப்படியோ தம்மைச் சமாளித்துக்கொண்டு இறுதி முயற்சியொன்றில் ஈடுபட முனைகிறவர்போல் தயக்கத்துடன் தலைநிமிர்ந்து, "சரி, அன்பரே! இதெல்லாம் உங்கள்வரை நியாயமாகவே இருக்கலாம். ஆனால், நீங்கள் உயிரினும் மேலாக மதித்து வரும் உங்களது செல்வக் குமாரி இளங்கோப்பிச்சியின் எதிர் காலத்தைப்பற்றிய நிலை என்ன? உங்கள் மனமாற்றத்தினால் அவளுடைய வாழ்க்கையிலே ஏற்படக்கூடிய பயங்கர அதிர்ச்சிகளையாவது சற்றுச் சிந்தித்துப் பார்த்தீர்களா?" என்று அமைதியாகக் கேட்டார்.

பழையாறைச் சோழரின் முகம் திடீரென்று வெளிறியது. ஆசனத்தில் சாய்ந்து நெளிந்த அவர் திடுமென்று எழுந்து நின்று, "ஓ!... என் மகளுக்கும், பல்லவ இளவரசனான கோவிந்தவர்மனுக்கும் உள்ள தொடர்பைக் காட்டி என்னை உங்கள் வழியில் திருப்பப் பார்க்கிறீர்களா? அதைப் பற்றியெல் லாம் நான் சிந்தித்ததோடு மட்டுமல்ல, சிறப்பானதோர் ஏற்பாட்டையுமே செய்து முடித்து வைத்திருக்கிறேன்.

அதனால்தான் என் மகளை ஆலம்பாக்கத்திலிருந்து உடனே பழையாறைக்கு அழைத்து வந்து சேர்க்கும்படி ஆபத்துதவி சம்புவராயனையும் அனுப்பி வைத்திருக்கிறேன். இதோ பாருங்கள், இந்த ஓலையை!" என்று ஏளனச் சிரிப்புடன் கூறிக்கொண்டே தம்மிடமிருந்த ஓர் ஓலை நறுக்கை எடுத்து நீட்டினார்.

அவ்வோலையை வாங்கிப் படித்த முத்தரையரின் முகம் விகாரமாகி வறண்டது. பரபரப்புடன் நிமிர்ந்து, "நண்பரே! இது உண்மையா? உண்மைதானா?" என்று நாக்குழற நடுங்கிக் கேட்டார்.

# 31

# அக்கினி உறவு

கரடிகைப் பறை முழங்குவதுபோல் கடகடவெனச் சிரித்த பழையாறைச் சோழர், "உண்மைதான் நண்பரே! முற்றும் உண்மை!" என்றார்.

கையிலிருந்த ஓலை நறுக்கின்மீது மீண்டும் தம் பார்வையை அவசரமாக ஓட்டிய பெரும்பிடுகு முத்தரையர், "என்னால் இதை நம்பவே முடியவில்லையே!... சளுக்கிய விக்கிரமாதித்தனின் மகனான விநயாதித்தனுக்கா தங்கள் குமாரி இளங்கோபிச்சியைத் திருமணம் செய்து தர முடிவு செய்திருக்கிறீர்கள்?" என்று சொற்கள் சிதறிக் குழறக் கேட்டார்.

"ஆமாம்; காஞ்சிக் கோட்டையைக் காவல் புரிந்துவரும் அந்த வீரச் சளுக்கிய இளவரசனுக்குத்தான் என் மகளை வழங்க நிச்சயித்திருக்கிறேன்!" என்று பெருமை வழியச் சொன்னார் பழையாறைச் சோழர்.

முத்தரையரின் முகம் அனற் பிழம்பாகச் சிவந்தது. வெறுப்பும் வேதனையும் திமிறலிட அவரை வெறித்து நோக்கி, "பல்லவ இளவரசர் கோவிந்தவர்மருக்கே சோழ இளவரசியார் சொந்தம் என்பது நாடறிந்த விஷயமாக நிச்சயிக்கப்பட்டு விட்டபின், அதில் திடீரெனக் குறுக்கிட்டு இப்படி ஒரு முடிவுக்கு வர நீங்கள் எப்படித் துணிந்தீர்கள்?" என்று மிகுந்த ஆத்திரத்துடன் வினவினார்.

"எண்ணங்களை இன்பமான எதிர்காலத்தின் மேல் திருப்ப முயலும்போது எத்தகைய துணிவுகளும் தாமாகவே

பிறந்துவிடும்!" — சாவதானமாகச் சொல்லிக்கொண்டே சாளரத்துப் பக்கம் போய் எட்டிப் பார்த்துவிட்டுத் திரும்பிய பழையாறைச் சோழர் சட்டென்று நிமிர்ந்து, "இந்தத் துணிவு எப்படி வந்ததென்று கேட்பதைவிட ஏன் வந்ததென்று கேளுங்கள், நண்பரே!" என்றார் இரைந்த குரலில். "எனக்கு இருக்கும் ஒரே செல்வமான என் அருமை மகளைப் பல்லவ இளவரசனுக்குத் தாரை வார்த்துத் தரவே நான் பெரிதும் விரும்பினேன். என்னுடைய அரசியல் நலன்கள் இந்த உறவினால் வளம்பெறும் என்ற ஆசை ஒருபுறம் இருந்தாலும், என் மகளின் இன்ப வாழ்க்கை ஒன்றையே அதில் பிரதான நோக்கமாகக் கொண்டிருந்தேன். அதன் பொருட்டே சளுக்கியப் படையெடுப்பின்போது பல்லவருடன் சேர்ந்து பணியாற்றியும், பிறகு வெற்றி பெற்ற சளுக்கியரோடு வளைந்து போகாமல் தோல்வியுற்ற பல்லவ மன்னருக்குத் துணையாக வும் இருந்து வந்தேன். எனது இந்த உறுதிப்பாடான நோக்கத்தை ஒரே விநாடியில் தகர்த்துவிட்டான் உங்கள் பல்லவ இளவரசனான கோவிந்தவர்மன். ஆம், நண்பரே! பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருந்த அவன், என் மகளின் துணைகொண்டு வெளியே வந்த விஷயத்தைத்தான் குறிப்பிடுகிறேன். அன்றொரு நாள் மண்டகப்பட்டுக் குகை கோயிலில் அவன் அவ்விஷயத்தைத் தெரிவித்த அக்கணமே அவன் மீது நான் வைத்திருந்த உயர்வான எண்ணம் அனைத்தும் உலர்ந்து போயின. ஒரு பெண்ணின் துணையால் சிறையிலிருந்து தப்பி வருபவன் நிச்சயமாக வீரனாயிருக்க முடியாது. அப்படிப்பட்ட ஒரு கோழை இளவரசனிடம், வீர சோழிய பரம்பரையில் உதித்த வீராங்கனையான என் மகளை ஒப்படைக்கவும் இயலாது. உலகமறியா இளம் பெண்ணின் மனத்திலே காதல் என்னும் பொய்யான மயக்கத்தை ஏற்றி அவளைத் தன் காரிய சாதனைகளுக்காகப் பயன்படுத்திக் கொள்ளும் ஒரு சுயநலக்காரனாகவே அவனைத் தீர்மானித்து விட்டேன். என்

அன்பு மகள் இந்த அரண்மனையிலிருந்து வெளியேறி ஆலம்பாக்கம் என்னும் சிற்றூரின் சிறுகுடிலில் போய் இருந்து வருவதற்குக் காரணகர்த்தனே அவன்தான் என்றும் எனக்குத் தோன்றுகிறது. தன் சுயநலத் திட்டங்களுக்குத் தந்திரமாக அவளைப் பயன்படுத்திக் கொள்ளவே அப்படி ஒரு சதி செய்திருக்கிறான் அவன். அது மட்டுமல்ல; பெற்று வளர்த்த தந்தையாகிய என்மீது சிறிதும் கவலை கொள்ளாது—என்னைப் பார்க்க வேண்டுமென்ற பாச உணர்ச்சிகூடத் துளியுமின்றி—அவனைப்பற்றியும் அவனது நலன்களைப் பற்றியுமே சதா நேரமும் எண்ணிக் கொண்டிருக்குமாறு அவள் மனத்தை மாற்றி வைத்திருப்பவனும் அவனே என்று இப்போது எனக்குப் படுகிறது. எனவேதான் அந்தச்சுயநலக் காரக் கோழையின் கையில் என் மகளை ஒப்படைக்க விரும்பாமல், அவனிடமிருந்து அவளை வெட்டிப் பிரித்து, மாவீர விக்கிரமாதித்தனின் மைந்தனான விநயாதித்தனுக்கு வழங்கிவிட முடிவு செய்திருக்கிறேன். இந்த ஓலை தளபதி வில்வேலியால் எழுதப் பெற்றதாகும். சளுக்கியச் சக்கரவர்த்தி யின் பேராதிக்கத்தை நான் ஏற்றுக் கொள்வதாகத் தெரிவித்து விட்டு வந்தேன் அல்லவா? அதை உறுதிப்படுத்தும் வகையில், 'அவனது மைந்தனுக்கு என் மகளை மணம் செய்து தர இயலுமா?' என்று இதில் எழுதிக் கேட்டிருக்கிறான். நானும் அதற்கு என் மனப்பூர்வமான ஒப்புதலை இன்று கொடுத்தனுப்பி விட்டேன்.

வியப்பால் வெலவெலத்து நின்ற முத்தரையர், "இது அபத்தமான வீண் பழி! அவசரப்பட்டுச் செய்த கொடுமை யான முடிவு!" என்று கூவினார். "இந்தப் பழையாறை அரண்மனையிலிருந்து சோழ இளவரசியை ஆலம்பாக்கத் துக்கு அனுப்பி வைத்ததே நீங்கள்தாம். சளுக்கியர்களால் ஏதேனும் தொல்லைகள் ஏற்படுமோ என்று அஞ்சியே அவ்வாறு செய்தீர்கள். பல்லவ இளவரசர் அப்போது சிறைப்பட்டிருந்ததால், அவள் இந்த அரண்மனையிலிருந்து

வெளியேற அவர் எவ்வகையிலும் காரணகர்த்தரா யிருந்திருக்க முடியாது; அது முற்றும் தவறான கற்பனை."

"நானும் முதலில் அப்படித்தான் நினைத்தேன், நண்பரே! ஆனால், பழையாறையிலிருந்து என் மகளைப் பாதுகாப்பான வேறோர் இடத்துக்கு அனுப்ப வேண்டும் என்று நான் தீர்மானிக்கவில்லை; அவளே அந்த யோசனையை வெளியிட்டு என் அனுமதியைப் பெற்றுக் கொண்டு போய்விட்டாள். தந்தையை பிரிந்து ஒரு நாளும் தனியே இருந்தறியாத அவள் திடீரென்று அப்படிப் போகக் காரணம் என்ன? சிறையிலிருந்து கோவிந்தவர்மன்தான் தனது ஆபத்துதவி வீரனான இளங்காரிக்குடையானின் மூலம் அந்த யோசனையைத் தெரிவித்து அவளை இந்த அரண்மனையிலிருந்து வெளியேறச் செய்திருப்பான் என்று எனக்குத் தோன்றுகிறது."

"சரி; நீங்கள் நினைப்பதுபோலவே நடந்திருந்தாலும் அதில் என்ன தவறு இருக்கிறது? தான் மனப்பூர்வமாகக் காதலிக்கும் ஒருவனை—அவனுக்கு நேர்ந்த இக்கட்டிலிருந்து—காப்பாற்ற முற்படுவது தமிழ்க்குல வீரப் பெண்மணிகளின் வழிவழிக் குணம்தானே? அந்த வகையில் உங்கள் அருமைச் செல்வி ஆற்றிய மகத்தான சாதனைக்காக நீங்கள் பெருமையல்லவா கொள்ளவேண்டும்?"

"ஆமாம், நண்பரே! என் மகளின் அறிவார்ந்த தீரச் செயலால்தான் பல்லவ இளவரசன் சிறையிலிருந்து தப்பிவர முடிந்தது என்னும் சேதியைக் கேட்டு மெய்யாகவே நான் மனம் பூரித்து மகிழ்ந்தேன். ஆனால், அந்தச் சுயநலக்காரனின் அடுத்த திட்டத்தை அறிந்ததுமே எனக்கு ஏற்பட்ட பெருமையும் மகிழ்ச்சியும் போன இடம் தெரியாமல் மறைந்து போயின. நான் விழித்துக்கொண்டேன்."

"அது என்ன திட்டம்? எனக்குத் தெரியாதே!"

"உங்களுக்குத் தெரியாதோ?" என்று அடித் தொண்டையில் கடுகடுத்துக் கேட்ட பழையாறைச் சோழர் சினம்

கொப்பளிக்கக் கூறினார்: "கோழையிலும் கோழையான அந்த கோவிந்தவர்மன், பல்லவபுரம் சிறையிலே அடைந்து கிடக்கும் தன் பெரிய அன்னை காடவன் மாதேவியை மீட்பதற்கு என் அன்புச் செல்வி இளங்கோப்பிச்சியை ஒரு கருவியாகப் பயன்படுத்திக்கொள்ளத் திட்டமிட்டிருக்கிறான். புஜபல பராக்கிரமத்தைக் காட்டிச் சாதிக்க வேண்டிய ஒரு மாபெரும் காரியத்தை, ஏதுமறியாத சிறுபெண்ணொருத்தியின் உயிரைப் பணயம் வைத்து நிறைவேற்றிக்கொள்ள முற்படுகிறவன் எவ்வளவு பெரிய சுயநலக்காரனாகவும் இருதயமற்றவனாகவும் இருக்கவேண்டும்! அவனது பொய்யான காதலுக்காக என் மகள் அந்தக் காரியத்தைச் செய்ய முனைந்து சளுக்கியரிடம் சிக்கிக் கொண்டால் அவளுடைய கதியும் என் கதியும் என்ன ஆகும்? இத்தகையதொரு தன்னலக்காரனை நம்பி என் மகளைத் தாரைவார்த்துத் தரலாமா? எனவேதான் மேற்சொன்ன முடிவுக்கு வந்திருக்கிறேன்."

முத்தரையர் இதைக் கேட்டுக் கலகலவெனச் சிரித்தார். "என்ன அற்பமான காரணம்! துரோகிகள் தாம் செய்யும் இழிந்த காரியங்களுக்கு இம்மாதிரி அர்த்தமற்ற காரணங்களைத்தான் தேடிப் பிடித்துக்கொள்வார்கள் போலும்!" என்று அலட்சியமாகக் கூறி மீண்டும் சிரித்தார் அவர். "பல காலம் கட்டிக் காத்து வந்த நம் பெருமை மிக்க நட்பை இன்று வெட்டிக்கொண்டு நிற்கும் என் இனிய நண்பரே! உங்களுக்கு இறுதியாக ஒன்று சொல்ல விரும்புகிறேன்; விதியரக்கன் விரித்திருக்கும் வலை நோக்கி நீங்கள் நடை போடுகிறீர்கள்; அதன் விளைவை விரைவிலே அநுபவிக்கவும் தயாராயிருங்கள்!" —தம் கையில் இருந்த ஓலை நறுக்கை வீசியெறிந்துவிட்டு விறைப்பாகத் திரும்பி நடந்தார்.

கற்சிலையாகச் சமைந்து நின்ற பழையாறைச் சோழர் ஓரடி முன்சென்று, "சந்திரலேகைச் சிற்றரசே, சற்று நில்லுங்கள்!" என்று உரத்த குரலில் கர்ஜித்தார்.

முத்தரையரோ அவரைத் திரும்பியும் பார்க்காமல் முதுகைக் காட்டிக்கொண்டு அப்படியே நின்றார்.

"மாமன்னன் விக்கிரமாதித்தனோடு நான் உறவு பெறச்செய்த முடிவை இனி மாற்றிக்கொள்ளப் போவதில்லை. ஆனால், அதற்காகத் தலை மறைவாயிருக்கும் பரமேசுவரவர் மரையோ, அவரது இளவல் கோவந்தவர்மனையோ, அவர்களைச் சார்ந்து நிற்கும் உங்களையோ சாளுக்கியர் களிடம் காட்டிக் கொடுத்துவிடுவேன் என்று மட்டும் கனவிலும் கருதாதீர்கள். விதிவசத்தால் அப்படி ஏதாவது நேர்ந்தாலும் அதற்கு நான்தான் காரணகர்த்தனா யிருப்பேனோ என்று ஐயுறாதீர்கள். இத்தனை காலம் உங்களுடன் நட்புக் கொண்டு பழகி வந்ததால்தான் இத்தகையதொரு வாக்குறுதியை உங்களுக்கு அளிக்கிறேன். சென்று வாருங்கள்."

சட்டென்று திரும்பிய முத்தரையர், அங்கே ஓங்கி உயர்ந்து நின்றுகொண்டிருந்த பழையாறைச் சோழரின் கண்கள் இரத்தமாகச் சிவந்து நீரிலே நீந்திப் பளிச்சிடுவதைக் கண்டு அதிர்ச்சியுற்றார். பிறகு, தம் நெஞ்சை அழுத்திப் பிடித்துக்கொண்டு அங்கிருந்து தள்ளாடித் தள்ளாடி நடந்தார்.

## 32

# நவகண்ட காணிக்கை

பழையாறை நகருக்கு வடப்புறத்தே நொப்பும் நுரையுமாகச் சுழித்தோடிய அரிசிலாற்றங்கரையின் புதர் மண்டிய சூழலில் அமைந்திருந்த ஒரு காடுகிழாள் கோயிலுக்குப் பின்னால் பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனும் ஆபத்துதவி இளங்காரிக்குடையானும் அமர்ந்து எங்கோ தம் பார்வையைச் செலுத்திக் கொண்டிருந்தனர்.

சலிப்புடன் முகத்தைச் சுளித்துப் பெருமூச்சு விட்ட கோவிந்தவர்மன், "என்ன இது? சோழ மாளிகைக்குப் போன முத்தரையர் இன்னமும் திரும்பி வரக் காணோமே!" என்று முணுமுணுத்தான்.

மௌனமாக எழுந்து நின்ற இளங்காரிக்குடையான் தன் நெற்றி மேட்டுக்குமேல் இடக்கை விரல்களை வைத்துச் சூரிய ஒளியை மறைத்தவாறு அப்படியும் இப்படியுமாகச் சாய்ந்து நிமிர்ந்து தொலைதூரத்துக்கு அப்பால் பார்வையைச் செலுத்திப் பார்த்துவிட்டுத் திரும்பி, "வருகிற நேரம்தான் இளவரசே, வந்துவிடுவார்!" என்று சொல்லிக்கொண்டே அமர்ந்தான்.

நேற்றுக் காலை ஆலம்பாக்கத்திலிருந்து புறப்பட்ட அவர்கள், இன்று பகற்பொழுதுக்குப் பின் பழையாறைநகர் எல்லையை அடைந்தார்கள். நேற்றைய தினம் பல்லவபுரச் சாலையிலே சளுக்கிய வீரர்களின் துணையோடு பழையாறைச் சோழர் போனதைப் பார்த்ததாலும், இங்கே சோழ மாளிகையைச் சுற்றிச் சளுக்கியப் படைகள் நிறுத்தி

வைக்கப் பெற்றிருந்ததாலும் கோவிந்தவர்மனைச் சோழ அரண்மனைக்கு அழைத்துப் போக முத்தரையருக்கு விருப்பமில்லை. எதிரிப்படை வீரர்களாலோ, அல்லது புதிராக இருக்கும் சோழச் சிற்றரசராலோ அவனுக்கு ஏதேனும் சங்கடம் நேரலாம் என்று எண்ணிய அவர், அவனை இந்த அரிசிலாற்றங்கரையிலே இருக்கச் சொல்லி விட்டுத் தாம் மட்டுமே பழையாறை அரண்மனைக்குப் போயிருக்கிறார். ஆனால், அவர் அங்கு போய் இவ்வளவு நேரமாகியும் திரும்பிவராமலிருக்கவே அவனுக்குச் சலிப்பு ஏற்பட்டுவிட்டது. உள்ளூற ஒருவிதத் திகிலும் உண்டாகியது. என்ன ஆனாலும் ஆகட்டுமென்று சோழ அரண்மனைக்குப் புறப்பட்டுப் போகலாமாவெனத் துடிப்படைந்த அவன், பொறுத்தது பொறுத்தோம்; இன்னும் சற்றுநேரம் பொறுத்துப் பார்ப்போம்' என்று எண்ணித் தன் கவனத்தை வேறு பக்கம் திருப்ப முயன்றான்.

அந்த அழகிய நகரின் மேற்கொடியிலே நாணயங்கள் அச்சிடும் அஃக சாலையொன்று அமைந்திருக்க, அதற்கு அப்பால் பிரசித்திபெற்ற பழையாறை வடதளியின் பொற்கும்பம் கதிரவனின் ஒளியில் தகத்தகாயமிட்டுக் கொண்டிருந்தது தெரிந்தது. அவ்வடதளிக்கு அப்பால் பட்டீச்சுர கோயிற் கோபுரம் மேகப் பொதிகளிடையே குலவி நின்றதும் இலேசாகப் புலனாகியது. அஃக சாலையையும், பட்டீச் சுரத்தையும் தன் பார்வையிலிருந்து ஒதுக்கிய கோவிந்தவர்மன், அந்தப் பழையாறை வடதளியின் பொற் கும்பத்தை மட்டும் விழியசைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அதைப் பார்க்க பார்க்க, அவனது பல்லவ குலத்தின் பெருமை மிக்க மாமணியாய் விளங்கி மறைந்த மகேந்திரவர்மனின் அருளாட்சியும், அந்த ஆட்சிக் காலத்தில் நடந்த ஓர் அற்புத சம்பவமும் அவன் நினைவைத் தொட்டன.

பூவுலக மாந்தருக்குப் பக்தி மார்க்கத்தை வகுத்துக் கொடுப்பதற்கென்று அவதரித்த ஞானமாமலையான

திருநாவுக்கரசர் இந்தப் பழையாறை வடதளிப் பெருமானைப் பாடிப் பரவிப் போற்றுவதற்கென வந்த போது இங்கிருந்த சிவலிங்கத்தைச் சமணர்கள் மறைத்து அவரை ஏமாற்றத்துக்கு உள்ளாக்கியதையும், அதனால் மனம் நொந்து வருந்திய அவர், தம் கண்ணில் காட்டாது மறைக்கப்பெற்ற சிவலிங்கத் திருமேனியைக் கண்டு வணங்காமல் திரும்பேன் என்று அறப்பிடிவாதம் செய்ததையும், அதனையறிந்து அப்போ திருந்த பழையாறைச் சோழனொருவருன் ஓடோடி வந்து அடிகளாரின் துயர் நீக்கியதோடல்லாமல் அந்த வடதளிப் பெருமானுக்கு சிறந்த விமானம் ஒன்றும் எடுப்பிக்கப் பண்ணியதையும் எண்ணி நெஞ்சம் குளிர்ந்து வியந்த அவன், “ஆதியைப் பழையாறை வடதளிச் சோதியைத் தொழுவார் துயர் தீருமே!...” என்று தன் வாய்க்குள்ளாகவே ஓசையுடன் மெல்ல முணுமுணுப்பினூடே அவனுக்கு இன்னொரு நினைப்பும் எழுந்தது. ஆந்திர இளவரசி உத்தமசீலியின் சிவிகையிலிருந்து எடுத்துப் படித்துப் பார்த்த அந்தப் பட்டோலையை ஏனோ அவன் இப்போது நினைத்துக் கொண்டான். அதை நினைக்கவே அவனுக்குக் கசப்பா யிருப்பதுபோல் அங்குமிங்குமாகத் திரும்பி முகத்தைச் சுளித்தான். பிறகு, அந்தக் கசப்பான நினைப்பைத் தன் மனத்திலிருந்து அலம்பிக் கரைக்க வேறோர் இனிய நினைவை வலுக்கட்டாயமாகக் கொண்டுவர முயற்சி செய்தவன் அதில் உடனே வெற்றி பெற்றுவிட்ட மாதிரி அழகாகப் புன்முறுவல் பூத்தான்.

அது என்ன, அத்தனை சுவையான நினைவு?...ஓ!...தன் இன்னுயிர்க் காதலி இளங்கோப்பிச்சியைத் தனது மானசீகக் கரங்களினால் ஏந்தி வந்து மனத்தில் இருத்திக் கொண்டானோ?...

திடுக்குற்று எழுந்தான் கோவிந்தவர்மன். அவனைப் போலவே ஆபத்துதவி இளங்காரிக்குடையானும் அவசரமாக எழுந்து நின்றான். இருவரும் தம் பார்வையை அந்தக்

காடுகிழாள் கோயில் பக்கம் திருப்பினர். அங்கு ஏதோ ஒருவித விம்மலும் பொருமலுமான குரல் கேட்டது.

கோவிந்தவர்மனும் இளங்காரியும் ஒருவரையொருவர் பீதியுடன் பார்த்துக்கொண்டனர். இளங்காரி, இளவரசனுக்குக் கண் சமிக்ஞை செய்து அவனைத் தன் பின்னே வரச்சொல்லிவிட்டு ஓசையின்றி நடந்து போய்க் காடுகிழாள் கோயிலின் சிறிய வாயிலண்டை நின்று மெல்ல உள்ளே எட்டிப் பார்த்தான்.

இடக் காலை மடக்கி வலக்காலை தொங்க விட்டுச் சுகாசன நிலையிலே அமர்ந்து நிமிர்ந்து, வீரமும் வெற்றியும் விழிகளில் பளிச்சிட, பெருமிதமும் உறுதியும் வாயின் அமைப்பிலே தோன்ற, இரண்டு கோரைப் பற்கள் வெளியே நீண்டிருக்க, கட்டாரி தாங்கிய இரு கரங்களைத் தொடைகளின் மேல் ஊன்றவிட்டு, மற்றொரு வலக் கையில் மணியும் இன்னோர் இடக் கையில் கபால பாத்திரமும் ஏந்தி, வலக்காதில் பிணமும் இடக் காதில் பொற்குழையும் விளங்க, இடது தோளிலிருந்து மார்பின் வழியாகத் தலையோடுகள் சரம் கட்டியிருக்க, தலை முடியிலும் ஒரு தலையோட்டை அணிந்துகொண்டு வீறார்ந்த திருக்கோலத்தில் அங்கு எழுந்தருளியிருந்த காடுகிழாள் என்னும் கொற்றவையின் விக்கிரகத்துக்கு எதிரே— உறையிலிருந்து உருவியெடுத்த வாளை ஓங்கிப் பற்றியவாறு தலைவிரிகோலமாக நின்று கொண்டிருந்தான் ஓர் ஆடவன்.

“என் குலதெய்வக் கொற்றவைத் தாயே! உனக்கு நான் என்ன தீங்கு இழைத்தேன்? ஏதுமறியாத இந்த எளியேனின் மேல் எதற்காக இவ்வளவு பெரிய பழியை ஏற்றிவைத்தாய்? உப்பிட்டுச் சோறிட்டு என் உடம்பை வளர்த்தவரான பழையாறைச் சோழருக்குப் பெரும் பாதகம் புரிந்தவனாகி விட்டேனே! என்னையறியாமலே என் கடமையிலிருந்து வழுவிய குற்றத்துக்கு ஆளாகிவிட்டேனே! ஐயோ, எங்கள் இளவரசி இளங்கோப்பிச்சியை நான் எங்கு போய்த்

தேடுவேன்! அவரை அழைத்துவரக் கட்டளையிட்ட பழையாறைச் சோழரிடம் என்ன பதில் கூறுவேன்? பெருவளநல்லூர்ச் சேதியக் கலைஞரிடம் பரமேசுவர வர்மரைப் பற்றிய விவரம் ஒன்றைச் சொல்லிவிட்டுத்திரும்பி வருவதற்குள் சோழ இளவரசியார் எங்கோ மாயமாய் மறைந்துவிட்டாரே! அவருடன் இருந்த அநந்தமதியும் காணோமே! அவளுடைய இல்லம் பூட்டிக் கிடக்கிறதே! இதை யாரிடம் சொல்லி, எப்படிக் கேட்பேன்? தேடாத இடமெல்லாம் தேடிப் பார்த்து விட்டேனே! ஏ, இரக்கமற்ற கொடியவளே! ஆபத்துதவி வீரன் என்ற இந்தப் பெருமை மிக்க பொறுப்பை ஏற்பதற்கு முன் உனது சந்நிதானத்தில் வந்து, எக்காரணத்தைக் கொண்டும் என் கடமையிலிருந்து வழுவிய குற்றம் புரிவேனாகில், எனத் தலையை அரிந்து உனக்கு நவகண்டம் படைப்பேன்' என்று சபதம் எடுத்துக் கொண்டேனே, அந்த நவகண்டப் படைப்பை நீ பெற்றுச் சுவைக்க வேண்டும் என்பதற்காகவே இப்படியொரு பெருஞ்சோதனையை எனக்குத் தந்துவிட்டாயா? ஆகட்டும், தாயே! உன் ஆசை அதுவானால் இதோ என் தலையை அரிந்து கொடுக்கிறேன், பெற்றுக்கொள்! கடமையிலிருந்து தவறியவன் என்ற பழியோடு இழிமையாய் உயிர் வாழ்வதை விட உனக்கு நவகண்டக் காணிக்கை செய்து என் வாழ்க்கையை முடித்துக் கொள்வது எவ்வளவோ மேல்! ஆனால், அம்மையே! நான் அளிக்கும் இந்த நவகண்டப் படைப்பை ஏற்றுக்கொண்ட பின்னராவது சற்றே மனம் இரங்கி, சோழ இளவரசியார் எவ்வித இன்னலுக்கும் ஆளாகாமல் தன் தந்தையாரிடம் வந்து சேர்ந்துவிடக் கிருபை செய், மாதாவே!"

கண்ணீர்ச் சோர இவ்வாறு கதறிப் புலம்பிய அந்த ஆடவன், ஏதோ ஆவேசம் வந்தவன்போல் ஒற்றை முழந்தாளிட்டு அமர்ந்து, காடுகிழாளின் பீடத்துக்கு எதிரே குனிந்துகொண்டு, தன் கையில் ஓங்கிப் பற்றியிருந்த வாளைத்

தலைக்குமேல் சக்கர வட்டமாகச் சுழற்றினான். மறுகணம் அந்த வாள் மற்றொரு வாளால் பளீரென்று தட்டிவிடப் பட்டுச் சற்றுத் தொலைவிலே போய்க் கணீரென்று தெறித்து வீழ்ந்தது.

வெறிகொண்ட வேங்கைபோல் சடாரெனத் துள்ளி எழுந்து திரும்பினான் அவன்.

"யார்?... சோழிய ஆபத்துதவி சம்புவராயனா!" - வியப்பால் குரல் அதிரக் கேட்ட கோவிந்தவர்மனை முந்திக் கொண்டு பாய்ந்து சென்ற இளங்காரிக்குடையான், காடுகிழாளின் சந்நிதியிலே நின்றிருந்த சம்புவராயனைப் பேய்ப் பிடியாகப் பிடித்து வெளியே இழுத்துக்கொண்டு வந்தான்.

அதேசமயம், தொய்ந்து துவண்ட நிலையிலே தம் குதிரையின் கடிவாளக் கசையைப் பற்றி அதை நடத்தி அழைத்துக்கொண்டு அங்கு வந்து சேர்ந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

# 33

# நெஞ்சில் ஒரு நெஞ்சம்

**தி**க்குத் திசை தெரியாத காட்டிலே தன்னந்தனியாக விடப்பட்ட சின்னஞ்சிறு ஊமைப்பிள்ளைப்போல் அரண்டு மிரண்டு செயலற்றுக் கிடந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

நேற்றுப் போலவே இன்றும் அந்த இலவந்திகைப் பள்ளி பரபரப்பும் சுறுசுறுப்புமாக விளங்கியது. இன்னும் சொன்னால், நேற்று எதிர்பார்த்த ஏதோ ஒரு சம்பவம் நிகழாமற்போய் இன்று நிச்சயமாக அது நிகழப் போவது போன்ற ஒரு முன் குறிப்புத் தீவிரமும் அதன் சூழ்நிலையில் திமிர்த்துக் காணப்பட்டது.

இந்த விசித்திர சூழ்நிலையை நேற்றெல்லாம் வெகு உன்னிப்பாகக் கவனித்து அதற்கான காரணங்களைக் கண்டு அறிவதில் சிரத்தை காட்டிக்கொண்டிருந்த உத்தமசீலி இன்று அதுபற்றிய கவன ஈர்ப்பே இல்லாமல் மனம் மருண்டு மேன்மாடத்து அறையிலேயே அடைந்து கிடந்தாள்.

நேற்றிரவு ஆலம்பாக்கத்திலிருந்து திரும்பி வந்து சேர்ந்தது முதல் இன்றையப் பொழுது விடிந்து இவ்வளவு நேரமாகியும் அவளது மிரட்சியுற்ற மன நிலையில் சிறிதளவு மாறுதலும் ஏற்படவே இல்லை. எதைப்பார்த்தாலும் ஒரு பயம்; எதைச் செய்தாலும் ஒரு நடுக்கம்; எதை நினைத்தாலும் ஒரு குழப்பம். தனது சித்த சுவாதீனத்தில் நிரந்தரமாகவே ஏதேனும் கோளாறு ஏற்பட்டுவிட்டதோ என்ற சந்தேகம்கூட அவளுக்குத் தோன்றியது. ஆனால் இத்தகைய சந்தேகம், கோளாறுற்ற சித்தத்திலிருந்து தோன்ற முடியாதே என்று

எண்ணித் தன் மீதே சற்று நம்பிக்கை கொள்ளலானாள். அப்படியொரு நம்பிக்கை பிறந்த பிறகுதான் அவளது குழம்பிக் கிடந்த மனம் மெல்ல மெல்லத் தெளிவடைய ஆரம்பித்தது.

பற்றுக் கோலற்ற பசலைக் கொடியெனக் குரிசிலில் சாய்ந்திருந்த அவள் நெட்டுயிர்த்து நிமிர்ந்தாள். இனி எதைப்பற்றியும் தன்னால் நிதானித்து அறிய முடியும் என்ற தெம்பு அவளுக்கு ஏற்படவே, இவ்வளவு நேரம் எந்த விஷயத்தினால் நெஞ்சம் அதிர்ந்து நினைவு கலங்கிக் கிடந்தாளோ அதே விஷயத்தைத் தொடர்ந்து தன் மனத்தை ஓட்டினாள். ஆம்; நேற்றிரவு அந்த ஆலம்பாக்கம் இளங்காரிக்குடையானின் இல்லத்துக்கு எதிரேயுள்ள பவழமல்லி மரத்தடியில் மறைந்து நின்று பார்த்த காட்சிகளும் கேட்ட சேதிகளும் தான் இப்போது அவள் மனத்தகத்தே மளமளவெனப் படையெடுத்து வந்தன.

'இத்தனை நாட்களாக நான் யாரை ஓர் எளிய ஓவியக் கலைஞன் என்று எண்ணிக்கொண்டிருந்தேனோ அவனே பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனாம்; எவ்வளவு பெரிய உண்மை இது! இதைத் தெரிந்து கொள்ளாமல் எத்தனை அசட்டுத்தனமாக ஏமாந்து விட்டிருக்கிறேன்! உண்மைகளை ஊடுருவும் சக்தி மனித அறிவுக்கு இவ்வளவு குறைவாகவா அமைய வேண்டும்? இந்த அற்ப சக்தியைக் கொண்டு உலகிலுள்ள உண்மைகளையெல்லாம் அறிந்துவிட்டோம் என்று மமதையுடன் மார்தட்டிக் கொள்ளுகிற மனித மனத்தின் பொய்ம்மைத் துணிவை என்னென்பது!'

யாரோ தன்னை நேருக்கு நேர் பரிகசிப்பது போன்ற தாழ்மை உணர்ச்சியால் தன் பூவுடலைக் கூனிக் குறுக்கினாள் அவள்.

'அன்றொரு நாள் இடையப்பெண் கோலத்தில் எனக்கு இளநீர் அளித்தவள் பழையாறைச்சோழ இளவரசியாம்! சேதியக் கலைஞரின் இல்லத்திலே சமையற்காரியாக இருந்து எனக்கு உணவு பரிமாரிய மூதாட்டி ஓர் உயர்தர ஆபத்துதவி

வீரனின் அன்னையாம்! பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருந்த கோவிந்தவர்மன் அங்கிருந்து தப்பிச்செல்லத் திட்டமிட்டு உதவியவள் சோழ இளவரசியாம்! என்ன பயங்கரமான உண்மைகள்!

தன்னை மீறிய நடுக்கத்துடன் தலைநிமிர்ந்த அவள் மனத்திலே பீதி மயமான கேள்வியொன்று எழுந்தது; 'பல்லவ மன்னன் அந்தச் சோழ இளவரசியிடம் கடைசியாக ஏதோ எச்சரிப்பதுபோல் சொன்னானே, அது என்ன? அவனுடைய பேச்சிலிருந்து அவள், இளவரசன் கோவிந்தவர்மனின் காதலி என்றல்லவா தோன்றுகிறது? அதனால்தான் பழையாறை அரண்மனையிலிருந்து வெளியேறி அந்த ஆலம்பாக்கம் சிறு குடிலில் வந்து ஓர் இடையப் பெண்ணைப் போல் தங்கியிருந்து தனக்கு ஏற்படக்கூடிய உயிராபத்தையும் பொருட்படுத்தாமல் அவனைச் சிறையிலிருந்து தப்புவிக்க உதவினாளோ? அவ்வாறானால், என் சிவிகையிலிருந்து காணாமற்போன பட்டோலை அவள் வசம் இருந்ததற்கும் ஏதாவதொரு காரணம் இருக்க வேண்டுமே! அவளுடைய காதலனான கோவிந்தவர்மனே அவ்வோலையைக் கவர்ந்து வந்து அவளிடம் கொடுத்திருப்பானோ? அப்படிக் கொடுத்திருந்தால் அதை ஏன் அவள் என் கண்ணில் படும்படியாக வைத்திருந்தாள்? அதிலும் ஏதேனுமொரு சதித் திட்டம் இருக்குமோ?"

உத்தமசீலியின் மென்னுடல் நடுங்கிக் குலுங்கியது. திகிலுடன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தாள். அங்கே அவள் கண்ணில் பட்ட ஒவ்வொரு பொருளும் ஏதோ ஒரு மர்மததை, அல்லது ஒரு பயங்கர இரகசியத்தைத் தன்னுள் மறைத்து வைத்துக்கொண்டிருப்பது போலவும், அந்த மர்ம இரகசியங் களைப் பகுத்தறிய முடியாமல் அவற்றிடம் தான் ஏமாந்து நிற்பது போலவுமான ஓர் அசக்த உணர்ச்சி ஏற்பட்டது அவளுக்கு.

'நேற்றிரவு அந்த ஓவியக் கலைஞனை—ஓவியக் கலைஞனா அவன்?-பின் தொடர்ந்து போயிருக்காவிட்டால்

இத்தனை இரகசியங்களையும் நான் தெரிந்து கொண்டிருக்க முடியுமா? மனிதமனம் எப்போதோ சில சமயங்களில் மட்டும் ஏதோ ஒருவித மந்திர சக்தியுடன் இயங்கும் போலும்! அந்தச் சமயம் அது நினைப்பதெல்லாம் சரியாகவும் செய்வ தெல்லாம் நன்மையுமாகவுமே அமைந்துவிடும் போலும்! இல்லையானால், அவனுடைய பாதுகாப்புக்காக அவனைப் பின் தொடர்ந்து போய், அங்கே என்னுடைய பாதுகாப்புக்குத் தேவையான உண்மைகளைத் தெரிந்துகொண்டு திரும்பி யிருப்பேனோ?"

நெஞ்சங்கள் உயர்ந்து தாழப் பெருமூச்சு விட்ட அவள் தன் உள்ளங்கையை விரித்து அதில் தீட்டியிருந்த செஞ்சாயச் சித்திரத்தை வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தாள். சற்றைக் கெல்லாம் அந்தச் சித்திரம் அவளது பார்வையிலிருந்து மறைந்து வேறோர் அழகிய ஓவியம் அங்கே மிதவையிடுவ தாகத் தோன்றியது. பரபரப்புடன் கண்ணிமைகளைத் தட்டி அவ்வோவியத்தை உற்றுப் பார்த்த அவள் அதை அப்படியே சேர்த்துப் பிடிப்பதுபோல் சட்டென்று தன் உள்ளங்கையை இறுக மூடி நெஞ்சில் வைத்துப் புதைத்துக்கொண்டாள். இவ்வளவு நேரம் ஹேமந்த ருதுவில் முளைத்த தேய்பருவச் சந்திரிகையாக வெளிறிச் சாம்பியிருந்த அவளது முகம் இப்போது வசந்த காலத் தண்ணிறை மதிபோல் விகசித்து ஒளிர்ந்தது. நாணம் செறிந்த நளினப் புன்னகை பூத்தவாறு தன் கைத் தலத்தில் 'பற்றிக் கொண்டிருந்த' அந்த மாய ஓவியத்தை மீண்டும் ஒருமுறை திறந்து பார்க்க வேண்டுமென்ற ஆவலுடன், மூடிக் கிடந்த செங்காந்தள் விரல்களை மெல்லப் பிரித்தவள், அப்படிப் பிரித்துத் திறந்ததுமே அவ்வோவியம் எங்கேயாவது மறைந்துவிடுமோ என்று அஞ்சியவள்போல், திறந்த கையை அவசரமாக இறுக மூடிக் கொண்டாள்.

அவளது உள்ளங் கையிலே சிக்கிக்கொண்டுவிட்ட அந்த 'ஓவியம்' தான் என்ன? நேற்றிரவு ஆலம்பாக்கம் இளங்காரிக்குடையானின் இல்லத்து வாசலிலே கை

விளக்கின் சிறு ஒளியில் புன்னகை பூத்தவாறு நின்று கொண்டிருந்த பரமேசுவரவர்மனின் முகத்தைக் கடைசியாகப் பார்த்துவிட்டு வந்தாளே, அந்தக் களை சொட்டும் திருமுகத்தின் பிம்பம்தான் இப்போது அவள் கைத்தலத்தில் 'பிடிபட்டு' விட்டிருந்தது.

கூச்சமும் குதூகலமுமாகத் தனது மூடிய கைத்தலத்தை நெஞ்சகங்களுக்கிடையே புதைத்துப் பிரித்து மற்றொரு கையால் அதை அப்படியே அணைத்துப்போர்த்துக்கொண்ட உத்தமசீலி, ஏதோ ஓர் இன்பப் புல்லரிப்புடன் கன்னங் குழியக் 'களுக்' கெனச் சிரித்தாள். இவ்வளவு நேரம் அவளிடத்தே குடிகொண்டிருந்த மிரட்சி, நடுக்கம், குழப்பம், மயக்கம், கவலை, களைப்பு, திகைப்பு எல்லாமே இப்போது போன இடம் தெரியாமல் புதைந்து மறைந்து போயின. புத்துணர்ச்சியும் புதுமலர்ச்சியும் பெற்றவளாய் அழகாக நிமிர்ந்து குரிசிலில் ஒருக்களித்துச் சாய்ந்த அவள் இனிய கவிதையொன்றை படிப்பதுபோல் இந்தச் சொற்களை மெல்ல முணுமுணுத்தாள்: "வரிப்புலிகள் வாழும் காட்டில் மாசற்ற மான்களும் இருப்பதுண்டு என்ற உண்மையை என் மனத்திலே பதியவைப்பதற்காக இறைவன் இன்று ஓர் அதிசயத்தை நிகழ்த்திக் காட்டியிருக்கிறான்." எதிரிகளின் முகாமுக்குப் போய்த் தன்னுடைய உருவத்தையே ஓவியமாகத் தீட்டிக் கொடுத்துவிட்டு அங்கிருந்து எப்படித் தப்பி வர முடிந்தது என்று அநந்தமதி கேட்ட போது பரமேசுவரவர்மன் தன் கழுத்தில் கிடந்த சவுக்கைக் காய் மாலையை வருடிக்கொண்டே இவ்வாறு சொன்னான் அல்லவா? அந்தச் சொற்களை அப்படியே தன் இதயத்தில் எழுதிக்கொண்டு வந்திருந்த உத்தமசீலி இப்போது அவற்றைத்தான் வாய்க்குள்ளாகவே மெல்லப் 'படித்துப்' பார்த்தாள். அனலேறிக் கருகியிருந்த அவள் நெஞ்சம் அந்த ஒரே நொடியில் சீதளச் சுகந்தம் படர்ந்து சிலிர்த்தது.

'என்னைப் பற்றி அவர் தம் மனதிலே கொண்டிருக்கும் எண்ணத்தின் பிரதிபலிப்பு அல்லவா இந்தப் பதில்? மாசற்ற மானுடன் என்னை ஒப்பிட்டுக் கூறியதன் மூலம் அந்த எண்ணத்தின் புனிதத்தை, உயர்வை எத்தனை உயர்வாக எடுத்துக் காட்டி விட்டார்!'—

இவ்வாறு எண்ணி உள்ளம் மகிழ்ந்து பூரித்த உத்தமசீலி, அன்றொரு நாள் ஆற்றங்கரையோரம் தான் விளையாட்டாக வனைந்து வீசிய அந்த சவுக்கைக்காய் மாலையை இன்னமும் அவன் தன் கழுத்திலிருந்து கழற்றாமல் இருப்பதையும் நினைவுக்குக் கொண்டு வந்து அதற்கு ஆயிரமாயிரும் இனிய காரணங்களையும் கற்பித்துக்கொண்டு மேலும் களிப்பில் ஆழ்ந்தாள். அதுமட்டுமல்ல; அவளையறியாமலே அவனை இப்போது 'அவர்' என்ற மரியாதையுடன் அவள் தன் மனத்துக்குள்ளே விளித்துக்கொண்டது அவளுக்கே ஆச்சரியமாகிவிட்டது. அப்படி விளிப்பதிலே ஒரு மேலான இன்பம் சுரப்பது போலவும் அவளுக்குத் தோன்றியது.

உற்சாகத்துடன் துள்ளியெழுந்த அவள் தன் ஆபரணப் பேழைக்குள் பூட்டி வைத்திருந்த ஓவியத்தை—நேற்று பரமேசுவரவர்மனால் வரையப்பெற்ற பரமேசுவரவர்மனின் ஓவியத்தை—எடுத்துக்கொண்டு திரும்பி வந்து அமர்ந்தாள். அவசர ஆவலுடன் அவ்வோவியச் சுருளைப் பிரித்துத் தன் மடிமீது போட்டுக்கொண்டு, அதில் ஜீவானந்தப் பொலிவோடு விளங்கிய பல்லவ மன்னனின் வதன விலாசத்தை வேட்கை பொங்கக் குனிந்து பார்த்தாள். பரமேசுவரவர்மனே இப்போது தன் மடியின்மீது தலைசாய்த்துப் படுத்திருப்பதுபோன்ற ஓர் இன்பக் கிளுகிளுப்பு ஏற்படவே வெட்கத்துடன் முகத்தைப் பொத்திக்கொண்ட அவள், விரலிடுக்கு வழியே மீண்டும் அவ்வோவியத்தைக் கூர்ந்து நோக்கினாள்.

'நானும் வில்வேலியும் என்ன பேதைமையாக நடந்து கொண்டு விட்டோம்! பரமேசுவரவர்மரின் உருவத்தை

வரைந்து கொடுக்கப் பரமேசுவரவர்மரையே அழைத்திருக்கு றோமே! இந்தத் திட்டத்தை அவரிடம் நாங்கள் தெரிவித்த போது எங்களைப் பற்றி அவர் என்ன நினைத்திருப்பார்? உலகத்தில் இப்படிப்பட்ட அப்பாவிப் பிரகிருதிகளும் இருக்கின்றனவே என்று எண்ணி உள்ளூர நகைத்திருப் பாரோ? சேதியக் கலைஞரின் இல்லத்திலே தலைமறைவாகத் தங்கியிருந்த அவர், சளுக்கியத் தளபதி எதற்காகத் தம்மை அழைக்கிறார் என்ற விவரத்தைக் கூடத் தெரிந்து கொள்ளாமல் அங்கிருந்து தனியே புறப்பட்டு வந்திருக் கிறாரே, அவரது நெஞ்சத் துணிவை என்னென்பது! இதிலிருந்து ஒரு விஷயம் நன்றாகப் புலனாகிறது—அவர் தம் எதிரிகளுக்காக எள்ளளவும் அஞ்சவில்லை; அவருடைய நண்பர்களே அவரை வலுக்கட்டாயமாக மறைத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். அவ்வாறில்லையென்றால், வில்வேலி யின் வேண்டுகோளுக்கிணங்கி—அதன் பயங்கரப் பின் விளைவையும் பொருட்படுத்தாமல்-தம் உருவத்தை வரைந்து கொடுக்கச் சம்பாதித்திருப்பாரா? இல்லை; இல்லை: அவர் அந்த வேண்டுகோளுக்கு இணங்கச் சிறிது தயக்கம் காட்டவே செய்தார். இறுதியாக நான் விடுத்த மௌனக் கோரிக்கைக்குப் பின்னரே அதற்கு ஒப்புக்கொண்டார், அப்பப்ப, என் பொருட்டு எவ்வளவு பெரிய தியாகம் செய்யத் துணிந்திருக் கிறார்! இல்லை; இல்லை: இப்படி நான் நினைப்பது அவரது வீரத் துணிவையே குறைத்து மதிப்பிடுவது ஆகும். வீர பரம்பரையில் உதித்த மாமன்னரான அவர் தமது வாழ்வை வீரத்துடன் முடித்துக்கொள்ள விரும்பியே வில்வேலியின் அந்தக் கோழைத்தனமான வேண்டுகோளை ஏற்றிருக்கிறார். அவரே கோழை உள்ளம் படைத்த ஒரு பொய்யராக இருந்திருந்தால் வேறு எவருடைய உருவத்தையேனும் வரைந்து கொடுத்துவிட்டுத் தப்பிச் சென்றிருக்கலாம்; ஆனால் அவ்வாறு செய்யாமல் தாம் வாக்களித்தபடியே வரைந்து முடித்து அதனால் ஏற்படக் கூடிய விளைவுக்கும் தம்மைத்

தயாராக வைத்துக்கொண்டிருந்திருக்கிறார். சொல்லிலும் செயலிலும் நினைப்பிலும் சத்தியத்தையே கடைப்பிடித்து ஒழுகும் ஓர் உத்தம உள்ளத்திலிருந்துதானே இத்தகைய வீறார்ந்த வீரம் வெளிப்பட முடியும்? ஆனால் அவர் தம் பெயரை அத்தியந்தகாமன் என்று மாற்றிச் சொன்னாரே, அதன் காரணமென்ன? ஒருகால் அது அவருடைய பட்டப் பெயர்களில் ஒன்றாக இருக்குமோ? ஆமாம் அப்படித்தான் இருக்கவேண்டும்.

அன்பாவேசமுற்ற உத்தமசீலி தன் மடியில் கிடந்த ஓவியச் சிலையை இதமாக ஏந்தி எடுத்து மார்புற அணைத்துக் கொண்டு பரவச நிலையிலே மெல்லக் கண் மூடினாள்.

'டடாக், டக்!...டடாக், டக்!'

திடுக்குற்றுக் கண் விழித்த அவள் சாளரத்துப் பக்கம் திரும்பித் தன் பார்வையை வெளியே வீசினாள். இலவந்திகைப்பள்ளியை நோக்கிச் சளுக்கியத் தளபதி வில்வேலி குதிரைமேல் வருவது தெரிந்தது.

34

# கண்ணீரில் கரைந்த கண்

காலனைக் கண்டாற்போல் நடுங்கிப் பதறிய உத்தமசீலியின் அணைப்பிலிருந்து அந்த ஓவியச் சீலை தானாகவே நழுவிக் கீழே விழுந்தது. அதைகூடக் கவனியாமல் பரபரப்புடன் எழுந்து அவ்வறைக்குள்ளேயே அங்குமிங்கு மாக ஓடி அலைமோதிய அவள் சட்டென்று திரும்பி வந்து இருக்கையில் அமர்ந்துகொண்டாள்.

'நேற்று மாலையே வருவதாகச் சொல்லிப் போன வில்வேலி, ஏனோ அப்படி வராமல், இன்று இதோ வந்து கொண்டிருக்கிறார். அத்தியந்தகாமன் வரைந்து முடித்த ஓவியத்தை வாங்கிப் போவதற்கே அவர் வருகிறார். இப்போது என்ன செய்வது? இந்த ஓவியத்தை அவரிடம் கொடுத்துவிட வேண்டியதுதானா? அப்படிக் கொடுத்தால் என்ன ஆகும்? தலைமறைவாயுள்ள பரமேசுவரவர்மரைக் கண்டுபிடிப்ப திலே வில்வேலிக்குக் கடுகளவு சிரமும் இருக்காது. நேரே பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்துக்குப் போய், அங்கு அத்தியந்தகாமன் என்ற பெயரில் தஞ்சமடைந் திருக்கும் அவரைக் கையும் மெய்யுமாகப் பிடித்துக்கொண்டு வந்து விக்கிரமாதித்தரின் எதிரே நிறுத்தி அதற்கான வீரப் பதக்கத்தையும் பெற்றுக் கொள்வார். அதன்பின் என்ன நடக்கும்?... ஐயோ, அதை நினைத்துப் பார்க்கவும் முடியவில்லையே! இந்த ஓவியத்தை வில்வேலியிடம் கொடுப்பதும், என் உயிரைப் பறித்துக் கொடுப்பதும் ஒன்றுதான். இவ்விரண்டில் இப்போது நான் எதைச் செய்வது?... ஆமாம்; அதுதான் சரியான வழி. வில்வேலியின்

கண்ணில் இவ்வோவியத்தைக் காட்டாது இப்போதே கிழித்துப் போட்டு விடுகிறேன். அதனால் ஏற்படக்கூடிய பயங்கர விளைவு?... அதைப் பற்றிப் பிறகு சிந்தித்துக் கொள்ளலாம்!'

கீழே கிடந்த ஓவியச் சிலையைச் சடாரென எடுத்துக் கொண்டு நிமிர்ந்த உத்தமசீலி, அதைச் சுக்கல் நூறாகக் கிழித்தெறியத் தன் பலத்தை ஒன்று திரட்டிய ஆதே கணம்—

'உத்தமசீலி! அந்த ஓவியத்தைக் கிழிக்காதே, நில்!'

வானக் கூரையே சரிந்து வந்து தலையில் வீழ்ந்தாற் போல் பேரதிர்ச்சியுற்றுத் திரும்பிய உத்தமசீலி பரபரப்புடன் சுற்றும்முற்றும் பார்த்தாள்.

என்ன ஆச்சரியம்! அங்கு யாருமே இல்லை. வில்வேலி கூட இன்னும் வந்து சேரவில்லை. அப்படியானால் அவளை அதட்டி அழைத்து அவ்வோவியச் சீலையைக் கிழிக்காமல் தடுத்து நிறுத்தியது யார்? ஓ,... அவளது நெஞ்சிலிருந்து எழுந்த குரல் தான் அவள் செவியில் அத்தனை நாராசமாய் இறங்கி ஒலித்ததோ!...

கையிலிருந்த ஓவியச்சுருள் கீழே நழுவி விழ, தன் நெஞ்சை அழுத்திப் பிடித்துக்கொண்டு இருக்கையில் அப்படியே ஒடிந்து சாய்ந்தாள் உத்தமசீலி.

'பைத்தியக்காரப் பெண்ணே! என்ன காரியம் செய்யத் துணிந்தாய்? ஏன் இந்த ஓவியத்தைக் கிழித்தெறியப் போகிறாய்? பெற்ற தாயை மறந்து, பேணி வளர்த்த தந்தையைப் பிரிந்து, பிறந்த பொன்னாட்டையும் வளர்ந்த அரண்மனையையும் துறந்து, இந்த அந்நிய நாட்டிற்கு ஏன் வந்திருக்கிறாய்? உன் அருமைப் பெரிய தந்தையாரான மாமன்னர் விக்கிரமாதித்தர் உன்னை ஏன் இங்கு வரவழைத்திருக்கிறார்? உன் அன்புத் தந்தை விஷ்ணுவர்த் தனர் உன்னை ஏன் இந்நாட்டுக்கு அனுப்பி வைத்திருக்கிறார்? உன்னுடைய வாழ்க்கையின் இலட்சியம் என்ன? இந்த நாட்டிலே நீ சாதிக்க வந்திருக்கும் காரியம் என்ன?

அவ்வளவையும் ஒரே நொடியில் மறந்துவிட்டாயே! எல்லாருக்கும் எல்லாவற்றுக்குமாகச் சேர்த்து மாபெரும் துரோகம் செய்யத் துணிந்து விட்டாயே! சரி; உன்னுடைய மகத்தான காதலின் முன்னே இவையெல்லாம் மிக அற்பமாகவே தோன்றலாம். ஆனால் அந்தக் காதலையே நீ இன்னும் சரியாகத் தெரிந்துகொள்ளவில்லை போலிருக் கிறதே? ஆமாம், பெண்ணே! நீ முதலில் யாரைக் காதலித்தாய்? ஓர் எளிய ஓவியக் கலைஞனைத்தானே; பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனை அல்லவே? அப்படியிருக்க, உன் குலத்தின் வைரியான அவனைக் காட்டிக் கொடுக்க ஏன் தயங்குகிறாய்? நீ காதலித்த ஓவியனே இப்போது பரமேசுவரவர்மனாக இருக்கிறானே என்று தடுமாற்றம் அடைகிறாயா? அப்படியானால் உன் காதல் பொய்யானது என்றுதான் சொல்லவேண்டும். முதல் காதலைக் கொன்றுவிட்டு அதன் கல்லறைமேல் இரண்டாம் காதலை முளைக்கச் செய்யப் பார்க்கிறாய். அதாவது, பல்லவ மன்னனைக் காதலிப்பதற்காக முதலில் காதலித்த ஏழை ஓவியனைக் கொன்றுவிட்டாய். இப்படிச் செய்ய நீ வெட்கப்படவில்லையா? இதை விட உன் இலட்சியம் பெரியதென உனக்குத் தோன்றவில்லையா? அந்த இலட்சியம் நிறைவேற வேண்டுமானால் பல்லவ பரமேசுவரவர்மன் ஒழிந்தாக வேண்டும் என்பதை நீ உணரவில்லையா? மனிதப்பிறவியின் தத்துவங்களை நன்கு அறிந்தவளான நீயே இப்படிச் செய்யலாமா? அழிந்துபடும் இவ்வுடலின் கேவலக் கவர்ச்சியில் சிக்கிச் சீரழியலாமா? இந்தப் பிறவியோடு உன் கணக்கைத் தீர்த்து முடிக்க முயலாமல் இன்னும் ஏழேழு பிறவிகளுக்குத் தொடர்ந்து துன்பம் அநுபவிக்க உன்னை உட்படுத்திக்கொள்கிறாயே! ஊழினை வெல்லப் பயின்றவ ளான நீ அந்த ஊழுக்கே அடிமைப்படப் போகிறாயே!... வேண்டாம். காதல் எனும் கானலை நம்பி உன் மகத்தான இலட்சியத்தைச் சிதைத்து விட வேண்டாம்.’

உள்ளம் வெடித்து விடுவதுபோல் விம்மி விம்மி அழுதாள் உத்தமசீலி. அவளது கருங்குவளைக் கண்களி லிருந்து காட்டாற்று வெள்ளம்போல கண்ணீர்ப் பெருக் கெடுத்து வழிந்தது. அப்படி வழிந்த கண்ணீர், கீழே விரிந்து கிடந்த ஓவியச் சீலையின்மேல் சொட்டுச் சொட்டாக வீழ்ந்து தெறித்தது.

நாணைத் தளர்த்திவிட்ட வில்லைப்போல் சடாரெனத் தலைதூக்கி நிமிர்ந்த உத்தமசீலி ஏதோ ஓர் உறுதியான முடிவுக்கு வந்தவளாய், பல்லவ மன்னனின் உருவம் தாங்கிய அந்த ஓவியச் சீலையை வெடுக்கென்று எடுத்து வெகு அலட்சியமாகச் சுருட்டிக் கையில் பற்றியவாறு மேன்மாடத்து அறையைவிட்டுக் கீழே இறங்கிச் சென்றாள்.

“வேங்கி இளவரசியாருக்கு வணக்கம் உரித்தாகும்!” என்று கூறிக்கொண்டே சித்திர கூடத்தினுள் பிரவேசித்த சளுக்கியத் தளபதி ஓர் ஆசனத்தில் சென்று அமர்ந்தார்.

அமைதியும் தெளிவுமாக வீற்றிருந்த ஆந்திர இளவரசி அவரைப் பார்த்து இனிய புன்முறுவல் பூத்தாள்.

“நேற்று நான் வருவதாகச் சொன்னேன் அல்லவா? ஏராளமான அலுவல்கள். என்ன முயன்றும் வர இயலாமற் போய்விட்டது. இளவரசியார் மன்னிக்கவேண்டும்” என்று பணிவுடன் சொன்னவாறு சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தார் தளபதி வில்வேலி.

“தளபதியார் இப்போது ஏதோ ஒரு புதிய முயற்சியில் முனைந்திருப்பதாக நேற்று சொல்லிப் போனார். அதன் காரணமாகத்தான் வரமுடியாமலாகியிருக்கும் என்று நான் எண்ணிக்கொண்டேன்.”

“சரியாக அநுமானித்திருக்கிறீர்கள், அம்மணீ! அது ஒரு முக்கியமான காரியம்தான். அதில் முழு வெற்றியும் கிடைத்துவிட்டது. அந்தவிவரங்களைப் பிறகு சொல்கிறேன்; அல்லது தங்கள் பெரிய தந்தையாரின் வாயிலாகவும் நீங்கள்

அதைத் தெரிந்து கொள்ளலாம். ஏனென்றால், நம் சளுக்கிய மாமன்னர் இன்றோ நாளையோ இங்கு விஜயம் செய்யப் போவதாக எனக்குச் சேதி அனுப்பியிருக்கிறார்."

"உண்மைதானா ஐயா? என் பெரிய தந்தையார் இங்கு வருவது நிச்சயமாகிவிட்டதா?'' என்று உற்சாகத்துடன் வினவினாள் உத்தமசீலி.

"ஆம், அம்மணீ! நேற்று நான் வரமுடியாமற்போனதற்கு அதுவும் ஒரு காரணம்தான்" என்று கூறிக்கொண்டே மீண்டும் தம் பார்வையை அங்குமிங்குமாக ஓடவிட்ட வில்வேலி சட்டென்று திரும்பி, "இளவரசி! எங்கே அந்த...?" என்று உள்ளடக்கிய குரலில் அரைகுறையாக இழுத்தவாறு அவளை உற்றுப் பார்த்தார்.

"யாரைக் கேட்கிறீர்கள், ஐயா? அத்தியந்தகாமன் என்ற அந்த ஓவியனைத்தானே?"

"ஆம், இளவரசி! எங்கே இருக்கிறான் அவன்?"

"இங்கே இல்லை; அவனை நான் போகச் சொல்லி விட்டேன்."

விறைப்புடன் நிமிர்ந்த வில்வேலி, "என்ன! போகச் சொல்லி விட்டீர்களா?" என்று கடுகடுப்புடன் கேட்டார்.

"அவனுக்கு நாம் இட்ட பணியை முடித்துவிட்டான். உடனே அனுப்பிவிட்டேன்."

"முடித்துவிட்டானா இளவரசி? பல்லவ மன்னனின் உருவத்தை வரைந்து முடித்துவிட்டானா?" என்று மகிழ்ச்சி மேலீட்டால் உரக்கக் கூவிய வில்வேலி, "ஆனாலும் அவனை அனுப்புவதற்கு முன் என்னிடம் ஒரு வார்த்தை கேட்டிருக்க லாமே!" என்றார் குரலைத் தாழ்த்தி முகத்தைச் சுளித்தபடி.

"கேட்டிருக்கலாம். நீங்கள்தாம் நேற்று மாலை இங்கு வரவில்லையே? இரவு வேளையில் இலவந்திகைப் பள்ளியிலே அவனைத் தங்கியிருக்கச் செய்ய எனக்கு விருப்பமில்லை. அதனால் அனுப்பிவிட்டேன்."

“அதுவும் நியாயமே!” என்று பலமாகத் தலையசைத்த வில்வேலி, “அந்தப் பராரிக் கலைஞன் எங்கே ஓடிவிடப் போகிறான்? பரவாதிமல்லரின் இல்லம்தானே அவன் இருப்பிடம்? தேவைப்பட்டால் அவனை இழுத்து வர எவ்வளவு நேரமாகிவிடப்போகிறது!” என்றார் அலட்சியமாக. மீண்டும் அவர் தொடர்ந்து, “அதுசரி, அம்மணீ! அவன் வரைந்து தந்த ஓவியம் எங்கே? அதை முதலில் காட்டுங்கள்!” என்று தம்மை மீறிய ஆத்திர அவசரத்துடன் கேட்டுக் கொண்டே ஆசனத்தின் முன் விளிம்புக்கு நகர்ந்தார்.

உத்தமசீலியின் முகம் அந்த ஒரே விநாடியில் சவமாக வெளிறிச் சிறுத்தது. குன்றிக் குறுகிய அவள் உடலோ நிலை கொள்ளாமல் பதறித் துடித்தது. தலை குனிந்து கொண்டே தன் கையிலிருந்த ஓவியச் சுருளை நடுக்கத்துடன் அவரிடம் நீட்டினாள்.

இரையைக் கண்டு பாயும் பசிகொண்ட வேங்கைபோல் தாவி வந்து அவ்வோவியச் சுருளை வாங்கிப் பரபரப்புடன் பிரித்து அப்படியும் இப்படியுமாகத் தம் தலையைச் சாய்த்துப் பார்த்த வில்வேலியின் முகம் ஏதோ ஓர் அருவருப்பான காட்சியைக் கண்டுவிட்டமாதிரி விகாரமடைந்து கறுத்தது. “சே! என்ன கோரமான உருவம்! பல்லவர் என்றால் நீளமான பற்களை உடையவர் என்றுதான் நாங்கள் இத்தனை காலமாக ஏளனம் பேசி வந்தோம்; ஆனால் இந்தப் பல்லவ பரமேசுவரவர்மனோ ஒரு கண் குருடான கோர சொரூபியாய் இருக்கிறானே!” என்று வெறுப்புடன் கூறிக்கொண்டே அந்த ஓவியச் சீலையை வீசியெறிந்தார்.

சண்டமாருதத்தில் சிக்கிய பூங்கொடியென நடுநடுங்கி நின்ற உத்தமசீலி இதைக் கேட்டு ஒன்றும் புரியாமல் விழித்தாள்.

“நீங்கள் இந்த ஓவியத்தைப் பார்த்தீர்களா அம்மணீ? இராஜ குலத்தில் பிறந்த தாங்கள் இம்மாதிரியான குரூப

முகத்தைப் பார்க்கவே கூடாது!''-இப்படிச் சொன்ன வில்வேதியின் முகத்தைப் பார்க்க மிகவும் கோரமாக இருந்தது.

வியப்பால் வெலவெலத்துப் போன உத்தமசீலி விருட்டென்று குனிந்து அந்த ஓவியச் சீலையை எடுத்துப் பிரித்துப் பார்த்தாள்.

வில்வேலி சொன்னது உண்மைதான்! சற்றுமுன் உத்தமசீலி விம்மிப் பொருமி அழுது கொண்டிருந்தாளே, அப்போது அவள் கண்ணிலிருந்து வடித்த கண்ணீரில் ஒரு துளி பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனின் அந்த ஓவிய முகத்துக் கண்ணுக்கு நேரே விழுந்து அதிலிருந்து நீல வண்ணத்தைக் கலக்கிக் கரைத்துவிட்டிருக்கவே, இப்போது அவன் ஒரு கண்ணை இழந்த குருடனாகத்தான் காட்சியளித்துக் கொண்டிருந்தான்!

ஆண்மையின் சகல இலட்சணங்களும் பொருந்திய சுந்தரச் சொரூபனான பரமேசுவரவர்மனின் உருவ ஓவியமா இது? இல்லை; அவனுடைய முகச் சாயல் அதிலே முற்றும் மாறிப் போய்விட்டிருந்தது.

# 35

## அழைத்தது ஏன்?

அந்த அதிசயத்தை நினைக்க நினைக்க அவள் மனம் வியப்பால் வியர்த்துக் கொட்டியது.

'என்ன விந்தையான நிகழ்ச்சி! எத்தனை விநோதமான சம்பவ மாற்றம்! நம்மைக் கொண்டு நடைபெறும் நிகழ்ச்சிகள் அனைத்துக்கும் நாமே பொறுப்பாளி என்றும், அவற்றை நாம்தான் எண்ணிக் கணித்துச் செயல்பட வைக்கிறோம் என்றும் நினைப்பது எவ்வளவு பேதைமை! உண்மையில் நமக்கும், நம்மால் நிகழ்த்தப்பெறும் நிகழ்ச்சிகளுக்கும் எவ்விதத் தொடர்பும் இருப்பதே இல்லை. நிகழும் நிகழ்ச்சிகளில் சில, நமது நினைப்பையும் செயலையும் ஒட்டி அமைவதைக் கொண்டு அவற்றை நாமே நிகழ்த்துவதாக நினைத்துக் கொள்கிறோம்; ஆனால் நம் நினைப்புக்குப் புறம்பாகவும் செயலுக்கு மாறாகவும் சில நிகழ்சசிகள் நிகழ்வது ஏன் என்ற கேள்வி எழும்போதுதான் நாம் நினைத்தபடியும் செய்தபடியும், சரியாக அமைந்த நிகழ்ச்சிகளெல்லாம் ஏதோ அசம்பாவிதமாக நிகழ்ந்தவை என்பது புலனாகிறது. நினைப்பின் ஆதிக்கத்துக்கு உட்பட்டே நிகழ்ச்சிகள் நிகழ்வதாயின் அவற்றில் எத்தகைய மாற்றமும் ஏற்படக் காரணம் இல்லையல்லவா? ஒன்றன்பின் ஒன்றாக நிகழ்ச்சிகள் தாமாகவே உருவாகிச் செயல்பட்டுக் கொண்டு போகின்றன. அப்படிச் செயல்படும் நிகழ்ச்சிகளின் முன்னறிவிப்பாக ஏதோ ஓர் உணர்வு மனத்தில் பிரதிபலிக்கும் போது நம் நினைப்பும் செயலும் அந்நிகழ்ச்சிகளுடன் தொடர்புகொண்டு நாம் நினைத்தபடியும் செய்தபடியும்

அவை நிகழ்ந்து முடிகின்றன. அந்தத் தொடர்புக்குரிய உணர்வு மனத்தைத் தீண்டாமற் போய்விட்டாலோ நம் நினைப்பும் செயலும் வேறு, நிகழும் நிகழ்ச்சிகள் வேறு என்றாகிவிடுகின்றன. நிகழ்ச்சிகளின் முன்னறிவிப்பான அந்த ஏதோ ஓர் உணர்வு என்பது என்ன? அது ஏன் நம் மனத்தில் சில நிகழ்ச்சிகளைப் பிரதிபலிக்கிறது? சில நிகழ்ச்சிகளைப் பிரதிபலித்துக் காட்டாமலே போய்விடுகிறது?...'

தான் மேற்கொண்டு வந்திருக்கும் இலட்சியப் பணியின் ஆவேசத் தூண்டுதலால் தன் மனத்தில் மலர்ந்த இனிய காதலையும் கருக்கிக் கொள்ளத் துணிந்து, அதன் காரண கர்த்தனான பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனைக் காட்டிக் கொடுத்தே ஆக வேண்டுமென்ற தீர்மானத்துடன் அவனது உருவ ஓவியத்தைச் சளுக்கியத் தளபதி வில்வேலியிடம் சேர்ப்பித்த பிறகு, அதிலே அவளையுமறியாமல் அவளுடைய கண்ணீரால் நிகழ்ந்துவிட்ட அவ்விந்தையான மாற்றத்தை எண்ணித்தான் இது போன்ற கண வாதம், நிகழ்ச்சி வாத மெல்லாம் நிகழ்த்தி நெஞ்சம் வியர்த்துக் கொண்டிருந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

'அந்த ஓவியத்தில் உள்ளபடி பல்லவ மன்னர் பரமேசுவரவர்மர் கண்ணை இழந்த குருடர் என்றே தளபதி வில்வேலி தீர்மானித்து, அம்மாதிரி உருவத் தோற்றத்துடன் யார் இருந்தாலும் உடனே பிடித்துக் கொண்டுவந்து சேர்க்குமாறு தம் ஒற்றர் படைத் தலைவனிடம் கட்டளை யிட்டு அனுப்பியிருக்கிறார். இப்போது நாடெங்கிலும் அவருடைய அந்தக் கட்டளை மின்னல் வேகத்தில் செயல்படத் தொடங்கி விட்டிருக்கும். என் கண்ணீரால் அவ்வோவியத்தின் விழிப்பகுதி கரைந்து போய் அதன் முகச் சாயல் மாறிவிட்டதென்னவோ உண்மைதான் என்றாலும், எமகாதகர்களான சளுக்கிய ஒற்றர்கள் அந்தச் சித்திரத்தி லுள்ள மற்ற அவயவ அமைப்புக்களைக் கொண்டு அவரைக் கண்டு பிடித்து விட்டால் என்ன செய்வது?'

அலட்சிய மிடுக்குடன் முகத்தைச் சுளித்த அவள் தலையை மேலும் கீழுமாக ஆட்டிக் கொண்டாள்.

'அப்படித்தான் அவர் அகப்பட்டுக் கொள்ளட்டுமே! அதைப்பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? அவர் யார், நான் யார்? அவர் என் குல வைரி! எங்கள் தந்தையர் நாட்டுக்குச் சொல்லொணா அவமான அழிவுகளை ஏற்படுத்தியவர்களின் வழித் தோன்றல்! அதற்கெல்லாம் சேர்த்து அவரைப் பழிவாங்க வேண்டுமென என் பெரிய தந்தையார் துடிப்பது நியாயம்தானே? அவரது நியாயமான அந்தப் பழிவாங்கல் நடவடிக்கைக்கு நான் ஏன் தடங்கலாக இருக்கவேண்டும்?'

அவள் மனம் திடீரென்று சுளுக்கிக் கொண்டது. அதன் வேதனையைத் தாளமட்டாமல் தன் மென்னுடலை முறுக்கி நெளித்தாள்.

"என்ன பயங்கரமான எண்ணங்கள் என் மனத்திலே தோன்றுகின்றன! இந்தப் பல்லவ நாடு எங்கள் சளுக்கிய நாட்டுக்குச் செய்த இழிவு அழிவுகளுக்கெல்லாம்தான் இப்போது வேண்டிய அளவு பழிவாங்கப் பட்டுவிட்டதே! இன்னும் ஏன் பழிவெறி கொண்டு அலைய வேண்டும்? எவனோ செய்த தீங்குகளுக்கு யாரையோ தண்டிக்க முனைவது பச்சைப் பாதகச் செயல் அல்லவா? நாட்டுக்கு நாடு பகையும் பூசலும் பழிவாங்க வேண்டுமென்ற ஆவேச உணர்ச்சியும் கொள்வது நியாயமாக இருக்கலாம்; ஆனால் அத்தகைய உணர்ச்சிகளைத் தனி மனிதனிடம் காட்டுவது அரசியல் அநாகரிகம் அல்லவா? அதிலும் ஒரு பாவமும் அறியாத சத்வகுண சீலராகத் தோன்றும் இன்றைய பல்லவ மன்னரைப் பழி வாங்க முயல்வது கொடுமையிலும் கொடுமை அல்லவா? இப்படிப்பட்ட ஒரு கொடும்பாவச் செயலுக்கு, 'அஹிம்சா பரமோ தர்ம:' என்னும் கொள்கையைத் தாரக மந்திரமாகக் கொண்ட சமண சமயத்தைச் சார்ந்தவளான நான் உதவியும் ஊக்கமும் தர நினைப்பது மாபெரும் தவறு அல்லவா?'

தன் உள் மனத்தின் உள்ளிருந்து பீரிட்டெழுந்த இந்தக் கேள்விகளை மறுப்பவள்போல் விறைப்பாக நிமிர்ந்து உட்கார்ந்தாள் அவள்.

'மிகப்பெரிய நன்மையான காரியம் ஒன்றைச் சாதிக்க, மிகச் சிறிய தீமையான செயல் ஒன்றைச் செய்வது தவறு ஆகாது. என்னுடைய மகத்தான இலட்சியம் நிறைவேற வேண்டுமானால் பரமேசுவரவர்மர் பிடிபட்டே ஆக வேண்டும். இந்த உறுதியோடும் துணிவோடும் அவ்வோவி யத்தை எடுத்து வந்த நான் கடைசி நேரத்தில் ஏன் அப்படி மனம் பேதலித்துப் போனேன்? ஓவியத்தின் விழிப்பகுதி அழிந்ததற்குரிய காரணத்தையும், அத்தியந்தகாமன் என்ற பெயரோடு வந்தவர்தாம் பல்லவ மன்னர் என்னும் உண்மையையும் அப்போதே நான் வில்வேலியிடம் சொல்லாமற் போய்விட்டேனே! சளுக்கிய ஒற்றர்களின் கையிலே அவர் சிக்கிக் கொள்ள நேர்ந்து, அவரது கண்ணுக்கு எவ்வித ஊனமும் இல்லை என்ற விவரம் வெளிப்பட்டால், உடனே சளுக்கியத் தளபதியின் சந்தேகம் என் மீதல்லவா திரும்பி விடும்? என்னையறியாமலே நான் எவ்வளவு பெரிய இக்கட்டில் சிக்கிக்கொண்டு விட்டேன்!'

திகிலுடன் எழுந்து நின்ற உத்தமசீலி, இப்போதே அந்த விவரங்களை வில்வேலியிடம் போய்த் தெரிவித்துவிட வேண்டும் என்று தீர்மானித்தவளாய், அங்கிருந்து பல்லவபுரம் அரண்மனைக்குப் போகத் தன் சிவிகையைக் கொண்டு வரும்படி பணியாட்களிடம் கட்டளையிடும் பொருட்டுத் திரும்பியவள் ஏனோ ஸ்தம்பித்து நின்றாள்.

'அதோ, அந்த ஒற்றைத்தூண் குடை மண்டபத்தருகிலே நேற்று நான் பல்லவ மன்னரிடம் என்ன சொன்னேன்? என் இதயச் சிறையில் அவரை அடைத்து வைத்துக் கொண் டிருப்பதாகச் சொன்ன சொற்களின் ஈரம் கூட இன்னும் எனது உதடுகளிலிருந்து உலரவில்லையே! அதற்குள் அவரை எதிரியிடம் காட்டிக் கொடுக்கவா போகிறேன்?"

நெஞ்சில் அம்பு தைத்தாற்போல் துடித்துப் பதறிய அவள் தன் முகத்தை இரு கைகளாலும் மூடிக்கொண்டு மேன்மாடப் படிகளில் ஏறி ஓடினாள்.

"இளவரசியாரின் சமூகத்துக்கு..."

பாதிப் படிவரையில் ஏறிவிட்ட உத்தமசீலி சட்டென்று திரும்பினாள். அங்கே, சளுக்கிய வீரனொருவன் வந்து பணிவுடன் வணங்கி நின்றுகொண்டிருந்ததைப் பார்த்ததும் ஏதோ ஒரு விஷயத்தை நினைவு கூர்ந்தவள்போல் அதரங்களைக் குவித்துப் புருவங்களை மேலுயர்த்தினாள்.

"இளவரசியாரின் கட்டளைப்படி ஆலம்பாக்கத்தி லிருந்து அவ்விரு இடையப் பெண்களையும் அழைத்துக் கொண்டு வந்திருக்கிறோம்!"

இதைக் கேட்டு உள்ளூரப் பரபரப்படைந்த உத்தமசீலி சித்திரகூடத்தின் வாயிற்பக்கம் தன் பார்வையைச் செலுத்தி னாள். அதே சமயம், மூன்று சளுக்கிய வீரர்கள் பின் தொடர, சோழ இளவரசி இளங்கோப்பிச்சியும், மூதாட்டி அநந்தமதியும் பயப்பிராந்தியோடு உள்ளே வந்தனர்.

ஒருகணம் ஏதோ யோசித்த உத்தமசீலி, சளுக்கிய வீரர்களைப் பார்த்து, "சரி; நீங்கள் போகலாம்" என்று கட்டளையிடும் குரலில் கூறினாள். உடனே அந்நான்கு வீரர்களும் அங்கிருந்து வெளியேறினர்.

விடியற்சாம நேரத்தில் வீட்டின் கதவைத் தட்டி, "வேங்கி இளவரசியார் உத்தரவுக்கிணங்க பல்லவபுரத்துக்கு வரவேண்டும்" என்று இந்நான்கு வீரர்களும் சொன்னதைக் கேட்டுப் பெரிதும் கலவரம் அடைந்தவர்களாய் அங்கு வந்து சேர்ந்திருந்த இளங்கோப்பிச்சியும் அநந்தமதியும், இனி என்ன நடக்கப் போகிறதோ என்ற திகிலுடன் வேர்த்து விறுவிறுத்து நின்றுகொண்டிருந்தனர்.

ஒவ்வொரு படியாக நிதானத்துடன் இறங்கி வந்த உத்தமசீலி புன்முறுவலோடு தலையைச் சாய்த்து, "அநந்தமதி அம்மை நலம்தானே?" என்றாள் அன்பும் பரிவுமான குரலில்.

முகம் வெளிறி நின்ற அநந்தமதி, "நன்னலமே அம்மணி!" என்று குழறினாள்.

உத்தமசீலியின் பார்வை அநந்தமதியின் பக்கமே இருந்தது. இளங்கோப்பிச்சியை ஏனோ அவள் பார்க்க வில்லை. "சேதியக் கலைஞர் பரவாதிமல்லரும் நலம்தானே?" என்று மீண்டும் அதே புன்னகையுடன் அமைதியாக வினவினாள் அவள்.

"நலமாகவே இருப்பார் என்று நம்புகிறேன் அம்மணி! ஏனென்றால், ஒரு வாரத்துக்கு முன் ஓர் அவசர காரியமாக ஆலம்பாக்கத்துக்கு வந்த நான் இன்னமும் பெருவள நல்லூருக்குத் திரும்பிப் போகவில்லை."

''அப்படியா?... 'ஆமாம்; உனக்கு எத்தனையோ அலுவல்கள்! அவற்றுக்கிடையே சேதியக் கலைஞரின் இல்லத்திலும் பணியாற்றுவதென்பது மிகவும் சிரமம்தான்!"

நிஜமாகவே அநுதாபப்படுகிறவள்போல் இப்படிச் சொன்னாள் உத்தமசீலி. இதைக் கேட்ட அநந்தமதியோ உள்ளூறக் கலக்கமடைந்தாள்.

"அது சரி; நேற்று நீ இந்த இலவந்திகைப் பள்ளிக்கு வந்தும் என்னைப் பார்க்காமலே போய்விட்டாயே, ஏன்?"-இதமான குறும்புக் குரலில் இவ்வாறு கேட்டாள் உத்தமசீலி. அதிர்ந்து நிமிர்ந்த அநந்தமதி, திக்கித் திணறிய வண்ணம் ஏதோ சொல்ல வாய் திறந்தாள். உண்மைக்குப் புறம்பாக எதையேனும் சொல்லித் தான் அவள்மீது வைத்திருக்கும் நன்மதிப்பிலிருந்து தாழ்ந்து போய்விடுவாளோ என்று அஞ்சியவள்போல் சட்டென்று குறக்கிட்ட உத்தமசீலி, "நீ என்னை மறந்தாலும் நான் உன்னை மறக்க முடியாது. சேதியக் கலைஞரின் இல்லத்திலே நீ எனக்குச் சமைத்துப் படைத்த உணவின் இனிய சுவை இன்னமும் என் நாவில் இருந்து கொண்டே இருக்கிறது" என்றாள் புன்சிரிப்புடன்.

அநந்தமதியின் முகம் வெட்கத்தால் வறண்டது. சுணைசெறிந்த ஊமத்தை மலர்ப் பொதியில் புரண்டு

எழுந்தவளைப் போல் அப்படியும் இப்படியுமாக நெளிந்தாள் அவள்.

அவளுடைய பரிதாப நிலையைக் கண்டு மனம் கசிந்தவளாய்த் தன் பார்வையை வேறு பக்கம் திருப்பிய உத்தமசீலி, அங்கு இவ்வளவு நேரமாக அடித்து வைத்த சிலைபோல் நின்றுகொண்டிருந்த இளங்கோப்பிச்சியை அப்போதுதான் பார்த்த மாதிரி ஆச்சரியத்துடன் கண்களை அகல விரித்தவாறு அவளருகில் நெருங்கினாள். பிறகு மெல்லச் சிரித்துக் கொண்டே அவளது வெண்ணிறத் தோள்களைத் தன் இரு கரங்களாலும் இதமாகப் பற்றி முகத்துக்கு நேரே முகம் வைத்துக்கொண்டு அவளைச் கூர்ந்து நோக்கினாள்.

இளங்கோப்பிச்சியோ எவ்விதச் சலனமுமின்றிப் பனிப் பதுமையாக உறைந்து நின்றுகொண்டிருந்தாள்.

"ஆலம்பாக்கத்திலிருந்து பல்லவபுரத்துக்கு நடத்தி அழைத்து வரும்படி சொல்லிவிட்டேனே என்று சோழ இளவரசிக்கு என்மீது மிகவும் கோபம் போலும்! இல்லை யானால், இங்கு வந்து இவ்வளவு நேரமாகியும் என்னை ஏறெடுத்துக் கூடப் பார்க்காமல் தலைகுனிந்து கொண்டே இருப்பாளா?"

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டு அதிர்ச்சியடைந்தாள். அவளது பூவுடல் நிலைகொள்ளாமல்-பதறித் துடித்தது.

கலகலவெனச் சிரித்த உத்தமசீலி நிதானமாக அநந்தமதியின் பக்கம் திரும்பி, "நீயே சொல் அம்மா! இடையப் பெண் கோலத்திலிருக்கும் இவளை அழைத்து வருவதற்காக நான் சிவிகையை அனுப்பினால் இங்குள்ள வர்கள் சிரிக்க மாட்டார்களா? சிரிப்புக்கிடமாவது ஒரு புறமிருந்தாலும் அது இவளுக்கு ஆபத்தாகவும் முடியலாம் அல்லவா?" என்று குறும்பாகக் கண் சிமிட்டியபடி கேட்டாள்.

குளிர்க் காய்ச்சல் கண்டவளைப்போல் நடுங்கிக் கொண்டிருந்த அநந்தமதியைப் பார்ப்பதற்கே மிகவும் பரிதாபமாக இருந்தது.

"கவலைப்படாதே, சகோதரி; வா, இப்படி வந்து உட்கார்!" என்று ஆதரவுடன் கூறிக்கொண்டே இளங்கோப் பிச்சியை அணைத்து அழைத்துப்போய் ஓர் ஆசனத்தில் அமர்த்தித் தானும் அவளருகில் அமர்ந்தாள் உத்தமசீலி.

இளங்கோப்பிச்சிக்குத் தன்னை நிதானப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. மிரட்சியுடன் சுற்றுமுற்றும் பார்த்து விழித்தாள். 'இது என்ன, கபட நாடகம்? எந்த இடியைத் தூக்கிப் போட இவள் இப்படியெல்லாம் சாகசித்து நடிக்கிறாள்? காணாமற்போன தன் பட்டோலை விஷயமாய் என்னிடம் விசாரிக்கவே இங்கு அழைத்திருக்கிறாள் என்று நான் எண்ணி வந்ததற்கு மாறாக, என்னைப் பற்றிய எல்லா இரகசியங்களையும் தெரிந்து வைத்துக் கொண்டு பேசுகிறாளே! இப்படி நடக்கும் என்று தெரிந்திருந்ததால், நேற்றுக் காலையே சம்புவராயனுடன் பழையாறைக்குப் போய்விட்டிருப்பேனே? அப்படிப் போகாதது எவ்வளவு பெரிய தவறாகி விட்டது! நானும் அநந்தமதியும் இங்கு அகப்பட்டுக் கொண்டிருப்பதுபோல் பரமேசுவரவர்மரும், கோவிந்தவர்மரும் கூட எதிரிகளிடத்தில் சிக்கிவிட்டிருப்பார் களோ? அந்த விவரத்தை அறிந்து கொண்டுதான் இவள் இப்படிப் பேசுகிறாளோ?'-அவள் மனம் ஒரேயடியாகக் குழம்பித் தவித்தது.

ஏதோ சிந்தனையில் மௌனமாய் உட்கார்ந்திருந்த உத்தமசீலி விருட்டென்று எழுந்து சற்றுத் தொலைவில் போய் நின்றுகொண்டு இளங்கோப்பிச்சியைச் கூர்ந்து நோக்கியவாறு அமைதியான குரலில் கூறினாள்; "சோழ இளவரசி! உன்னைப் பற்றிய எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியும். நீ இப்போது தங்கியுள்ள ஆலம்பாக்கம் இல்லத்துக்கு நேற்றிரவு யார் வந்தது என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் அதைப்

பற்றியெல்லாம் நான் இப்போது விசாரிக்கப் போவதில்லை. உன்னிடமிருந்து ஒரு சிறு தகவல் எனக்குத் தெரியவேண்டும். அதற்காகவே உன்னை இங்கு வரவழைத்திருக்கிறேன்."

இமைகளை அசைக்கவும் சக்தியற்றுப்போன இளங்கோப்பிச்சி அவளையே நேரிட்டு நோக்கினாள்.

"ஆம், சகோதரி! அன்றொரு நாள் நீ எனக்கு இளநீர் கொண்டுவந்து கொடுத்தபோது என்னுடைய பட்டோலை ஒன்றை இடுப்பில் செருகி வைத்திருந்தாயே, அது உனக்கு யாரால், எப்படிக் கிடைத்தது?"

இளங்கோப்பிச்சி மௌனமாக இருந்தாள்.

"சொல்லமாட்டாயா? சரி; நானே அதை ஊகித்துச் சொல்கிறேன். உன்னுடைய முயற்சியால் பல்லவபுரம் கோட்டைச் சிறையிலிருந்து தப்பி வந்த கோவிந்தவர்மர் அந்த ஓலையை என் சிவிகையிலிருந்து கவர்ந்து வந்து உன்னிடம் கொடுத்தார்; அப்படித்தானே?"

சோழ இளவரசியின் உடல் கிடுகிடுவென்று நடுங்கியது.

"சரி, அதைக்கூட நீ சொல்ல வேண்டாம். ஆனால், அந்த ஓலை உன் கைக்கு வந்த காரணத்தை மட்டும் சொல்லியே ஆகவேண்டும். நான் தெரிந்துகொள்ள விரும்புவது அது ஒன்றுதான்."

இப்போது வாயை இறுக மூடிக்கொண்டிருந்தாள் இளங்கோப்பிச்சி.

"உன்னுடையதாகவும், உங்களுடையவும் நன்மைக் காகவே கேட்கிறேன்; ஒளிக்காமல் சொல்லிவிடு!"

மறுமொழி இல்லை.

"நல்லது. இனி உன் காதலர் கோவிந்தவர்மரையோ, அவருடைய சகோதரர் பரமேசுவரவர்மரையோ இந்த ஜன்மத்தில் பார்க்க முடியாது என்ற தீர்மானத்துடன் நீ இங்கிருந்து போகலாம்."

மேன்மாடத்துக்குச் செல்ல வேகமாகத் திரும்பினாள் உத்தமசீலீ ஈட்டியால் குத்தித் தூக்கியெறியப்பட்டவள் போல் பதறித் துடித்து எழுந்த இளங்கோப்பிச்சி, "சற்று நில்லுங்கள், இளவரசி! இதோ, அந்தக் காரணத்தைக் கூறிவிடுகிறேன்; உங்களுடைய பட்டோலையைக் கொண்டு, சிறைப்பட்டிருக்கும் பரமேசுவரவர்மரின் அன்னையார் காடவன் மாதேவியை மீட்டுவிட வேண்டும் என்பதற்காகப் பல்லவ இளவரசர் ஏதோ ஒரு தந்திரத் திட்டம் போட்டிருந்தார். அதன்பொருட்டே அவர் அவ்வோலையை என்னிடம் கொண்டுவந்து கொடுத்தார். ஆனால் அவருடைய திட்டம் என்ன என்பது எனக்குத் தெரியாது. அதை அவர் என்னிடம் சொல்லவும் இல்லை'' என்று துக்கம் தொண்டையை அடைக்கக் குழறினாள்.

## 36

# இரண ரசிகன் விஜயன்

கடந்த இரு நாட்களாகப் பரபரப்பும் சுறுசுறுப்புமாக விளங்கிய அந்த இலவந்திகைப்பள்ளி இன்றைய பிற்பகலுக்குப் பின் ஆழ்ந்த அமைதியில் புழுக்கமிட்டுக் காணப்பட்டது. இதற்குமுன் அங்கு நிலவியிருக்க முடியாத பயங்கர அமைதியாகவும் அது தோன்றியது. சுழற்றிவிட்ட பம்பரமாய் சுழன்று கொண்டிருந்த பணியாட்கள் இப்போது எங்கு போய் முடங்கினர் என்றே தெரியவில்லை. சளுக்கியக் காவல் வீரர்களின் கண்காணிப்பு நடமாட்டம் கூட வெகுவாகக் குறைந்து விட்டிருந்தது. அங்குமிங்கும் ஓரிரு வீரர்களே சோம்பலுடன் உலாவிக் கொண்டிருந்தனர். முன்பு ஏற்பட்டிருந்த சுறுசுறுப்புத் தீவிரத்துக்குக் காரணம் புரியாதது போலவே, இப்போதைய அதன் உயிரற்ற அமைதிக்கும் காரணம் புலனாகவில்லை.

இதையெல்லாம் கண்டும் காணாதவளாய், அந்தப் பள்ளி மாளிகையின் மிகப் பெரிய நந்தவனத்துக்குப் பூம்பாதையொன்றில், சொர்க்க வாழ்க்கையைப் பறிகொடுத்து விட்டு வந்த தேவதைபோல் மெல்ல உலாவிக்கொண் டிருந்தாள் உத்தமசீலி.

அவளுடைய பட்டோலையைச் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி வைத்திருந்ததற்கான காரணத்தைக் கேட்டறிந்தபின், அதற்கு ஒன்றுமே பதில் கொல்லாமல், அவளையும் அநந்தமதியையும் போகுமாறு கூறிவிட்டு நெடுநேரம் சிந்தனையில் ஆழ்ந்து கிடந்த அவள், அந்தச்

சிந்தனை வேக்காட்டிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளவே இந்த நந்தவனத்துப் பக்கம் நடமாட வந்திருந்தாள். ஆனால், எதை உத்தேசித்து இங்கு வந்தாளோ அதை அவளால் எள்ளளவும் பெற முடியவில்லை. நலிந்து மெலிந்த அவளது மனத்தை அங்கே நிலவிய இறுக்கமான அமைதியும் அதன் சோம்பலான இருண்ட சூழ்நிலையும் மேலும் அலைத்துக் குலைக்கவே உதவின.

தன் தந்தையின் மைச்சாத்து உள்ள அந்தப் பட்டோலையைக் கொண்டு தன்னுடைய இலட்சிய யாத்திரையைச் சீர்குலைக்க வேண்டுமென்ற ஏதோ ஒரு சதித் திட்டத்துடன் தான் சோழ இளவரசி அதைத் தன் வசம் வைத்திருந்திருப்பாள் என்றும், அதற்கு அந்த மூதாட்டி அநந்தமதியும் உதவி செய்பவளாய் இருப்பாள் என்றும் எண்ணியே அவ்விருவரையும் தன் இருப்பிடத்துக்கு வரச் செய்து விசாரித்தாள் உத்தமசீலி. ஆனால், பல்லவராணி காடவன்மாதேவியைச் சிறையிலிருந்து மீட்கும் பொருட்டே அவ்வோலையைத் தான் வைத்திருந்ததாகச் சோழ இளவரசி சொன்னதைக் கேட்டதும் அவளுக்குச் சப்பென்றாகிவிட்டது. தன் இலட்சிய விஜயத்துக்குச் சம்பந்தப்படாத அவர்களின் சதித் திட்ட முயற்சியைத் தான் பொருட்படுத்த வேண்டியதில்லை என்ற முடிவோடு அவர்களை நேச பாவத்துடனே அனுப்பி வைத்துவிட்டாள் அவள்.

அதோடு அந்த விஷயம் தீர்ந்துபோன மாதிரிதானே? அப்புறம் ஏன் அதைப்பற்றி எண்ணித் தன் மனத்தை அவள் குழப்பிக் கொள்ள வேண்டும்? அதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது;

சோழ இளவரசிக்கும் அநந்தமதிக்கும் விடை கொடுத்து அனுப்பியபோது அவர்களிடம், பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன் வரைந்து கொடுத்த ஓவியத்தைக் கொண்டு அவனைத் தேடிப் பிடித்துவிட சளுக்கிய ஒற்றர்கள் இப்போது நாடெங்கிலும் விரைந்து சென்றிருக்கிறார்கள் என்னும்

விஷயத்தைச் சொல்லி அவர்களை எச்சரித்து அனுப்ப வேண்டுமென எண்ணினாள். ஆயின், கடைசி விநாடி வரையில் அந்த விவரத்தை அவர்களிடம் அவளால் சொல்லவே முடியவில்லை. மனம் துணிந்தபோது வாய் அதைச் சொல்ல மறுத்தது; வாய் துணிந்தபோது மனம் அதற்குப் பூட்டு போட்டது. இப்படி வாய்க்கும் மனத்துக்குமாக ஒரு பெரிய போராட்டமே நடத்தி இறுதியில் அவ்விஷயத்தை அவர்களிடம் சொல்லாமலே இருந்து விட்டாள்.

அவர்கள் போய்விட்டார்கள். அதன் பிறகுதான், 'ஐயோ, அதைச் சொல்லாமல் அவர்களை அனுப்பி விட்டேனே!' என்று அவள் வாயும் துடித்தது; மனமும் வெடித்தது. புழுவாக நெளிந்தாள். தவியாய்த் தவித்தாள். குமுறிக் குமறி அழுதாள். பிரமை பிடித்தவள்போல் நெடுநேரம் உட்கார்ந்துவிட்டுக் கடைசியில் இதோ, இந்த நந்தவனத்தில் உலாவ வந்திருக்கிறாள்.

'பளீர்! பளீர்! பளீர்!'...

தென்றலில் மிதந்து செல்லும் பூந்துகில்போல் நடந்து கொண்டிருந்த உத்தமசீலி இந்தப் பயங்கரச் சாட்டையொலி கேட்டுத் திடுக்குற்று நின்றாள்.

மீண்டும் அதே சாட்டை கொடுக்கும் பளீரொலி!

அவள் பரபரப்புடன் திரும்பினாள். அங்கே, அந்த நந்தவனத்து வேலியோரம் ஒரு கோரமான நிகழ்ச்சி வெகு குரூராவேசமாக நடைபெற்றுக் கொண்டிருந்தது.

ஆம்; அவளுடைய சிவிகை தூக்கிகளில் ஒருவனான நாகோதரன் என்பான் முட்கள் நிறைந்த வேலமரமொன்றில் இறுக்கிப் பிணைத்துக் கட்டப்பட்டிருந்தான். அத்துடன் அன்றொரு நாள் சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் தோட்டத்திலிருந்து அவனே தூக்கியெடுத்து வந்த தாமரைப்பூ வடிவிலான மர ஆசனத்தையும் தன் தலையில் சுமந்து கொண்டிருந்தான். அவனுக்கு முன்னும் பின்னுமாக மறலியின் தூதுவர்கள்போல் நின்று கொண்டிருந்த சளுக்கிய

வீரர்கள் இருவர், நீண்ட சவுக்கைச் சுழற்றிச் சுழற்றி அவனை மூர்க்காவேசமாக சாடிக் கொண்டிருந்தனர்!...

நெஞ்சை உலுக்கும் இந்தக் கோரக் காட்சியைக் கண்டு நடுங்கித் துடித்துவிட்டாள் உத்தமசீலி. ஒருகணம் அவளுக்கு ஒன்றுமே புரியவில்லை. பிறகு சரேலென்று அவ்விடத்தை நோக்கிப் பாய்ந்தோடினாள்.

ஆந்திர இளவரசி அங்கு வருவதைப் பார்த்த அவ்விரு சளுக்கிய வீரர்களும் சாட்டைகளைப் போட்டுவிட்டுச் செடி கொடிகளிடையே புகுந்து மறைந்தனர்.

மேல்மூச்சுப் பறிய அந்த வேலமரத்தின் அருகில் வந்து நின்றாள் உத்தமசீலி. அவள் வந்ததையும் உணராத நிலையிலே மரத்தோடு மரமாக மூர்ச்சித்துச் சாய்ந்திருந்தான் நாகோதரன். தசைகள் பிய்ந்து தொங்க, நரம்புகள் அறுந்து சுருளச் சர்வாங்கமும் ஒரே குருதிக் களரியாகி விட்டிருந்த அவன் உயிரோடு இருக்கிறானா, அல்லது இறந்துவிட்டானா என்பதே தெரியவில்லை.

அன்புக் கொள்கையிலும் அகிம்சைத் தத்துவத்திலும் ஊறி வளர்ந்தவளான உத்தமசீலி இந்தக் கொடுமையான கோரக் காட்சியைக் காணச் சகியாமல் முகத்தைப் பொத்திக் கொண்டு விம்மிப் பொருமியே விட்டாள்.

'எவரால், எதற்காக இவனுக்கு இவ்வளவு பெரிய தண்டனை விதிக்கப்பட்டது?'

சிந்திக்க இது நேரமில்லையென்று தன்னையே கடிந்து கொண்ட அவள் விரைந்து போய் நாகோதரனின் உடலைச் சுற்றிப் பிணைத்திருந்த கட்டுக்களை அவிழ்த்தெறிந்தாள். கட்டவிழ்ந்து விடப்பட்ட அவன், பேச்சு மூச்சின்றிப் பிணம் போல் அப்படியே சாய்ந்தான்.

உத்தமசீலியின் மென்னுடல் நிலைகொள்ளாமல் நடு நடுங்கியது. தான் ஒரு நாட்டு இளவரசி என்ற எண்ணமே இன்றி, தானும் அந்தச் சிவிகை தூக்கியும் ஒரே தாய் வயிற்றில் பிறந்தவர்கள் என்ற தூய பாசப் பரிவோடு ஒற்றை

முழந்தாளிட்டு அமர்ந்து பயப்பிராந்தியுடன் குனிந்து, அவனுக்கு மூச்சு இருக்கிறதா என நாசியில் கை வைத்துப் பார்த்தாள்.

சாவு அவனை இன்னும் நெருங்கவில்லை!

அவசரமாகத் தன் மேலாடைத் துகிலிலிருந்து ஒரு பகுதியைக் கிழித்த எடுத்த அவள், இரத்தச் சேறாகி விட்டிருந்த அவனுடைய முகத்தை இதமாகத் துடைத்துச் சுத்தம் செய்தாள்.

அவன் இலேசாகக் கண் திறந்தான். தன் அருகில் முழந்தாளிட்டிருக்கும் உத்தமசீலியை மிரள மிரளப் பார்த்தான். மறுகணம் அவன் உடலில் ஓர் அசாதாரண நடுக்கம் ஏற்பட்டது. திடீரென்று எழுந்திருக்க முயன்று அப்படியே தரையில் சாய்ந்தான். பிறகு தட்டுத் தடுமாறித் தரையோடு தரையாக நகர்ந்து சற்றுத் தொலைவில் போய் முட்டியிட்டு அமர்ந்து இரு கைகளையும் தலைக்கு மேல் தூக்கிக் குவித்துக்கொண்டு, "இளவரசி! தயைகூர்ந்து என்னை மன்னித்து விடுங்கள் இளவரசி! நான் செய்த தவற்றுக்கு இந்தத் தண்டனையே போதும்! என்னைக் கொல்லாதீர்கள் அம்மணீ! கொல்லச் சொல்லாதீர்கள் தாயே!" என்று பரிதாபமாக அலறினான்.

உத்தமசீலியின் மனம் உருகிக்கரைந்தது. "நாகோதரா, பயப்படாதே! நான் உனக்கு எவ்விதத் தீங்கும் செய்ய வரவில்லை. இந்த அநியாயத் தண்டனையிலிருந்து உன்னைக் காப்பாற்றவே வந்திருக்கிறேன். இந்தத் தண்டனையை உனக்கு அளித்தவர் யார்? சளுக்கியத் தளபதி வில்வேலியா?" என்று அடைத்த குரலில் கேட்டாள்.

'இல்லை' என்று தலையசைத்த அவன் தன்னை மீறிய ஒரு பயபக்தியோடு சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான். பிறகு திக்கித் திணறிக் கொண்டே இவ்வாறு கூறினான்: "சற்றுமுன் சளுக்கிய மாமன்னர் இரண ரசிக வல்லபர் விக்கிரமாதித்தரே இங்கு நேரில் வந்து, எனக்கு இந்தத் தண்டனையை வழங்கினார் அம்மணீ!"

# 37

## நாகோதரன்

அந்தச் சேதியைக் கேட்டு வியப்பும் ஆவலுமாகக் கண்களை அகல விரித்த உத்தமசீலியின் முகத்தில் வியர்வைத் துளிகள் பூத்தன. "உண்மைதானா நாகோதரா? உறையூரிலிருந்து என் பெரிய தந்தையார் இங்கு வந்துபோனது உண்மைதானா?"

குருதி வழியும் காயங்களின் வேதனையைத் தாளமாட்டாமல் நெளிந்து நடுங்கிய நாகோதரன், "ஆம், தாயே! தளபதி வில்வேலியுடன் வந்த நம் சளுக்கியப் பேரரசர் சற்று முன்தான் இங்கிருந்து சென்றார்" என்றான்.

அவன் சொன்னதை நம்பச் சிரமப்படுகிறவள்போல் அவனை ஏற இறங்கப் பார்த்து விழித்த உத்தமசீலி, "உனக்கு ஏன் இந்தத் தண்டனை விதிக்கப்பட்டது?'' என்று அவசரமாகக் கேட்டாள்.

புண்பட்ட உடலைக் கூனிக் குறுக்கிக் கொண்டு தன் அருகில் உருண்டு கிடந்த அந்தத் தாமரைப் பூ வடிவிலான மர ஆசனத்தைப் பரிதாபமாகப் பார்த்த நாகோதரன் மௌனமாகக் கண்ணீர் வடித்தான்.

உத்தமசீலிக்கு இப்போதுதான் அவ்விஷயம் நினைவில் வந்து ஊர்ந்தது. அன்றொரு நாள் விடியற்காலை அவளும் வில்வேலியும் சேதியக் கலைஞரின் இல்லத்திலே அமர்ந்து பேசிக் கொண்டிருந்தபோது, வெளியில் இருந்த அவளுடைய சிவிகை கடத்தப்பட்ட சம்பவத்தையொட்டியே அவனுக்கு இந்தத் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது என்பதைப் புரிந்து

கொண்டு அவள் மிகுந்த மன வேதனைக்கு உள்ளானாள். ஆயினும் அதுபற்றிய மேல் விவரங்களை அறியும் பொருட்டுத் தன் மன நெகிழ்ச்சியை அடக்கிக்கொண்டு அவனைப் பரிவுடன் நோக்கி, "அது சரி; நான் இந்த இலவந்திகைப் பள்ளிக்கு வந்த நாள்முதல் நீ என் கண்ணில் படவில்லையே, எங்கே போயிருந்தாய்?" என்று கேட்டாள்.

தலைநிமிரக்கூடச் சக்தியற்றுவிட்டிருந்த நாகோதரன் துக்கம் தொண்டையை அடைக்கக் கூறினான்: "கடந்த ஒரு வாரமாக இங்குதான் இருந்து வருகிறேன், அம்மணீ! யாரோ சதிகாரன் இந்த மர ஆசனத்தைச் சிவிகையினுள் வைத்து என்னை ஏமாற்றிவிட்ட விஷயம்தான் உங்களுக்குத் தெரியுமே? அந்த என் தவற்றினால் இளவரசியாருக்கும் தமக்கும் பல சங்கடங்கள் ஏற்பட்டுவிட்டன என்று குற்றம் சாட்டி, அதற்குத் தண்டனையாக இந்த ஆசனத்தைப் பெருவளநல்லூரிலிருந்து என் தலையில் ஏற்றிக் கொண்டு வரச் செய்து, இங்கு வந்த பின்னும் இதை நான் சுமந்துகொண்டு நிற்க வேண்டுமென உத்தரவிட்டார் தளபதி வில்வேலி. அதன்படி இரவு பகல் ஊண் உறக்கமின்றி இவ்வாசனத்தைத் தலையிலே சுமந்துகொண்டு இங்கேயே நின்றிருந்தேன். அதுவும் போதாதென்று, சளுக்கிய மன்னரவர்கள் இன்று உறையூரிலிருந்து வந்ததும் அவரை இங்கே அழைத்து வந்து இந்தச் சவுக்கடி தண்டனையை எனக்கு வாங்கிக் கொடுத்த பிறகுதான் தளபதியின் மனம் திருப்தியடைந்தது."

நாகோதரன் சொன்ன விவரங்களைக் கேட்டு நெஞ்சம் பதறிக் குமுறினாள் உத்தமசீலி. தன்னுடைய நாட்டிலிருந்து அழைத்து வரப்பட்ட-தனக்குச் சொந்தமான-பணியாள் ஒருவனைத் தன் அனுமதியின்றித் தண்டிக்க, சளுக்கியத் தளபதிக்கோ, சளுக்கிய மாமன்னருக்கோ என்ன அதிகாரம் இருக்கிறது என்று எண்ணி உள்ளூறச் சினந்து பொங்கினாள் அவள்.

'ஒவ்வொரு மனிதனும் தனக்குக் கிடைக்கும் அதிகாரங்களைப் பிறர்மீது பிரயோகிப்பதில்தான் எத்தனை பேய்த்தனமான ஆர்வம் காட்டுகிறான்! அதிகார வெறி தலைக்கேறிவிட்டால் எந்தப் பெரிய மனிதனும் எவ்வளவு அடிமட்டத்துக்கும் இறங்கிப் போய்விடுவான் போலும்!" என்று எண்ணி மனம் உலர்ந்த அவள், மறுகணமே இதற்கு மாறான மற்றோர் ஊகத்துக்கு தாவினாள்; 'என்னுடைய விஜயத்தின் முக்கியத்துவத்தை மனத்தில் கொண்டுதான் விக்கிரமாதித்தரே நேரில் வந்து இச்சிறு விஷயத்தை விசாரிக்க முற்பட்டாரோ? அல்லது என்மீது வைத்த அளப்பரிய அன்பினால், எனக்கு நேர்ந்த சங்கடங்களைப் பொறுக்க மாட்டாமல் இவனுக்கு இத்தனை கொடிய தண்டனையை அளித்துவிட்டுப் போனாரோ?'

இப்படி எண்ணியதுமே அவள் உள்ளம் ஒரு விசித்திர மகிழ்ச்சியில் திளைத்தது. "நாகோதரா! என் பெரிய தந்தையார் இப்போது எங்கே போயிருக்கிறார்?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"இந்த நந்தவனத்துப் பின்புற வாயிற்பக்கமாக வந்த சளுக்கிய மாமன்னர், அவ்வழியாகவே திரும்பிச் சென்றார் என்பதைத் தவிர வேறெதும் எனக்குத் தெரியாது, அம்மணீ!" என்று குழறினான் நாகோதரன்.

ஒருகணம் ஏதோ யோசித்த உத்தமசீலி, "சரி; நான் இப்போதே போய் என் பெரிய தந்தையாரைப் பார்க்க வேண்டும். நீ கவலைப்படாமல் இரு. உனக்கு மன்னிப்புக் கிடைக்கச் செய்கிறேன்" என்று கூறிக்கொண்டே அங்கிருந்து புறப்படத் திரும்பினாள்.

"இளவரசி..."

அவள் சட்டென்று நின்றாள். இரத்தம் கசிந்த தன் உடலை இரு கைகளாலும் போர்த்திக் கொண்டு தட்டுத் தடுமாறி எழுந்த நாகோதரன் அவளைப் பயப்பிராந்தியுடன் பார்த்து, "இளவரசியாரிடம் அடியேன் ஒரு விஷயத்தைச்

சொல்ல விரும்புகிறேன்...'' என்று கரகரத்த குரலில் இழுத்தான்.

''என்ன?' என்பதுபோல் ஏறிட்டு நோக்கினாள் உத்தமசீலி.

"பல்லவபுரத்துக்கு விஜயம் செய்திருக்கும் சளுக்கிய மாமன்னர், வேங்கி இளவரசியாரைச் சந்திப்பதற்காக வரவில்லை; தங்களைப் பார்க்க அவர் இந்த இலவந்திகைப் பள்ளிக்கு வரப் போவதுமில்லை..."

ஒன்றும் புரியாமல் நின்ற உத்தமசீலி, ஓரடி முன்னால் வந்து அவனைக் கூர்ந்து நோக்கினாள்.

"ஆம், தாயே! என் காதுபடக் கேட்ட சேதிகளைக் கொண்டுதான் இவ்வாறு கூறுகிறேன். தயைகூர்ந்து என்னைத் தவறாகக் கருதிவிடாதீர்கள்."

அவள் மேலும் முன்னால் நகர்ந்து போய் அவனைக் கண்ணிமைக்காமல் பார்த்தாள்.

"வேங்கி மண்ணில் பிறந்து, விஷ்ணுவர்த்தன பூமானின் உப்பைத் தின்று வளர்ந்த நான், அவரது அருமைக் குமாரி ஆந்திர இளவரசியாரை உயிரினும் மேலாக மதித்துப் பக்தி செலுத்தி வரும் நான், என்னையறியாமலே ஒருமுறை என் கடமையிலிருந்து வழுவிய குற்றம் புரிந்தவனானாலும், மீண்டும் அதுபோன்ற இன்னொரு பெருங்குற்றத்துக்கு ஆளாகிவிடக் கூடாதே என்பதனால்தான் இந்த விஷயத்தைத் துணிந்து கூற முன்வந்திருக்கிறேன்!" என்று தழுதழுத்த குரலில் சொல்லிக்கொண்டே திகிலுடன் சுற்றிலும் திரும்பிப் பார்த்த நாகோதரன் ஏதோ ஓர் ஆவேசத்தால் உந்தப்பட்டவன்போல் சட்டென்று நிமிர்ந்து, "ஆம், இளவரசி! சளுக்கிய மன்னர் விக்கிரமாதித்தரால் தாங்களும் தங்கள் தந்தையாரும் நன்றாக ஏமாற்றப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள்; ஏமாற்றப்படவும் போகிறீர்கள்?" என்றான். இதைக் கேட்டதும் உத்தமசீலியின் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது.

"சற்றுமுன் இங்கு வந்து எனக்குச் சவுக்கடி தண்டனை வழங்கிய இரண ரசிகர் விக்கிரமாதித்தர், அவரது அந்த விருதுப் பெயருக்கேற்ப, என் உடலில் ஏற்பட்ட இரத்த விளாறு இரணங்களைப் பார்த்து இரசித்துக் கொண்டே தன் அருகில் இருந்த வில்வேலியுடன் பேசியவற்றைக் காதுபடக் கேட்டுவிட்டுத்தான் இவ்வாறு சொல்கிறேன், அம்மணீ! அவர் தம் ராஜீய சுயநலத் திட்டங்களுக்குப் பயன்படுத்திக் கொள்வதற்காகத் தங்களை இந்நாட்டுக்கு வரவழைத்திருக் கிறாரே தவிர, உண்மையில் தங்களின் உயர்ந்த இலட்சி யத்தைச் செயல்படுத்த அல்ல!"

மூச்சு முட்டியதால் பேச்சை நிறுத்திய நாகோதரன் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொண்டு மேலும் தொடர்ந்து சொன்னான். "ஆம், இளவரசி! அன்பையும், அறத்தையும், கொல்லா நோன்பையும் மூலக் கொள்கைகளாகக் கொண்ட சமண சமயம் உலகெலாம் பரவித் தழைக்க வேண்டும் என்பதில் தங்களுக்கும் தங்கள் தந்தையார் விஷ்ணுவர்த்தன ருக்கும் தணியாத வேட்கை. அந்த வேட்கையையே தங்கள் வாழ்க்கை இலட்சியமாகவும் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் சளுக்கிய மன்னர் விக்கிரமாதித்தரோ இதற்கு முற்றும் மாறானவர். சமண சமயத்தின் உயரிய கொள்கைகளில் ஒன்றைக் கூடக் கடைப்பிடித்து ஒழுகாதவர். அவற்றில் சிறிதளவு நம்பிக்கையும் இல்லாதவர். அப்படிக் கொஞ்ச மேனும் நம்பிக்கை உள்ளவராயிருந்தால், மண்ணாசையும் பொன்னாசையும் பழிவாங்க வேண்டும் என்ற பகைமை உணர்ச்சியும் கொண்டு, அவற்றுக்காகவே ஒரு பயங்கரப் போரையும் நடத்தி, ஆயிரக்கணக்கான கரி பரிகளையும் இலட்சக்கணக்கான மனிதர்களையும் கொன்று குவிக்கத் துணிந்திருப்பாரா? போரைப் பற்றி நினைக்கும் யாரும் சமணராயிருக்க முடியாது. விக்கிரமாதித்தரோ போரைத் தவிர வேறு எதைப்பற்றியுமே சிந்தித்து அறியாதவர். ஆயினும் அவர் தம்மை ஒரு சமணன் என்றே கூறிக்கொள்கிறார். இதற்கு ஒரு வருந்தத்தக்க காரணமும் இருக்கிறது. அணுக்களின் சேர்க்கையால் தோன்றியதே இவ்வுலகம் என்னும் 'அநேகாந்த

வாதக்' கொள்கை கொண்ட சமண சமயம், உலகையும் அதில் உள்ள சகல ஜீவராசிகளையும் படைத்துக் காத்து அழிக்கும் சர்வ வல்லமை வாய்ந்த மூலப் பரம்பொருள் ஒன்று உண்டு என்னும் 'ஏகாந்த வாதக்' கொள்கையை ஏற்க மறுப்பதாலேயே அவர் தம்மைச் சமணரென்று கூறிக்கொள்கிறார். தமக்கும் மேலே தம்மை ஆட்டிப் படைக்கும் சக்தி ஒன்று இருக்கிற தென்பதை நம்பினால் அதற்குப் பயந்து நடந்தாக வேண்டும். அப்படி ஒரு சக்தி இல்லையென்று கொண்டால், எதற்கும் அஞ்சாமல் எத்தகைய தீய காரியங்களையும் செய்யலாம்; மற்றவர்களையும் செய்யத் தூண்டலாம். எனவேதான் அவர் அந்த 'ஏகபொருள் மறுப்புக் கொள்கை' ஒன்றை மட்டும் உறுதியாகப் பிடித்துக் கொண்டு, தாமும் ஒரு சமணன்தான் என்று தைரியமாகக் கூறி கொள்கிறார். ஆனால் மனிதர் செய்யும் ஒவ்வொரு தீவினைக்கும் உரிய சம்பாவனை உண்டு என்றும் அந்தச் சம்பாவனைகளை இப்பிறவியில் மட்டுமல்லாது இனி வரும் பிறவிகளிலும் அநுபவிக்க நேரிடும் என்றும், அப்படித் தீவினைகளைச் செய்து செய்து அவற்றை அநுபவிக்கப் பல பிறவிகள் எடுத்துக் கொண்டே இருந்தால் உயிரின் கட்டை அறுத்து வீடு பேறு அடைய இயலாது என்றும், ஆகவே வாழ்க்கையின் எல்லா முனைகளிலும் சீலத்தை ஓம்பித் தர்மத்தைக் கடைப்பிடித்துத் தூய நடத்தைகளை மேற்கொள்ள வேண்டும் என்றும் வலியுறுத்திக் கூறும் சமண சமயத்தின் தலையாய கொள்கையை ஏனோ அவர் மறந்து விட்டிருக்கிறார். மறந்துவிட்டார் என்றுகூடச் சொல்ல முடியாது! தெரிந்தே அதைத் தள்ளிவிட்டார் என்றுதான் சொல்ல வேண்டும. ஏனென்றால், உண்மையில் அவர் ஒரு சமணர் அல்லர்; உலகாயதவாதி, உலகம் மட்டுமே உள்ள பொருள், மற்றவையெல்லாம் பொய் எனக் கூறும் 'சார்வாகக் கொள்கை'யில் நம்பிக்கை கொண்டவர். ஆனால் அதைப் பகிரங்கமாகச் சொல்ல அஞ்சித் தமது ராஜீய நலன்களுக்காகத் தம்மைச் சமணர் என்றே கூறிக் கொள்கிறார். இப்படிப்பட்ட போலிச் சமணவாதியை நம்பித்தான் வேங்கி இளவரசி இங்கு வந்திருக்கிறார்."

தீக்குண்டத்தில் வீசியெறியப்பட்ட பூமாலைபோல் நெளிந்து துவண்டாள் உத்தமசீலி. நாகோதரனோ உணர்ச்சித் துடிப்பேறிய குரலில் மேலும் பொரியலானான்; "கேளுங்கள், இளவரசி! இந்தத் தமிழ் நாட்டில் ஒரு காலத்திலே ஓங்கிப் பரவி உன்னத நிலையிலிருந்து வந்த சமண மதம் இப்போது வேகமாக ஒடுங்கி வருவதைக் கவலையுடன் கவனித்த தாங்களும் தங்கள் தந்தையாரும், அந்த நிலைமையைத் தடுத்து நிறுத்த வேண்டும் என்று பெரிதும் விரும்பினீர்கள். எவ்வித அரசியல் நோக்கமுமின்றித் தார்மீக அடிப்படையிலேயே அந்தப் பணியை ஆற்றவேண்டும் என்றும் விழைந்தீர்கள். இவ்விருப்பத்தைத் தெரிந்துகொண்ட விக்கிரமாதித்தரோ அதைத் தன் அரசியல் அதிகார விஸ்தரிப்புக்குப் பயன் படுத்திக் கொள்ளத் திட்டமிட்டு அதற்காகவே தங்களை இங்கு வரவழைததிருக்கிறார். அப்படி அவர் போட்டிருக்கும் அந்தத் திட்டம்தான் என்ன என்று நீங்கள் கேட்கலாம். கீரியைச் சுற்றிக் கொண்ட பாம்பு அதை விழுங்கவும் முடியாமல் விட்டு விடவும் தைரியமில்லாமல் விழிப்பதைப் போல, இந்தப் பல்லவ சாம்ராஜ்யத்தைக் கைப்பற்றிக் கொண்டிருக்கும் விக்கிரமாதித்தர் தமது ஆட்சியதிகாரத்தை இங்கு நிலை நாட்டிக்கொள்ள வழி தெரியாமல் — அதை விட்டுவிட்டு வெளியேறவும் மனமில்லாமல் — இப்போது தவித்துக் கொண்டிருக்கிறார். இந்த நிலைமைக்குரிய காரணங்களை ஆராய்ந்து பார்த்தபோது அவருக்கு இரண்டு முக்கிய உண்மைகள் புலனாயின. அவை இந்நாட்டு மக்களின் தேசபக்தியும் தெய்வபக்தியும்தான். தமிழர்களது தேசபக்தி மிக ஆழமானது; அதைவிட ஆழமானது அவர்களுடைய தெய்வ பக்தி, அவர்களின் தாய்ச் சமயமான சைவ சமயம் இடைக்காலத்தில் சிறிதே தாழ்வுற்று ஒளி குன்றியிருந்தாலும், கடந்த இரண்டு தலைமுறைகளாக அது புத்துயிரும் புதுப் பொலிவும் பெற்று வீறுடன் வளர்ந்து வருகிறது. சைவ-வைணவ சமயங்களைச் சார்ந்த மக்களே இங்கு பெருவாரியாக உள்ளனர். சமண-பௌத்த சமயக் சார்புடையவர்கள் மிகவும் குறைவு. எனவேதான் சமணராக

சளுக்கிய விக்கிரமாதித்தர் தம் ஆட்சியதிகாரத்தை இங்கு நிலைநாட்டிக் கொள்ள முடியாமல் தவிக்கிறார். பல்லவ நாட்டைக் கைப்பற்றிப் பல மாதங்களாகியும் அவரால் நிலையான அரசாங்கத்தைச் செயல்படுத்த முடியாமல் திணறிக் கொண்டிருப்பதற்குக் காரணம் இதுவே. எத்தனை காலத்துக்குத் தமது படைவீரர்களைக் கொண்டு மக்களை அடக்கி வைத்திருக்க முடியும்? இந்த இக்கட்டான நிலைமையைச் சமாளிக்க அவரது தீய மனத்தில் ஒரு திட்டம் உருவாகியது. அன்பையே உயிராகக் கொண்ட சமண சமயத்தைத் தமது ஆட்சியதிகார உறுதிப்பாட்டுக்குப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்னும் திட்டம்தான் அது. சைவ-வைணவ சமயத்தைச் சார்ந்த தமிழர்களைச் சமணர்களாக மாற்றிவிட்டால் தமது ஆட்சியை அவர்கள் எளிதில் ஏற்றுக் கொள்வார்கள் என்பது அவருடைய தீர்மானம். தேசப் பற்றைவிடச் சமயப்பற்று வலிமை வாய்ந்தது என்பதாலேயே அவர் இந்த முடிவுக்கு வந்தார். ஆனால், அரசியல் நோக்கம் கொண்ட இம்முடிவை இங்குள்ள தமிழ்ச் சமணர்கள் ஏற்று ஒத்துழைப்பை நல்க மாட்டார்கள் என்றும் அவருக்குப் பட்டுவிட்டது. ஏனென்றால், தமிழ்ச் சமணர்கள் மிக உயர்வானவர்கள்; பேரறிவாளர்கள்; தமது சமய நெறிகளுக்கேற்ப சீரிய வாழ்க்கையை மேற்கொண்டவர்கள்; தேசப் பற்றும் மொழிப் பற்றும் மிக்கவர்கள். எனவேதான், வேங்கி இளவரசியான தங்களை முன்னிறுத்தித் திரை மறைவிலே தாம் இருந்துகொண்டு தமது திட்டத்தை ஈடேற்றிக்கொள்ள அவர் முடிவு செய்தார்.”

சட்டென்று பேச்சை நிறுத்திய நாகோதரன் சுற்று முற்றும் திரும்பிப் பார்த்துவிட்டுத் தணிந்த குரலில் சொன்னான்; “ஆனால், இளவரசி! தங்கள் நல்வினையின் பயனாகவோ என்னவோ, விக்கிரமாதித்தர் அந்தத் திட்டத்தை இப்போது மாற்றிக் கொண்டுவிட்டார் என்றே தோன்றுகிறது!”

38

# இலட்சியம் சிதைந்தது!

நிலைகுலைந்து நின்ற உத்தமசீலி, "என்ன, மாற்றிக் கொண்டு விட்டாரரா?" என்று துடிப்புடன் கேட்டாள்.

"ஆம், தாயே! தங்கள் மீதோ அல்லது அந்தத் திட்டத்தின் மீதோ அவருக்கு அவநம்பிக்கை ஏற்பட்டு விட்டிருக்க வேண்டும். அதனால்தான் அவர் வேறொரு புதிய முயற்சியில் இப்போது முனைந்திருக்கிறார்" என்றான் நாகோதரன் கம்மிய குரலில்.

"அது என்ன புது முயற்சி?"

"போர்! போரைத் தவிர அவர் மனத்தில் வேறெந்த எண்ணமும் தோன்றுவதில்லையே."

"போரா? யார்மீது, எந்த நாட்டின்மேல் போர் தொடுக்கப் போகிறார்?"

"பல்லவ நாட்டின் தெற்கு எல்லையிலுள்ள பாண்டிய நாட்டின்மீது படையெடுக்கத் திட்டமிட்டிருக்கிறார், இளவரசி!"

"இந்தத் திடீர்ப் படையெடுப்புத் திட்டத்துக்குக் காரணம்?"

"சாம்ராஜ்ய விஸ்தரிப்பு ஆசையைத் தவிர வேறென்ன கூற முடியும், தாயே? போர்க் குணம் படைத்தவர்கள் போரில்லாமல் வாழ மாட்டார்கள். அமைதி என்பது அவர்களுக்கு ஒரு நரக வேதனை, இது ஒருபுறமிருந்தாலும் கைப்பற்றிய நாட்டை உறுதிப்படுத்திக் கொண்டு ஆளத் தெரியாமல் திணறுவதைத் தமது சகாக்களும் படைவீரர்களும்

தெரிந்துகொண்டு விட்டால் அவர்கள் கட்டுமீறிக் கலகம் விளைவித்துத் தம்மையே கபளீகரம் செய்துவிடுவார்கள் என்று அஞ்சியே, அவர்களுடைய கவனத்தை வேறு திசையில் திருப்பும்பொருட்டுப் பாண்டிய நாட்டின்மீது படையெடுக்க அவர் திட்டமிட்டிருக்கலாம்."

"இதனால்தான் சளுக்கிய மன்னர் என்னை வந்து சந்திக்கவில்லையோ?"

"ஆம், இளவரசி! வேங்கி மன்னர் விஷ்ணுவர்த்தனர் தங்கள் மூலம் கொடுத்தனுப்பிய பட்டோலையை வாங்கிப் படித்துப் பார்க்கவும் அவருக்கு விருப்பமில்லை. ஏனென்றால், 'தமிழ்நாட்டிலே, சமண சமயப் பிரசாரம் செய்வதற்காகத் தமது பொக்கிஷம் முழுவதையும் திறந்து வைக்கத் தயார்' என்று வேங்கி மன்னர் அவ்வோலையில் தெரிவித்திருக்கும் சேதி, விக்கிரமாதித்தருக்கு இப்போது தேவையற்றதாகி விட்டது. அதனால்தான் தங்களை உறையூருக்கு வரவிடாமல் இந்தப் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளியிலேயே நிறுத்தி வைக்கும்படி வில்வேலிக்குக் கட்டளை அனுப்பி விட்டார் அவர்."

"அப்படியானால் விக்கிரமாதித்தர் ஏன் இங்கு விஜயம் செய்திருக்கிறார்?"

"பாண்டிய நாட்டின்மீது படையெடுப்பது சம்பந்தமாக, தளபதி வில்வேலியுடனும் மற்ற தானைத் தலைவர்களுடனும் மந்திராலோசனை நடத்த வேண்டும் என்பது முதல் காரணம்; இன்னொன்று, பழையாறைச் சோழரைச் சந்திக்க வேண்டும் என்பது,"

வெலவெலத்து நின்ற உத்தமசீலி இதைக் கேட்டு மேலும் விதிர்ப்படைந்தவளாய் நிமிர்ந்து, "அவரை ஏன் இவர் சந்திக்க வேண்டும்?" என்று கேட்டாள்.

"புனிதமான பிண்டி மரத்திலேயும் புல்லுருவி முளைப்பதில்லையா, அம்மணீ? பாம்புகள் இல்லாத புற்றையும் துரோகிகள் இல்லாத நாட்டையும் காண்பது

அரிது! இத்தனை காலமாகப் பல்லவ மன்னருடன் உறவாடி வந்த பழையாறைச் சோழர் இப்போது சளுக்கிய மன்னருடன் சம்பந்திமுறை கொள்ள வந்திருக்கிறார்-அரசியலில் மட்டுமல்ல; குடும்ப உறவிலும்கூட!"

"புரியும்படி சொல், நாகோதரா?"

"சளுக்கிய மன்னருக்குத் தமது ராஜீய ஒத்துழைப்பைத் தருவதுமின்றி, தம் அருமைக் குமாரி இளங்கோப்பிச்சி என்பவளையும் சளுக்கிய இளவரசர் விநயாதித்தருக்குத் திருமணம் செய்துதரச் சம்மதம் அளித்திருக்கிறாராம் அந்தப் பழையாறைச் சிற்றரசர்!"

"அப்படியா!" என்று அடைத்த குரலில் கேட்ட உத்தமசீலியின் மனக் கண்ணிலே, சோழ இளவரசி இளங்கோப்பிச்சியின் பரிதாப உருவம் ஒரு விநாடி தோன்றி மறைந்தது.

"இளவரசி! இவ்வளவு நேரம் நான் சொன்ன தெல்லாவற்றையும்விட இனிச் சொல்லப் போவதுதான் மிக முக்கியமானது, தங்களையும், தங்கள் தந்தையார் விஷ்ணு வர்த்தனரையும், எங்களது ஆந்திர நாட்டையும் பற்றிய விஷயம் அது..." என்ற பீடிகையுடன் பேச்சைத் தொடர்ந்த நாகோதரன், தன்னைமீறிய ஆத்திரத்தோடு இவ்வாறு கூறினான்; "ஆமாம், தாயே! முயலைக் கடித்து மானைக் கடித்து, கடைசியில் மனிதனையே கடிக்க வரும் ஓநாயைப் போல் விக்கிரமாதித்தரின் விஷப் பார்வை நம்முடைய ஆந்திர நாட்டின் மீதும் இப்போது திரும்பியிருக்கிறது. காலஞ்சென்ற மாமன்னர் புலிகேசி, மகேந்திர பல்லவனிடமிருந்து கைப்பற்றிய ஆந்திர நாட்டைத் தம் தம்பியான குப்த விஷ்ணுவர்த்தனருக்குப் பின் அவரின் மைந்தரான தங்கள் தந்தையார் ஆண்டு வருகிறார். சளுக்கிய சாம்ராஜ்யத்தின் மேலாதிக்கத்திலே ஆந்திர நாடு இருந்தாலும் அது ஒரு தனியரசு போலவே இயங்கிவருகிறது. அப்படித் தன்னிச்சை யாக இயங்குவது விக்கிரமாதித்தருக்கு ஏனோ

பிடிக்கவில்லை. தம்முடைய ஆதிபத்தியத்தின் கீழுள்ள ஒரு நாட்டைத் தனியரசு அந்தஸ்தில் இயங்கவிட்டால் என்றைக்கிருந்தாலும் அது தம்மைவிட்டுத் திமிறிப் போய்விட இயலும் என்றும், அவ்வாறு போய்விட்டால் தமது சாம்ராஜ்யத்தையே அது பதம் பார்க்க ஆரம்பித்து விடும் என்றும் அவர் நினைக்கிறார் போலும். அதனால்தானோ என்னவோ, வெகு விரைவில் ஆந்திர நாட்டின் ஆட்சி யுரிமையை விஷ்ணுவர்த்தனரிட மிருந்து பறித்துத் தமது சளுக்கிய சாம்ராஜ்யத்தின் நேர்ப்பார்வையில் இணைத்து வைத்துக் கொள்ளத் திட்ட மிட்டிருக்கிறார். இந்தக் கருத்தை அவர் மனத்தில் வைத்திருப்பதால்தான், பல்லவநாட்டின்மீது படையெடுத்து வந்தபோதுகூட, ஆந்திர மன்னர் விஷ்ணுவர்த்தனரிடம் படை உதவியோ பொருள் உதவியோ கோரவில்லை. அப்படிக் கோரினால், கைப்பற்றிய நாட்டிலிருந்து அவருக்கும் பங்கு கொடுக்கும் படியாகுமே என்ற உலோப எண்ணம் ஒருபுற மிருந்தாலும், பின்னால் எடுக்கப்போகும் இந்த அநியாய நடவடிக்கையை உத்தேசித்தே அத்தகைய உதவிகளை ஆந்திர மன்னரிடம் கோரவில்லை.”

நாகோதரன் சொன்ன இந்தத் திடுக்குறும் சேதிகளைக் கேட்டுத் திக்குமுக்காடிவிட்டாள் உத்தமசீலி. வானமும் பூமியும் தலைகீழாகப் புரண்டு, தானும் அவற்றுடன் உருண்டு போவதுபோன்ற பயங்கர உணர்ச்சிக்கு உள்ளான அவள் மனத்திலே சட்டென்று ஓர் எண்ணம் தோன்றியது. ‘சிவிகை தூக்கியான இவனுக்குச் சளுக்கிய மன்னர் கடும் தண்டனை விதித்ததால் அவர்மீது குரோதம் கொண்டு இப்படியெல்லாம் பொய்யான சேதிகளைச் சொல்லி என் மனத்தைக் கலக்குகிறானோ?’-சந்தேகத்துடன் அவனை வெறித்துப் பார்த்த அவள், வெகு நாசூக்காக ஒரு கேள்வியைக் கேட்டாள்: “அதுசரி, நாகோதரா! விக்கிரமாதித்தரும் வில்வேலியும் இங்கு வந்து பேசிய இத்தனை விஷயங்களையும் கேட்டு வைத்திருந்து

என்னிடம் சொல்லும் நீ, ஒரு முக்கியமான சேதியைச் சொல்லாமல் விட்டுவிட்டாயே! அது என்ன என்று யோசித்துச் சொல், பார்க்கலாம்?"

நாகோதரன் கொஞ்சமும் யோசிக்காமல் பளிச்சென்று பதில் சொன்னான்: "ஆம், தாயே! இன்னும் ஒரே ஒரு விஷயத்தை நான் தங்களிடம் கூறவில்லை. சிரவண பெள்குளத்துச் சமண சங்கத் தலைவரான அகளங்க அடிகள் தங்களைக் காணும் பொருட்டு இங்கு வருவதுபற்றிய விஷயமே அது. ஆனால்...ஆனால்... அந்த விஷயமாய் அவர்கள் பேசத் தொடங்கியபோது, அதுவரை என் உடலிலே சாடிய சவுக்கடிகளைப் பொறுத்துக் கொண்டிருந்த நான், அதற்கு மேலும் பொறுக்க முடியாமல் பிரக்ஞை இழந்துவிட்டேன். அதனால் அவர்கள் என்ன பேசினார்கள் என்பது எனக்குத் தெரியாமலே போய்விட்டது."

மின்னலால் தாக்குண்டவள்போல் பதறித் துடித்து விட்டாள் உத்தமசீலி. ஏனென்றால், அவனைப் பரிசோதிக்க அவள் எதை நினைத்துக் கேட்டாளோ அந்த விஷயத்தையே அவன் சரியாகச் சொல்லிவிட்டான்!

"ஐயோ, மாபெரும் ஞான சிரேஷ்டரான அகளங்க அடிகள் இந்த அரசியல் சூதாடிகளை நம்பி இங்கு வரப் போகிறாரே! இவர்களால் அந்த முனிபுங்கவரின் தூய வாழ்க்கைக்கு ஏதேனும் களங்கம் ஏற்பட்டால் அந்தப் பாவம் என்னையல்லவா சேரும்? இத்தனை பெரிய தீவினையை நான் எப்படித் தடுப்பேன்?" என்று வாய்விட்டுப் புலம்பி அழுத உத்தமசீலி, ஏதோ ஒரு திடமான முடிவுக்கு வந்தவளாய் நாகோதரனைத் தன்னுடன் வரச் சொல்லிவிட்டு இளவந்திகைப் பள்ளியை நோக்கி விரைந்தாள்.

# 39

## ஈழப் பயணம்

முன்னிரவு கடந்து பின்னிரவு முற்றி வரும் நேரம். கைம்மை நோன்பு ஏற்ற கிழவியின் முகம்போல் வெளிறிச் சிறுத்திருந்த தேய்பிறைச் சந்திரன் கீழை வானிலே அப்போதுதான் சோம்பலாகத் தலைதூக்கியிருந்தது.

அந்த நடுச்சாம நேரத்தில், ஆலம்பாக்கம் ஏரியின் கிழக்குக் கரையோரம்-பெருவளநல்லூர்ச் சாலையை யொட்டி-தன்னந் தனியாக அமைந்திருந்த கொகுடிக் கோயிலொன்றின் சிறிய கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தான் பல்லவ மன்னன் பரமேசுவரவர்மன். நேற்றிரவு இதே நேரத்தில் இளங்காரிக்குடையானின் இல்லத்திலிருந்து புறப்பட்டு வந்த வழியில் இந்தக் கொகுடிக் கோயிலைக் கண்டு இறைவழிபாடு செய்ய உள்ளே சென்றவன் இப்போதுதான் வெளியே வருகிறான்.

ஓரிரவும் ஒரு பகலும் ஓடிக் கழித்த உணர்வே இல்லாத அத்தனை ஆழ்ந்த தியானம்!

களைப்பும் சோர்வுமாகக் கோயிலின் அர்த்த மண்டபத்தில் வந்து அமர்ந்தான் பரமேசுவரவர்மன், சாலையோரமிருந்த இரண்டு மரங்களுக்கிடையே சந்திரன் அகப்பட்டு விட்டிருந்ததால் அதன் மங்கலான ஒளி மண்டபத்தில் மட்டுமே நிரவலாகியிருக்க, மற்றப் பகுதி இருளில் புதைந்திருந்தது.

சளுக்கியப் படையெடுப்புக்குப்பின் பல்லவ நாட்டில் இருந்த கோயில்களெல்லாம் எத்தனை சீர்கேடுற்றுப்

போயிருக்கின்றன என்பதற்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கியது அந்தக் கொகுடிக் கோயில். மக்கள் சுதந்திரமாக வீட்டைவிட்டு வெளியே வரமுடியாத நிலையில் இருக்கும்போது அவர்களின் வழிபாட்டு ஸ்தலங்கள் எப்படிச் சீருடன் விளங்க முடியும்? பெரும்பாலான கோயில்களில் அந்திசந்தி பூசைகள் கூட நடைபெறாமல் நின்று போயிருந்தன. பல்லவர் ஆட்சியிலே கோயில் பாதுகாப்புக் கெனவும் அதன் துப்புரவுக்கெனவும் வழங்கிவந்த ஆலரசு மானியம், வெளவாலடி மானியம் முதலானவை இப்போது நிறுத்தபபட்டு விட்டிருந்ததால், கோயில்களின் கோபுரங் களிலும் திருமதிற் சுவர்களிலும் ஆல் அரசு முளைந்து விட்டிருந்தன; வெளவால்கள் குடியேறித் தூய்மைக்குப் பங்கம் விளைவித்தன. இந்நிலைக்கு இந்தக் கொகுடிக் கோயிலும் விலக்காகவில்லை.

ஆனால் 'கொகுடிக் கோயில்' எனப் பெயர் பெறுவதற்குக் காரணமான–ஒருவகை முல்லை இனத்தைச் சேர்ந்த–கொகுடிச் செடிகள் அந்தக் கோயிலைச் சுற்றிப் பாங்குற வளர்ந்திருந்ததால், அவற்றில் பூத்த மலர்களின் நறுமணம் சில்லென்ற காற்றிலே மிதந்தெழுந்து அங்கு நிலவிய அநுசிதமான சூழலை மறக்கடித்துக் கொண்டிருந்தது.

அந்த நறுமணக் காற்றின் தழுவலால் களைப்பு நீங்கப் பெற்ற பரமேசுவரவர்மன், இப்போதுதான் முதன் முதலாகத் தன்னைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தான்.

எடுத்த எடுப்பிலேயே அவன் மனத்தில் இந்தக் கேள்விதான் எழுந்தது: 'எங்கே போவது? என்ன செய்வது? எதிர்கால வாழ்வை எப்படிக் கழிப்பது?'

என்ன செய்வது என்பதுபற்றியும், எதிர்கால வாழ்வை எப்படிக் கழிப்பது என்பதுபற்றியும், அவன் கவலைப்பட வில்லை; எங்கே போவது என்ற கேள்வியை மட்டும் தனக்குள்ளே திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டான்.

பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்தில் இனியும் போய்த் தங்கியிருந்து அவருக்குச் சிரமம் தரக்கூடாது

என்று அவன் ஏற்கனவே முடிவு செய்துவிட்டிருந்தான். அப்படியானால் இப்போது எங்கே போவது?

காஞ்சிக் கோட்டையைச் சளுக்கிய விக்கிரமாதித்தன் கைப்பற்றியதுமே அங்கிருந்து சுரங்க வழியாகத் தப்பி வந்த அவன், தான் எங்கே போவது என்ற கேள்விக்குத் தேர்ந்தெடுத்த ஒரு முடிவை இப்போது தன் நினைவுக்குக் கொண்டு வந்தான்.

ஆமாம்: பரமேசுவரவர்மனின் பாட்டனான மாமன்னன் நரசிம்மவர்மனால் வாழ்வளிக்கபெற்ற மானவன்மன் என்பான் இப்போது ஈழத்துப் பேரரசனாக இருந்து வருகிறான். இந்த மானவன்மன் ஒரு காலத்தில் அட்டதத்தன் என்பவனிடம் அரசு கட்டிலை இழந்துவிட்டுக் காஞ்சிக்கு ஓடிவந்து நரசிம்மவர்மனிடம் தஞ்சம் புகுந்தான். நரசிம்மவர்மனும் அவனைத் தன் சகோதரனாகப் பாவித்து அன்புடன் போஷித்தான். அதனால் அவ்விருவருக்கு மிடையே ஆழ்ந்த நட்பு நிலவுவதாயிற்று. இந்நிலையில், சளுக்கியப் புலிகேசியுடன் போர் தொடுக்க நரசிம்மவர்மன் வாதாபிக்குப் புறப்பட்டுச் சென்றான். அப்போது தன் நம்பிக்கைக்குப் பாத்திரமாயிருந்த மானவன்மனைக் காஞ்சி அரண்மனையிலே இருக்கச் செய்தான். ஆனால் மானவன்மனோ, அருமை நண்பன் போர்களத்தில் அல்லலுறும்போது தான் அரண்மனையில் வாளாவிருப்பது அழகல்ல என்று எண்ணித் தானும் ஒரு படைக்குத் தலைமை தாங்கிப் போய் நரசிம்மவர்மனுக்குப் பக்கபலமாக இருந்து சளுக்கியரை எதிர்த்துப் போரிட்டான். வெற்றி வாகை சூடிய நரசிம்மவர்மன் காஞ்சிக்குத் திரும்பியதும், தனது வெற்றிக்குப் பெரிதும் காரணமாயிருந்த மானவன்மனுக்கு நன்றி காட்டும் வகையில், மாப்படை, மக்கள்படை, மரக்கலப்படை முதலானவற்றைக் கொடுத்து அவனை இலங்கைக்கு அனுப்பி வைத்தான். படை உதவி பெற்றுச் சென்ற மானவன்மன், அட்டதத்தனை எதிர்த்துப் போராடி, இழந்த அரசு பீடத்தை மீட்டுக்கொண்டான். ஆனால் அடுத்து எழுந்த போரில்

அட்டதத்தனிடம் தோற்றுக் காஞ்சிக்கே திரும்ப ஓடி வந்துவிட்டான். தன் நண்பனை எப்படியும் இலங்கை மன்னனாக்கி விடவேண்டும் என்ற வைராக்கியம் பூண்ட நரசிம்மவர்மன், பல்லவப் படைகள் அனைத்தையும் ஒன்றுதிரட்டி மானவன்மனிடம் ஒப்படைத்து மாமல்லபுரத் துறைமுகம்வரை கூடச் சென்றான். இலங்கைப் போரில் தானும் கலந்து கொள்ளப் போகிறவன்போல் கப்பலிலும் ஏறினான். ஆனால் அவன் இலங்கைக்குச் செல்லவில்லை. பல்லவப்படை வீரர்களோ தம் மன்னனும் தம்முடன் போருக்குப் புறப்படுகிறான் என்று எண்ணி உற்சாக வீறுபெற்றவர்களாய் இலங்கை நோக்கிச் சென்று அட்டதத்த னுடன் கடும்போர் நிகழ்த்தினர். நரசிம்மவர்மனின் யுத்த தந்திரம் பலித்தது. மானவன்மன் வெற்றி பெற்றுச் சிங்களத் தீவின் அரியணை ஏறினான். இவ்வாறு பல்லவரால் வாழ்வு பெற்ற அந்த ஈழத்து மன்னனிடம் போய்ப் புகலடைந்து விடலாம் என்ற முடிவுக்குத்தான் இப்போது பரமேசுவர வர்மன் வந்தான்.

இப்படி, நாடு கடந்து நாடு போய்ப் புகலடைவது இழிவாயிற்றே என்று அவன் மனம் சுணங்கிச் சுருண்டது. ஆயினும் சளுக்கியப் புலிகேசியால் அரசு இழந்த கலிங்க மன்னன் ஒருவனும் இப்படித்தான் இலங்கைக்குச் சென்று புத்த பிக்குவாகி விட்டிருக்கிறான் என்பதை எண்ணித் தன்னையே ஒருவாறு தேற்றிக்கொண்டு அங்கிருந்து புறப்படுவதற்காக எழுந்தான்.

நேரே பெருவளநல்லூருக்குப் போய் வாகனம் ஒன்றை அமர்த்திக் கொண்டு நாகைத் துறைமுகத்துக்குப் பயணமாகி அங்கிருந்து ஈழத்துக்குக் கப்பல் ஏறிவிடுவது என்பது அவன் திட்டம்.

கொகுடிக் கோயிலை விட்டுச் சாலையில் இறங்கிய பரமேசுவரவர்மன் எவ்விதப் பரபரப்புமின்றிச் சாவதான மாகவே நடக்கலானான்.

# 40

# நள்ளிரவில் கண்ட காட்சி!

அமைதியாக நடந்துகொண்டிருந்தான் பரமேசுவர வர்மன். ஆனால் அவன் மனமோ பல்வேறு திசைகளில் ஓடித் திரிந்து அலைமோத ஆரம்பித்தது. தன்னைச் சார்ந்த ஒவ்வொருவரையும் இப்போது எண்ணிப் பார்த்தான்.

பத்து மாதங்கள் சுமந்து பெற்ற அன்னை காடவன் மாதேவியின் நினைவே முதலில் எழுகிறது. அவர் இப்போது பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருக்கிறார். வெளியில் இருப்பதைவிடச் சிறை மிகவும் பாதுகாப்பான இடம். துன்பமயமான இந்த உலகத்தின் அன்றாட நடப்புகளைக் கொண்ட வெம்மை நிழல் தீண்ட முடியாத சாந்தி நிகேதனம் அது. பெற்ற மைந்தனால் எவ்விதப் பயனும் பெறாத அவருக்கு அதைத் தவிர ஆறுதல் பெறக் கூடிய இடம் வேறேதுமில்லை. ஆனால், தம் மகன் கடல் கடந்து போய்விட்டான் என்ற சேதியைக் கேட்டதும் பதறித் துடிப்பார். அழுது புலம்புவார். புலம்பட்டும். என்ன செய்வது? அது அவர் விதி!...

அப்புறம், இளவரசன் கோவிந்தவர்மனைப் பற்றிய நினைவா? ஆமாம்; அவன் துடிப்பு மிக்க இளைஞன். துயரங்களைக் கண்டு அஞ்சாதவன். சாகசங்கள் செய்வதையே பெருமையாகக் கொள்பவன். வாழ்க்கையே அவனுக்கு ஒரு விளையாட்டு. உலகம் அவனுக்கோர் இன்பச் சுரங்கம். எதிர்பாராத இடுக்கண்கள் ஏற்பட்டாலும் அவற்றிலிருந்து அவனைக் காப்பாற்றச் சோழ இளவரசி

இளங்கோப்பிச்சி இருக்கிறாள். அவளுடைய காதலின் குளிர்ந்த அணைப்பில் தீயைக்கூடத் தாண்டிவிடுவான். ஆனால் தன் தமையன் அநுராதபுரத்துக்குப் போய்விட்டான் என்று கேள்விப் பட்டதுமே குமுறித் துடிப்பான். கோழை என்று தூற்றுவான். அப்படித் தூற்றியதற்காக நாளெல்லாம் உட்கார்ந்து அழுவான். அப்புறம் அந்த விஷயத்தை மறந்தும் விடுவான். ஆகவே, அவனைப் பற்றிக் கவலையில்லை!...

பிறகு? சந்திரலேகைச் சிற்றரசரான பெரும்பிடுகு முத்தரையர் வருகிறார். நட்பு, நேர்மை, வீரம், மானம், சேவை. இவற்றைத் தவிர வேறொன்றும் அறியாத அப்பாவி மனிதர் அவர். பல்லவ மன்னன் ஈழநாட்டுக்கு ஓடிப் போனான் என்று அறிய நேர்ந்தால் அதற்காக அவர் வருந்தமாட்டார்; மகிழ்ச்சியே அடைவார். காரணம், 'அவன் வெளிநாட்டில் இருப்பதே நல்லது; தேவையானபோது வரவழைத்துக் கொள்ளலாம்' என்ற முடிவுடன் இரகசியப்படை திரட்டல் வேலையைச் சுதந்திரமாகச் செய்ய அவருக்கு இது நல்ல வாய்ப்பாகிவிடும். சளுக்கியர்களை விரட்டி விடலாம் என்று அவர் இப்போதே மனப்பால் குடிக்க ஆரம்பித்துவிடுவார். 'சுதந்திரம், சுதந்திரம்' என்று கோஷித்துக் கொண்டே போர்களத்தில் உயிரைவிட வேண்டும் என்பதில் அவருக்குத் தீராத வேட்கை. தம் உடலில் பட்ட விழுப்புண்களை எண்ணிக் கணக்கிடுவது ஒன்றுதான் அவருக்கு மகிழ்ச்சி தரும் விஷயம். அவருடைய வாழ்க்கை அநேகமாக அதிலேதான் முடியப் போகிறது. அவ்வாறே முடியட்டும்!...

அவருக்குப் பின் பழையாறைச் சோழரின் நினைவு. மற்றவர்களையும் புரிந்துகொள்ளாமல், தம்மையும் மற்றவர்கள் புரிந்துகொள்ள விடாமல் சதுராடி வரும் விநோத மனிதர் அவர். பல்லவ மன்னன் சொந்த நாட்டை விட்டுக் கப்பல் ஏறிவிட்டான் என்று கேள்விப்பட்டதும் அதுபற்றி அவர் என்ன நினைப்பார் என்பதைக்கூட யாரும் அறிய முடியாது. எனவே, அந்தப் புதிர் மனிதரைப் புரிந்து கொள்ளும் பொறுப்பை விதியிடமே விட்டுவிடலாம்!...

அதற்குப் பிறகு? சேதியக் கலைஞர் பரவாதிமல்லரைப் பற்றிய எண்ணம். அவர் ஆயிரங்காலத்துப் பயிர். ஒவ்வொரு சகாப்தத்தையும் நிறைவாக்குவதற்கென்றே பிறந்து வரும் மகாமனிதர்களில் ஒருவர், பல்லவர்களின் பெயரை எதிர்காலத்தின் முதுகிலே என்றென்றும் அழியாத விதமாகப் பொறித்துவிட்ட பிரம்ம வித்தகர். கோயில்கள் பலவற்றைப் படைத்துக் கொடுத்திருக்கும் அவருக்கே ஒரு கோயில் எடுப்பிக்க வேண்டிய அவ்வளவு பெரிய கலைஞர். பல்லவ மன்னன் சிங்களத் தீவில் புகலடைந்தான் என்பதை அறிந்ததுமே, தாம் அவனுக்குச் சரியான பாதுகாப்புச் செய்யத் தவறியதால்தான் அவன் அத்தனை நெடுந்தூரம் சென்று விட்டான் என்று எண்ணித் தம்மையே நொந்து கொண்டு துயரில் ஆழ்வார். ஆனால், அவரிடமுள்ள தூரிகையும் சிற்றுளியும் சேர்ந்து அந்தத் துயரத்தை எளிதில் அகற்றிவிடும்!...

இறுதியாக?–

நடந்துகொண்டிருந்த பரமேசுவரவர்மன் தன் கழுத்தில் கிடந்த சவுக்கைகாய் மாலையைக் கையில் எடுத்து நிலவின் சன்னமான ஒளியில் உற்றுப் பார்த்தான். மறுகணம், அவன் நடையில் ஒரு தயக்கம் ஏற்பட்டது. வேகம் குறைந்தது. நிதானம் தவறியது. அவன் நின்றே விட்டான்.

திரும்பிப் போய்விடத் தீர்மானித்து விட்டாற்போல் அங்குமிங்குமாகப் பார்த்தான். பிறகு வேகமாகத் தலையை ஆட்டிக் கொண்டான். நீண்ட பெருமூச்சு விட்டவாறு முன்போல் தெளிவாக மேலே நடந்தான்.

"ஜல், ஜலங்!...ஜல், ஜலங்!'

விரைந்து நடந்து கொண்டிருந்த பரமேசுவரவர்மன் சட்டென்று நின்று சாலையின் எதிரே, தன் பார்வையை ஓட்டினான். தொலை தூரத்தில் ஒரு பல்லக்கு வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அந்தப் பல்லக்கைச் சுமந்துவந்த

ஆட்களின் கரங்களிலிருந்த ஈட்டி முனை வளையங்கள் குலுங்கும் ஒலிதான் அது.

'இந்த நேரத்தில் பல்லக்கிலே பயணமாகி வருவது யாராக இருக்கும்?'

அவன் தயங்கி நின்றான். பிறகு சாலையைவிட்டு இறங்கி ஒரு மரத்தடியில் போய் மறைந்து நின்று கொண்டான். பல்லக்குச் சமீபித்துவிட்டது.

என்ன ஆச்சரியம்! அந்தச் சாலையின் இறபுறமிருந்து ஏழெட்டுப் பேர் திமுதிமுவென ஓடிவந்து பல்லக்கைச் சூழ்ந்து கொண்டனர். பிறகு பலவந்தமாக அதைக் கீழிறக்கினர். மறுவிநாடி, பல்லக்குத் தூக்கிகளுக்கும் வழிமறித்த ஆட்களுக்குமிடையே பயங்கரச் சிலம்பச் சண்டை மூண்டது. ஒரே கூச்சல், அலறல், கூக்குரல்!

திடீரெனச் சண்டை நின்றது. வழிமறித்த ஆட்கள் சாலையின் இருபுறமும் சிதறி ஓடி மறைந்தனர். பல்லக்குத் தூக்கிகள் வெற்றிச் சிரிப்புடன் பல்லக்கைத் தூக்கிக் கொண்டு பல்லவபுரத்தை நோக்கிச் செல்லத் தொடங்கினர்.

இந்த நெஞ்சை உலுக்கும் விந்தை நிகழ்ச்சிகளைப் பார்த்துக்கொண்டு மரத்தடியில் மறைந்து நின்றிருந்த பரமேசுவரவர்மன் நிம்மதியாக மூச்சு விட்டவாறு சாலையில் ஏறித் தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

சற்றுமுன் சிலம்பச் சண்டை நடந்த இடத்தைக் கடந்து இரண்டு மூன்று அடி எடுத்து வைத்த அவன், ஏனோ திடுக்குற்று நின்று பரபரப்புடன் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான்.

எங்கோ, யாரோ மரண அவஸ்தைப் படுவதுபோன்ற முனகல் ஒலி கேட்டது!

ஒலி வந்த இடத்தைக் குறிவைத்து ஓடினான் பரமேசுவரவர்மன். அங்கே, சாலையின் ஓரம் நெடிதுயர்ந்த மனிதரொருவர் இரத்தக் காயங்களுடன் புழுதியில் கிடந்து

துடித்துக் கொண்டிருப்பது தெரிந்தது. உடல்தான் அப்படித் துடித்ததே தவிர, சுயப் பிரக்ஞை இருப்பதாகத் தெரியவில்லை.

மங்கிய நிலாவொளியில் அந்த மனிதரின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான் பரமேசுவரவர்மன். அவனுக்குப் பரிச்சயமில்லாத முகமாக இருந்தது அது.

ஒரு கண நேரச் சிந்தனை. அவன் ஒரு முடிவுக்கு வந்தான். பலத்த காயங்களுடன் சுவாதீனமிழந்து கிடந்த அந்த மனிதரைத் தூக்கித் தோளில் போட்டுக் கொண்டு அரைக்காதம் தூரத்துக்கு அப்பாலிருந்த ஓர் ஆதுர சாலையை நோக்கி நடக்கலானான்.

# 41

# திரமிள சங்கத் தலைவர்

**வெ**ள்ளி முகம் கண்ட விடியற்சாம வேளையில் அந்த ஆதுரசாலைக்கு வந்து சேர்ந்தான் பரமேசுவரவர்மன்.

அது சமணமுனிவர்களால் நடத்தப்பெறும் ஆதுர சாலையானதால் அங்கே விளக்குகள் ஏதும் இருக்கவில்லை. விளக்கின் தீக்கொழுந்தில் சிற்றுயிர்கள் வீழ்ந்து இறக்க நேரிடும் என அஞ்சியே கொல்லா நோன்பினரான சமணர் விளக்கேற்றும் வழக்கத்தை மேற்கொள்ளாதிருந்தனர். ஆதலால் அந்த மருத்துவமனை விடியற்சாம நேரத்தின் பூஞ்சைக் கருக்கலில் இருண்டு காணப்பட்டது.

குற்றுயிரும் குறையுயிருமாயிருந்த சடலத்தைத் தோளில் சுமந்தவாறு தாழ்வாரத்தில் ஏறிநின்ற பரமேசுவரவர்மன் சுற்றுமுற்றும் தன் பார்வையை ஓட்டினான். ஒளிவு மறைவான செயல்கள் அங்கு ஒன்றுமே நடைபெறுவதில்லை என்பதற் கறிகுறியாக எல்லா வாயில்களுமே சாளரங்களும்–கதவுகளோ, திரைகளோ இன்றித்–திறந்து கிடந்தன. ஆனால், அங்கே மனிதர்கள் யாரும் இருக்கிறார்களா இல்லையா என்று அநுமானிக்க முடியாத அத்தனை ஆழ்ந்த அமைதி நிலவிக் கிடந்தது.

'இந்த ஆதுரசாலை இப்போது நடைபெறுகிறதா, இல்லையா? மருத்துவப்பணி நிறுத்தப்பட்டிருந்தாலும் இங்கு சமண முனிவர்களாவது இருக்க வேண்டுமே! ஒருகால் அவர்களும் வேறெங்காவது இடம் பெயர்ந்து போய் விட்டிருப்பார்களோ? மெல்லக் குரல் கொடுத்து அழைத்துப்

பார்க்கலாமா? யாராவது உள்ளிருந்து வந்தால் அவர்களிடம் என்ன சொல்வது? பெருவளநல்லூர்ச் சாலையில் நடந்த நிகழ்ச்சிகளைக் கூறி, மூர்ச்சித்துக் கிடக்கும் இந்த மனிதருக்கு உடனடியாக சிகிச்சை செய்யச் சொல்லலாம் ஆனால், என்னை அவர்கள் அடையாளம் தெரிந்து கொள்வார்களே! தூய நெஞ்சத்தினரான சமண முனிவர்களால் எனக்கு எத்தகைய துன்பமும் நேராதென்பது நிச்சயம் என்றாலும், இந்தத் துர்ப்பாக்கிய மனிதருக்கு நான்தான் ஊறு விளைவித்திருப்பேனோ என்று என்மீதே சந்தேகப்பட்டு விட்டால் என்ன செய்வது? வேண்டாம்; நான் வந்ததாகக் காட்டிக் கொள்ளாமல், இவரை இங்கேயே இறங்கிக் கிடத்திவிட்டுப் போய்விடலாம். அவர்களாக எழுந்த வந்து பார்த்துச் சிகிச்சை செய்துகொள்ளட்டும்; அல்லது இவரின் விதி எப்படியோ அப்படி நடந்துவிட்டுப் போகட்டும்.'

தாழ்வாரத்தின் சுவரோரம் போடப் பெற்றிருந்த ஒரு கல் படுக்கையை நோக்கி நடந்தான் பரமேசுவரவர்மன்.

"வரவேண்டும், வரவேண்டும்!"

அவன் சட்டென்று திரும்பினான். இருண்டு கிடந்த ஆதுரசாலையின் உள்ளிருந்து வெண்ணிற ஆடை தரித்த உயரமான மனிதர் ஒருவர் எவ்விதத் தட்டுத் தடங்கலுமின்றி வெகு நிதானமாக வெளியே வந்தார்.

பரபரப்படைந்த பரமேசுவரவர்மன் ஓரடி பின்னால் நகர்ந்து அவரைக் கூர்ந்து நோக்கினான். அவர் ஒரு சமண முனிவர் என்பது அவனுக்குச் சந்தேகமறப் புலனாகியது. ஆனால், அவரது முகத்தை அவனால் புலப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அவரும் அவனை உற்றுப் பார்த்தார்.

"அஞ்சற்க! ஆவன செய்வோம்." –அருள் மயமான கனிவுக் குரல்.

இருட்டிலே வந்து நிற்பவனை 'யார்' என்று கேட்கவில்லை; 'என்ன சேதி' என்றும் விளிக்கவில்லை; 'வரவேண்டும்' என்ற அன்பான வரவேற்பு மொழி; 'அஞ்சற்க'

என்னும் ஆறுதல் வார்த்தை; 'ஆவன செய்வோம்' என்ற வாக்குறுதி, எத்தனை உயர்ந்த பண்பு மிக்க பேச்சு!

பரமேசுவரவர்மனின் மனம் விநய வியப்பில் அடங்கியது.

சமண முனிவர் தம் வலக்கையை உயர்த்தி ஏதோ சமிக்ஞை செய்யவே, உள்ளிருந்து இருவர் வெளியே வந்தனர். அவர்களும் வெண்ணிற ஆடையே அணிந்திருந்தனர். முகங்கள் புலனாகவில்லை. பரமேசுவரவர்மனிடம் நெருங்கி அவர்கள், அவனது தோளில் மூர்ச்சித்துக் கிடந்த மனிதரை இதமாக இறக்கியெடுத்து ஏந்திப் பற்றியவாறு உள்ளே சென்றனர். அவர்களைப் பின்தொடர்ந்து அந்தச் சமண முனிவரும் சென்றார்.

தாழ்வாரத்தில் தனியே நின்றான் பரமேசுவரவர்மன். 'சரி; இங்கு வந்த காரியம் ஒருவாறு முடிந்தது. மர்மத் தாக்குதலுக்கு உள்ளான அந்த மனிதரைப் பற்றி இனி கவலை இல்லை. அவர் எப்படியும் உயிர் பிழைத்துவிடுவார். நான் திட்டமிட்டபடி என் நீண்ட பயணத்தைத் தொடர வேண்டியதுதான்,'-அங்கிருந்து ஓரடி எடுத்து வைத்தவன் தயங்கி நின்றான்.

'பெருவளநல்லூர்ச் சாலையிலே பார்த்த அந்தப் பல்லக்கு யாருடையதாக இருக்கும்? அதிலே வந்தவர் யாராயிருப்பார்? அதனை ஏன் சிலர் வழிமறித்துத் தாக்கினார்கள்? அப்படித் தாக்கிவிட்டு ஓடிய அவர்கள் யார்? அவ்வழி மறிப்புச் சண்டைக்குப்பின் இந்த மனிதர் அங்கே அடிபட்டு வீழ்ந்து கிடக்கக் காரணம் என்ன? இவர் யாராயிருப்பார்?'-பரமேசுவரவர்மன் தன் பார்வையை மருத்துவ மனையினுள் திருப்பினான்.

வலப்புறமிருந்த ஓர் அறையில் அம்மூன்று சமண முனிவர்களும் மெல்லிய குரலில் ஏதோ பேசிக்கொள்வது கேட்டது. அவ்வப்போது 'பளிச், பளிச்' என்ற ஒளியும் தோன்றி மறைந்தது. பிரக்ஞை இழந்து கிடந்த மனிதரின் உடலில் உள்ள

இரணங்களை, மாணிக்கக் கல்லின் ஒளியினால் கண்டுபிடித்து மருந்து இடுவதில் அவர்கள் முனைந்திருக் கிறார்கள் போலும்.

'உயிராபத்தான நிலையிலே ஒரு மனிதரைக் கொண்டு வந்து ஒப்படைத்துவிட்டு அவரைப் பற்றித் தகவலேதும் தெரிவிக்காமல் போவது முறையல்லவே! அவசர சிகிச்சை செய்யவேண்டியிருந்ததால் ஆதுரசாலையின் காப்பாளர் என்னிடம் ஏதும் விசாரிக்காமல்-பிறகு வந்து தெரிந்து கொள்ளலாம் என்று-உள்ளே போயிருப்பார். அவர் வரும் வரையில் காத்திருந்து அவரிடம் நடந்த விவரங்களை யெல்லாம் கூறி, அந்த மனிதர் யார் என்ற தகவலையும் கேட்டுத் தெரிந்து கொண்டு புறப்படுவதுதான் நல்லது.

பெருமூச்சு விட்டுத் திரும்பிய பரமேசுவரவர்மன் தாழ்வாரத்தில் கிடந்த கல் படுக்கையின் மீது போய்ச் சோர்வுடன் அமர்ந்தான். புகை சூழ்ந்த மாளிகைபோல் இருளில் புதைந்திருந்த அந்த ஆதுரசாலையையும், அங்கே தன்னந் தனியாகக் குளிரில் முடங்கி உட்கார்ந்திருக்கும் தன்னையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்த அவன் தனக்குள் மெல்லச் சிரித்தான். பிறகு வேதனையுடன் நெட்டுயிர்த்துத் தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டான்.

காலஞ்சென்ற மாமன்னன் மகேந்திரவர்மனால் சமணர்களுக்கெனப் 'பள்ளிச் சந்தமாக' வழங்கப்பெற்ற ஏழு வேலி நிலப்பரப்பில் அமைந்திருந்த அந்த ஆதுரச்சாலை, அம்மன்னனின் பட்டத்துராணியால் கட்டுவிக்கப் பெற்றதாகும். மண்ணும் மனையிருப்பும் அளித்ததோடு அல்லாமல், ஆண்டு தோறும் ஐம்பது கழஞ்சுப்பொன் மானியமும் வழங்கி, அதனைச் சுற்றியுள்ள தோட்டத்தில் விளைவிக்கப் பெறும் மருந்து மூலிகைச் செடிகளுக்குரிய 'செங்கொடிக் காணம்,' 'கண்ணிட்டுக் காணம்' முதலான வரிகளையும் வசூலிக்காது விட்டிருந்தான் அந்தத் தரும துவஜ மன்னன். இப்படிப் பல்லவரால் உருவாகி வளர்ந்த இவ்வாதுர

சாலையில்தான் இன்று அதே பல்லவ குலத்தில் உதித்த பரமேசுவரவர்மன் பராரிபோல் வந்து ஒடுங்கி முடங்கி உட்கார்ந்து கொண்டிருக்கிறான்!...

அந்த ஆதுரசாலை இப்போது மருத்துவப்பணி ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு இயங்கி வருகிறதென்று சொல்லமுடியாது; சமண சமயத்தின் தலைமைப் பீடமாகவும் அது செயல்பட்டு வந்தது. இம் மாறுதலுக்கான காரணத்தைப் பரமேசுவரவர்மனும் அறிவான்.

பல நூறு ஆண்டுகளுக்குமுன் வடப் புலத்திலிருந்து தென்னகம் வந்த காலூன்றிய ‘தேர வாதம்’ எனப்படும் பௌத்த மதம், மற்கலியுண்டாக்கிய ஆசீவக மதம் முதலான மதங்களைப்போலவே, ‘அநேகாந்த வாதம்” எனப்படும் சமண மதமும் புதிதாகவந்து பரவிய ஒன்றுதான்.

சமணர்களின் இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களில் கடைசித் தீர்த்தங்கரரான ஞாதி புத்திர வர்த்தமான மகா வீரருக்கு ஒன்பது சீடர்கள் இருந்தார்கள். மகாவீரர் வீடுபேறு அடைந்ததும் அவரது சீடர்கள் சமண சமயத் தலைமையை ஏற்றுப் பரிபாலித்து வந்தனர். அவர்களில் இறுதியாகத் தலைமை வகித்தவர் பத்திரபாகு என்பவராவார். இவர் வடநாட்டில் பஞ்சம் வரப்போவதை முன்கூட்டியே அறிந்து தமது பன்னீராயிரம் சமண முனிவர்களையும் அழைத்துக் கொண்டு தென்திசை நோக்கி வந்து கங்க நாட்டின் சிரவணபெள்குளத்தில் தங்கலானார். பிறகு தம் சீடர்களில் ஒருவரான விசாக முனிவர் என்பவரைத் தமிழ் நாட்டுக்கு அனுப்பிச் சோழ-பாண்டிய நாடுகளில் சமண சமயத்தைப் பரவச் செய்தார். இப்படி, பத்திரபாகு முனிவரின் முயற்சி யாலும், விசாக முனிவரின் நேர்முக விஜயத்தினாலும்தான் தமிழகம் சமண சமயத்தை அறிமுகப்படுத்திக் கொண்டது.

புதியனவற்றுக்கு எப்போதுமே ஒரு தனி வேகம் உண்டல்லவா? தமிழ் நாட்டில் சமணம் விரைந்து பரவத் தொடங்கியது. அவ்வப்போது பல பேரறிவாளர்களும்

மாமுனிவர்களும் தோன்றித் தமிழாலும் தமது தூய அறநெறி நடத்தைகளாலும் சமண சமய வளர்ச்சிக்கு அடிகோலினர். அதன்பின் தமிழக அரசியலில் எற்பட்ட பல மாறுதல் களாலும், சமணரான களப்பிரர் சோழ-பாண்டிய ஆட்சிப் பீடங்களைக் கைப்பற்றியதாலும் சமணத்தின் வளர்ச்சி மேலும் விரிவடையலாயிற்று.

பத்திரபாகு முனிவரின் காலத்திலேயே சமண மதத்தின் மூல சங்கத்திலிருந்து நந்தி கணம், சேன கணம், சிம்ம கணம் தேவ கணம் என்பதாக நான்கு பிரிவுகள் பிரிந்திருந்தன. அவற்றில் நந்தி கணம் எனும் அருங்கலாவன்யப் பிரிவே தமிழ்நாட்டில் அதிகம் பரவி வந்தது. இந்த நந்தி கணத்தைச் சேர்ந்த வச்சிரநந்தி என்பார் தமிழகச் சமண சமயத்தின் தலைமைப் பீடமாகத் 'திரமிள சங்கம்' என்ற ஒன்றை மதுரையிலே நிறுவினார். இதனாலும் தமிழ்நாட்டில் சமண சமயம் புது வெள்ளமாகப் பாய்ந்து, தமிழர்களின் தாய்ச் சமயமான சைவத்தை மெல்ல மெல்ல மூழ்கடிக்கத் தொடங்கியது. இந்நிலையில்தான், மூழ்கி வந்த சைவத்தை மேலே தூக்கிவிட, அப்புது வெள்ளத்திலிருந்தே மாமலை யொன்று எதிர்முகம் காட்டி எழும்பியது. ஆம்; திருப்பாதிரிப்புலியூர் பாடலிபுரச் சமண சங்கத்தின் தலைவராயிருந்த தருமசேனர் என்பார் திருவருளின் கருணை ஈர்ப்பினால் உண்மையொளி கண்டு திருநாவுக்கரசராக மாறிச் சமண வெள்ளத்திலே மூழ்கிக்கொண்டிருந்த சைவத்தை ஏந்திக் கொண்டு எதிர் நீச்சலிடலானார். அந்த ஞான மாமலையோடு இன்னொரு ஞான மேருவாக அவதரித்த திருஞானசம்பந்தரும் துணை நின்று சைவத்தைக் கரையேற்றிக் கொண்டு வந்தார்.

புத்துயிர் பெற்ற சைவம் தன் பழைய ஒளிக் கதிர்களைப் புதுப் பொலிவுடன் வீசித் தமிழகத்தைத் தன்பால் ஈர்க்கத் தொடங்கியது. திருநாவுக்கரசரும் திருஞான சம்பந்தரும் உதய ஞாயிறுகளாக உலா வந்து சைவ ஒளியைப் பரப்பினர்.

அதுமட்டுமின்றி, அப்போது பல்லவ மன்னனாயிருந்த, மகேந்திரவர்மனையும், பாண்டிய மன்னராயிருக்கும் நின்றசீர் நெடுமாறனையும் சமணத்திலிருந்து சைவ சமயிகளாக ஆக்கி வைத்தனர். இதனாலெல்லாம் சமண வெள்ளம் பையப் பைய வடிய ஆரம்பித்தது.

மதுரையில் பேராதிக்கம் செலுத்தி வந்த சமணர்களின் "திரமிள (திராவிட) சங்கம்,' திருஞானசம்பந்தரின் அனல்வாதப் புனல் வாதத்தினால் கலகலத்துக் கலைந்தது. அங்கிருந்த சமணத் தலைவர்கள் பாடலிபுரச் சமணப் பள்ளியில் வந்து புகலடையலாயினர்.

எந்த ஆதிக்கத்தை இழப்பவர்களாயினும், அல்லது, அதைப் பெறுபவர்களாயினும் ஆரம்ப காலத்தில் நிதானம் நவறிப் பூசலிலும் புன்மைச் செயல்களிலும் இறங்குவது இயற்கை. சமயத்துறையில் நீண்ட காலமாகவே இது ஒரு தொற்று நோய்போல் இருந்து வந்திருக்கிறது. சமயவழிக் கொள்கையிலே உறுதியாக நின்று அதில் உண்மையான பற்றும் கொண்டு, அதன் உள்ளொளியையும் உயர்ந்த நோக்கங்களையும் உணர்ந்து, அவற்றை ஓம்பி ஒழுகுபவர்கள் அத்தகைய இழிசெயல்களில் ஈடுபடுவதில்லை. ஆனால், மதத்தை ஒரு 'மதமாக' ஏற்று அதன் புறச் சின்னங்களிலும் புற நடவடிக்கைகளிலும் மட்டுமே தம் மனத்தை இறுக்கி வைத்துக் கொண்டிருக்கும் சில போலி மதவாதிகளோ அம்மாதிரி ஈன காரியங்கள் செய்வதில்தான் எப்போதுமே நாட்டம் உடையவர்களாக இருப்பார்கள். தத்தமது மதங்களைக் காப்பதற்கென்றே தாம் பிறந்திருப்பதாக அவர்கள் பறைசாற்றிக் கொள்வார்கள். உண்மையில் அவர்களாலேயே அவர்களுடைய மதத்தின் புனிதம் கெட்டுக் கறை படிய ஏதுவாகிறது என்பதை ஏனோ அவர்கள் உணர்வதில்லை. உணர்ந்தாலும் அந்தச் சுயநலவாதிகள் அதற்கு வேறு பொருள் கூற முனைவார்கள். இத்தகைய புன்மை ஜன்மங்கள் எந்தக்

காலத்திலும், எல்லா மதங்களிலும், எப்போதும் இருந்து கொண்டேதான் இருக்கிறார்கள்.

இப்படித்தான், அன்பின் உருவான நாவுக்கரசரும் அருளின் வடிவமான ஞானசம்பந்தரும் சமண சமயத்தின் மேல் கருத்துப் போர் நிகழ்த்தி அதை அறவழியிலே வென்று வரும்போது, ஆங்காங்கே சில போலிச் சமணர்களும் போலிச் சைவர்களும் கூடி, கருத்துப் போருக்குப் பதிலாகக் கத்திப் போர் செய்து கலகம் விளைவிக்கலாயினர். இந்த வகையில் பாடலிபுரத்திலும் ஒரு கலகம் விளைந்தது. சமயங்களின் பெயரால் நடைபெறும் மறச் செயல்களை அடக்கிச் சமயப் பொறை காக்கவேண்டியது மன்னனின் கடமை அல்லவா? அப்போது பல்லவப் பேரரசனாக இருந்த மகேந்திரவர்மன் அந்தக் கலகத்தை அடக்கும் பொருட்டு அங்கிருந்த சமணப் பள்ளிகளையும் பாழிகளையும் இடித்துத் தள்ளினான். அப்படி இடிக்கப் பெற்ற பள்ளி-பாழிகளின் கற்கள் வீணாகிவிடக் கூடாதே என்பதற்காக, அவற்றைக் கொண்டு திருவதிகை என்னும் ஊரில் ஒரு கோயில் எடுப்பித்து அதற்குக் 'குணபர ஈச்சுரம்' என்று தன் பெயரையே சூட்டினான்.

இந்த விதமாகப் பாடலிபுரத்தில் இருந்த சமண சங்கமும் கலைய நேர்ந்திடவே, அங்கிருந்த சமண முனிவர்களில் பெரும்பாலோர் சிரவணபெள்குளத்துக்குப் போய்விட்டனர். ஆனால், மொழிப் பற்றும், நாட்டுப் பற்றும், சமண சமய நெறிகளில் ஆழ்ந்த நம்பிக்கையும் கொண்ட தமிழ்ச் சமண முனிவர்கள் அவ்வாறு நாடு விட்டு நாடு போகாமல் இந்தப் பெருவளநல்லூர்ச் சாலையை அடுத்துள்ள ஆதுர சாலையில் வந்து தங்கி, சமந்தபத்திரர் என்பவரைத் தலைவராகக் கொண்ட 'திரமிள சங்கம்' ஒன்றை இங்கே தோற்றுவித்துக் கொண்டார்கள். ஆகவேதான் இந்த ஆதுரசாலை முழுக்க முழுக்க ஆதுரசாலையாக இராமல், சமண சமயத்தின் தலைமைப் பீடமாகவும் விளங்கி வந்தது!...

உஷைக் கன்னி ஒளி நீரில் முகம் அலம்ப ஆரம்பித்து விட்டாள் என்பதை உணர்ந்த பரமேசுவரவர்மன் தன் சிந்தனையிலிருந்து விடுபட்டு நிமிர்ந்தான். இவ்வளவு நேரமாகியும் அந்த ஆதுர சாலையின் காப்பாளர்களில் யாருமே வெளியே வராமல் இருப்பது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. 'அவர்களை அழைத்துக் கூற வேண்டிய விவரங்களைக் கூறி, தாக்குதலுக்கு உள்ளான அந்த மனிதரைப் பற்றிய தகவல்களையும் கேட்டுக்கொண்டு புறப்படலாமா?' என்று ஒரு கணம் எண்ணினான். பிறகு 'அவர்கள் என்னைப் பார்க்க விரும்பாமல் வேண்டுமென்றே வெளியில் வராது இருக்கிறார்களோ?' என்ற இன்னோர் எண்ணமும் தோன்றவே, முதலில் நினைத்த முடிவை மாற்றிக் கொண்டு குழம்பி நின்றான்.

'இனி என்ன செய்வது? அந்தச் சமணத் துறவிகளிடம் எதையும் சொல்லாமல், எதையும் கேட்காமல் புறப்பட்டு விடுவோமா? அதுதான் சரி,' சட்டென்று எழுந்த பரமேசுவரவர்மன் அங்கிருந்து வெளியேறத் தாழ்வாரத்துப் படிகளில் வேகமாக இறங்கினான்.

'பல்லவ மன்னரவர்களுக்கு என் அன்பான வாழ்த்துக்கள் உரித்தாகும்!" என்று அமைதி நிறைந்த குரலில் கூறிக்கொண்டே அருள் வழியும் புன்னகையோடு ஆதுர சாலையின் வலப்பக்க அறையிலிருந்து வெளிப்பட்டு அவனை நோக்கி வந்தார் அந்த நெடிதுயர்ந்த சமண முனிவர்.

ஆம்; திரமிள சங்கத் தலைவரான சமந்தபத்திரர் என்பவர்தாம் அவர்.

# 42

# பல்லக்கில் வந்தவர் யார்?

**வி**ழிகளை மலர்த்தி வியப்புடன் பார்த்தான் பரமேசுவரவர்மன்.

"ஆபத்தான நிலையில் உள்ள ஓர் உயிரைக் காப்பதே முதற்கடமை என்று எண்ணி அந்தப் பணியில் என் முழுக் கவனத்தையும் செலுத்திவிட்டதால் உடனடியாக வந்து மன்னவரவர்களை வரவேற்க இயலாமற் போய்விட்டது; வருந்தற்க!" என்றவாறு அவனுடைய இரு கரங்களையும் பற்றித் தம் கண்களில் ஒற்றிக் கொண்டார் சமந்தபத்திரர்.

பரமேசுவரவர்மனின் உடல் புல்லரித்தது. குவித்த கரங்களைத் தாழ்த்தாமல் அவரையே பார்த்துக் கொண்டிருந் தான் அவன். சமந்தபத்திரரும் அவனை விழியசைக்காமல் நோக்கினார். மாபெரும் சாம்ராஜ்யத்தின் மன்னனாயிருந்த அவன் இன்றிருக்கும் கோலத்தைக் கண்டு மனம் கசிந்ததாலோ என்னவோ அவர் கண்கள் பனித்தன.

"அடிகளாரை இன்று சந்திக்க நேர்ந்தது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியுறுகிறேன்'' என்று குளிர்ந்த குரலில் கூறிப் புன்முறுவல் பூத்த பரமேசுவரவர்மன் மெல்ல நிமிர்ந்து, "அந்த மனிதரின் உடல்நிலை இப்போது எப்படியிருக்கிறது?" என்று மிகுந்த ஆவலுடன் வினவினான்.

"அவர் உயிர் பிழைத்துவிட்டார். ஆயினும் நிலைமை இன்னும் கவலைக்கிடமாகவே இருக்கிறது."

மேற்கொண்டு அவர் ஏதேனும் சொல்வார், அல்லது கேட்பார் என்று எதிர்பார்த்தான் பரமேசுவரவர்மன். ஆனால்

அவர் தம் பார்வையை வேறெங்கோ செலுத்திக் கொண்டு மௌனமாக நின்றிருந்தார்.

இனியும் காலம் தாழ்த்த விரும்பாதவன்போல் ஓரடி முன் வந்து நின்ற பரமேசுவரவர்மன், அன்றிரவு பெருவள நல்லூர்ச் சாலையில் தான் கண்ட காட்சிகளையும் நிகழ்ச்சிகளையும் மளமளவெனக் கூறி, “இந்த விவரங்களை அடிகளாரிடம் தெரிவித்துவிட்டுப் போக இவ்வளவு நேரம் இங்கு காத்திருந்தேன். இனி நான் புறப்பட விடை ,ளிப்பீர்கள் என்று நம்புகிறேன்” என்றான்.

சமந்தபத்திரர் இதைக் கேட்டு எவ்விதப் பரபரப்பும் அடைந்ததாகத் தெரியவில்லை. எதைப்பற்றியோ ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்த அவர் ஏதோ ஒரு முடிவுடன் மெல்லத் திரும்பி, “மன்னரவர்கள் புறப்படுமுன் அந்த மனிதரை ஒருமுறை பார்க்கவேண்டும் என்று விரும்பு கிறேன்...” என்றார் தணிந்த குரலில்.

“என்னுடைய விருப்பமும் அதுவே!” என்றான் பரமேசுவரவர்மன்.

இருவரும் ஆதுரசாலையின் வலப்புற அறையை நோக்கி நடந்தார்கள்.

தூய்மையும் துப்புரவுமாக விளங்கிய அந்த அறையில் இலைச் சருகுகள் பரப்பப்பெற்ற ஏழெட்டுக் கற்படுக்கைகள் வரிசையாய்ப் போடப்பட்டிருந்தன. அவற்றில் இரண்டு படுக்கைகளில் மட்டும் இரண்டுபேர் படுத்துக் கொண்டிருக்க, மற்றவையெல்லாம் வெறுமனே கிடந்தன.

முதற் படுக்கையில் படுத்திருந்த மனிதரை உடனே அடையாளம் கண்டுகொண்டான் பரமேசுவரவர்மன். அந்த மனிதர்தாம் பெருவளநல்லூர்ச் சாலையில் தாக்கப்பட்டு மூர்ச்சித்துக் கிடந்தவர். அவரது உடலில் ஏற்பட்டிருந்த இரத்தக் காயங்களுக்குச் ‘சித்திர மூலம்’ என்னும் மருந்துக் கொடியை அரைத்துப் பற்றுப் பூசப்பட்டிருந்தது. அவர் ஆழந்த நித்திரையில் லயித்திருந்தார். இன்னொரு

படுக்கையில் இருந்த நபரும் உறங்கி கொண்டுதான் இருக்க வேண்டும். அந்த நபரின் தலைமுதல் கால்வரை மெல்லிய வெள்ளைத் துணி போர்த்தப் பெற்றிருந்ததால் அந்நோயாளியின் முகத்தைப் பார்க்க முடியவில்லை.

துயரம் செறிந்த பெருமூச்சுடன் மெல்ல நடந்து போய் முதற்படுக்கையின் அருகில் நின்று, உறங்கிக் கொண்டிருந்த அந்த மனிதரின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான் பரமேசுவரவர்மன். அவனுக்கு என்றுமே அறிமுகமில்லாத புதிய முகமாக இருந்தது அது. அங்கிருந்து அகன்று வந்தவன் சமந்தபத்திரரை ஏறிட்டு நோக்கினான்.

அவனுடைய பார்வையின் பொருளைப் புரிந்து கொண்டவர்போல் புன்னகையுடன் தலையசைத்த சமந்தபத்திரர் துக்கம் நிறைந்த குரலில் மிக நிதானமாக கூறினார்: "பல்லவ மன்னருக்கு இந்த மாபெரும் மனிதர் யாரென்று தெரிந்திருக்க முடியாது. இவர் பெயர் அகளங்க அடிகள். சிரவண பெள்குளத்துச் சமண சங்கத் தலைவர் இவர்."

வியப்பும் திகிலும் மூச்சை இறுக்கிப் பிடிக்கத் திக்கித் திணறிவிட்டான் பரமேசுவரவர்மன்.

"ஆம், அரசே! சளுக்கிய விக்கிரமாதித்தரின் அழைப்புக்கு இணங்கித் தமிழகம் வந்த இவருக்கு எதிர்பாராத விதமாக இந்தக் கதி ஏற்பட்டிருக்கிறது. தாங்கள் மட்டும் அன்பு மனம் கொண்டு இவரை இங்கு எடுத்து வந்து சேர்த்திராவிட்டால் இந்நேரம் எங்கள் சமண சமயத்துக்கு மாபெரும் இழப்பு ஒன்று நேர்ந்து சொல்லொணாத் துயரத்தில் அது ஆழ்ந்திருக்கும்."-குரல் தழுதழுக்க இவ்வாறு கூறிச் சோர்வுடன் தலைகுனிந்தார் சமந்தபத்திரர்.

துடிப்புடன் திரும்பிய பரமேசுவரவர்மன், கற்படுக்கை யிலே தம்மை மறந்து உறங்கிக் கொண்டிருந்த அந்த மகாபுருஷரைப் பயபக்தியுடன் பார்த்தான்.

இந்தச் சமயம், ஒரு சமணத் துறவி அவ்வறையில் பிரவேசித்து, சமந்தபத்திரரிடம் ஏதோ இரகசியமாகச் சொல்லிவிட்டுப் போனார். இதுவரையில் அமைதியே வடிவாக நின்றிருந்த சங்கத்தலைவரின் முகம் ஏனோ வெளிறித் துவண்டது. அங்குமிங்குமாகப் பரபரப்புடன் நோக்கிய அவர் விரைந்து போய், அந்த இரண்டாவது படுக்கையில் படுத்திருந்த நபரை மெல்லத் தொட்டுப் பார்த்தார். பிறகு, மேலே போர்த்தப் பெற்றிருந்த வெள்ளைச் சல்லாவை விலக்கிவிட்டுக் குனிந்து நோக்கினார்.

யார் அந்த மனிதன்? சந்தேகமில்லை; சிவிகை தூக்கியான நாகோதரன்தான் அங்கு இரண காய மருந்துப் பூச்சுடன் நிம்மதியாகப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தான்!

விலக்கிய போர்வையை மூடிவிட்டு நிமிர்ந்த சமந்தபத்திரர் சரேலெனத் தாழ்வாரத்தை நோக்கி நடந்தார். அதே சமயம், அந்த ஆதுரசாலையின் தொலைதூர முகப்பு வாயிலண்டை ஒரு சிவிகை வந்து நிற்க, அதிலிருந்து இறங்கிய ஆந்திர இளவரசி உத்தமசீலி, பணிவும் குழைவுமாக வந்து கொண்டிருந்தாள்.

# 43

# ஒலிச்சுவடி நூல் நிலையம்

ஆதுரசாலையை நோக்கி ஆந்திர இளவரசி வந்து கொண்டிருந்ததையோ, அவளை வரவேற்பதற்காகத் திரமிள சங்கத் தலைவர் வெளியே சென்றதையோ அறியாதவனாய், நீசரால் சிதைத்தெறியப்பெற்ற புனித விக்கிரகம் போல் படுத்துக் கிடந்த அகளங்க அடிகளையே கண் கலங்கப் பார்த்தவாறு நின்றிருந்த பரமேசுவரவர்மன் மெல்லப் பெருமூச்சு விட்டுத் திரும்பினான்.

“பல்லவச் செல்வரிடம் பணிவன்பானதொரு வேண்டுகோள்...” என்று புன்முறுவலுடன் கூறிக்கொண்டே அவனை நோக்கி வந்த ஓர் இளந்துறவி, “மன்னரவர்கள் இங்குள்ள நூல் நிலையத்தைச் சிறுபொழுது பார்வையிட வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்!” என்றார் பண்பும் பரிவுமான குரலில்.

இவ்வளவு நேரம் தன்னுடனிருந்த சமந்தபுத்திரர் அங்கு இல்லாததை அப்போதுதான் அறிந்து திகைப்புற்ற பரமேசுவரவர்மன் அந்த இளந்துறவியை அவசரமாக ஏறிட்டு நோக்கினான்.

“எங்கள் சங்கத் தலைவரின் வேண்டுகோளுக் கிணங்கவே மன்னரவர்களை அழைக்கிறேன்” என்று மேலும் அவனை வற்புறுத்துவதுபோல் சொன்னார் அந்த இளந்துறவி.

சமந்தபத்திரர் அத்தனை அவசரமாக எங்கே போயிருப்பார் என்ற யோசனையுடன் தயங்கி நின்ற பரமேசுவரவர்மன், ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய்

மௌனமாக அவ்விளந்துறவியைப் பின்தொடர்ந்து சென்றான்.

சாந்தி தேவனின் கொலு மண்டபம்போல் விளங்கிய அந்தச் சமண சங்கப் பள்ளியின் ஒவ்வொரு பகுதியும் தூய்மைக்கு இலக்கணமாகவும் எளிமைக்கு எடுத்துக் காட்டாகவும் அமைந்து, அங்கு வாழ்வோரின் அதியுன்னத அற வாழ்க்கைக்குச் சாட்சி பகர்ந்து கொண்டிருந்தன.

ஆருகத சமயத்தில் திகம்பரம், சுவேதாம்பரம், ஸ்தானசுவாசி என முப்பெரும் பிரிவுகள் உண்டு. திகம்பர சமணத் துறவிகள் ஆடையோ கௌபீனமோ அணிய மாட்டார்கள். திசைகளையே (திக்-அம்பரம்) ஆடையாகக் கொண்டு மக்கள் வாழும் பகுதிகளுக்கு அப்பால் போய், காடுகளிலும் மலைக் குகைகளிலுமாக இருந்து கடுந்தவம் இயற்றுவார்கள். மிக உயர்ந்த நிலையடைந்த துறவிகள் மட்டுமே இவ்வாறு ஆடை புனைவதைத் துறப்பார்கள். இவர்கள் வணங்கும் தீர்த்தங்கரர்களின் திருவுருவங்கள் கூடத் திகம்பரத் திருமேனிகளாகவே விளங்கும். இவர்களது தலையாய கொள்கைகளில் ஒன்று, பெண் மக்கள் வீடுபேறு அடைய முடியாது என்பதாகும். பெண் பிறவி தாழ்ந்த பிறவி என்றும், முற்பிறப்பில் பாவம் செய்தவர்களே மறு பிறப்பில் பெண்களாகப் பிறக்கிறார்கள் என்றும், பெண் பிறவி நீங்கி ஆண் பிறவி எடுத்தபின் துறவு பூண்டு மெய்த்தவம் நோற்றால்தான் வீடுபேறு அடைய முடியும் என்றும் இவர்கள் கூறுவார்கள். ஆனால் சுவேதாம்பர சமணர்களோ, திகம்பர சமணர்களின் கொள்கைகளுக்குப் பெரிதும் மாறுபாடு உடையவர்கள். இவர்கள் வெண்ணிற ஆடை உடுத்துவார்கள். தாம் வணங்கும் அருகப் பரமேட்டிகளின் திருஉருவங் களுக்கும் வெண்ணிற ஆடை அணிவிப்பார்கள். “சுவே தாம்பரம்’ என்றாலே வெண்ணிற ஆடை என்றுதான் பொருள். மக்களோடு மக்களாக வாழ்ந்து மக்களுக்குத் தொண்டாற்றுவதையே பெருங்கடமையாகக் கொண்ட

வர்கள். அன்ன தானம், அடைக்கல தானம், ஔடத தானம், கல்வி தானம் முதலான உயர்வகை தானங்களை முன்னின்று செய்வதில் பெரிதும் நாட்டமுடையவர்கள். சமண சமயத்தின் அறநெறி விதிமுறைகளை வழுவாது கடைப்பிடித்து ஒழுகினால் பெண் மக்களும் வீடுபேறு அடையலாம் என்னும் கொள்கை உடையவர்கள். எனவே, இவர்கள் பெண்ணினத்தை வெறுப்பதில்லை; ஒதுக்கி வைத்து ஒதுங்கிப் போவதும் இல்லை. பெண் மக்களிடம் பெரிதும் பரிவு காட்டி, அவர்களுக்கு உரிய மரியாதையையும் கௌரவத்தையும் அளித்து, அவர்கள் உய்யும் வழிகளைப் போதிப்பதைக் கடமையாகக் கொள்பவர்கள். இத்தகைய சிறப்பு வாய்ந்த கொள்கைகளைக் கொண்ட சுவேதாம்பர சமணர்கள், என்ன காரணத்தினாலோ தமிழ்நாட்டில் சிறுபான்மையினராகவே இருந்தனர். திகம்பர சமணர்களே, நிறைந்த செல்வாக்குடன் எங்கும் வியாபித்திருந்தனர். ஆனால், இந்தத் திரமிள சங்கத் தலைவரும், அவரது தலைமையில் பொதுப் பணியாற்றும் துறவிகளும் சுவேதாம்பர சமணர்கள்தாம்!...

நீண்ட விசாலமான ஆளோடியில் வெகு நிதானமாக நடந்து கொண்டிருந்தான் பரமேசுவரவர்மன். இருபுறமும் சிற்ப சித்திரங்கள் நிறைந்த அழகிய தூண்கள் வரிசையாக நிற்க, அவற்றுக்கு அப்பாலிருந்த அறைகளிலிருந்து அவ்வப்போது வெளிப்பட்டு வந்த சமணத் துறவிகள் ஒவ்வொரு வரும் அன்றலர்ந்த நந்தியாவட்டை மலரொன்றை அவனிடம் அளித்து மௌனமாக வணங்கிச் சென்றனர். தங்கள் மன்னனைக் கண்ட மகிழ்ச்சி அந்தத் துறவிகளின் களங்கமற்ற முகங்களிலே நிறைந்து ஒளிர்வது நன்றாகப் புலனாயிற்று. வெண்ணிற ஆடை அணிந்த அவர்கள் வெண்ணிற நந்தியாவட்டை மலர்களை அளித்துச் சென்றது அவர்களுடைய தூய நெஞ்சங்களையே அவனுக்குக் காணிக்கையாக்குவது போல் தோன்றியது. நாடிழந்து நலமிழந்து ஆட்சி அதிகாரங்கள் அனைத்தையும் பறி

கொடுத்துவிட்டு நிற்கும் அவன் இப்போது ஒரு வெறும் மனிதன்தானே என்ற அலட்சிய எண்ணம் அவர்கள் மனத்தில் கடுகளவும் இல்லையென்பதையும், நேற்றும் இன்றும் நாளையும் அவனையே தங்கள் மன்னனாக ஏற்று மதித்துப் போற்றுகிறார்கள் என்பதையும் அவர்களுடைய அந்த அன்பாஞ்சலி தெற்றெனத் தெளிவாக்கியது.

அவனோ வீர சைவன்; அவனை வரவேற்று வாழ்த்துக் கூறி வணங்கிச் சென்ற அந்தத் துறவிகளோ தீவிர சமண வாதிகள். ஆனால், அவனும் அவர்களும் தமது சமய வேறுபாடுகளை அணுவளவும் கருத்திற் கொண்டதாகத் தெரியவில்லை. காய்ச்சிய பாலைக் கடையக் கடையத் துமித் துமியாக மேலெழும்பி மிதக்கும் வெண்ணெய்த் துணுக்குகள் இறுதியிலே ஒன்று சேர்ந்து ஒட்டுமொத்தமாகத் திரள்வது போல அவர்களது உள்ளங்கள் அங்கே விரிந்து சங்கமித்து ஓங்கி ஒன்றி நின்றன. சமயங்கள் வெவ்வேறாக இருந்தாலும் அதனதன் நெறிகளில் ஸ்புடமாகி வெளிப்படும் மனித உள்ளங்களின் இறுதி நிலை இதுதானோ?-

எண்ணிறந்த கவலைகளால் இறுகிக் கனத்துக் கிடந்த பரமேசுவரவர்மனின் உள்ளம் அந்த அறவோர் காட்டிய அன்புப் பெருக்கால் மலர்ந்து நெகிழ்ந்தது. அவர்களுடைய அஞ்சலிகளைப் பணிவுடன் ஏற்று, மறு வணக்கம் செய்து கொண்டே நடந்தான் அவன்.

அங்குள்ள ஒவ்வொரு பகுதியிலும் சமணத் துறவிகள் சிறுசிறு கூட்டமாகக் குழுமி வெவ்வேறு பணிகளில் ஈடுபட்டிருந்தனர். கல்வி கேள்விகளில் தேர்ந்த சிலர் இலக்கிய ஆராய்ச்சி செய்துகொண்டிருந்தனர். மற்றும் சிலர் மருந்துகள் தயாரிப்பதில் முனைந்திருந்தனர். வேறு சிலர் அறநெறி நூல்களை மக்களுக்கு இலவசமாக அளிக்கும் பொருட்டு அவற்றைப் பனை ஏடுகளில் பிரதி எடுத்துக் கொண்டிருந் தனர்.

பல்லவ நாடு இன்றிருக்கும் குழப்பமான நிலையில் அதன் மக்களுக்கு இந்தச் சமணத் துறவிகள் ஆற்றிவரும் அரிய பணிகளைக் கண்டு மனம் உருகினான் பரமேசுவரவர்மன்.

பொது அலுவல்களுக்குரிய பகுதிகளைக் கடந்து சென்ற அவன், வேறு சில காட்சிகளையும் கண்டான்.

பிறவிச் சக்கரம் பொறித்த திரைகளுக்கு எதிரே வயது முதிர்ந்த துறவிகள் பலர் தனித்தனியாக அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தனர். மற்றும் சிலர் உண்ணா நோன்பிருந்து உலோசம் (தலை மயிரைக் கத்தியால் மழிக்காமல் தம் கையாலேயே பிடுங்கி களைதல்) செய்து கொண்டிருந்தனர். இன்னும் சிலர் பல் தேய்க்காமல், நீராடாமல், நாற்பத்தாறு வகையான குற்றங்கள் இல்லாத ஆருகத உணவைக் கையில் ஏந்தி நின்றவாறே புசித்துக் கொண்டிருந்தனர்.

நெஞ்சைத் தொடும் இந்தக் காட்சிகளைக் கண்டு நிணம் உறைந்து சில்லிட்ட பரமேசுவரவர்மன் நூல் நிலையத்துக்கு வந்து சேர்ந்தான்.

பேரமைதி நிலவிய அந்த விசாலமான அறையில் எந்த ஒரு நூல் பிரதியும் இல்லை. நூற் சுவடிகளைச் சேமித்து வைப்பதற்கான வகையில் அது அமைந்திருக்கவும் இல்லை. வயதில் மிகவும் இளைஞர்களாகத் தோன்றிய-ஐம்பதுக்கும் மேற்பட்ட-சமணத் துறவிகள்தாம் அங்கே தனித்தனியாக உட்கார்ந்து தம் வாய்க்குள்ளாக ஏதோ முனகிக் கொண்டிருந்தனர். பரமேசுவரவர்மனும் இளந்துறவியும் நூல் நிலையத்தினுள் பிரவேசித்ததை அவர்கள் கவனித்ததாகத் தெரியவில்லை. அச்சில் வார்த்தெடுத்த சிலைகள்போல் எவ்விதச் சலனமுமின்றி அமர்ந்திருந்தனர்.

ஒன்றும் புரியாமல் தயங்கி நின்ற பரமேசுவரவர்மன் தன்னோடு வந்த இளந்துறவியை ஏறிட்டு நோக்கினான்.

"வாருங்கள், அரசே! இதுதான் எங்கள் நூல் நிலையம்!" என்றவாறு முன்னே சென்ற இளந்துறவி புன்முறுவலுடன் அவனைப் பார்த்துச் சொன்னார்: "இந்த நூல் நிலையத்தில்

நூற்பிரதிகள் ஏதும் இல்லையே என்று மன்னரவர்கள் நினைக்கலாம். ஏட்டிலே, எழுத்து வடிவிலே ஆன நூல்கள் ஏதுமில்லைதான். ஆனால், விலைமதிப்பற்ற அநேக நூல்கள் இங்கே மன ஏட்டில் பொறித்து வைக்கப்பட்டுள்ளன. அவை லிபி வடிவமாக இராமல் ஒலி வடிவமாக உள்ளன.”

பரமேசுவரவர்மனுக்கு இன்னும் ஒன்றும் புரியவில்லை. அவன் அந்த இளந்துறவியை வியப்புடன் நோக்க, அவர் மேலும் கூறினார்: “ஆம், அரசே! இதோ, இது தொல்காப்பியம்; அது அவிநயம். இங்கே இருப்பது திருக்குறள்; அதோ, அங்கே இருப்பது நீலகேசி...”

அந்த அறையில் தனித்தனியாகத் தலைகுனிந்து பதுமை போல் அமர்ந்திருந்தவர்களை ஒவ்வொருவராகச் சுட்டிக் காட்டி இவ்வாறு கூறிய இளந்துறவி மெல்ல நடந்து கொண்டே மேலும் சிலரைக் காட்டிச் சொன்னார்: “இது சிலப்பதிகாரம்: அது பெருங்கதை; அந்த நூல் வளையாபதி; இதன் பெயர் நாலடி நானூறு; அங்கே இருப்பது பழமொழி நானூறு; இது முதுமொழிக்காஞ்சி; இதற்கு மேலே இருப்பது ஏலாதி; அதற்குப் பக்கத்தில் இருப்பது திரிகடிகம்; இது நான்மணிக்கடிகை; அது சிறுபஞ்ச மூலம்; அதன் அருகில் உள்ளது இன்னா நாற்பது. இவை தவிர, வடமொழி, பிராகிருதம், பாலி, பைசாசம், அர்த்தமாகதி முதலான மொழிகளில் உள்ள தலைசிறந்த நூல்களும் இங்கே உள்ளன.”

வியப்பில் ஆழ்ந்து நின்றான் பரமேசுவரவர்மன். அந்த இளந்துறவியின் பேச்சு அவனுக்கு விந்தையாகவும் இருந்தது. திரும்பி வந்து அவனருகில் நின்ற இளந்துறவி அமைதியான குரலில் கூறினார்: “உண்மைதான். அரசே! பயனடைய, படித்துப் பாதுகாக்க வேண்டிய அரும்பெரும் நூல் ஒவ்வொன்றையும் ஒரு மனித வடிவிலே இந்நூல் நிலையத்தில் சேமித்து வைத்திருக்கிறோம். இங்குள்ள ஒவ்வொரு மனிதரும் ஒரு நூலைப் பிழையற மனப்பாடம் செய்து வைத்திருப்பார். நாம் படிக்க விரும்பும் நூலின் பெயரைச் சொல்லிக்

கேட்டதுமே அந்த 'நூல்' நம் செவிமுன் ஒலிக்க ஆரம்பிக்கும். கண்ணால் படிப்பதற்குப் பதிலாகச் செவியால் படித்துக் கொள்ள வேண்டும். அவ்வளவுதான். ஏட்டுச் சுவடி நூல்களை நாம் எப்படியெல்லாம் பயன்படுத்துகிறோமோ அப்படி யெல்லாம் இந்த ஒலிச் சுவடி நூல்களையும் பயன்படுத்திக் கொள்ளலாம். இத்தகைய ஒரு நூல் நிலையத்தை நாங்கள் வைத்திருக்கக் காரணம் என்ன? கடந்த காலத்தில் எங்களுக்கு ஏற்பட்ட கசப்பான அநுபவங்களே இப்படி உருவாக்கும்படி செய்துவிட்டன."

வருத்த மேலீட்டால் அந்த இளந்துறவியின் குரல் கம்மியது. ஒரு கணம் மௌனமாக இருந்த அவர் மீண்டும் தொடர்ந்து சொன்னார்: "மனித இனம் தன் நல்வாழ்வுக்காகத் தானே அமைத்துக் கொண்ட பல உயரிய அமைப்புகளில் மொழி எனும் அமைப்பே முதன்மையானது. எந்த நோக்கத்துக்காக மொழிகள் பிறந்தனவோ அந்த நோக்கத்துக் காகவே அவற்றைச் சரிவரப் பயன்படுத்த வேண்டும் என்பதில் சமணர்களாகிய நாங்கள் எப்போதுமே விழிப்புடன் இருந்து வந்திருக்கிறோம். எங்கள் சமய வளர்ச்சிக்கு முதல் துணையாக நிற்பது மொழியே. எங்கள் எண்ணங்கள், கொள்கைகள், குறிக்கோள்கள் ஆகிய அனைத்துக்கும் வலிவூட்டி வருவதும் மொழியே. ஒவ்வொரு மொழியும் எங்கள் சமயத்தின் உயிர்க் கண்ணாக இருந்து வருகிறது. அதனால் எவ்வித வேற்றுமை உணர்ச்சியும் இன்றி எல்லா மொழி களையும் வளர்க்க வேண்டியவர்களானோம். பரத கண்டத்தில் உள்ள பல்வேறு மொழிகளின் வளர்ச்சியிலும் எங்களுக்கு நிரம்பப் பங்குண்டு. தன்னிகரற்ற தமிழ் மொழியும் அதற்கு விதிவிலக்கல்ல. எனவேதான், சில நூறு ஆண்டு களுக்குமுன் எங்கள் ஞான பிதாவான வச்சிர நந்தியடிகள் இந்தத் திரமிள சமண சங்கத்தை மதுரையிலே தோற்று வித்தபோது, அதற்குமுன் அந்த நகரில் அகிலப் புகழ் பெற்றிருந்த தமிழ்ச் சங்கத்தைப் போன்றதொரு தமிழாராய்ச்சி

மன்றத்தையும் அதனுடன் ஏற்படுத்தினார். அதன் வாயிலாக எங்கள் முன்னோர்கள் பல அரிய நூல்களைச் சிருஷ்டித்துத் தமிழன்னையை அலங்கரித்தனர். அவர்களால் ஆக்கப் பெறாத வேறு பல நூல்களையும் அங்கு சேமித்து வைத்தனர். சமண சமய வளர்ச்சியையும் தமிழ் வளர்ச்சியையும் இரு கண்களாகக் கொண்டு சீரும் சிறப்புமாக இயங்கி வந்த அந்தத் திரமிள சங்கம், காலக் கோளாறால்-ஊழின் கொடிய ஆட்டத்தால்-கலைய நேரிட்டது. சமய காழ்ப்பினால் மதியிழந்த மக்கள் அந்தச் சங்கத்தை மட்டுமல்லாது, அங்கே சிருஷ்டித்தும் சேமித்தும் வைத்திருந்த விலைமதிக்க வொண்ணா நூல்களையும் சிதைத்துப் பாழக்கினர். எஞ்சிய நூற்சுவடிகளை எப்படியோ காப்பாற்றி எடுத்துக் கொண்டு பாடலிபுரச் சமண சங்கத்தில் வந்து புகலடைந்த எங்கள் மெய்யன்பர்கள் அவற்றை அங்கே பொன்போல் வைத்துப் போற்றி காத்தனர். ஆனால், துரதிர்ஷ்டவசமாக அந்தச் சங்கப்பள்ளியும் அழிந்துபடவே, அங்கிருந்த அரிய தமிழ்ப் பொக்கிஷங்களுக்கும் அதே கதி ஏற்பட்டது. உலகம் உள்ளளவும் சமயப் போர் இருந்து கொண்டுதான் இருக்கும். மனித இனம் தோன்றி, மதங்கள் தோன்றியபோதே அவற்றின்மீது இடப்பட்ட சாபக்கேடு இது. சமயங்கள் தோன்றலாம், அழியலாம். கொள்கைகள் நிலைபெறலாம், மாறலாம், அல்லது மறையலாம். ஆனால் மொழி? அது என்றுமுள்ள ஜீவரசம் போன்றது. மனித வாக்கிலே உலவி வரும் அதற்கு எப்போதுமே எவ்வித ஆபத்தும் ஏற்பட முடியாது. மொழியைக் கருவியாகக் கொண்டு எழும் எண்ணங்களின் எழுத்து வடிவங்களுக்குத்தான் ஆபத்து நேரிடுகிறது. ஏட்டிலே அவை இருக்கும் வரை மனிதராலும், மண்ணாலும், நீராலும், நெருப்பாலும், கடலாலும், கறையானாலும் அவற்றுக்கு ஆபத்து ஏற்பட்டுக் கொண்டேதான் இருக்கும். அத்தகைய அழிவிலிருந்து ஒப்பற்ற மனித சிந்தனைகளின் எழுத்துக் கருவூலங்களைக் காப்பாற்ற

வேண்டும் என்ற நோக்கத்துடன்தான் இந்த ஒலிச்சுவடி நூல் நிலையத்தை இங்கே உருவாக்கி வைத்திருக்கிறோம். இது கால காலமாக, வழி வழியாக, ஒருவருக்குப் பின் ஒருவராகத் தொடர்ந்து கொண்டே இருக்க வேண்டும் என்றும் ஆசைப்படுகிறோம். ஏனென்றால், கால தேச வர்த்தமானங் களின் மாறுதலால் சில உயரிய கொள்கைகளும் நெறிகளும் இறக்க நேரிட்டாலும், மொழி வடிவிலே அவை காப்பாற்றப் பட்டு வந்தால் எப்போதேனும் ஒரு காலத்தில் அந்தக் கொள்கைகளும் நெறிகளும் புத்துயிர் பெற முடியும் என்று நாங்கள் உறுதியாக நம்புகிறோம்."

பேச்சை நிறுத்திய இளந்துறவி நிதானமாக நடந்து போய் அங்கு பதுமையென அமர்ந்திருந்த ஒரு மனிதரின் எதிரே நின்று, "திருக்குறள்-அறத்துப்பால்-முந்நூற்று நாற்பத்தொன்பதாம் குறள்?..." என்றார் தணிந்த தொனியில்.

மறு கணம், **"பற்றுக பற்றற்றான், பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு"**-ஒலிச்சுவடி நூலாக உட்கார்ந்திருந்த மனிதர் இனிய தெளிவான குரலில் இவ்வாறு ஒலித்தார்.

"அற்புதமான நூல் நிலையம்!" என்று மகிழ்ச்சிப் பெருக்குடன் கூறிக்கொண்டே அந்த 'ஒலிச் சுவடி' களை ஆர்வம் ததும்பப் பார்த்தவாறு மெல்ல நடந்து வந்தான் பரமேசுவரவர்மன்.

"இந்த நிலையத்திலிருக்கும் நூல்கள் எல்லாமே சமண சமயச் சார்புடையவையாகத்தான் இருக்குமோ என்று மன்னரவர்கள் எண்ணக்கூடும். சமணப் பெரும் புலவர் களால் இயற்றப்பட்ட நூல்களும், சமண மதச் சார்புடைய நூல்களுமே இங்கு அதிகம் இடம் பெற்றுள்ளன என்பது உண்மைதான் என்றாலும், பிற துறை நூல்களும், பிற சமய நூல்களும்கூட இருக்கவே செய்கின்றன. இலக்கண, இலக்கிய, அறிவியல் துறைகளில் மட்டும் நாங்கள் எப்போதுமே எவ்விதக் கட்டுத் திட்டங்களுக்கும் உட்பட்டுக் கொள்வ தில்லை. அதனால் எங்கள் கொள்கைக்குப் புறம்பான

நூல்களை ஒதுக்கி வைப்பதும் இல்லை. இதோ, பௌத்த காப்பியங்களான மணிமேகலையும் குண்டலகேசியும் இருக்கின்றன. அதோ, சைவ மணம் கமழும் தேன்கவிப் பூக்களான திருநாவுக்கரசரின் பக்திப் பனுவல்கள், இதோ, தித்திக்கும் தமிழிசைக் கரும்பான திருஞானசம்பந்தரின் பதிகப் பாக்கள்...'' என்று புன்முறுவலுடன் கூறினார் இளந்துறவி.

இந்நேரம்வரை அமைதியாக நின்றுகொண்டிருந்த பரமேசுவரவர்மன் இதைக் கேட்டு உணர்ச்சி வயப்பட்டவன் போல் தலைநிமிர்ந்து, "நாவுக்கரசரின் பதிகங்களா? எங்கே அந்த நூற்சுவடி?'' என்று மிகுந்த ஆவலுடன் வினவினான்.

"இதோ இருக்கிறது அரசே! இந்த ஒலிச்சுவடி நூலில் திருநாவுக்கரசரின் நாலாயிரத்துத் தொள்ளாயிரம் பதிகங்களும்* உள்ளன!'' என்று தம் அருகில் அமர்ந்திருந்த ஒரு சமண முனிவரைச் சுட்டிக் காட்டினார் இளந்துறவி.

தன்னை மறந்த பரவச நிலைக்காளான பரமேசுவர வர்மன் அந்த முனிவரின் எதிரில் போய்ப் பக்தி சிரத்தையுடன் உட்கார்ந்து அவர் முகத்தை இதமாக ஏறிட்டு நோக்கி, "திருவாரூர்ப் பதிகம், நேரிசைப் பா...'' என்றான் தழுதழுத்த குரலில், அடுத்த கணம்,-

"உயிர்நிலை யுடம்பே வாலாய்
உள்ளமே தாழியாகத்
துயரமே ஏற்றமாகத்
துன்பக்கோ லதனைப் பற்றிப்
பயிர்தனைச் சுழியவிட்டுப்
பாழ்க்குநீ ரிறைத்து மிக்க

* திருநாவுக்கரசர் பாடியருளிய பதிகங்களின் மொத்த எண்ணிக்கை 4900. ('இணைகொள் ஏழெழு நூறிரும்பனுவல் ஈன்றவன் திருநாவுகரையன்' – சுந்தரமூர்த்தி சுவாமிகள்.) ஆனால் இப்போது உள்ளவை 312 பதிகங்கள்தாம்.

அயர்வினால் ஐவர்க் காற்றேன்
ஆரூர் மூலட்டனாரே!..."

நாவுக்கரசரின் பதிகப் பனுவல் நூலாக வீற்றிருந்த முனிவர் இன்சுவைத் தொனியில் இவ்வாறு ஒலித்தார். அதைச் செவி குளிரப் பருகிய பரமேசுவரவர்மன், தேன் மாந்திய வண்டுபோல் கிறங்கிச் சோர்ந்து கண் மூடினான். அவனுடைய கரங்கள் தாமாகவே குவிந்தன. விழிகள் நீரை வழித்தன. வாயோ மேலும் மேலும் பல பதிகங்களை உசாவிக் கொண்டிருந்தன. அயர்வின்றிச் சோர்வின்றி அந்த 'ஒலிச் சுவடி நூலும்' அவன் விரும்பிக் கேட்ட பாக்களையெல்லாம் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

# 44

# அவள் வந்த காரணம்?

"அருகப் பெருமானின் திருப்பெயரால் வாழ்த்துகிறேன்; வாருங்கள் அம்மணீ!"

ஆதுரசாலையின் 'முன்றிலில் நின்று அகமும் முகமும் மலர வரவேற்றார் சமந்தபத்திரர், வான வீதியிலிருந்து இறங்கிய வெண்புறாப்போல் வந்து நின்ற உத்தமசீலி அந்த முனிபுங்கவரைச் சிரம் தாழ்த்தி வணங்கி எழுந்தாள்.

"ஆந்திர இளவரசியாரை முதன் முதலாகச் சந்திக்க நேர்ந்தது பற்றிப் பெரிதும் மகிழ்ச்சியுறுகிறேன்."

''முற்றுமுணர்ந்த முனிவர் பெருமானை இன்று தரிசிக்கப் பேறுபெற்ற நானே பாக்கியசாலி!"

குழைவும் பணிவுமாகக் குவிந்த கரங்களுடன் நின்ற உத்தமசீலியைக் கனிவுப் புன்னகையுடன் நோக்கினார் சமந்தபத்திரர்.

"நேற்று மாலை என் சிவிகை தூக்கிகளில் ஒருவனான நாகோதரன் என்பவனை இங்கு சிகிச்சைக்காக அனுப்பி வைத்திருந்தேன். அவனுடைய உடல் நலனை விசாரித்துப் போகவே வந்தேன்'' என்று மெல்லிய குரலில் கூறிக் கொண்டே பின்னால் நகர்ந்தாள் உத்தமசீலி.

ஒரு மாபெரும் சக்கரவர்த்தியின் தம்பி மகளும் ஒரு தேசத்தின் இளவரசியுமான அவள், தன் பணியாளனின் உடல் நலனை அறிந்து போவதற்கென இவ்வளவுதூரம் வந்திருப்பதாகச் சொன்னதைச் சமந்தபத்திரரால் நம்ப முடியவில்லை. ஆயினும் அதை வெளியே காட்டிக்

கொள்ளாமல், "இளவரசியாரின் பணியாள் இப்போது நன்னலத்தோடுதான் இருக்கிறார். கவலைப்பட ஒன்றுமில்லை" என்றார் அமைதியாக.

"இனியும் அவன் இந்த ஆதுரசாலையில் தங்கியிருந்தே சிகிச்சை பெறவேண்டுமா அடிகளே?'' என்று வருத்தம் தோய்ந்த குரலில் கேட்டாள் உத்தமசீலி.

"அவசியம் இல்லை என்றே கருதுகிறேன். ஆனால், இளவரசியாரின் சிவிகையை இன்று முதலே சுமக்கும் அளவுக்கு அவருடைய உடல் நலம் தேறிவிட்டதென்று சொல்ல முடியாது. உடம்பில் உள்ள இரணங்கள் ஆற ஐந்தாறு தினங்களாவது ஆகும்."

சமந்தபத்திரரின் இந்த உள்ளார்ந்த உறுத்தல் மொழியை உடனே புரிந்துகொண்ட உத்தமசீலி, "நான் அதற்காகக் கேட்கவில்லை, அடிகளே. அவன் உடல் நலம் தேறி வந்தாலே போதும்" என்றாள் உண்மையான பரிவுடன்.

சமண சங்கத் தலைவர் இதைக்கேட்டு மெல்லச் சிரித்தார். "வாழை மரத்தை வெட்டியபின் அதிலிருந்து வடியும் நீரைப் பார்த்து அநுதாபப்பட மட்டுமே உலகம் தெரிந்து வைத்துக்கொண்டிருக்கிறது. அநுதாபம் கொள்வது ஒரு நல்ல பண்புதான்; அந்த அனுதாபத்தைத் தம் செயலுக்கு முன்னால் வைக்கவேண்டுமே தவிர, பின்னால் வைத்துப் பயனில்லை. சிவிகையில் சிலர் அமர்ந்து போகவும் சிலர் அதைச்சுமந்துசெல்லவும் காரணம் விதிப்பயனே என்றாலும், அதே விதிப் பயனால் அமர்ந்து போவோரைச் சுமந்து செல்வோராகச் செய்யவும் முடியும் என்பதை மறந்துவிடக் கூடாது."

முனிவு நீக்கிய முனிவரின் இந்தச் சீதளச் சொற்கள் உத்தமசீலியின் உள்ளத்தைச் சுட்டுப் பொசுக்கின. அந்த எளிய பணியாளன் துன்புறுத்தப்பட்டதற்குத் தான் காரணம் என்று எண்ணியே அவர் இவ்வாறு மனம் வருந்திப் பேசுகிறார் என்பதை ஊகித்துக்கொண்ட அவள், நடந்த உண்மைகளை

அவரிடம் விளக்கிச் சொல்ல வேண்டுமென்று துடிப்புடன் நிமிர்ந்து, “அடிகளார் என்னைப்பற்றி...” என்று பேச்சை ஆரம்பித்ததுமே சட்டெனக் குறுக்கிட்ட சமந்தபத்திரர், “தவறாக ஏதும் கருதவில்லை, அம்மணீ! அதற்காகத் தாங்கள் எவ்வித விளக்கமும் தர முயலாதீர்கள். ஏனெனில், இங்கு மருத்துவம் செய்துகொள்ள வருவோரின் நோயை மட்டும் நாங்கள் தெரிந்துகொள்வோமே தவிர, அந்த நோய்க்கு அவர்கள் இலக்கான காரணங்களைக் கேட்டறிய முற்படுவதில்லை. அப்படி அறிய முற்பட்டால் அது அவர்களது அந்தரங்கங்களில் தலையிடுவதுபோல் ஆகும். எங்களுக்கு அவை தேவையற்ற விஷயங்கள்” என்றார்.

உத்தமசீலியின் முகம் வெளுத்துச் சிறுத்தது. அதே சமயம், அந்தச் சமண முனிவர் மருத்துவ சேவைக்கென வகுத்துக்கொண்டிருக்கும் நெறிமுறை அவள் மனத்தைத் தொட்டது. ஒருகணம் மௌனமாக நிற்பவள், ஏதோ முக்கிய சேதியைத் தெரிவிக்கப் போகிறவள்போல் ஓரடி முன்வந்து, “அடிகளாரிடம் ஒரு விஷயம்பற்றிப் பேச விரும்புகிறேன்...” என்று தயக்கத்துடன் இழுத்தாள்.

இதை எதிர்பார்த்தவர்போல் புன்னகை புரிந்த சமந்தபத்திரர், ஆழ்ந்த சிந்தனையுடன் சில விநாடி நேரம் கண்மூடியிருந்துவிட்டுப் பின் மெல்லத் தலைநிமிர்ந்து சொன்னார்: “வேங்கி இளவரசியார் இங்கு வருவதைப் பார்த்த போதே அவருடைய வருகையின் நோக்கம் எதுவாக இருக்கும் என்பதை நான் ஊகித்துக்கொண்டேன். எனவே, அவர் அந்த விஷயமாகப் பேசுமுன், நானே அதுபற்றிய என் கருத்தைத் தெரிவிப்பது நல்லதென்று நினைக்கிறேன்.”

வியப்பும் திகைப்புமாக அவரைக் கூர்ந்து பார்த்தாள் உத்தமசீலி.

“ஆம், அம்மணீ! வேங்கி நாட்டிலிருந்து இந்தப் பல்லவ நாட்டுக்கு நீங்கள் விஜயம் செய்திருக்கும் காரணம் என்ன என்பதை நான் அறிவேன். சளுக்கியச் சக்கரவர்த்தி

விக்கிரமாதித்தர் உங்களை வரவழைத்திருக்கும் நோக்கத்தையும் ஓரளவு அறிவேன். சில தினங்களுக்குமுன் தளபதி வில்வேலி என்னிடம் வந்து அவ்விஷயமாய்ப் பேசிச் சென்றதிலிருந்தே நான் அவற்றைத் தெரிந்துகொண்டேன்."

"வில்வேலி இங்கு வந்தாரா?... என்னிடம் அவர் சொல்லவே இல்லை!"

"சொல்லும்படியான பதிலை நான் சொல்லாததால் அதை அவர் சொல்லாமல் விட்டிருப்பார். ஆயினும் அவரிடம் சொன்னதையே இப்போது உங்களிடமும் சொல்கிறேன், கேளுங்கள் இளவரசி!" என்று கூறிப் பெருமூச்சு விட்டார் சமந்தபத்திரர்.

# 45

# உயிரினும் பெரியது

இளங் காற்றில் அசைந்து உதிரும் மகிழம் பூக்கள் போலச் சமந்தபத்திரரின் வாக்கிலிருந்து மென்மையாகவும் தெளிவாகவும் சொற்கள் வெளிப்பட்டன: "ஆம், இளவரசி! தமிழ் நாட்டில் ஒரு காலத்திலே சமண சமயம் ஓங்கிப் பரவி உன்னதநிலையில் இருந்ததென்னவோ உண்மைதான். அந்த நிலை கடந்த இரண்டு தலைமுறைகளாகக் கட்டுவிட்டுச் சரிந்து வருகிறதுதென்பதும் உண்மைதான். அதனைப் பழைய நிலைக்கு உயர்த்திக்கொண்டு போகப் பாடுபடவேண்டியது சமணராகிய ஒவ்வொருவரின் கடமை என்பதிலும் சந்தேகமில்லை. அந்தக் கடமையை எவருடைய தூண்டுதலும் வேண்டுதலும் இன்றித் தன்னிச்சையாகவே உணர்ந்து செயலாற்ற ஆர்வம் கொண்ட தங்களையும் தங்கள் தந்தையார் விஷ்ணுவர்த்தனரையும் மனமாரப் போற்று கிறேன். சமண சமயத்தினிடம் தங்களுக்குள்ள பேரன்புக்கும் உறுதிப் பாட்டுக்கும் தலை வணங்குகிறேன். ஆனால் அந்த ஆர்வப் பணிக்குத் தாங்கள் தேர்ந்தெடுத்திருக்கும் சந்தர்ப் பத்தையும் சூழ்நிலையையும்தான் என்னால் ஏற்கமுடியாமல் இருக்கிறது."

நிலவுத் தாமரைபோல் தலைகுனிந்து நின்று கொண்டிருந்தாள் உத்தமசீலி. அரைக்கண் மூடிய நிலையில் சிறுபொழுது மௌனமாக இருந்த சங்கத் தலைவர் மீண்டும் தம் பேச்சைத் தொடர்ந்தார்: "பல்லவ நாடு இன்று சளுக்கிய விக்கிரமாதித்தரிடம் அடிமைப்பட்டுக் கிடக்கிறது. இந்தச் சூழ்நிலையில், இங்கே நலிவுற்றுக் கிடக்கும் சமண சமயத்தை

அவரது அதிகார ஆதரவின் துணைகொண்டு வலிவூட்டி நிமிர்த்திவிடலாம் என்று நம்பிய ஆந்திர இளவரசியார் இந்நாட்டுக்கு விஜயம் செய்திருக்கிறார் என்று அறிகிறேன். ஆந்திர மன்னரும் தமது அந்த இலட்சிய விருப்பத்தைச் செயலாக்க இப்படியொரு சந்தர்ப்பத்தை வெகு காலமாகவே எதிர்பார்த்திருந்ததால்தான் இத்தனை அவசரமாகத் தம் குமாரியை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார் என்றும் நினைக்கிறேன். அரச வர்க்கத்தினர் எந்தக் காரியத்தைச் செய்வதானாலும் அதற்கேற்ற ஓர் அரசியல் சூழ்நிலையை உருவாக்கிக் கொள்வார்கள்; அல்லது உருவாகும் வரையில் காத்திருப்பார்கள் என்பதனையே இது நிரூபிக்கிறது. ஆனால், ஆந்திர மன்னரும் அவருடைய குமாரியும் இங்கே ஆற்ற விரும்பும் பணியைப் பொறுத்த வரையில் அவ்வாறு செயல்பட நினைப்பது முற்றும் தவறு. இன்றையச் சூழ்நிலையில் அந்த இலட்சியப் பணி இங்கே தொடங்கப்பெறுமானால் இந்த நாட்டிலுள்ள பிற சமயங்களைச் சார்ந்த பெருமக்கள் என்ன நினைப்பார்கள் என்பது ஒருபுறம் இருக்கட்டும்; சமணர்களாகிய நாங்கள் அதுபற்றி என்ன நினைக்கிறோம் என்பதை மட்டும் இப்போதைக்குச் சொல்கிறேன்.”

உத்தமசீலியின் முகத்தை ஒரு கணம் ஊடுருவிப் பார்த்த சமபந்திரர் அமைதியான குரலில் மேலும் கூறினார்: “உன்னத நெறிகளும் உயர்ந்த குறிக்கோள்களும் கொண்ட சமண சமயம் பழைய சீரும் சிறப்பும் செல்வாக்கும் பெற்று தமிழகமெங்கும் தழைத்துப் பரவ வேண்டும் என்பதில் எங்களுக்குத் தணியாத வேட்கை உண்டு. அதற்காக நாங்கள் எந்தத் தியாகமும் செய்ய எப்போதும் தயாராக இருக்கிறோம். எங்களின் இந்த வேட்கைக்கும் விருப்பத்துக்கும் உதவியாக எங்கிருந்து யார் வந்தாலும் அவர்களை இரு கரங்களையும் நீட்டி வரவேற்கச் சித்தமாயிருக்கிறோம். அந்த உதவிக்காக அவர்கள் எங்கள் உயிரையோ, உடலையோ, உடமைகளையோ, விலைவைத்துக் கேட்டாலும் அர்ப்பணிக்கத் தயாராக இருக்கிறோம். ஆனால்,

அவற்றுக்கும் மேலாக எங்களிடம் ஒன்று உண்டு. அதுதான் எங்கள் குடியுரிமை. அதை மட்டும் நாங்கள் விலைகூறி விற்க ஒருபோதும் ஒப்புக்கொள்ள மாட்டோம். சமண சமயமே அழிவதாயினும் நாங்கள் அதற்குச் சம்மதியோம். ஏனென்றால், சமணத்தை எங்கள் மேல்மூச்சாகவும், தேசிய உரிமையை எங்கள் கீழ்மூச்சாகவும் கொண்டிருக்கிறோம். மேல்மூச்சு விட்டே மனிதர் வாழ்ந்துவிட முடியாது; கீழ்மூச்சும் வேண்டும். இவற்றில், ஒன்றை அடைத்து இன்னொன்றுக்கு வழி செய்ய எங்களால் ஆகாது. 'யாதும் ஊரே, யாவரும் கேளிர்' என்னும் கொள்கை கொண்ட சமணர்களாகிய நாங்கள், மண்ணையும் மக்கள் பிரிவையும் வைத்துப் புற வாழ்க்கைச் சௌகரியத்துக்கென அமைத்த ஒரு குறுகிய கோட்பாட்டின் தலைச் சொல்லுக்கு இத்தனை முன்னிடமும் முக்கியத்துவமும் அளிக்கலாமா என்று இளவரசியார் கேட்கலாம். அம்பர வெளியில் பறந்து திரியும் பறவைகூட ஆகாயத்திலே இருந்துவிடுவதில்லை. பூமியிலுள்ள ஒரு மரத்தை நாடி இறங்கி வந்து அதில் சிறு பொழுதாகிலும் தங்கியிருந்தே ஆக வேண்டியிருக்கிறது. அப்படித் தங்கி யிருக்கும்வரையில் அந்த மரமே தனக்குச் சொந்தம் என்றும் அது எண்ண வேண்டியிருக்கிறது. அவ்வெண்ணம் பிறந்ததும் அந்த மரத்தை நேசிக்க வேண்டியும் இருக்கிறது. அதை யாரும் வெட்டிச் சாய்த்து விடக்கூடாதே என்ற கவலையும் கரிசனமும் கொள்ள வேண்டியுள்ளது. அடுத்த மரத்தில் உள்ள ஆந்தையோ வல்லூறோ இந்த மரத்தில் வந்து இடம் பிடித்து விடாமல் பாதுகாக்க வேண்டியும் இருக்கிறது. சமணர் களாகிய எங்களுடைய நிலையும் இதுவேதான்."

தம்மையறியாமலே தாம் உணர்ச்சி வசப்படுவதை அறிந்த சமந்தபத்திரர் சட்டென்று பேச்சை நிறுத்தினார். வெலவெலத்து நின்ற உத்தமசீலியோ வியர்வையில் கரைந்து கொண்டிருந்தாள். மனத்தில் படிந்த உணர்ச்சிக் கறையை அலம்பிவிட்டவர்போல் அமைதியாகத் தலை நிமிர்ந்த சங்கத்

தலைவர் மேலும் கூறினார்: "பல்லவ நாட்டைக் கைப்பற்றிக்கொண்டிருக்கும் சளுக்கிய விக்கிரமாதித்தர் சமண சமயத்தைச் சார்ந்தவர் என்பதால் இங்குள்ள சமணப் பெருமக்கள் அனைவரும் அவரது ஆட்சியை வரவேற்று அவருக்கு ஆதரவு நல்கிவிடுவர் என்று எதிர்பார்ப்பது அறியாமை. அப்படி ஆதரவு தருவது முறையாயின், ஒவ்வொரு நாட்டிலும் உள்ள சிறுபான்மை மதத்தவரெல்லாம் தேசத் துரோகிகளாக இருக்க வேண்டும் என்றாகிறது. எந்த நாட்டு மக்களும் இத்தகைய இழிபெயருக்குத் தம்மை உட்படுத்திக் கொள்ள மாட்டார்கள். அவ்வாறு உட்படுவோர் மானிட குலத்தின் பெருமையையும் மதங்களின் உயர்வையும் குடிமையுரிமையின் மேன்மையையும் அறியாத புல்லர் களாகவே இருப்பர்; அப்படி உட்பட வேண்டுமென எதிர்பார்ப்போர் அவர்களினும் கீழான மாக்களாகவே இருப்பர். இதுதவிர, இந்நாட்டில் இன்று சமண சமயம் வலிகுன்றி ஒடுங்கியிருப்பதால் அதன் வளர்ச்சியில் ஆர்வம் கொண்ட நாங்கள் அந்த ஒரே இலட்சியத்துக்காவேனும், சமணரான சளுக்கிய மன்னரின் துணையை நாடிப் போவோம் என்றோ அல்லது அவர் தரும் ஆதரவைப் பெற்றுக் கொள்வோம் என்றோ நினைப்பது முன்னதைவிடப் பெரும் பேதைமையாகும். ஏனென்றால், ஒரு மன்னனின் துணை கொண்டு அவனது அரசாங்கத்தின் ஆதரவிலே சமயத்தை வளர்க்க முற்படலாகாது என்னும் கொள்கையில் உறுதியாக நிற்பவர்கள் நாங்கள். கடந்தகால அநுபவங்களிலிருந்து கற்றுக் கொண்ட பாடம் இது. அரசாங்கத்தை நம்பிச் சமயத்தை வளர்ப்பதிலுள்ள ஆபத்து வேறு எதிலும் இல்லை. இன்று சமண சமயம் ஒடுங்கி இருப்பதற்குக் காரணம், முன்பு அரசர்களையும் அரசாங்கங்களையும் அது சார்ந்து இருந்ததுதான் என்பது எங்கள் அபிப்பிராயம். எனவே, மீண்டும் அந்தப் பெரும் தவற்றை நாங்கள் செய்யத் துணிய மாட்டோம். அரசாங்கம் சமயத்தைச் சார்ந்திருக்கலாம்;

ஆனால் சமயம் அரசாங்கத்தைச் சார்ந்து இருக்கக் கூடாது. இதுவே எங்கள் அநுபவ முடிவு. 'சரி சமண சமய வளர்ச்சிக் காக அல்லாவிட்டாலும், அதன் வலிமை குன்றப் பெரிதும் காரணமாயிருந்த பல்லவரைப் பழி வாங்குவதற்காகவேனும் சளுக்கிய விக்கிரமாதித்தரை நாங்கள் பயன்படுத்திக் கொள்ளலாமே?' என்று கேட்கலாம். எங்கள் தேசபக்தியையும் இராஜபக்தியையும் அறியாதவர்கள் தாம் இப்படிக் கேட் பார்கள். சமண மதச் சரிவுக்குப் பல்லவர்களே அடிகோலினர் என்பதில் சந்தேகமில்லை. குறிப்பாக மகேந்திரவர்மர் தாம் அதை முன்னின்று நடத்தினார் என்பதிலும் ஐயமில்லை. ஆனால், அவர் சமண சமயத்தைத்தான் சரிக்க முயன்றாரே தவிர சமணர்களாகிய எங்களுக்கு எவ்வளவு ஊறும் செய்ய வில்லை. அவரால் நாங்கள் எத்தகைய இடர்பாடுகளுக்கும் உள்ளாகவில்லை. எங்களுக்கு எல்லாவிதமான உரிமைகளை யும் சலுகைகளையும் வழங்கி, எல்லையற்ற பேரன்புடனேயே நடத்தினார். அவருக்குப் பின் வந்த நரசிம்மவர்மரும் தம் தந்தை வழிச்சென்று எங்களைத் தற்காத்தார். இப்போதுள்ள பல்லவ குலச் செம்மலாம் எங்கள் பார்த்திபரான பரமேசுவரவர்மரோ, அவர்களைக் காட்டிலும் ஆயிர மடங்கு மேலானவர். ஆடகப் பொற் பாளம் போன்றவர். அருங்குணங் களின் தலைமகனான அவர் சமயப்பொறைகாக்கும் உத்தமசீலர். அவரது குறை கால ஆட்சியில் இந்த நாடு கண்ட நிறைவான மகிழ்ச்சிக்கு உவமையே இல்லை. அந்த ஒப்பிலா மாணிக்கத்தையா நாங்கள் பழிவாங்க எண்ணுவோம்? அந்தத் தூய மாமணிக்கா நாங்கள் வஞ்சனை செய்வோம்? அப்படிச் செய்தால் அது எங்களையே அழித்துக் கொள்வது போலாகுமே! அவ்வளவு பெரிய பழியைச் சுமக்க எளியவர்களான எங்களால் இயலாது."

இந்நேரம் வரையில் கூம்பிய குமுதமென நின்று கொண்டிருந்த உத்தமசீலி, ஏனோ இப்போது உற்சாக மலர்ச்சியுற்றுத் தலைநிமிர்ந்தாள்.

"வேங்கி இளவரசியாரிடம் இன்னொரு விஷயத்தையும் கூற விரும்புகிறேன். தமிழ் நாட்டில் சமண சமயம் குன்றியிருப்பதற்குச் சைவ சமயமே காரணம் என்றும், சைவம் சமணத்தை அழித்துவிட்டதென்றும் சிலர் நினைக்கிறார்கள். இது பெருந்தவறு. சைவம் சமணத்தை அழிக்கவில்லை. சைவத்தால் சமணம் அழியவும் இல்லை. சைவம் சமணத்தைத் தன்னுள் ஐக்கியப் படுத்திக்கொண்டு வருகிறது; சமணம் சைவத்துள் ஐக்கியப்பட்டுக்கொண்டு போகிறது. இதுதான் உண்மை. விலைமதிப்பற்ற இரத்தினக் கற்கள் நிறைந்த ஒரு ஸ்படிகப் பேழை போன்றது சமண சமயம்; சைவ சமயமோ வெட்டியெடுத்த பசும்பொற் கட்டியை ஒத்தது. இளகும் தன்மையற்ற ஸ்படிகப் பேழையிலுள்ள சில உயரிய ஒளிக்கற்கள், உருகும் தன்மை வாய்ந்த தங்கக் கட்டியில் உருண்டுப் போய்ப் பதிகின்றன. அதனால் அதன் ஒளிக்கதிர்கள் மிகுதியாகித் தமிழ்கூறும் நல்லுலகைத் தன்பால் ஈர்க்கிறது. நேற்று நடந்ததும் இன்று நடப்பதும் இதுதான். மற்றபடி சைவம் சமணத்தை அழிக்கவும் இல்லை; சைவத்தால் சமணம் அழியவும் இல்லை. மண்ணுக்காகவும் மகுடத்துக் காகவும் நடத்தப்பெறும் மறப்போருடன் சைவ சமண அறப்போரை—தத்துவப் போரை—ஒப்பிட்டுப் பேசுவது அறியாமை. உயரிய நெறிகள் எப்போதும் ஒன்றுடன் ஒன்று இணையத்தான் செய்யுமே தவிர ஒன்றையொன்று அழிக்க முயலாது. இது உணர்ந்து அறிந்துகொள்ள வேண்டிய உண்மைகளில் ஒன்றாகும். காலத்தை உருவாக்கும் சக்தி கொள்கைகளுக்கு உண்டு; கொள்கைகளை உருக்குலைக்கும் சக்தி காலத்துக்கு உண்டு; காலத்தை உருவாக்கிய சமணக் கொள்கைகள் இப்போது காலத்தின் சோதனைக்கு உள்ளாகி நிற்கின்றன. இதற்காக யாரும் கவலைப்பட வேண்டியதில்லை. சளுக்கிய விக்கிரமாதித்தரோ, ஆந்திர மன்னரோ, அவருடைய அருமைக் குமாரியோ சிறிதும் கவலைப்படத் தேவையே இல்லை."

மகிழ்ச்சிக் கலகலப்புடன் காணப்பட்ட உத்தமசீலி புன்முறுவல் பூத்தாள். சமந்தபத்திரரோ வருத்தமேலீட்டால் குரல் கம்மக் கூறினார்: "இறுதியாக இன்னுமொன்றைச் சொல்ல விரும்புகிறேன். 'சளுக்கிய விக்கிரமாதித்தருக்கு அரசியல் ரீதியில் எங்கள் ஆதரவைத் தர மறுப்பது சரி; சமணராகிய அவரைச் சமணர்களாகிய நாங்கள் எதிர்க்காமலாவது இருக்கலாம் அல்லவா?' என்று இளவரசியார் வாய்விட்டுக் கேட்காவிட்டாலும் மனதுக்குள்ளாவது நினைக்கலாம். இந்தக் கேள்விக்கு நாங்கள் சொல்லக்கூடிய பதில் இதுவே: இல்லற தர்மத்தை ஏற்ற சமணர்கள் கடைப்பிடிக்க வேண்டிய பல விரதங்களில் 'திசைவிரதம்', அல்லது 'திசை வரைதல்' என்ற ஒன்று உண்டு. எட்டுத் திசைகளிலும் ஒரு வரையறை செய்துகொண்டு அந்த வரையறைக்கு அப்பால் எக்காரணத்தை முன்னிட்டும் போவதில்லை என்பதே அது. மன்னவனானாலும் மாடு மேய்க்கும் சின்னவனானாலும் இந்த விரதத்தை அனுசரித்தே ஆகவேண்டும் என்பது விதி. இல்லற தர்மத்தை ஏற்ற விக்கிரமாதித்தரோ இவ்விரதத்தைக் காற்றில் பறக்கவிட்டவர். எட்டுத் திசைகள் மட்டுமல்ல, பதினாறு திசைகளின் அடிவானங்களுக்கு அப்பாலும் படையெடுத்துப் போக வேண்டுமென்று ஆசைப்படுகிறவர். திசை விரதம் ஏற்றவராக இருந்தால் இந்தப் பல்லவ நாட்டின் எல்லையிலே அவர் காலடி எடுத்து வைத்திருக்கமாட்டார். இப்படிப்பட்ட சமணரல்லாத ஒரு சமணரைச் சமணர்களான நாங்கள் எப்படி எதிர்க்காமல் இருப்போம்?"

இதைக் கேட்டுக் கலிரென நகைத்தாள் உத்தமசீலி. "நான் சுருக்கமாகச் சொல்லவந்த விஷயங்களை அடிகளார் மிக விரிவாகவே பேசிவிட்டார்?" என்று கூறி மீண்டும் சிரித்தாள் அவள்.

திடுக்குற்றவர்போல் நிமிர்ந்த சமந்தபத்திரர் அவளைப் பரபரப்புடன் பார்த்தார்.

"ஆமாம், அடிகளே! தாங்கள் முதலில் கூறியவாறு நான் எனது தந்தையாரின் பொருள் பலத்தையும், என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்தரின் ஆட்சியதிகாரத் துணையையும் கொண்டு, இந்த நாட்டில் நலிந்து கிடக்கும் சமணத்தை வலிவூட்டி வளர்க்க வேண்டும் என்ற இலட்சியத்தோடு தான் வந்தேன். ஆனால் அந்த இலட்சியம் நேற்றோடு சிதைந்து விட்டது. நான் வந்த நோக்கத்தை முற்றும் மாற்றிக்கொண்டு விட்டேன். அதைத் தங்களிடம் சொல்லிப் போகவே இங்கு வந்திருக்கிறேன்."

வியப்பும் திகைப்புமாக அவளைக் கூர்ந்து நோக்கிய சமந்தபத்திரர், "இளவரசியார் சொல்வது?..." என்று சொற்கள் சுருண்டு புரள இழுத்தார்.

"பொய்யுரை அல்ல, அடிகளே! மெய்யுரையே!" என்று புன்னகை புரிந்த உத்தமசீலியின் முகம் மறுகணமே வெளிறிச் சிறுத்தது. பயப்பிராந்தியுடன் அங்குமிங்கும் பார்த்துக் கொண்ட அவள் ஓரடி முன்வந்து, "அடிகளாரிடம் இன்னொரு முக்கியமான சேதியையும் கூற விரும்புகிறேன்..." என்றாள் நடுங்கிய குரலில்.

சமந்தபத்திரரின் வியப்பு மேலும் முறுக்கலிட்டது. வாய் திறக்க இயலாதவர்போல் மௌனமாக அவளைப் பார்த்தார் அவர்.

"என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்தரும், தளபதி வில்வேலியும் சேர்ந்து அரசியல் அடிப்படையில் ஏதோ ஒரு தகாத திட்டத்தை வகுத்துக்கொண்டு, அதைச் சமண மதத்தின் பெயரால் சாதித்துக்கொள்ள எண்ணி. சிரவண பெள் குளத்துச் சமண சங்கத் தலைவரிடம் என்னுடைய பெயரையும் நான் இந்த நாட்டுக்கு வந்திருக்கும் நோக்கத்தையும் மட்டுமே கூறி அவரை அழைத்துவர ஏற்பாடு செய்திருக்கிறார்கள். உண்மையை அறியாத நானும் அந்தச் சேதி கேட்டுப் பெரிதும் மகிழ்ந்தேன். ஆனால், நேற்றுதான் அவர்களுடைய அந்தரங்கம் என்ன என்பது புலனாயிற்று.

இந்த அநியாயத்தைத் தங்களிடம் தெரிவித்து, நமது மாபெரும் ஞான சிரேஷ்டரான அகளங்க அடிகளை வரவொண்ணாமல் தடுக்க வேண்டும் என்பதற்காகத்தான் இங்கு ஓடோடி வந்திருக்கிறேன்.''—துடிப்பும் வெடிப்புமாகக் கூறினாள் அவள்.

உலகத்தின் பொய்களையும், புன்மைகளையும், வஞ்சனைகளையும் வாதுசூதுகளையும் கண்டறியாத — அவற்றின் காற்றையும் தீண்டறியாத—மாதவ முனிவரான சமந்தபத்திரரின் அருள்மேவிய கருணைக் கண்கள் இந்தச் சேதியைக் கேட்டுக் கசிந்து நீரை உகுத்தன. பனியில் நனைந்த அசோகமரம்போல் விறைந்து நின்றிருந்த அவர் நீண்ட நேரத்துக்குப்பின் தமது விழியிமைகளை மெல்லப் பிரித்து உத்தமசீலியை வாஞ்சை பொங்கப் பார்த்தார். பிறகு அங்கிருந்து ஆதுரசாலையின் அறையை நோக்கி மௌனமாக நடந்தார். ஒன்றும் புரியாமல் குழம்பிய உத்தமசீலியும் அவரைப் பின் தொடர்ந்தாள்.

கல் படுக்கையில் படுத்து அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்த அகளங்க அடிகளின் அருகில் போய் நின்ற சமந்தபத்திரர் மெல்லப் பின்னால் திரும்பி, "இதோ பாருங்கள், இளவரசி! இவர்தாம் சிரவணபெள்குளத்துச் சமண சங்கத்தலைவர் அகளங்க அடிகள்! விக்கிரமாதித்தரின் அழைப்புக் கிணங்கிப் பல்லவ நாட்டுக்கு வந்ததன் பலனை இப்போது இவர் நன்கு அநுபவித்துக் கொண்டிருக்கிறார்!" என்றார் துயரம் குமுறிய குரலில்.

அந்த விசாலமான அறையின் வாயிலண்டை ஒடுங்கி நின்றுகொண்டிருந்த உத்தமசீலி இதைக்கேட்டுச் செவியில் இடி இறங்கினாற்போல் பதறித் துவண்டு சுவரில் சாய்ந்தாள்.

# 46

# ஜல சித்திரம்

**வா**னத்தின் அடிவயிற்றில் படுத்திருந்த இளைய கதிரவன் கோலப் பொற் தாழி வடிவாய்க் குணதிசை விசும்பிலே தவ்வித் தவழ்ந்தேறிக் கொண்டிருந்த நேரத்தில். சமண சங்கப் பள்ளியிலிருந்து வெளியே வந்த பரமேசுவர வர்மன், பெருவளநல்லூர்ச் சாலைக்கு மேலண்டைப்புறமாக வளைந்து சென்ற ஓர் ஒற்றையடிப் பாதையில் மெல்ல நடந்துகொண்டிருந்தான்.

அந்தச் சமணப் பள்ளியின் ஒலிச்சுவடி நூல்நிலையத் தில் இருப்பதுபோன்ற பிரமை இன்னமும் அவனைவிட்டு நீங்கவில்லை. அங்கே தன்னை மறந்து 'படித்து'க் கொண் டிருந்த அப்பரின் தேன்சுவைப் பாக்கள் அவன் செவிகளில் ரீங்காரமிட்டுக்கொண்டே இருந்தன. சமந்தபத்திரர் மட்டும் அங்கு வராமல் இருந்திருந்தால் இன்றைய முழுப் பொழுதையும் அந்த நூல்நிலையத்திலேதான் கழித்திருப்பான். அவனைக் காத்திருக்கச் செய்தமைக்காக வருத்தம் தெரிவித்த சமந்தபத்திரர், அதற்கான காரணத்தைக் கூறாமல், "மன்னரவர்கள் சில தினங்களாவது இங்கு தங்கியிருக்க வேண்டும் என்பது என் விருப்பம், வேண்டுகோள்!" என்றார் அன்பும் பரிவுமாக. திடீரென்று அவர் இவ்வாறு சொன்னதைக் கேட்டதும் அவனுக்கு என்னவோபோல் ஆகிவிட்டது. தன்னைத் தானே காப்பாற்றிக் கொள்ள முடியாத நிலையில் தான் இருப்பதாக எண்ணித் தனக்குப் பாதுகாப்போ புகலிடமோ அளிக்கவேண்டும் என்பதற்காகத் தான் அவர் இப்படிச் சொல்கிறார் என்று அவனுக்குப்

பட்டது. தன்னைப் பார்க்கிறவர்களெல்லாம் தன்மீது அளவுக்கு மீறிய அநுதாபம் காட்டித் தனக்கு உதவியும் பாதுகாப்பும் அளிக்க முன்வருவதற்குக் காரணம், தன்னை ஓர் அசக்தனாகவும் தனித்து வாழ முடியாதவனாகவும் அவர்கள் நினைப்பதுதான் என்றும் அவனுக்குத் தோன்றியது. தன்னைப்பற்றிப் பிறர் அவ்வாறு எண்ணுவது அவனுக்குப் பேரவமானமாக இருந்தது. அதனால் அவன் அந்தச் சமண முனிவரின் அன்பு வேண்டுகோளை இதமாக மறுத்துவிட்டு அப்போதே விடை பெற்றுக்கொண்டு வெளியே வந்து விட்டான். அவர் அவனைச் சில தினங்கள் தங்கியிருக்கும்படி கேட்காமல் இருந்திருந்தால் அவனே அவரிடம் அப்படியொரு கோரிக்கையை விடுத்திருப்பான். ஏனென் றால், அப்பள்ளியிலே நிலவிய அமைதியும், அங்கு வாழும் சமணத் துறவிகள் காட்டிய அன்பும், அவ்வற்புத ஓலிச்சுவடி நூல்நிலையமும் அவன் மனத்தை அந்த அளவுக்குக் கவர்ந்து விட்டிருந்தன. ஆனால், திடீரென்று அவனுள் ஏற்பட்ட தன்மான உணர்ச்சி அவனை அங்கிருந்து வெளியேறும்படி செய்துவிட்டது.

'சமந்தபத்திரர் என்னை ஏன் சமணப் பள்ளியில் தங்கியிருக்குமாறு கேட்டுக்கொண்டார்? என்னுடன் இருந்த அவர் ஏதும் சொல்லிக்கொள்ளாமல் எங்கோ வெளியே போய்த் திரும்பி வந்ததும் திடுமென அப்படியொரு வேண்டுகோள் விடுக்கக் காரணம் என்ன? என்னுடைய நன்மையை உத்தேசித்துத்தான் அவர் அவ்வாறு செய்திருப் பாரோ? அப்படியானால் எனக்குத் தெரியாமலே என்னை நோக்கி ஏதோ ஓர் ஆபத்து வரப்போகிறது என்பதை அவர் முன்கூட்டியே அறிந்திருக்கிறார் என்றல்லவா ஆகிறது? உணர்ச்சி வயப்பட்டு அவரது அன்புக்கோரிக்கையை ஏற்காமல் வந்துவிட்டேனே! அப்படி வந்த அவசரத்தில், அந்தச் சிரவணபெள்குளத்துச் சமண சங்கத் தலைவரான அகளங்க அடிகளைப்பற்றிய தகவல்களையும் கேட்க மறந்துவிட்டேனே!'

குழப்பமும் திகிலும் மனத்தை உருட்டிப் புரட்டத் தன் நடை வேகத்தைச் சற்றே மிகுதியாக்கினான் பரமேசுவர வர்மன். ஆனால் அவன் நடையில் வேகம் ஏறவில்லை. இரவெல்லாம் கண் விழித்த களைப்பும் சோர்வும் கால்களைப் பின்னலிடச் செய்தன. காலை இளங் கதிரவனின் உறைப்பான வெயில் வேறு அவனை வாட்டி வதக்கியது.

துவண்டு நின்ற அவன் தன் பார்வையை அங்குமிங்கு மாகப் பரப்பிச் செலுத்தினான். சற்றுத் தொலைவில்—ஆத்தி மரங்களின் சூழலிலே—சிறிய குளம் ஒன்று இருப்பது தென்பட்டது. பெருவளநல்லூர்ச் சாலையோரம் இருந்த ஒரு ஜினாலயத்துக்குப் பின்னால் அது அமைந்திருந்தது. அவன் அந்தக் குளத்தை நோக்கி நடந்தான்.

சளுக்கியப் படையெடுப்புக்குப் பின் பல்லவ நாட்டி லுள்ள ஏரி, குளங்கெல்லாம் கவனிப்பாரற்ற நிலையில் வறண்டும் தூர்ந்தும் கிடந்ததால் எங்கும் தண்ணீர் வற்கடம் தலைவிரித்து ஆடிக்கொண்டிருந்தது. ஆனால் அதற்கு இந்தக் குளம் விதி விலக்கானதுபோல் நீர் நிறைந்து விளங்கியது. ஆதுரசாலையை நடத்திவரும் சமண முனிவர்களே இதனை யும் கண்காணிக்கிறார்கள் போலும்.

பளிங்கு போன்ற அந்தக் குளத்து நீரைப் பார்த்ததுமே பரமேசுவரவர்மனுக்குப் பெருவிடாய் தோன்றிவிட்டது. குளக்கரையில் ஓங்கிப் பரந்து வளர்ந்து நின்ற ஓர் ஆத்திமரத்தின் தடித்த கிளை ஒன்று கீழ்நோக்கிச் சரிந்து வளைந்து நீர்நிலை வரையில் நீண்டிருந்தது. அந்தக் கிளையின் ஓரமாகவே குளத்துப் படிகளில் இறங்கிய அவன் நீர்ப் பரப்பின் விளிம்புக்குமேல் இருந்த ஒரு படியில் அமர்ந்து கொண்டு நீரை நீவிவிட்டு இரு கரங்களாலும் அள்ளிப் பருக ஆவலுடன் குனிந்தான். அப்படிக் குனிந்தவன் அந்தத் தெள்ளிய நீர்ப்பரப்பில் ஏதோ ஓர் அதிசயத்தைக் கண்டு விட்டவன்போல் திடுக்குற்றுத் தலைநிமிர்ந்து சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தான். பிறகு அவசரமாகக் கண்களை நிமிண்டிவிட்டு மீண்டும் குனிந்து நோக்கினான்.

இது என்ன விந்தை! இந்த நீர்ப்பரப்பில் தெரிவது ஆந்திர இளவரசி உத்தமசீலியின் எழிலுருவ பிம்பம் அல்லவா? ஆம்; அதில் சந்தேகமில்லை. அந்த அழகு உருவம் தான் அங்கே ஜல சித்திரமாக மிதந்து கொண்டிருந்தது!...

வியப்பின் எல்லையைத் தொட்ட பரமேசுவரவர்மன் மறுபடியும் கண்களைக் கசக்கிக்கொண்டு அந்த நீரோவியத்தை உற்றுப் பார்த்தான்.

'ஓ!...இது என் மனக்கண் செய்யும் ஜால வித்தையா? அப்படித்தான் இருக்கவேண்டும்!'

புன்முறுவலுடன் குனிந்த பரமேசுவரவர்மன் தன் வலக் கரத்தினால் நீர்ப் பரப்பை அலைத்துக் கலக்கினான். மறு விநாடி அந்த நீரோவியம் மாயமாய் மறைந்து, அங்கே விரிந்து செல்லும் நீர் வட்டங்களும், மிதந்து செல்லும் நீர்க் குமிழ்களும் மட்டுமே தெரிந்தன.

அவன் கலகலவென்று நகைத்தான். நகைத்துக் கொண்டே நீர் பருகக் குனிந்தான். என்ன ஆச்சரியம்! மீண்டும் அந்த நீரோவியம் இதோ, மிதப்பது தெரிகிறது!...

பிரமித்து விட்டான் பரமேசுவரவர்மன். ஆனால் இப்போதும் அதைத் தன் மனக்குறளியின் ஒரு விசித்திரச் செப்படிவித்தை என்றே எண்ணினான். முன்போல் நீரைக் கலக்கி அந்த அற்புத அழகு பிம்பத்தை மறையச் செய்ய அவன் மனம் இடம் தரவில்லை. தனக்கேற்பட்ட தாகத்தையும் மறந்தவனாய், நீர்ப் பரப்பிலே கிடந்து அசைந்த அவ்வழகு பிம்பத்தையே கண்ணிமைக்காமல் பார்க்கலானான். அதைப் பார்க்கப் பார்க்க அவன் உடலின் கனம் குறைவதுபோலவும், பிறகு அது பஞ்சாகப் பசபசத்து மேலே மேலே பறந்து செல்வது போலவுமான பிரமை ஏற்பட்டது.

ஜலப் பரப்பில் மிதந்துக்கொண்டிருந்த அந்த ஜல சித்திரம் இப்போது சிரிப்பதுபோலத் தோன்றியது.

அவன் தன்னை மறந்தான். மெல்லக் குனிந்தான். சிரிப்பை உதிர்க்கும் அந்தச் சிங்கார நீரோவியத்தின்

அதரங்களுக்கு நேரே தன் இரு கரங்களையும் நீட்டி, அவ்வதரங்களை ஸ்பரிசிப்பதுபோல் அங்குள்ள நீரைக் குத்தாக அள்ளியெடுத்து வாயருகே கொண்டுபோனான். ஜலதரங்கத்தை உளர்ந்தாற்போன்ற கலீர்ச் சிரிப்பொலி!

பதறித் துடித்து நிமிர்ந்தான் பரமேசுவரவர்மன். அதே சமயம், அவன் தலைக்கு மேலே இருந்த ஆத்தி மரக் கிளையிலிருந்து மின்னற் கொடியொன்று சரிந்து வந்தாற்போல் கீழே குதித்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

47

# மோகன அஸ்திரம்

"அங்கெங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கும் அத்தியந்தகாமரின் ஓவிய மோனத்தைக் கலைத்தமைக்காகப் பெரிதும் வருந்துகிறேன்; மன்னிப்பும் கோருகிறேன்!" —கந்தர்வ நங்கையரே கண்டு பொறாமை கொள்ளும்படியான அத்தனை அழகார்ந்த அழகுப் புன்முறுவலுடன் மயிலைப் பழிக்கும் ஒயிலாக ஒல்கி நின்ற உத்தமசீலி அவனது திண்ணிய கழுத்தில் தவழ்ந்து கொண்டிருந்த சவுக்கைக் காய் மாலையைக் கடைக்கண்ணால் கவனித்தவாறு கன்னல் ரசக் குரலில் இப்படிக் கூறினாள்.

அரைத்துக் குழைத்த சந்தனத்தை மார்பிலே பூசி, அழித்துப் பிழிந்த பசுந்தேனைச் செவிகளிலே நிறைத்து, பொடித்த நிலாச் சூரணத்தை விழிகளிலே திமிர்த்து, இமயப் பனிவறையின் முகட்டிலே கொண்டுபோய் நிறுத்தி வைத்தாற் போன்றதொரு விசித்திரானந்த உணர்ச்சியால் திக்குமுக்காடி நின்ற பரமேசுவரவர்மன் இமைக்கும் தொழிலை மறந்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

அவனது ஒளி பொருந்திய கண்களின் பனிப் பிலிற்றும் பார்வையை நேரிடமாட்டாமல் உடல் சிலிர்த்துக் குன்றிய உத்தமசீலி, ஆத்தி மரக் கிளையில் ஒடுங்கிச் சாய்ந்தவாறு, "நேற்றைக்கு முன்தினமே பெருவளநல்லூருக்குப் புறப்பட்ட ஓவியக் கலைஞர் இந்தப் பல்லவபுரம் எல்லையைக் கூட இன்னும் கடக்கவில்லைபோல் இருக்கிறதே? காட்சிகளின் கலா ரசனையில் கண்ணையும் கருத்தையும் செலுத்தி

விட்டதால், கால்கள் வந்த வழியை மறந்துவிட்டனவா? அல்லது போக வேண்டிய இடத்துக்கு இனிப் போவதில்லை என்னும் முடிவு ஏற்பட்டுவிட்டதா?'' என்று குறும்பாக வினவினாள்.

சாலிமாலிகா பூம்பஞ்சணையிலிருந்து உருண்டு கீழே விழுந்தவன்போல் அதிர்ந்து நிமிர்ந்த பரமேசுவரவர்மன் அவளைப் பரபரப்புடன் கூர்ந்து நோக்கினான். அவன் மனத்தைக் கவ்விக் கிறக்கி வைத்திருந்த உணர்ச்சிப் படலங்கள் பளீரென விலகி மறைந்தன. "அப்படியெல்லாம் ஒன்று மில்லை இளவரசி! வருகிற வழியில், இங்கே அருகிலுள்ள சமண சங்கத் தலைவரைக் காணவேண்டிய ஓர் அவசியம் ஏற்பட்டது. அவரைப் பார்த்த பின் அந்தப் பள்ளியிலேயே ஓரிரவு தங்கிவிட்டு, இதோ மீண்டும் என் பயணத்தைத் தொடங்கியிருக்கிறேன்" என்று தனக்கேற்பட்ட அதிர்ச்சியைப் புன்னகையால் மறைத்துக்கொண்டு அமைதியாகக் கூறினான்.

உல்லாச மோகினியாய் நின்றுகொண்டிருந்த உத்தமசீலி, அவன் சொன்னதைக் கேட்டு அவனைவிட அதிகமாக அதிர்ச்சியுற்றவள்போல் திரும்பி ஆச்சரியத்துடன் அவனை உற்று நோக்கினாள். "சமந்தபத்திரரைப் பார்த்து விட்டா வருகிறீர்கள்? சமண சங்கப் பள்ளியில் தங்கியிருந்து விட்டா வருகிறீர்கள்?"

இந்த விஷயத்தை இவள் ஏன் இத்தனை அக்கறையாக விசாரிக்கிறாள் என்று உள்ளூறக் குழம்பிய பரமேசுவரவர்மன் 'ஆம்' என்று மெல்லத் தலையசைத்தான்.

உத்தமசீலியின் பிறை நிலா நுதலில் சிந்தனை வரிகள் கோலம் பின்னின. 'சமண சங்கத் தலைவரைக் காண வேண்டிய அவசியம் ஏற்பட்டது' என்று அவன் சொன்னதை வைத்து எதையெதையோ அதனுடன் தொடர்பு படுத்தித் துருவிப் பார்க்கமுயன்றாள். பல்லவபுரத்துக்கு வரும் வழியில் அகளங்க அடிகளுக்கு ஏற்பட்ட ஆபத்து, அவர் இப்போது ஆதுரசாலையில் சிகிச்சை பெற்று வருவது, திரமிள சங்கத்

தலைவர் சமந்தபத்திரர் தெரிவித்த கருத்துக்கள் முதலானவை யெல்லாம் அவளது சிந்தனையில் மின்னற் கொடிகளாக நெளிந்து மறைந்தன. ஆனால், எதையும் எதனுடனும் இணைத்து எவ்வித ஊகத்துக்கும் அவளால் வரமுடிய வில்லை. சமணப்பள்ளியின் ஆதுரசாலைக்கு அவள் போன போது அங்கே பரமேசுவரவர்மனும் இருந்தான் என்ற விவரத்தையோ, பெருவளநல்லூர்ச் சாலையிலே யாரோ சிலரால் தாக்கப்பட்டுக் குற்றுயிராய்க் கிடந்த அகளங்க அடிகளை அவன்தான் ஆதுரசாலையில் கொண்டு வந்து சேர்த்தான் என்ற விவரத்தையோ சமந்தபத்திரர் அவளிடம் தெரிவிக்காததாலேயே அப்படிக் குழம்பித் தவித்தாள். ஆயினும் தன்னை உடனே நிதானப்படுத்திக் கொண்டு அவனை இதமாகப் பார்த்தவாறு, “எதற்காகக் கேட்டேனென் றால், நானும் இப்போது அந்தச் சமண சங்கப் பள்ளியிலிருந்து தான் புறப்பட்டு வந்திருக்கிறேன்...” என்று கூறினாள் தணிந்த குரலில்.

பரமேசுவரவர்மன் இதைக் கேட்டு மேலும் திகிலுற்றான். தன்னிடமிருந்த சமந்தபத்திரர் திடீரென்று வெளியே போய்த் திரும்பி வந்த காரணத்தையும் இப்போது புரிந்துகொண்டான்.

‘இவள் ஏன் அந்தச் சமணப் பள்ளிக்குப் போனாள்? திரமிள சங்கத் தலைவரான சமந்தபத்திரருக்குத் தன் அஞ்சலிகளைச் செலுத்தப் போயிருப்பாளா? அல்லது என்னைப் பற்றிய உண்மைகளை அறிவதற்காக அங்கு சென்றிருப்பாளா? அந்த விவரங்களைத் தெரிந்து கொண்டு தான் எனக்கு முன்னேயே இவ்விடம் வந்து காத்திருக் கிறாளோ? அப்படியானால் இங்கே இவள் வந்திருப்பதன் காரணம் என்னவாயிருக்கும்? முதலில் என்னை ஓர் ஓவியன் என்றே எண்ணயிருப்பாள்; “பல்லவ மன்னனை”க் காட்டிக் கொடுக்க விரும்பாததால் என்னுடைய உருவத்தை நான் வரைந்து கொடுத்துவிட்டதாக நினைத்து என்மீது அநுதாபம்

கொண்டு என்னை அந்த இக்கட்டிலிருந்து விடுவித்து அனுப்பிவிட்டிருப்பாள். பிறகு வில்வேலி வந்ததும் அவ்வோவியத்தைப் பார்த்துச் சந்தேகப்பட்டிருப்பான். உடனே என்னைப் பிடித்து வரக் கட்டளையும் இட்டிருப்பான். தான் செய்த தவற்றுக்கு வருந்தி என்னைப் பிடிக்கும் முயற்சியில் இவளும் முனைந்து இங்கே வந்திருப்பாள்—இந்த விவரங்களையெல்லாம் அறிந்துதான் சமந்தபத்திரர் எனக்குப் பாதுகாப்பு அளிக்க எண்ணித் தம்முடன் சில தினங்கள் தங்கியிருக்குமாறு வேண்டிக் கொண்டாரோ? அதனால்தான் இவள் அங்கு வந்ததையும் அவர் என்னிடம் தெரிவிக்கவில்லையோ?"

வெளிறிய முகத்துடன் அவளைப் பரிதாபமாகப் பார்த்தான் பரமேசுவரவர்மன். தன்னை அறியாமலே தான் எதிரிகளிடம் சிக்கிக் கொள்ளும்படியான சூழ்நிலை உருவாகி விட்டதைப் பற்றிக்கூட அவன் அவ்வளவாகக் கவலைப் படவில்லை; தன் மனத்தை ஏதோ ஒரு வகையில் சலனப் படுத்திவிட்ட இந்தப் பெண்ணின் மூலமாகத்தான் அகப்படும் படியாகிவிடுமோ என்பதற்காகத்தான் பெரிதும் வேதனை யடைந்தான்.

சஞ்சலம் சூழ்ந்த அவன் முகத்தையே விழியசைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த உத்தமசீலி, அவனுடைய மனத்தின் எண்ணச் சோடிப்புகளைப் புரிந்துகொண்டவள்போல் மெல்லத் தலையசைத்தவாறு தான் சாய்ந்திருந்த மரக்கிளை யின் மறுபக்கம் போய் நின்றுகொண்டு, "என்னை இங்கே சந்திக்க நேர்ந்ததுபற்றி ஓவியக் கவிஞர் மிகவும் வருத்தப் படுகிறார் என்று நினைக்கிறேன். அது என் தவறு அல்ல. ஆதுரசாலையில் சிகிச்சை பெற்றுவரும் என்னுடைய பணியாள் ஒருவனைப் பார்க்கும் பொருட்டுச் சமணப் பள்ளிக்குப் போன நான், இதோ இங்குள்ள ஜினாலயத்தில் காலை வழிபாடு செய்துவிட்டுப் புறப்படலாம் என்று இந்தப் பக்கம் வந்தேன். மற்றபடி ஓவியக் கலைஞர் இங்கு இருப்பார்

என்பதை அறிந்தோ, அவரை மடக்கிச் சந்திக்க வேண்டும் என்பதற்காகவோ நான் வரவில்லை. அப்படி அவர் நினைத்தால் அது துரதிஷ்டமே" என்றாள் மிடுக்கான குரலில்.

வெய்துயிர்த்து நின்ற பரமேசுவரவர்மன் அவளை வியப்புடன் ஏறிட்டு நோக்கினான். அவனது மிரட்சியுற்ற மனத்தில் பரவிப் படர்ந்திருந்த கற்பனைப் புழுதிகள் அக்கணமே பறந்து மறைந்தன. ஆதுரசாலையில் தான் பார்த்த இன்னொரு நோயாளியைத்தான் இவள் தன் பணியாளன் என்று குறிப்பிடுகிறாள் என்பதைப் புரிந்துகொண்ட அவன், அவளைப்பற்றி ஒரு நொடியில் ஏதேதோ எண்ணிக் குழம்பி விட்டோமே என்று தன்னையே நொந்துகொண்டான்.

"சரி; கலைஞரின் பொன்னான தனிமையில் இனியும் நான் குறுக்கிட்டுக்கொண்டிருக்க விரும்பவில்லை. போய் வருகிறேன்" என்று விறைப்பாகக் கூறியவாறு குளத்துப் படிகளின்மேல் விரைந்து ஏறினாள் உத்தமசீலி.

"இளவரசி!"

அவள் சட்டென்று நின்றாள். அவனைத் திரும்பிப் பார்க்காமலே தலைகுனிந்து நின்றாள் அவள்.

"என் பொருட்டு இளவரசியார் இங்கிருந்து போக வேண்டியதிலிலை. அவரது உல்லாசத் தனிமையில் குறுக்கிட்ட நானே முதலில் புறப்பட்டாக வேண்டும். போய் வருகிறேன்."

விருட்டென்று திரும்பிய உத்தமசீலி அவனை எரித்து விடுபவள்போல் விழித்துப் பார்த்துக்கொண்டே குளத்துக் கரை மேட்டிலிருந்து மளமளவெனக் கீழிறங்கி ஓடி, நீர்ப் பரப்பின் விளிம்போரப் படியில் பொத்தென்று உட்கார்ந்து கொண்டாள்.

பரமேசுவரவர்மனுக்கு ஒன்றும் புரியவில்லை. வியப்பும் திகைப்புமாக அவளைத் திருதிருவெனப் பார்த்துக்கொண்டு நின்றான். அவனது மனம் வேகமாக அடித்துக்கொண்டது. உடலோ நிலைகொள்ளாமல் பதறித் துடித்தது. அங்கிருந்து

போய்விட எண்ணி அவசரமாக இரண்டொரு படிகளில் ஏறினான். அவனையறியாமலே அவனுடைய கால்கள் மறுக்களித்துக்கொண்டன. அவன் அவளைத் திரும்பிப் பார்த்தான்.

நீலப் படுதாவாக விரிந்திருந்த நீர்ப் பரப்பின் ஓரம் தண்டு வளைந்த தாமரை மொட்டுப்போல் தலைகுனிந்து அமர்ந்திருந்தாள் உத்தமசீலி. அந்த நிலையிலே அவள்தான் என்ன அழகாகக் காட்சியளிக்கிறாள்!

பிரமித்துவிட்டான் பரமேசுவரவர்மன். அவளை ஒரு மானிடப்பெண்ணாகவே அவனால் நம்ப முடியவில்லை. வானுலகின் சௌந்தர்யங்களையெல்லாம் வாரிச் சுமந்து கொண்டு வந்து அவற்றைப் பூவுலகில் கவிதைகளாகப் பாடித் தீர்த்துவிட உட்கார்ந்திருக்கும் ஒரு தேவ கலை மங்கையாகவே அவனுக்குத் தோற்றமளித்தாள். அழகின் எல்லையைத் தரிசித்த ஆனந்தம் அவன் கண்களின் ஒளியை மழுக்கியது; உடலின் பளுவைக் குறைத்தது; அவனை உணர்ச்சிப் பிழம்பாகவே ஆக்கிவிட்டது.

அவன் தன்னை மறந்தான். சுற்றுப்புறச் சூழலையும் மறந்தான். கரையில் பிடித்துப் போட்ட கெண்டை மீன் துள்ளித் தாவி நீரில் குதிக்க முயல்வதுபோல் ஒவ்வொரு படியாக கீழே இறங்கினான். வில்லாக வளைந்து தாழ்ந்திருந்த ஆத்தி மரக்கிளையை அணைத்துப் பற்றிக்கொண்டே நித்திரையில் நடப்பவன்போல் நடந்தான். அவனுக்கு முன்னால் அவனுடைய நிழல் இறங்கிச் சென்றது. படிப்படியாக மடிந்து தவழ்ந்துகொண்டு போன அந்த நீண்ட நிழல், அங்கே கந்தர்வப் பதுமைபோல் அமர்ந்திருந்த உத்தம சீலியின் முதுகுப் புறத்தை மெல்லத் தொட்டது. அப்படி அவளைத் தொட்டதிலே அந்த நிழலுக்கும் ஏதோ ஓர் இன்பக்கிறக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும் — அவளது பூப்போன்ற புறமுதுகில் ஒரு கணம் அயர்ந்து கிடந்தபின் மெல்ல உயிர்ப்படைந்து அவளைக் கடந்து சென்று பளிங்குப்

பாளமாக விரிந்திருந்த நீர்ப் பரப்பில் தலை சாய்த்துப் படுத்துக்கொண்டது.

மலர்ந்த இரு செந்தாமரை மலர்களுக்கு நடுவிலே குவிந்த குமுதப் பூவொன்று குனிந்து நிற்பதுபோல் துக்கத்தால் வெளுத்திருந்த தன் முகத்தைச் சிவந்த கைத்தலங்களிலே ஏந்திக்கொண்டு ஓவியப் பாவையாய் அமர்ந்திருந்த உத்தமசீலி, நீர்ப் பரப்பில் வந்து சாய்ந்த அந்த நிழலைக் கண்டு திடுக்குற்று நிமிர்ந்தாள்.

"இளவரசி!"

அவள் அப்படி இப்படித் திரும்பவில்லை. நீரிலே கிடந்து மிதந்த அந்த நிழலையே இமைக்காமல் நோக்கினாள்.

"இளவரசியார் என்மீது கோபமாக இருக்கிறார் என்று நினைக்கிறேன். தவறாக ஏதேனும் சொல்லியிருந்தால் மன்னிக்க வேண்டுகிறேன்."

அவள் உடல் சிலிர்த்தது. பின்னாலிருந்து ஒரு நீண்ட பெருமூச்சொலி எழுந்தது. அவ்வொலியை உள்வாங்கிக் கொண்ட அவளது அழகிய சிறுசெவிகள் நாகலிங்க மலரிதழ் போல் சிவந்தன.

"பிறரின் மனங்களை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் என் மனத்தைப் பிறருக்குப் புரிய வைக்க எனக்குத் தெரிவதில்லை. என்னுடைய தோல்விகளுக்கு துயரங்களுக்கும் இதுவே காரணம்.

அவள் உறைந்த பனிச் சிலையாக உட்கார்ந்திருந்தாள். அவளது பூவுடல் மட்டும் அடங்கியொடுங்கிக் குறுகிப்போய்க் கொண்டே இருந்தது.

ஆழ்ந்த அமைதியில் சில விநாடிகள் அமிழ்ந்து மறைந்தன.

"நேற்று பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளியிலிருந்து வெளியே வரும்போது என் இதயம் ஒரு பொற்சிறையில் போய்ப் புகுந்துகொண்டது. அதுமுதல் இதுவரையில் நான்

வெறும் மனிதனாகவே இருக்கிறேன். இனியும் இப்படியே இருப்பேன். இதைச் சொல்லிவிட்டுப் போகவே இங்கு வந்தேன்."

நீர்ப் பரப்பில் நீண்டு கிடந்த நிழல் மெல்லப் பின்னால் நழுவத் தொடங்கியது. உருக்கி வார்த்த ஒண்பொற் சிலைபோல் உட்கார்ந்திருந்த உத்தமசீலி பதறித் துடித்து எழுந்தாள். அதே சமயம், அவளுக்குப் பின்னால் ஆத்திமரக் கிளையைப் பற்றிக்கொண்டு நின்ற பரமேசுவரவர்மன் அமைதியாகத் திரும்பி ஒவ்வொரு படியாகக் கடந்து மேலே ஏறிக்கொண்டிருந்தான்.

அவளுக்கு எங்கிருந்துதான் அத்தனை உற்சாக வீறுவந்ததோ தெரியவில்லை. புள்ளி மானெனத் துள்ளிக் குதித்துத் தாவியோடிய அவள், அவனை வழிமறித்து நிறுத்துவதுபோல் எதிரே நின்றாள்.

அண்ணாந்த நிலையில் நின்ற பரமேசுவரவர்மன் அவளை மென்மையாக ஏறிட்டு நோக்கினான். அவளும் தன் கவிதை மழை பொழியும் கண் மலர்களை உயர்த்தி அவனைப் பார்த்தாள்.

இன்பச் சங்கமமிட்ட ஈரிரு விழிகள் அங்கே ஒரு கிருதயுகத்தை எழுப்பித் தூக்கின!

ஒய்யார ஒயிலுடன் ஒசிந்து நின்ற உத்தமசீலி கை இரண்டையும் துவளத் தொங்க போட்டு விரல்களைப் புறமாகப் பின்னிக்கொண்டு மையல் ரசம் வழிய அவனைப் பார்த்து மந்தகாசப் புன்முறுவல் பூத்தாள். இளமை கொழிக்கும் அவளது மலர் மேனி குங்குமம் பொதிந்த பளிங்குபோல் சிவப்பேறிப் பளபளத்தது.

அவள் மெல்லச் சிரித்தாள்; வேய்ங்குழலின் இன்னொலி! அவள் மீண்டும் சிரித்தாள்; மகர யாழின் தேனோசை! அவள் மேலும் சிரித்தாள்; கந்தர்வ வீணையின் தேவ கானம்!

சட்டென்று தன் சிரிப்பை நிறுத்திய அவள் இன்னும் ஒரு படி மேலேறி நின்று அவனைக் குறும்பாகக் கூர்ந்து நோக்கினாள்.

"ஓவியக் கலைஞரிடம் ஒரு விஷயத்தைக் கூற விரும்புகிறேன்."

பரவச நிலையிலே நின்றுகொண்டிருந்த பரமேசுவர வர்மன் மெல்லக் கண் திறந்தான்.

"குகையிலிருந்து வெளிப்படும் புலியைப்போல, கட்டவிழ்த்துக்கொண்டு பாயும் காளையைப்போல் , மதர்ப்படைந்து திமிறியோடும் யானையைப்போல, கூட்டைவிட்டுப் பறந்து செல்லும் இராஜாளியைப்போல, ஓவியக் கலைஞராக ஒடுங்கியிருக்கும் நீங்களும் விரைவிலே உண்மை வடிவெடுத்து என் முன் காட்சியளிக்க வேண்டும்; இதுவே என் விருப்பம்." —சடாரென்று திரும்பிய உத்தமசீலி சாலையின் தொலைதூரத்தில் நிறுத்தி வைத்திருந்த சிவிகையை நோக்கிச் சரசரவென்று வேகமாக நடக்கலானாள்.

மின்னற் கொடிகளால் சுற்றி வளைக்கப்பட்டவன் போல் அதிர்ச்சியுற்று நிமிர்ந்தான் பரமேசுவரவர்மன்.

உத்தமசீலி எங்கே? அதோ, தோகை துவண்டு புரள நடந்து செல்லும் வெண்மயில்போல் வெகு தூரத்துக்கு அப்பால் போய்க்கொண்டிருக்கிறாள்!

அவள் மறையும் வரையில் அங்கேயே நின்று அவளையே பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் ஓங்கிப் பெருமூச்சு விட்டவாறு திரும்பி ஜீனாலயத்துக்குப் பின்புறமாகச் சென்ற ஒரு கொடிப் பாதையில் இறங்கி நடந்தான்.

பழைமையான அந்த ஜீனாலயத்தின் வலப் பக்க வாட்டில் பரிவாரத் தெய்வங்களில் ஒன்றான பிரம்மயட்சன் (ஐயனார்) சிலையொன்று பாங்குற நிறுத்தப் பெற்றிருந்தது. யானையை வாகனமாகக் கொண்டு விளங்கிய அந்தச் சமண

ஐயனார் சிலையைச் சமீபித்து வந்து கொண்டிருந்த பரமேசுவரவர்மன் ஏதோ பேச்சுக் குரல் கேட்டுச் சுற்று முற்றும் பார்த்தான். பிரம்ம யட்சன் விக்கிரகத்துக்கு மறுபுறத்தில் யாரோ இருவர் உட்கார்ந்திருப்பது தெரிந்தது.

தயங்கி நின்ற அவன் ஓசையின்றி நடந்து போய் அந்தச் சிலையின் பின்னால் மறைந்து நின்றுகொண்டு யானை வாகனத்தின் காலிடுக்கு வழியே மறுபக்கம் எட்டிப் பார்த்தான்.

அங்கே, கண்ணீரும் கம்பலையுமாக வாடித்துவண்டு உட்கார்ந்திருந்தான் கோவிந்தவர்மன். அவனுக்குச் சற்று அப்பால், கவலையே உருவாகக் கறுத்துச் சோர்ந்து அமர்ந்திருந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

# 48

## அவனுக்கு வந்த ஆவேசம்

நெடுந்தூரப் பயணம் செய்துவந்த களைப்புடன் ஒருக்களித்துக் காலை நீட்டி உட்கார்ந்திருந்த பெரும்பிடுகு முத்தரையர், "எங்கே, இளங்காரி இன்னும் வரக்காணோம்? இதோ இருக்கும் ஆலம்பாக்கத்துக்குப் போய்வர இவ்வளவு நேரமா?" என்று தமக்குள் மெல்ல முணுமுணுத்தார். பிறகு கோவிந்தவர்மனின் பக்கம் திரும்பி, "இளவரசே! என்ன இது சிறுபிள்ளைத்தனம்? எத்தனை நாட்களுக்குத்தான் இப்படிக் கண்ணீர்விட்டுப் புலம்பிக்கொண்டிருப்பீர்கள்? நான் சொல்வதைக் கேளுங்கள். அவள் எங்கேயும் போயிருக்க மாட்டாள். அவளுக்கு எத்தகைய இடர்ப்பாடும் நேர்ந்திருக் காது. அநந்தமதி அவளுடன் இருப்பதால்தான் இப்படிச் சொல்கிறேன். என் பேச்சை நம்புங்கள். இன்னும் கொஞ்ச நேரத்தில் நல்ல சேதியோடு வந்துவிடுவான் இளங்காரிக் குடையான். அதுவரையிலுமாவது கண்ணீர்ச் சொரியாமல் பொறுத்திருங்கள்" என்றார் பரிவு கலந்த கண்டிப்புக் குரலில்.

குளிர் காய்பவன்போல் முட்டிக்கால்களைக் கட்டிக் கொண்டு முகத்தைப் புதைத்தவாறு உட்கார்ந்திருந்த கோவிந்தவர்மன் உடல் குலுங்கப் பொருமினான்.

இதைக் கண்ட முத்தரையருக்குச் சினம் பொங்கி விட்டது. "ஹீம்! வீர பல்லவகுலத்தில் பிறந்த அண்ணனும் தம்பியும் இத்தனை வடித்தெடுத்த கோழைகளாகவா இருக்க வேண்டும்? வெட்கம்! வெட்கம்!"

வெடுக்கென்று தலைதூக்கிய கோவிந்தவர்மன், "நான் இப்போது வருந்திக் கண் கலங்குவது அவளுக்காக இல்லை, ஐயா! எதிரிகளின் இருப்பிடமாகிய இலவந்திகைப்பள்ளிக்குத் தன்னந்தனியே போன என் தமையனார் இன்னமும் திரும்பி வராமல் இருப்பதை எண்ணித்தான் மனம் பொருமிக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

முத்தரையரின் முகம் கறுவடைந்து சிறுத்தது. ஓங்கிப் பெருமூச்சுவிட்டுத் தலைகுனிந்தார் அவர்.

"நான் அப்போதே சொன்னேன், அந்தச் சேதியக் கலைஞரை நம்ப வேண்டாம் என்று; கேட்டீர்களா? அந்த மனிதர் ஏதோ ஒரு துரோக எண்ணத்துடன் தான் பல்லவ மன்னரைத்தம் இல்லத்திலிருந்து வெளியேற்றிச் சளுக்கியத் தளபதியிடம் அனுப்பி வைத்திருக்கிறார். நீங்களும் அவர் பேச்சுக்கு உடன்பட்டுவிட்டதுதான் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது" என்று ஆத்திரம் குமுறக் கூவினான் கோவிந்த வர்மன்.

"அவசரப்பட வேண்டாம், இளவரசே! நம் மன்னருக்கு ஆபத்து ஒன்றும் நேர்ந்திருக்காது என்று இன்னமும் நான் நிச்சயமாக நம்புகிறேன்" என்றார் முத்தரையர் நலிந்த குரலில்.

"பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளியிலிருந்து அவர் வெளியே வந்துவிட்டார் என்று ஆபத்துதவி சம்புவராயன் சொன்னதைக் கேட்டு இப்படி மனப்பால் குடிக்கிறீர்களா? அவர் தாம் தம்மையே ஓவியமாக வரைந்து கொடுத்துவிட்டு வந்தாராமே! அந்த ஓவியத்தைப் பார்க்கும் வில்வேலி, அவரைப் பின் தொடர்ந்து வந்து பிடித்துக்கொண்டு போக எவ்வளவு நேரம் ஆகும்? எல்லாம் நடந்தே முடிந்து விட்டிருக்கும்!"

முத்தரையர் இதற்குப் பதில் ஏதும் சொல்லாமல் மௌனமாயிருந்தார்.

கோவிந்தவர்மன் மீண்டும் கண் கலங்கிப் பொருமி னான். சற்றுநேரம் கழித்து முகத்தைத் துடைத்துக்கொண்டு

நிமிர்ந்த அவன் சந்திரலேகைச் சிற்றரசரைத் தயக்கத்துடன் பார்த்து, "ஏனய்யா! என் இளங்கோப்பிச்சிக்கு ஆபத்து ஒன்றும் நேர்ந்திருக்காது என்றா சொல்கிறீர்கள்? அதில் சந்தேகமில்லையே?" என்று கேட்டான்.

முத்தரையரின் முகத்தில் அவலப் புன்னகையொன்று நெளிந்து மறைந்தது. "பழையாறைச் சோழர் என்னிடம் பேசிய பேச்சுக்களிலிருந்து அப்படித்தான் ஊகிக்கிறேன்" என்றார்.

"சளுக்கிய மன்னனிடம் தாம் சேர்ந்துகொள்ளப் போவதாகத்தானே அவர் சொன்னார்? அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?"

"நிறைய இருக்கிறது, இளவரசே! பழையாறைச் சோழரின் அரசியல் முடிவுகளை மட்டும்தான் உங்களிடம் சொல்லியிருக்கிறேன். அவருடைய குடும்ப சம்பந்தமான இன்னொரு முக்கிய விஷயத்தை நான் இன்னமும் சொல்லவில்லை. அதைச் சொன்னால்..."

"சொல்லுங்கள், ஐயா! அது என்ன, அவருடைய குடும்ப விஷயம்?"

முத்தரையர் வாயை இறுக மூடிக்கொண்டு மௌனம் சாதித்தார்.

"ஏன் பேசாமல் இருக்கிறீர்கள்? சொல்லுங்கள் ஐயா!" என்று ஆவலுடன் கேட்டுக்கொண்டே அவரருகில் நெருங்கி வந்தான் கோவிந்தவர்மன்.

"இளவரசே! இனி நீங்கள் அந்தச் சோழ இளவரசி இளங்கோப்பிச்சியை மறந்துவிட வேண்டும்; மறந்தே ஆக வேண்டும்" என்றார் முத்தரையர்.

கோவிந்தவர்மன் இதைக் கேட்டுக் கடகடவென்று நகைத்தான். "என்ன ஐயா, சமய சந்தர்ப்பம் பார்க்காமல் இளிவரல் செய்கிறீர்கள்! யாரை யார் மறப்பது? உயிரை உயிர் மறக்குமா?"

"மறக்காது—மறக்க முடியாது—என்பது எனக்குத் தெரியும்; பழையாறைச் சோழருக்கு, அது தெரியவில்லையே!"

அரக்கப் பரக்க விழித்த கோவிந்தவர்மன், "ஐயா, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்றான் நடுக்கத்துடன்.

முத்தரையரின் கண்கள் நசுங்கிய நாவல் பழம்போல் சிவந்து கலங்கின. அவர் அடித் தொண்டையில் வெகு நிதானமாகச் சொன்னார்: "இனத் துரோகியாகிவிட்ட பழையாறைச் சோழர் தம் அருமைக் குமாரி இளங்கோப் பிச்சியைச் சளுக்கிய விக்கிரமாதித்தனின் மைந்தனான விநாயதித்தனுக்கு மணம் செய்து தருவதாகக் கூறி அதற்கு ஒப்புதல் ஓலையும் எழுதி அனுப்பிவிட்டார்."

"என்ன! என் இளங்கோப்பிச்சி இன்னொருவனை மணப்பதா? அதை உங்கள் வாயால் என்னிடம் சொல்வதா?" பயங்க உறுமலுடன் துள்ளிக் குதித்தெழுந்த கோவிந்தவர்மன் தன் இடையில் தொங்கிய நீண்ட வாளைப் பளீரென உருவிக் கரகரவெனச் சுழற்றிக் கொண்டே முத்தரையரை நோக்கிப் பாய்ந்தான்.

# 49

# தகூடலேகை

அது என்ன மாயமோ தெரியவில்லை. புலியெனச் சீறிப் பாய்ந்து வந்த கோவிந்தவர்மன் புயலால் சுருட்டித் தூக்கியெறியப்பட்ட ஆட்டுக்குட்டிபோல் கிர்ரெனப் பின்னால் சுழன்றுகொண்டே போய் 'மடாரெனச் சுருண்டு வீழ்ந்து தன் வலக்கைத் தோள்பட்டையை இடக்கையால் அழுத்திப் பிடித்துக்கொண்டு 'ஹா' என்று அலறித் துடித்தான். அவன் கையிலிருந்த நீண்ட வாள் சற்றுத் தொலைவிலே போய்த் தரையில் குத்திட்டு நின்றது.

என்ன நடந்தது, எப்படி நடந்தது என்று அறிய முடியாத இமைப் பொழுதுக்குள் இவை நடந்து முடிந்து விட்டன!

இரு கைகளையும் இடுப்பின்மேல் ஊன்றிக்கொண்டு மலைபோல் எழுந்து நின்றார் பெரும்பிடுகு முத்தரையர். அவரது உடைவாள் உறையிலேயே இருந்தது. அதை அவர் தொடவே இல்லை.

அப்படியானால் அவரைத் தாக்க வந்த கோவிந்த வர்மனைத் தடுத்துத் தூக்கி எறிந்தவர் யார்? ஏதோ, பாறை மேல் மோதிய பந்துபோல் அல்லவா பாய்ந்து வந்த அதே வேகத்தில் பின்னால் போய் வீழ்ந்து கிடக்கிறான்?

அவன் வாளைச் சுழற்றிக்கொண்டு வெறியுடன் தாவிய அதே சமயம் வில்லெனத் துள்ளியெழுந்த முத்தரையர் பக்கவாட்டில் சாய்ந்து திரும்பி அவனது வலது தோளின் மூட்டெலும்பிலே இலேசாக ஒரு தட்டுத் தட்டினார்; அவ்வளவுதான். அடுத்த கணம், அவன் கையிலிருந்த வாள்

திசைமாறிப் பிடுங்கிக்கொண்டு போக, அவனும் நிலை தடுமாறிச் சுருண்டு வீழ்ந்தான். நடந்தது இவ்வளவே!

குறும்பு செய்த பிள்ளையை அடித்துவிட்டு வருந்தும் தந்தையைப்போல் கவலையுடன் நின்ற முத்தரையர் அமைதியாக நடந்து போய் வலி பொறுக்கமாட்டாமல் துடித்துக் கொண்டிருந்த கோவிந்தவர்மனை மெல்லத் தூக்கித் தம் மார்பு மேல் சாய்த்துக்கொண்டு அவனுடைய தோள் புறத்தை இதமாக வழித்துத் தடவிக் கொடுத்தார்.

சுய நினைவு பெற்ற கோவிந்தவர்மன் சட்டென்று அவர் அணைப்பிலிருந்து திமிறிக்கொண்டு போய் ஐயனார் சிலையருகில் உட்கார்ந்து முகத்தை இரு கரங்களாலும் மூடிக்கொண்டான். அவனுக்கு ஏற்பட்ட ஆத்திரமும் சினமும் அடங்கவில்லை. என்பதற்கறிகுறியாக அவன் உடல் கிடுகிடுவென நடுங்கிக் கொண்டிருந்தது.

அநுதாபத்துடன் அவனையே பார்த்துக்கொண்டிருந்த முத்தரையர் மெல்லச் சிரித்தார். மதுக் கோப்பையில் விழுந்த பவழ மணிகள்போல் அவரது சிவந்த கண்கள் நீர்ப் போர்வையிட்டுப் பளபளத்தன. "பல்லவ நாடு இனி விமோசனம் பெற்றுவிடும்! சளுக்கியப் பகைவரைச் சங்காரம் பண்ணி, இழந்த சுதந்தரத்தை அது மீட்டுக் கொண்டுவிடும்! அந்த நம்பிக்கை இப்போது எனக்கு ஏற்பட்டுவிட்டது! ஐயத்துக்கு இடமின்றி அது உறுதிப் பட்டுவிட்டது!" என்று தமக்குள் தணிவாக முணுமுணுத்துக் கொண்டார்.

வீம்பும் விறைப்புமாக உட்கார்ந்திருந்த கோவிந்த வர்மன் இதைக் கேட்டு வேகமாய்த் திரும்பினான். ஈரம் கசிந்த அவன் கண்கள் நிலைகொள்ளாமல் படபடத்தன. "வளர்த்த கடா மார்பில் பாய்வதுபோல் உணர்ச்சி வயப்பட்டு ஏதோ செய்துவிட்டேன்; மன்னியுங்கள் ஐயா!" என்று வெட்கமும் வேதனையும் செறிந்த குரலில் குழறிக் கொண்டே தலைகுனிந்தான்.

முத்தரையர் ஒரு வறண்ட சிரிப்புச் சிரித்தார். "மன்னிப்பதா? மன்னிக்க வேண்டிய தவறேதும் இங்கு நிகழவில்லையே!" என்று கூறித் தம் புஜங்களைக் குலுக்கி கொண்ட அவர், மேலும் கூறினார்; "பல்லவ இளவரசரிடம் பொங்கியெழுந்த அவ்வீறார்ந்த உணர்ச்சிப் பேரழகைக் கண்டு நான் மட்டற்ற மகிழ்ச்சியில் ஆழ்ந்திருக்கிறேன். காடவர் குலத்தின் வீரம், காலஞ்சென்ற நரசிம்மவர்மரோடு அடி சாய்ந்து விடவில்லை என்பதை அறிந்து அகம் பூரித்துக்கொண்டிருக்கிறேன்."

கோவிந்தவர்மன் அவரை நிமிந்து பார்க்கவும் வெட்கப்பட்டு, யானை வாகனச் சிலையின் துதிக்கையில் தன் முகத்தைப் புதைத்துக்கொண்டு விம்மிப் பொருமினான்.

இவ்வளவு நேரம் அனற் செறிவுடன் எரித்துக் கொண்டிருந்த வானம் மந்தாரமிட்டுக் கறுக்கத் தொடங்கியது. ஆனால், மேகப் பொதிகளின் நடமாட்டம் ஏதும் தென்பட வில்லை. வடதிசையின் தொலைதூரத்துக்கு அப்பால் கீழிருந்து மேலெழும்பிய ஏதோ ஒருவிதப் புழுதிப் படலம் தான் வெளுத்து கிடந்த வானப் பிராந்தியத்தை இருளடையச் செய்துகொண்டிருந்தது. அது என்ன புழுதிப் படலம்? எங்கிருந்து, எதனால் அது எழுகிறது?...

முத்தரையர் அதைக் கவனிக்கவில்லை. பெருவள நல்லூர்ச் சாலைக்குத் தெற்கே, ஆலம்பாக்கத்தை நோக்கியே அவர் தம் பார்வையைச் செலுத்தியவாறு சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.

"ஐயா!"

அவர் மெல்லத் திரும்பினார். தாளமுடியாத துக்கத் துடன் அவரையே பரிதாபமாகப் பார்த்துக்கொண்டிருந்த கோவிந்தவர்மன் விம்மலிடும் குரலில் மூச்சு முட்டக் கேட்டான்: "பழையாறைச் சோழர் சொன்ன அந்த விஷயம் உண்மைதானா? என் உயிரின் உயிரான இளங்கோப்

பிச்சியைச் சளுக்கிய இளவரசனுக்கு மணம்செய்து தர இணங்கிவிட்டது உண்மைதானா?"

வெறுப்புடன் முகத்தைச் சுளித்து அவனை வெறித்துப் பார்த்த முத்தரையர், "என் செவிபடக் கேட்ட சேதியைத் தான் சொன்னேன். அதில் சிறிதளவும் சந்தேகமில்லை" என்றார் அடித் தொண்டையில்.

"திடீரென்று இப்படி ஓர் அநியாய முடிவுக்கு அவரால் எப்படி வர முடிந்தது, ஐயா?" என்று அழமாட்டாக் குறையாக வினவினான் கோவிந்தவர்மன்.

"அநியாயத்துக்கு எப்போதுமே இரண்டு முகங்கள் உண்டு. நிகழ்த்துகிறவர்களிடம் தன் நிஜமான முகத்தை மறைத்து நியாயம் போன்ற போலி முகத்தையே அது காட்டும். எனவே, அப்படி ஓர் அநியாய முடிவுக்கு அவர் எப்படி வந்தார் என்று கேட்பதைவிட ஏன் வந்தார் என்று கேளுங்கள்: பல்லவபுரம் அரண்மனைக் கோட்டைச் சிறையிலிருந்து சோழ இளவரசியின் உதவியால் நீங்கள் வெளியேறியது கோழைத்தனமான செயல், உங்களுடைய சுயநலத் திட்டங்களுக்கு ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொள்ளவே அவளைக் காதலிப்பதுபோல் நடிக்கிறீர்கள், அதற்காகவே அவளை ஏமாற்றிப் பழையாறை அரண்மனையிலிருந்து வெளியேறச் செய்திருக்கிறீர்கள், சிறைப்பட்டிருக்கும் உங்கள் பெரிய அன்னையாரை மீட்பதற்காக இப்போது அவளைப் பயன்படுத்தத் திட்டமிட்டிருக்கிறீர்கள்— என்றெல்லாம் நான் சொல்லவில்லை; பழையாறைச் சோழர் சொல்கிறார்கள்— நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?" என்றார் முத்தரையர்.

"வீண் பழி! விஷமத்தனமான குற்றச்சாட்டு!"

"இளவரசரால் அவ்வளவுதான் சொல்ல முடியும்..."

"அப்படியானால் அவர் சொன்னதெல்லாம் சரி என்று நீங்களும் நினைக்கிறீர்களா?"

"அவருடைய நிலையில் நான் இருந்தால் அப்படித்தான் நினைப்பேன், இளவரசே!"

"துரோகிகள்! நயவஞ்சகர்கள்! மனச்சாட்சியற்ற மாபாவிகள்!"

"இன்னும் பெரிய வார்த்தைகளைத் தேரந்தெடுத்து வசை பாடலாம். ஆனால் வசைச் சொற்களை வீசவும் ஒரு தகுதி வேண்டும் என்பதை மறந்துவிடக்கூடாது."

"மாபெரும் பல்லவ சாம்ராஜ்யத்தின் மகா சக்கரவர்த்தி பரமேசுவரவர்மருடைய இளவல் நான்! அவரது திருக்கரத்தால் இளவரசுப் பட்டம் சூட்டப்பெற்ற பல்லவ இளவரசன் நான்! இவற்றைவிட வேறென்ன தகுதி வேண்டும் எனக்கு?"

"இறந்த காலத்தின் பட்டங்களை நிகழ் காலத்தில் சுமந்துகொண்டு எதிர்காலத்தை எட்டிப்பார்க்க முயல்வது அறியாமை."

"சந்திரலேகைச் சிற்றரசே!..." என்று பயங்கரமாகப் பிளிறிக் கூவினான் கோவிந்தவர்மன்.

"இப்பொழுதாவது உங்களுடைய உண்மை நிலையைப் புரிந்துகொண்டீர்களா இளவரசே?" என்று புன்முறுவலுடன் கேட்டுக்கொண்டே போய் அவனது வீங்கிப் புடைத்த தோள்களில் தம் இரு கைகளையும் வாஞ்சையுடன் போட்டுக் கொண்டு அவன் முகத்தையே ஒரு கணம் உற்றுப் பார்த்த முத்தரையர் அடைத்த குரலில் மேலும் சொன்னார்: "பழையாறைச் சோழர் தம் அருமைக் குமாரியைச் சளுக்கிய விநயாதித்தனுக்கு மணம் செய்து தர எப்படித் துணிந்தார் என்ற வினாவுக்கு மெய்யான விடை இதிலேதான் அடங்கியிருக்கிறது. பல்லவ இளவரசரான நீங்கள் இப்போது பெயரளவில்தான் இளவரசாயிருக்கிறீர்களே தவிர அதற்கான எவ்வித உரிமையும் அந்தஸ்தும் உங்களிடம் இல்லை. பழையாறைச் சிற்றரசரின் அந்தஸ்துக்குச் சமதையாகக்கூட நீங்கள் இருக்கவில்லை. இதுவே அவர் மனமாற்றத்துக்கு உரிய உண்மைக் காரணம்."

அவமானச் சினத்தால் அனற் பிழம்பாகச் சிவந்து துடித்த கோவிந்தவர்மன் அங்குமிங்குமாக விழித்துப்

பார்த்துப் பற்களை நறநறவெனக் கடித்தான். சுடுமணலில் எறியப்பட்ட விரியன் பாம்புபோல் தன் உடலை நெளித்து வளைத்து முறுக்கிக்கொண்டு நின்ற அவன் சடாரென்று திரும்பி, "ஏன் ஐயா! பழையாறைச் சோழரின் அந்தப் பச்சைத் துரோகமான முடிவுக்கும் அவரது குமாரி காணாமற் போயிருப்பதற்கும் ஏதாவது தொடர்பு இருக்குமென்று நீங்கள் நினைக்கிறீர்களா?" என்றான் ஆத்திர விம்மலுடன்.

"அப்படித்தான் எனக்குத் தோன்றியது. இளங்கோப் பிச்சி எங்கும் போயிருக்க மாட்டாள். அவளின் தந்தையே நேரில் வந்து அவளைப் பழையாறைக்கு அழைத்துப் போயிருக்கலாம்; அல்லது அநந்தமதியைத் துணைக்கு வைத்துக் கொண்டு அவளே தன் தந்தையிடம் போய்ச் சேர்ந்துவிட்டிருக்கலாம். இந்த விவரம் தெரியாத ஆபத்துதவி சம்புவராயன், அவள் காணமற்போனதாக எண்ணித் தன்னை நவகண்டம் செய்து கொள்ள முயன்றிருக்கலாம்; அல்லது உண்மையை மறைத்து நம்மை ஏமாற்றுவதற்காக அந்தக் காடுகிழாள் கோயிலில் அப்படியொரு நாடகத்தை அவன் நடத்திக் காட்டியுமிருக்கலாம்..." என்று எங்கோ பார்த்தவாறு வெகு அலட்சியமாகக் கூறினார் முத்தரையர்.

கோவிந்தவர்மனுக்குத் துக்கம் பீரிட்டுக்கொண்டு வந்து விட்டது. கண்டம் வெடித்து விடுவதுபோல் விம்மிப் பொருமிய அவன் கிர்ரென ஒரு சுற்றுச் சுற்றிக்கொண்டே போய் ஐயனார் சிலைமேல் துவண்டு சாய்ந்தான்.

பெருவளநல்லூர்ச் சாலைக்கு வடக்கே அகண்டாகார மாகக் கிளம்பிப் பரவிய புழுதிப் படலம் வான வெளியை அடைத்து மூடியவாறு அதிவேகமாக முன்னேறி வந்து கொண்டிருந்தது!...

வெறித்த நோக்கில் நின்றிருந்த முத்தரையர் விர்ரென்று திரும்பி, மயங்கிச் சாய்ந்து கிடந்த கோவிந்தவர்மனைத் தூக்கி நிறுத்திவிட்டு அவன் முகத்தை உற்றுப் பார்த்தார். பிறகு கடகடவெனச் சிரித்துக்கொண்டே மிடுக்கான குரலில்

கூறினார்: "இளவரசே! எந்த மனிதனும் காதலுக்காகவோ காதலிப்பதற்காகவோ மட்டும் பிறப்பதில்லை; வேறு எத்தனையெத்தனையோ காரிய—காரணங்களுக்காகவும் அவன் பிறக்கிறான். காதல் என்பது வாழ்க்கையில் நேரிடும் பல அசம்பாவிதங்களில் ஒன்று. மற்ற அசம்பாவிதங்களை விட இது சற்றுக் கவர்ச்சிகரமான அசம்பாவிதம் அவ்வளவே. அதற்குமேல் அதில் விசேஷம் ஏதுமில்லை. வாழ்க்கையின் மொத்த கணக்கைக் கூட்டிப் பார்க்கும்போது அதில் பயனே இல்லாத நஷ்டக் கணக்கு ஒன்று தென்படுமானால் அதுதான் காதல். இங்கிருக்கும் துரும்பை அங்கெடுத்துப் போடுவதை விட எளிதான காரியம் ஒன்று உலகத்திலே உண்டென்றால் அதுதான் காதலிப்பது. இந்த அற்பமான காதலுக்காகவா, வாழ்வின் அஸ்திவாரமே அதிர்ந்து சரிந்து போனாற்போல் கலங்கிக் கண்ணீர் வடிக்கிறீர்கள்? மனிதன் காதலை உருவாக்குகின்றானா, காதல் மனிதனை உருவாக்குகிறதா? யோசித்துப் பாருங்கள், இளவரசே!"

சூட்டுக்கால் பட்ட காளைபோல் திமிறித் தலை தூக்கினான் கோவிந்தவர்மன். அதைக் கவனியாத முத்தரையர் மேலும் கூறினார்: "பல்லவ குலத்தில் பிறந்த கோவிந்தவர்மரை ஒரு மாசற்ற இலட்சியவாதியென இந்நாள் வரை எண்ணியிருந்தேன். சுதந்தர வேட்கை கொண்ட ஒரு மானமிக்க வீர இளைஞர் என்றும் கருதியிருந்தேன். ஆனால் அவரோ, காதலைத் தவிர தமக்கு வேறு எதுவுமே தெரியாது—காதலிப்பதைத் தவிர வேறு இலட்சியமே தமக்கு இல்லை—என்பது போல் இதோ, கண் கலங்கி நிற்கிறார். எவ்வளவு பெரிய ஏமாற்றம் இது! எனக்கு மட்டுமா ? இல்லை; இந்தப் பழம்பெருமை வாய்ந்த பல்லவ நாட்டுக்கே நேர்ந்த மாபெரும் ஏமாற்றம்."

பரபரப்புடன் கண்களைத் துடைத்துக்கொண்டே கோவிந்தவர்மன், வெறி பிடித்தவன்போல் அவரை விழித்துப் பார்த்தான்.

"ஹூம்! இனி இங்கே நிற்பதுகூட என் வீரத்துக்கு இழுக்கு. நான் சென்று வருகிறேன்." -விருட்டென்று திரும்பினார் முத்தரையர்.

அடுத்த கணம், வீசிய வேலெனப் பாய்ந்தோடிய கோவிந்தவர்மன் அவர் எதிரே போய் முரட்டுத்தனமாக மோதிக்கொண்டு நின்று பயங்கரமாகச் சிரித்தான். "காதலாம்! கண்ணீர் விடுகிறேனாம்! யார் சொன்னது அப்படி!"சொற்களை அரைத்துக் குதப்பிக் கொண்டே பயங்கரப் பேய்ச் சிரிப்புச் சிரித்தான் அவன்.

அவனுடைய அனல் பறியும் மூச்சைத் தாள மாட்டாதவர்போல் ஓரடி பின்னால் நகர்ந்துகொண்ட முத்தரையர் வியப்பும் துடிப்புமாக அவனைக் கூர்ந்து பார்த்தார்.

"சொல்லுங்கள் ஐயா! இந்தக் கோவிந்தவர்மன் ஒரு மாசற்ற இலட்சியவாதிதான்; சுதந்திர வேட்கை கொண்ட மானமிக்க ஒரு வீர இளைஞன்தான்—இதை ஆயிரம் முறை சொல்லுங்கள்! அதற்கு முழுதும் தகுதியாக இதோ வந்து நிற்கிறேன்; சொல்லுங்கள் ஐயா!"

மகிழ்ச்சியால் விம்மிச் சிலிர்த்து நிமிர்ந்த முத்தரையர் அவனை அப்படியே ஆரத் தழுவி மார்புடன் அணைத்துக் கொண்டார். சில விநாடிகளுக்குப் பின் அவருடைய அணைப்பிலிருந்து விடுபட்ட கோவிந்தவர்மன் சற்றுத் தள்ளிப் போய் நின்றான். ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கி மௌனமாயிருந்த முத்தரையர் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவர்போல் தம் இடுப்பிலிருந்த ஓர் ஓலை நறுக்கை எடுத்து அவனிடம் நீட்டினார்.

கோவிந்தவர்மன் அதை அவசரமாக வாங்கிப் படித்தான். அவன் முகம் ஆச்சரியத்தால் விரிந்து மலர்ந்தது. "இத்தனை நாட்களாக இந்த விஷயத்தை என்னிடம் நீங்கள் சொல்லவே இல்லையே?" என்று மகிழ்ச்சி மேலிடக் கேட்டான்.

“சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். இன்றுதான் அது சரிப்பட்டு வந்தது” என்று மெல்லச் சிரித்துச் சொன்னார் முத்தரையர்.

தன் கையிலிருந்த ஓலையை மீண்டும் ஒரு முறை படித்துப் பார்த்த கோவிந்தவர்மன், “இது என் தமையனார் பரமேசுவரவர்மர் எழுதிய ஓலையா? அல்லது...?” என்று தயக்கத்துடன் வினவினான்.

முத்தரையரின் முகம் கறுத்தது. பீதியுடன் சுற்று முற்றும் பார்த்துக்கொண்ட அவர் உள்ளடங்கிய இரகசியக் குரலில் கூறினார்: “சந்தேகமின்றி இது ஒரு தகூடலேகைதான், இளவரசே! அதாவது, பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரின் பெயரால்—அவரே தம் கைப்பட எழுதியது போல்—தயாரிக்கப்பட்ட ஒரு பொய் ஓலை இது!”

திகைப்பும் வியப்புமாக அவரைக் கூர்ந்து நோக்கினான் கோவிந்தவர்மன்.

“எதிரிகளின் இருப்பிடத்துக்குப் போன பரமேசுவர வர்மர் இன்னமும் திரும்பி வராததாலும், அப்படியே அவர் வந்தாலும் இப்படி ஓர் ஓலையை அவரிடம் எழுதி வாங்க இயலாது என்பதாலும்தான் நானே இந்தக் காரியத்தைத் துணிந்து செய்திருக்கிறேன். இதனால் ஏதேனும் நன்மைகள் விளையுமானால் அவை முழுக்க முழுக்கப் பல்லவ மன்னருக்கும் பல்லவ நாட்டுக்குமே உரியவை ஆகட்டும்; தீமைகள் விளையுமானால் அவற்றின் முழுப் பொறுப்பையும் நான் ஒருவனே ஏற்றுக்கொள்வேன்; இப்போதைக்கு இதுபற்றி இவ்வளவே என்னால் சொல்ல முடியும்.” — முத்தரையரின் குரல் கம்மிக் கரைந்தது.

பக்திவிநயத்துடன் அவரையே பார்த்துக்கொண்டிருந்த கோவிந்தவர்மன், “அப்படியானால் நான் இந்த ஓலையை எடுத்துக்கொண்டு இப்போதே புறப்படலாம் அல்லவா?” என்று உற்சாகம் துளும்பக் கேட்டான்.

"விழிப்போடு சென்று, வெற்றியுடன் வாருங்கள்!" என்று எங்கோ பார்த்தவாறு சொன்ன முத்தரையர் சட்டெனத் திரும்பி, "சற்று நேரம் இருங்கள், இளவரசே! ஆலம்பாக்கத் துக்குப் போய் இருக்கும் ஆபத்துதவி இளங்காரிக்குடையான் எடுத்து வரும் சேதியைத் தெரிந்து கொண்டு புறப்படலாம்" என்று கூறினார்.

வேதனைச் செருமலுடன் வெடுக்கென்று முகத்தைத் திருப்பிக்கொண்ட கோவிந்தவர்மன், "வேண்டாம், ஐயா! எனக்கு இனிமேல் அந்தச் சேதி தேவையில்லை. என் இலட்சிய வேள்வியில் என்னையே ஆஹுதி செய்துகொள்ளத் தீர்மானித்துவிட்டேன். அதைத் தவிர என் வாழ்க்கையில் வேறேதும் இனிக் குறுக்கிட முடியாது. நான் சென்று வருகிறேன்'' என்றவாறு சற்றுத் தொலைவில் நின்றிருந்த இரண்டு குதிரைகளில் ஒன்றன்மீது தாவி ஏறினான். மறுகணம் அந்தக் குதிரை தென்திசை நோக்கி வளியென விரைந்து மறைந்தது.

பிரமை பிடித்தவர்போல் விறைத்து நின்றார் பெரும் பிடுகு முத்தரையர். அவரை அறியாமலே அவர் கண்கள் கலங்கி நீரை வழியவிட்டன. எவ்வளவு நேரம் அப்படிச் சமைந்து நின்றாரோ, அது அவருக்கே தெரியாது. எங்கோ கொந்தளிக்கும் கடலின் அலையோசை போன்ற குமுறல் ஒலி கேட்கவே அவர் சுய உணர்வு பெற்றுத் திரும்பினார்.

பெருவளநல்லூர்ச் சாலையின் வட திசையிலிருந்தே அந்தப் பேரொலி கேட்டது. வானுக்கும் பூமிக்குமாக எழுந்து பரவிய புழுதிப் படலம் ஓங்கி வளர்ந்த மரங்களையெல்லாம் மூடி மறைத்துவிட்டிருந்தது. பெரும் புயலும், பேரிடியும், பெரு மழையும் புரண்டு உருண்டு மோதியடித்துக்கொண்டு வருவதுபோன்ற முழக்கப் பேரோசை!

ஒன்றும் புரியாமல் வெலவெலத்து நின்ற முத்தரையர் யானை வாகனச் சிலையின் மேடைமீது ஏறி நின்று

*சாலையின் தொலை தூரத்துக்கு அப்பால் தம் பார்வையைச் செலுத்தினார்.*

*நூற்றுக்கணக்கான கரி பரிகளும், ஆயிரக்கணக்கான போர் வீரர்களும் சளுக்கியக் கொடிகளை ஏந்தியவாறு புழுதிக் கூடாரமிட்டு பல்லவபுரத்தை நோக்கிப் போய்க் கொண்டிருப்பது தெரிந்தது.*

*அந்த முப்பெரும் சளுக்கியப் படைகள் எங்கே, எதற்காகப் பெயர்ந்து செல்கின்றன?—*

*மிரட்சியுற்றுப் பரபரத்த முத்தரையர் அந்தக் காட்சியை இன்னும் சரியாகக் கவனிக்க வேண்டுமென்று எண்ணி மெல்லப் பின்னால் நகர்ந்தார். யானை வாகனத்துக்கு மறுபுறமாகப் பின்னோக்கி நகர்ந்த அவர், ஏதோ தம் உடல்மீது தட்டுப்படவே திடுக்குற்றுத் திரும்பினார்.*

*அங்கே, தன்னை மறந்த சிந்தனையில் தலையைத் தாங்கிப் பிடித்தவண்ணம் துயரமே உருவாக உட்கார்ந் திருந்தான் பரமேசுவரவர்மன்!*

## 50

# பருவ மேகம்

**ப**ல தினங்களுக்குப் பின் இன்றுதான் சோழ இளவரசி இளங்கோப்பிச்சியின் சுந்தர வதனத்தில் மகிழ்ச்சி குடியேறியது.

தன்னைத் தேடிக்கொண்டு வந்த இளங்காரிக்குடையானின் மூலம் எல்லா விவரங்களையும் கேட்டறிந்த அவள், தான் பல்லவபுரம் இவைந்திகைப்பள்ளிக்குப் போக நேர்ந்த தகவல்களைக் கூறிச் சற்று முன்தான் அவனை அனுப்பி வைத்திருந்தாள்.

ஆந்திர இளவரசி உத்தமசீலியின் அழைப்புக்கிணங்கித் தானும் அநந்தமதியும் பல்லவபுரத்துக்குப் போனதால் ஏற்பட்ட விபரீதங்களை நினைக்க நினைக்க அவளுக்கு வேடிக்கையாகவும் இருந்தது; வேதனையாகவும் இருந்தது. இத்தனைக்கும் காரணமான ஆபத்துதவி சம்புவராயன் மேல் அடங்காச் சினம் கொண்டாள் அவள்.

'பெருவளநல்லூர் சேதியக் கலைஞரிடம் பரமேசுவர வர்மரைப்பற்றிய விஷயங்களைச் சொல்லிவிட்டுத் திரும்பி வந்த அவன் என்னைக் காணாததால் பெரிதும் அதிர்ச்சி யடைந்து விட்டிருப்பான். எதிரிகளால் எனக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்து விட்டிருக்குமோ என்று பயந்துவிட்டு மிருப்பான். அந்தக் குழப்பத்தில் இங்கே சிறுபொழுது காத்திருந்து பார்க்காமல் அவசரப்பட்டு உடனே என்னைத் தேடிக்கொண்டு ஓடிவிட்டிருக்கிறான். அவனுடைய நிலையில் வேறுயார் இருந்தாலும் அப்படித்தான் அலமந்து போய் இருப்பர். என் தந்தையார் என்னைப் பழையாறைக்கு

அழைத்து வரும்படி அவனிடம் கட்டளையிட்டிருக்கும் போது நான் இங்கே காணப்படவில்லையென்றால் அவன் மனம் என்ன பாடுபட்டிருக்கும்! பாவம், அதனால்தான் அவன் காடுகிழாள் கோயிலில் தன்னைப் பலியிட்டுக் கொள்ள முயன்றான் போலும்!' — சம்புவராயன் மேல் பொங்கியெழுந்த கோபம் இப்போது அநுதாபமாக மாறி வழிந்தது. கட-மையே உயிரென மதிக்கும் இந்தச் சுத்த வீரனின் அன்பு உள்ளத்தை எண்ணி மனம் உருகினாள்.

அவளுடைய சிந்தனை வேறு திசையில் திரும்பியது; 'நான் காணாமற் போய்விட்டதாகச் சம்புவராயன் என் தந்தையாரிடம் சொல்லியிருந்தால் அவருடைய நிலை என்ன ஆகியிருக்கும்? உயிரே பறிபோன மாதிரி பதறித் துடித்து விட்டிருப்பாரோ! அடங்காச் சினம்கொண்டு தம் எதிர்ப்பட்டவர்களையெல்லாம் சங்காரம் பண்ணுவதல்லா மல் தம்மையும் மாய்த்துக் கொள்ளத் துணிந்துவிடுவாரோ! அவருடைய அந்தப் பயங்கரக் கோபத்துக்கு முதற் பலியாகக் கூடியவன் சம்புவராயன்தான். கடமை தவறியதாகக் குற்றம் சாட்டி அவனைக் கண்டந் துண்டமாக வெட்டி யெறிந்து விட்டிருப்பார். எனினும் அவர் அக்கணமே ஆலம்பாக்கத் துக்கு ஓடோடி வந்திருக்கவேண்டுமே? என்னைப் பற்றி தகவலைத் தாமே நேரில் விசாரித்து அறிய புறப்பட்டு வந்திருப் பாரோ? இத்தனை நாட்களாகியும் அவர் வராமலிருப்பதி லிருந்து, சம்புவராயன் அந்தச் சேதியை அவரிடம் தெரிவிக்க வில்லை என்றாகிறது. அப்படியானால் இன்னமும் அவன் என்னைத் தேடும் முயற்சியிலேயே ஈடுபட்டிருக்கிறானோ?' —நெஞ்சம் நடுங்கித் தவித்த அவள், இத்தனைக்கும் காரணமான ஆந்திர இளவரசியைத் தன் வாயாரச் சபித்துத் தீர்த்தாள். ஆனால் உடனே, அப்படிச் சபித்ததற்காக மனம் வருந்தவும் செய்தாள்.

'அவள்தான் என்ன அழகான பெண்! அழகு மட்டுமல்லாமல் அற்புத குண நலன்களும் வாய்க்கப் பெற்றிருக்கிறாள். தனக்குச் சொந்தமான பட்டோலை

என்னிடம் எப்படி வந்தது என்பதை விசாரிப்பதற்காக என்னை அழைத்த அவள், எத்தனை அன்போடும், பண்போடும் நடந்து கொண்டாள்! அவள் நினைத்திருந்தால் அந்த விசாரணையைச் சளுக்கியத் தளபதி வில்வேலியைக் கொண்டே நடத்தியிருக்கலாம்; அப்படிச் செய்திருந்தால் எண்ணிப் பார்க்கவும் இயலாத எத்தனை விபரீதங்கள் ஏற்பட்டு விட்டிருக்கும். அதற்கெல்லாம் அவள் இடம் வைக்காமல் அந்த விஷயத்தை எவ்வளவு சாதுர்யமாகக் கேட்டுத் தெரிந்துகொண்டாள்! இத்தனைக்கும் அவள் அதை ஏற்கனவே அறிந்தும் இருக்கிறாள். அதுமட்டுமின்றி, என்னைப்பற்றிய உண்மைகளையும் பல்லவ மன்னர்— பல்லவ இளவரசர்— ஆகியோரைப் பற்றிய இரகசியங் களையும் தெரிந்து வைத்திருக்கிறாள். அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருந்த பல்லவ இளவரசர் தப்பியோட உதவியது நான்தான் என்ற விவரத்தையும் அறிந்து கொண்டிருக்கிறாள். பரமேசுவரவர்மர் அநந்தமதியின் இல்லத்துக்கு வந்து போன விஷயமும் அவளுக்குத் தெரிந்திருக்கிறது. இவ்வளவையும் தெரிந்து கொண்டு அவள் ஏன் என்னிடம் அத்தனை அன்பும் பரிவும் காட்டினாள்? அவள் நினைத்திருந்தால் என்னை மட்டுமல்ல, பரமேசுவர வர்மரையும், கோவிந்தவர்மரையும் கூட எளிதில் சிறைப் பிடிக்கச் செய்திருக்கலாமே? அவளுடைய பெரிய தந்தை யான சளுக்கிய விக்கிரமாதித்தனும், தளபதி வில்வேலியும் பல்லவமன்னரைத் தேடிப் பிடிப்பதற்காக ஏதேதோ முயற்சிகளில் ஈடுபட்டிருக்கும்போது, இவள் அவர்களுக்கு உதவி செய்யாமல் இப்படி நடந்துகொள்ளக் காரணம் என்ன? பரமேசுவரவர்மர் எதிரிகளின் பாசறையான பல்லவபுரத் துக்குப் போய்த் தம்மைத் தாமே ஓவியமாக வரைந்து கொடுத்துவிட்டு எவ்வித இன்னலுக்கும் உள்ளாகாமல் தப்பிவர அநுகூலமாக இருந்தவளும் இந்த ஆந்திர இளவரசிதானே? இவளைத்தான் “வரிப் புலிகள் வாழும் காட்டில் மாசற்ற மான்களும் வாசம் செய்யலாம்” என்று அவர் குறிப்பிட்டுப் புகழ்ந்தாரோ?’

இளங்கோப்பிச்சி தன் பூவுடலைச் சிலிர்த்துக்கொண்டு நிமிர்ந்தாள். 'இல்லை, இல்லை. இதற்குள் அவளைப்பற்றி இத்தனை உயர்வாக எண்ணிவிடக் கூடாது. விஷத்தை உள்ளடக்கிய நல்ல பாம்புபோலவும் அவள் இருக்கலாம். எங்களையெல்லாம் கூண்டோடு அழிக்க ஒரு சரியான சந்தர்ப்பத்தை உருவாக்கும் பொருட்டு அவள் இப்படி நல்லவள் போல் நடித்துப் பசப்பியிருக்கலாம். அவளை நம்பக் கூடாது; நம்பவே கூடாது. பல்லவ இளவரசர் வந்ததும் இந்த விவரங்களைக் கூறி, அவரது யோசனைப்படியே இனி நடந்துகொள்ள வேண்டும்.'

தெளிந்த மனத்துடன் எழுந்த அவள் தன்னை எளிய முறையில் அலங்கரித்துக்கொள்ள விரும்பினாள். பல தினங்களுக்குப் பின் இன்றுதான் அவளுக்கு இந்த எண்ணமே தோன்றியது. மகிழ்ச்சியுடன் அந்தப் பணியில் ஈடுபடலானாள்.

உள்ளே, அணி மணி ஆடைகளை மூட்டை கட்டுவதில் முனைந்திருந்தாள் அநந்தமதி. கோவிந்தவர்மன் இங்கு வந்ததும் இளங்கோப்பிச்சியை அவன் பொறுப்பில் ஒப்படைத்துவிட்டுப் பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்துக்குப் பயணமாகி விடவேண்டும் என்பது அவள் திட்டம்.

சில விநாடி நேரச் சிங்காரிப்பிலேயே அழகின் இலக்கணமாகிவிட்ட இளங்கோப்பிச்சி குதூகலத்துடன் துள்ளியெழுந்து வாசல் திண்ணைக்கு வந்து சேர்ந்தாள். கவிதையெழில் வழியும் அவளது கருநீலக் கண்கள் பல்லவபுரம் சாலையை நோக்கிப் பாய்ந்தன. அவள் மனமோ, கோவிந்தவர்மனின் சுந்தர வடிவத்தைக் காதல் தூரிகையால் சித்திரித்து வழிபடத் தொடங்கியது.

'நான் காணாமற் போய்விட்டதாகச் சம்புவராயன் சொன்னதைக் கேட்டு அவர் துடித்துவிட்டாராமே! புத்தி பேதலித்தவர்போல் புலம்பிக் கொண்டிருக்கிறாராமே!

அன்றிலிருந்து இன்றுவரை ஊண் உறக்கமும் கொள்ள வில்லையாமே! ஐயோ, அவர் என்பொருட்டு எத்தனை வேதனைகளை அநுபவிக்கிறார்! நான் இங்கிருப்பதாக இளங்காரிக்குடையான் போய்ச் சொன்னதுமே மகிழ்ச்சிக் கூத்தாடுவார்! அந்த விநாடியே முத்தரையரிடம் விடை பெற்றுக் கொண்டு என்னைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டு விட்டிருப்பார்! வாயுவேகம், மனோவேகமாகத் தம் புரவியைச் செலுத்தி வந்துகொண்டிருப்பார்!'

மகிழ்ச்சியால் விம்மிப் புடைத்த நெஞ்சகத்தைத் தன் இரு கைகளாலும் போர்த்திக்கொண்டு இன்பக் கிறக்கத்தில் ஆழ்ந்தாள் அவள்.

நேரம் நகர்ந்துகொண்டே இருந்தது. பல்லவபுரம் சாலை வெறிச்சோடியே கிடந்தது.

இளங்கோப்பிச்சி பொறுமை இழந்தாள். வாசல் திண்ணையைவிட்டுச் சாலையோரம் வந்து தொலை தூரத்துக்கு அப்பால் தன் பார்வையை ஓட்டினாள். அது சூன்யமாகவே தென்பட்டது.

அவள் வதங்கிச் சோர்ந்தாள். துக்கம் தொண்டையை அடைத்தது. ஏமாற்றம் இதயத்தை முள்ளெனக் குத்தியது. கண் கலங்கி நின்ற அவள் மீண்டும் வாசல் திண்ணைக்கே போகத் திரும்பினாள்.

'டடாக், டக்! டடாக், டக்!'

தேவகானம் கேட்ட பூங்குயில்போல் பரவசத் துள்ளலிட்டு நிமிர்ந்தாள் இளங்கோப்பிச்சி.

அதோ, பல்லவபுரம் சாலையிலே ஒரு புரவி பாய்ந்தோடி வருவது தெரிகிறது. ஒற்றைச் சக்கரம் உருண்டு வருவதுபோல் தோன்றும் அந்தச் செந்நிறப் புரவியைச் செலுத்தி வருவது யார்? சந்தேகமில்லை; பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனேதான் அவன்.!

# 51

## 'இன்றே செய்!'

மதுவுண்ட பேயெனப் பாய்ந்து வந்த அந்தப் புரவியைப் பார்த்துக்கொண்ட மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்து நின்றாள் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி.

'என்னைப் பார்க்க வேண்டும் என்பதற்காக அவர்தாம் எத்தனை ஆவேச ஆவலோடு குதிரையைச் செலுத்தி வருகிறார்! அவரது நெஞ்சத்தில் குமுறிப் பொங்கும் காதல் தீப்பிழம்பாக வெளிப்பட்டுக் காற்றில் பற்றியெரிந்துவருவது போல் அல்லவா அந்தக் குதிரை கடுகி வந்து கொண்டிருக் கிறது!'

பெருமையால் மனம் பூரித்துக் குலுங்கினாள் அவள்.

'இன்னும் சில விநாடிகளில் அந்தப் புரவி இங்கே திமிறலிட்டுக் கொண்டு வந்து நின்றுவிடும். தென்றல் தேரிலிருந்து இறங்கும் மாரவேள்போல் அவர் துள்ளிக் குதித்துக் கீழே இறங்குவார். அப்போது நான் என்ன செய்வது? அஞ்சுகமெனப் பறந்தோடி அவரது தோளிலே தொற்றிக் கொண்டு ஊஞ்சலாடலாமா? அல்லது வியர்வை வழியும் அவருடைய விரிந்த மார்பிலே பட்டுத் துகில்போல் ஒட்டிக் கொள்ளலாமா?'

அவள் முகம் நாணத்தால் கன்றிச் சிவந்தது. தன் பொன்னவிர் மேனியைக் கூனிக் குறுக்கிக்கொண்டு ஓரடி பின்னால் நகர்ந்தாள்.

'வேண்டாம். அப்படியெல்லாம் அசட்டுத்தனமாக நடந்துகொள்ளக் கூடாது. அவரே அவருடைய

அன்பாவேசத்தால் என்ன செய்கிறாரோ அதற்கெல்லாம் என்னை உட்படுத்திவிட்டு ஒன்றும் தெரியாதவள் மாதிரி இருந்து விடவேண்டும். அத்துடன் அவர்மேல் கொஞ்சம் கோபமாக இருப்பது போலக்கூடக் காட்டிக்கொள்ள வேண்டும். பின்னே என்னவாம்? அந்த ஆபத்துதவி இளங்காரியிடம் சொல்லியனுப்பி எவ்வளவு நேரமாகி விட்டது! அவர் இப்போதுதானே சாவதானமாகப் புறப்பட்டு வருகிறார்? இவ்வளவு வேகமாகத்தானா தம் குதிரையை அவரால் செலுத்த முடியும்! இன்னும் விரைவாகச் செலுத்தி வர இயலாதா? இப்படித் தாமதமாக வரும் அவருக்கு என்ன தண்டனை விதிக்கலாம்? எங்காவது போய்ச் சிறுபொழுது ஒளிந்துகொண்டு விடலாமா? சற்று நேரமாவது என்னை அவர் தேடியலைந்து தவிக்கும்படி விட்டுவிடலாமா?'

சட்டென்று தன் பூவுடலை ஒரு குலுக்குக் குலுக்கிக் கொண்டு நெளிந்தாள் அவள்.

'ஐயோ! எனக்குத்தான் எத்தனை பெரிய கல் நெஞ்சம்! என்னைக் காணாமற் பல தினங்களாக ஊண் உறக்கமின்றி உருகிக் கரைந்துகொண்டிருக்கும் அவருக்கு விளை யாட்டாகக் கூட அப்படியொரு தண்டனை விதிக்க நான் நினைக்கலாமோ? அவ்வாறு நினைத்த என் நெஞ்சுக்குத்தான் தண்டனை அளிக்கவேண்டும்! என்ன தண்டனை அளிப்பது? அவர் வந்ததும் அவரையும் முந்திக்கொண்டு போய் அவருடைய கன்னத்தில் நானே ஓர் இதழ் முத்திரையைப் பதித்து விடலாமா? ஆமாம்! அதுதான் என்னுடைய நெஞ்சத்துக்குச் சரியான தண்டனை!'

அவள் 'களுக்' கென்று சிரித்தாள். தன்னை மீறிய படபடப்போடு சாலையின் ஓரத்தைவிட்டுச் சற்றே முன்னால் தள்ளி வந்தாள்.

விசாலமான அந்தச் செம்மண்சாலை அதிர்ந்து கிடுகிடுத்தது. பாய் விரித்தாற்போல் உதிர்ந்து கிடந்த இலைச் சருகுகள் பட்டாம்பூச்சிக் கூட்டமெனப் பறந்து சிதறின. பறை

முழக்கம் போன்ற குளம்போசையுடன் புழுதிக் கூடாரமிட்டுப் புயலெனப் பாய்ந்து வந்த புரவி, இதோ அவளை நெருங்கிவிட்டது.

நெஞ்சத்துக் காதலையெல்லாம் வழித்துத் தன் நீள்விழிகளிலே தேக்கிக்கொண்டு நிமிர்ந்த இளங்கோப்பிச்சி, அந்த அழகிய குதிரையையும், அதை வீறார்ந்த கோலத்தில் செலுத்தி வரும் பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனையும் மையலுடன் ஏறிட்டு நோக்கினாள்.

என்ன ஆச்சரியம்! அம்பெனப் பாய்ந்து வந்த புரவி அவளைப் புழுதியால் மறைத்துவிட்டு அங்கே ஒரு கணமும் நில்லாமல் அவ்விடத்தைக் கடந்து ஓடியது!

கண்ணிலே மின்னலடித்தாற்போல் கதிகலங்கி விட்டாள் இளங்கோப்பிச்சி. அவளுக்கு ஒன்றுமே புரிய வில்லை. வெலவெலத்து நின்ற அவள் தன் விழி வளையக் குழியிலே செருமிய மண் புழுதியை நிமிண்டித் துடைத்து விட்டுக் கொண்டு திரும்பினாள்.

அதோ, வேங்கைப் பாய்ச்சலிட்டு விரைந்தோடிக் கொண்டிருக்கிறது அந்தக் குதிரை! அதைச் செலுத்திச் செல்பவன் கோவிந்தவர்மன்தானே? அதில் சந்தேகமில்லை. அப்படியானால் அவன் ஏன் அவளைத் திரும்பியும் பார்க்கவில்லை? சாலையின் இடதுபுறம் அவள் நின்றிருக்க, அவன் வலது பக்கமாகவே தன் முகத்தைத் திருப்பிக்கொண்டு போகிறானே? அளவுக்கு மீறிய வேகத்தில் புரவியைச் செலுத்தி வந்ததால் அந்த இடத்திலே சட்டென்று அதை நிறுத்திப் பிடித்து இறங்க அவனால் இயலாமற் போய்விட்டதோ? அவனைப்போலவே அந்தப் புரவியும் நிதானம் தவறிவிட்டதோ?—

இரண்டு பட்டிகா தூரம் சென்றுவிட்ட குதிரை சடாரென்று தன் வேகத்தைக் குறைத்துப் பெருங் குரலெடுத்துக் கனைத்துக்கொண்டே திமிறித் துள்ளி நின்றது. அவன் திரும்பிப் பார்த்தான்.

பொறி கலங்கி நின்ற இளங்கோப்பிச்சி புத்துயிர் பெற்று நிமிர்ந்தாள். முன்னைவிடப் பன்மடங்கு உற்சாக மகிழ்ச்சியுடன் அவனை நோக்கிப் பாய்ந்து செல்லத் தன் பூம்பாதங்களைப் பெயர்த்தாள். அதே சமயம், முரண்டிக் கொண்டு நின்ற குதிரையின் பிடரியில் ஓங்கி ஒரு குத்துவிட்டான் கோவிந்தவர்மன். அடுத்த கணம், நொப்பும் நுரையுமாகக் கக்கிக் கனைத்துக் கொண்டே சுழன்று திரும்பிய அந்தப் புரவி முன்போலவே வெறிப் பாய்ச்சலிட்டு விரைந்தோடி மறைந்தே விட்டது!

உலகம் ஒளி மயமாகத்தான் இருந்தது. ஆனால் இளங்கோப்பிச்சியின் கண்ணெதிரே மட்டும் அது இருண்டு சுழல ஆரம்பித்தது. அப்புறம் அதையும் அவளால் உணர முடியாமல் போய்விட்டது.

அப்படிக் கழன்று சென்ற உணர்வு திரும்பி வந்து சேர்ந்து அவள் கண் திறந்து பார்த்தபோது உலகம் உண்மையாகவே இருண்டுகொண்டிருந்தது. கட்டிலின் தலைமாட்டில் கண்ணீர் சோர நின்றிருந்த மூதாட்டி அநந்தமதி அவசரமாகப் போய் அந்த அறையில் விளக்கேற்றிவிட்டு, சிற்றுணவு தயாரித்துக் கொண்டுவர அடுத்த அறைக்கு விரைந்தாள்.

வதங்கிய மாதவிக் கொடிபோல் கட்டிலில் படுத்துக் கிடந்த இளங்கோப்பிச்சி மெல்ல எழுந்து உட்கார்ந்து சுற்று முற்றும் பார்த்தாள். அன்றைய பகல்பொழுது நடந்த சம்பவங்கள் அனைத்தும் ஒன்றன்பின் ஒன்றாக அவளுடைய நினைவில் வந்து நிறையலாயின. "அவர் போய்விட்டாரா? என்னைப் பார்க்காமலே அவர் போய்விட்டாரா?" என்று விம்மலுடன் பொருமலுமாகக் கதறிக் கொண்டே எழுந்த அவள், நிற்கத் தெரியாத பச்சிளங் குழந்தைபோல் தயங்கித் தள்ளாடிக் கட்டிலில் சாய்ந்தாள். அவளுக்கு மீண்டும் மயக்கம் வருவதுபோல் இருந்தது. ஆயினும் தன்னைச் சமாளித்துக்கொண்டு கட்டிலில் தலைப்புச் சட்டத்தில்

ஒருக்களித்து முடங்கியவாறு எதிரேயிருந்த சாளரத்தின் வழியே பார்வையைச் செலுத்தினாள்.

ஒளித் திரை சுருண்டு இருள் திரை வேகமாக விரிந்து வந்த அந்த நேரத்தில், வாசல் வேலியோரம் இருந்த பவழமல்லி மரமும், அதற்கு அப்பால் இருந்த நெடுஞ்சாலையும் செவ்வாழைச் சாற்றைக்கொண்டு தீட்டிய சித்திரங்கள் போல் மங்கலாகத் தோற்றம் அளித்தன. அவற்றிடையே ஏதோ ஒரு கரிய நிழல் அங்குமிங்குமாக அசைவதுபோலவும் பிறகு அது மறைவதுபோலவும் தெரிந்தது.

இளங்கோப்பிச்சி அதைப் பார்த்துக்கொண்டுதான் இருந்தாள். ஆனால் அந்தக் காட்சி அவளுடைய கட்புல னோடு மட்டுமே நின்றிவிட்டிருந்தது. கண்ணின் தொடர்பி லிருந்து அறுந்து நின்ற மனம், குழப்பமான பல கேள்விகளை எழுப்பி அவற்றிலேயே சிக்கித் திணறிக் கொண்டிருந்தது.

'அவர் ஏன் என்னைப் பார்க்காமல் போய்விட்டார்? என்மீது அவருக்கு என்ன கோபம்? அந்த அளவு அவர் கோபப்படும்படி நான் என்ன பிழை செய்துவிட்டேன்?'

அழுகை அவள் தொண்டையை அடைத்தது.

'ஆந்திர இளவரசி உத்தமசீலியின் அழைப்புக் கிணங்கிப் பல்லவபுரம் இலவந்திகைப்பள்ளிக்கு நான் போனதையும் அவரைப்பற்றிய உண்மைகளை அவளிடம் வெளியிட்டு விட்டதையும் அறிந்து என்மீது அவர் சீற்றமும் அவநம்பிக்கை யும் கொண்டுவிட்டாரா? எமகிங்கரர்களைப் போன்ற சளுக்கிய வீரர்கள் நேருக்கு நேர் வந்து அழைக்கும்போது அதை என்னால் எப்படித் தட்டிக் கழிக்க இயலும்? அல்லது அவர்களை ஏமாற்றிவிட்டுத் தப்பிச் செல்லத்தான் முடியுமா? அந்தப் பட்டோலை சம்பந்தமான எல்லா விவரங்களையும் அவள் முன்கூட்டி அறிந்து என் முகத்துக்கு நேரேயே சொல்லிக் கேட்கும்போது அவற்றை என்னால் எப்படி மறுக்க இயலும்? மறுத்தால் பயங்கர விளைவு நேரிடும் என்று

எச்சரித்தாளே! இதெல்லாம் அவருடைய அறிவுக்கு எட்டா மலா போய்விட்டிருக்கும்?'

இளங்கோப்பிச்சி வேகமாகத் தலையை ஆட்டிக் கொண்டாள்.

'இல்லை; அப்படியெல்லாம் அவர் என்னைப் பற்றித் தவறாக ஏதும் நினைக்கவே மாட்டார். அன்றொரு நாள் அந்தப் பட்டோலையை அதன் விவரம் அறியாமல் ஆந்திர இளவரசியிடம் கொடுத்து விட்டதற்காகக்கூட என்மீது வருத்தமோ சினமோ கொள்ளாத அவர், இந்த விஷயத்துக்காகவா இத்தனை கோபமும் ஆத்திரமும் கொண்டுவிடுவார்? இன்னும் சொல்லப் போனால், எதிரிகளின் இருப்பிடத்துக்குப் போய் எவ்வித ஆபத்துமின்றி நான் திரும்பி வந்துவிட்டதற்காக எல்லையற்ற மகிழ்ச்சியே அடைந்திருப்பார். பின் ஏன் அவர் என்னைப் பார்க்காமலே போய்விட்டார்?,

திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவள்போல் உடம்பைச் சிலிர்த்துவிட்டு நிமிர்ந்தாள் அவள்.

'மண்டகப்பட்டுக் குகைக் கோயிலிலே என் தந்தை யாரை இவர் சந்தித்தபோது அவருடைய போக்கில் ஏதோ மாறுதல் கண்டதாகச் சொன்னாரே! அந்தக் கசப்பான கருத்தை மேலும் உறுதிப்படுத்திக் கொள்ளக்கூடிய புதிய நிகழ்ச்சி ஏதேனும் நிகழ்ந்துவிட்டதோ? அதனால்தான் என் தந்தையார் என்னை உடனே பழையாறைக்கு அழைத்து வந்து சேர்க்கும்படி சம்புவராயனை அனுப்பி வைத்தாரோ? சில தினங்களுக்கு முன் பழையாறைக்குப் போன பெரும் பிடுகு முத்தரையர் மிகவும் மனத்தாங்கலோடு திரும்பி வந்திருப்பதாகவும், அதற்கான காரணம் தனக்குத் தெரியாதென்றும் இளங்காரிக்குடையான் இன்று காலை இங்கு வந்தபோது கூறினானே? முத்தரையர் அப்படி மனத்தாங்கலுடன் வர அங்கே என்ன நடந்திருக்கும்? உண்மையில் என் தந்தையாரின் போக்கு மாறித்தான்

விட்டதா? அதை அறிந்ததால் ஏற்பட்ட கோபத்தைத்தான் இவர் என்மீது காட்டிவிட்டுப் போனாரோ?...'

எதிரேயிருந்த சாளரக் கதவை யாரோ படீரென்று அடித்துச் சாத்தித் திறக்கும் ஒலி கேட்டுத் திடுக்குற்று எழுந்தாள் இளங்கோப்பிச்சி. அதே சமயம் அந்தச் சாளரத்து வழியேயிருந்து அவளை நோக்கி விர்ரெனப் பறந்து வந்து விழுந்தது ஓர் ஓலைச் சுருள். அதைக் குனிந்து எடுத்துக் கொண்டு ஓடிப்போய் வெளியே எட்டிப் பார்த்தாள் அவள். இருளோடு இருளாக ஒரு கரிய உருவம் சாலையில் இறங்கி ஓடுவது தெரிந்தது.

பயப்பிராந்தியால் நடுநடுங்கிய அவள் பரபரப்புடன் விளக்கடியில் வந்து நின்று அந்தச் சிறிய ஓலைச்சுருளை அவசரமாகப் பிரித்துப் படித்தாள்:

"சோழ இளவரசி இளங்கோப்பிச்சிக்கு இதன் மூலம் தெரியப்படுத்துவது யாதெனில், — பல்லவ இளவரசர் கோவிந்தவர்மரைக் காதலிக்கும் நீ, வெகு விரைவிலே சளுக்கிய இளவரசனான விநயா தித்தனுக்கு மனைவியாகப் போகிறாய்; அதற்கு உன் தந்தையார் ஒப்புதலும் தந்துவிட்டார். இது முதல் சேதி. அடுத்து, சளுக்கிய விக்கிரமாதித்தர் இன்னும் சில தினங்களில் உன் உறவினர் நாடான பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கத் திட்டமிட்டிருக் கிறார். இது இரண்டாவது சேதி. இவ்விரண்டு சேதிகளையும் அறிந்தபின் நீ என்ன செய்யப் போகிறாய்? ஏதாவது செய்ய நினைத்தால் அதை இன்றே செய்."

யாரால் எழுதப்பெற்றதென்ற விவரமோ, யார் மூலமாக அனுப்பப்பட்டதென்ற தகவலோ இன்றி மொட்டையாக முடிந்த அவ்வோலையைப் படித்து மூச்சுத் திணறிவிட்டாள் இளங்கோப்பிச்சி. பித்துப் பிடித்தவள் போல் அங்குமிங்குமாக

ஓடி அலைமோதினாள். பிறகு 'ஓ' வென அலறிப் புலம்பிக்கொண்டே வந்து கட்டிலில் குப்புறச் சாய்ந்தாள்.

அவளுக்கு எல்லாம் புரிந்துவிட்டது. சம்புவராயன் அவளைப் பழையாறைக்கு அழைத்துப்போக வந்த காரணமும், கோவிந்தவர்மன் அவளைத் திரும்பிப் பார்க்காமல் உதாசீனப்படுத்திவிட்டுச் சென்ற காரணமும் இப்போது நன்றாகப் புரிந்துவிட்டன. ஆனால் இந்த ஓலை யாரால் எழுதப்பெற்று, யார் மூலமாக வந்து சேர்ந்தது என்ற விவரம் மட்டும் அவளுக்கு விளங்கவே இல்லை.

'ஒருகால் பல்லவ இளவரசரே இவ்வோலையை எழுதிச் சாளரத்து வழியே எறிந்துவிட்டுப் போய் இருப்பாரோ?'

அப்படித்தான் இருக்கும் என்று அவள் எண்ணினாள். ஆயினும் அதை நிச்சயப்படுத்திக்கொள்ள அவளால் இயலவில்லை. மேலும், அந்த ஓலையில் தெரிவித்துள்ள இரண்டு சேதிகளும் உண்மையானவை தாமா என்ற சந்தேகம் வேறு அவள் மனத்தை உருட்டிப் புரட்டி எடுத்தது. கோவிந்தவர்மன் அவளைப் பார்த்தும் பாராமல் போனதைக் கொண்டு அவை மெய்யான சேதிகளாகவே இருக்குமென ஒருவாறு தீர்மானித்துக் கொண்டாள்.

அன்றிரவெல்லாம் அவளது கண்கள் வர்ஷ ருதுவாகி விட்டிருக்க, நெஞ்சமோ கிரீஷ்ம பருவத்தை எய்திவிட்டி ருந்தது.

தன்னாலான வரையில் அவளுக்கு ஆறுதல் கூறித் தேற்றமுயன்று தோல்வியுற்ற அநந்தமதி, துயரச் சோர்வுடன் தூங்கிப் போனாள். விடியற்சாம நேரத்தில் கண் விழித்து எழுந்தபோதுதான் அங்கே சோழ இளவரசி இளங்கோப்பிச்சி இல்லை என்ற விஷயம் அவளுக்குத் தெரிந்தது!

# 52

# சதி அரங்கம்

ஒரு பகலும் ஓர் இரவும் ஓடிக் கழிந்த பின்னும் உத்தமசீலியால் அந்த இன்பக் கனவிலிருந்து மீளவே முடியவில்லை. அதை நினைக்க நினைக்க அவள் நெஞ்சம் இனித்தது. அந்த நினைவே நெஞ்சமாகி அதன் ஒவ்வொரு பகுதியும் தேனைப் பிலிற்றியது.

நேற்றைய முற்பகல் அந்த ஜினாலயத்துக் குளக்கரையிலே நிகழ்ந்த காவிய மயமான சம்பவங்களை எண்ணித்தான் அப்படி களிபேருவகை அடைந்துகொண்டிருந்தாள். அந் நிகழ்ச்சிகளின் ஒவ்வோர் அசைவும் ஒரு கவிதைச் சித்திரமாக அவள் உள்ளத்தில் பதிந்திருந்தது. அங்கு உரையாடிய ஒவ்வொரு சொல்லும் ஒரு வேத மந்திரமாக செவியில் ஒலித்துக் கொண்டிருந்தது. அவ்விடத்திலே கழித்த ஒவ்வொரு விநாடியும் ஒரு கிருத யுக வரலாறாக அவளது இதயத்தில் வரையப்பெற்றிருந்தது. வரப்போகும் தன் வாழ்நாட்களை, நேற்றைய அந்தப் பாதிப் பொழுதை எண்ணியெண்ணியே கடத்தி விடலாம்போல் அவளுக்குத் தோன்றியது.

ஆத்தி மரக் கிளையிலே அவள் உட்கார்ந்திருக்க, அவளின் அழகிய பிம்பம் நீர்ப்பரப்பிலே மிதந்து கிடக்க, அந்த நீரோவியத்தையே இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் மகிழ்ச்சிக் கிறக்கமிட்டு, அதன் முக விலாசத்தில் நெளிந்த அதரங்களுக்கு நேரே தன் கரங்களை நீட்டி அவற்றை ஸ்பரிசிப்பதுபோல் அங்குள்ள நீரை அள்ளிப் பருக முயன்றானே—அந்த ஒரு நிகழ்ச்சியை மட்டும் அவள்

இரண்டொரு முறைதான் நினைத்தாள்; அதற்கு மேல் அவளால் நினைக்க முடியவில்லை. ஏனென்றால், அவளே அந்த நினைப்பாகிப் போனாள்! கண்ணாடியில் கண்ணாடியைக் காண முடியுமோ?

அந்த ஒரு நிகழ்ச்சிக்கு அவள் அத்தனை முக்கியத்துவம் கொடுத்ததற்குக் காரணம், அதை நெஞ்சில் நிறுத்தி நினைப்பதால் ஏற்படும் சொர்க்க சுகானந்த உணர்ச்சிப் பேரின்பத்துக்காக மட்டுமல்ல; அந்த நிகழ்ச்சியைக் கொண்டே அவனுடைய மனத்தை அவளால் தெள்ளத் தெளிவாக உணர்ந்தறிய முடிந்தது என்பதால்தான்! ஒரு மனிதனின் உண்மையான உள்ளம் அவனது தனிமைச் செயலிலிருந்துதானே வெளிப்படுகிறது?

'மற்றவர்களின் மனங்களை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது; ஆனால் என் மனத்தைப் பிறருக்குப் புரியவைக்க மட்டும் எனக்குத் தெரிவதில்லை.' இப்படிச் சொல்லியே அவனுடைய மனத்தை அவளுக்கு என்ன அழகாகப் புரிய வைத்துவிட்டான் அவன்!

'இலவந்திகைப் பள்ளியிலிருந்து வெளியே வரும்போது என் இதயம் ஒரு பொற்சிறையில் புகுந்துகொண்டது. அதுமுதல் நான் வெறும் மனிதனாகவே இருக்கிறேன். இனியும் இப்படியே இருப்பேன்.'—பரமெசுவரவர்மன் சொன்ன இந்தச் சொற்களை அவள் பல்லாயிரம் முறை வாய்விட்டு ஓதியிருப்பாள். ஒவ்வொரு முறை சொல்லும் போதும் அவற்றிலிருந்து புதுப் புதுப் பொருளும், புதுப் புதுச் சுவையும் அவளுக்குப் புலனாகிக் கொண்டே இருந்தன.

இப்படித் தன் மனத்தைத் திறந்து காட்டிய அவன் இறுதிவரை தன்னை ஓர் ஓவியன் என்றே எண்ணும்படி நடித்துக்கொண்டிருந்தானே, அதை நினைக்கும்போதுதான் அவளுக்குச் சிரிப்புச் சிரிப்பாக வந்தது. இப்போது அவள் அதை நினைத்து வாய்விட்டே சிரித்தாள்.

'பாவம்! அவர் இன்னாரென்ற இரகசியம் எனக்கு ஏற்கனவே தெரியும் என்பதைத் தெரிவிப்பதற்காகக்

கடைசியாய் அவரிடம் நான் சொன்னதைக் கேட்டு எப்படித் திகைத்துத் திணறிவிட்டார்! உண்மையில் அவர் அதற்காக அத்தனை திகைப்பும் திணறலும் அடைந்திருக்கத் தேவையே இல்லை. ஏனென்றால், அவர் தம்மை ஓர் ஓவியரென்று என்னிடமோ பிறரிடமோ சொல்லிக்கொள்ளவில்லை. நான்தான் அவரை அப்படி எண்ணினேன். என்னை அவர் ஏமாற்றாமலே நான் அவரிடம் ஏமாந்தேன். ஆயினும் என்னுடைய அந்தத் தவறான முடிவை வெளிப்படுத்தினால் அது என்னை அவமதிப்பதுபோல் ஆகும் என்று எண்ணி அதற்காகவே தம்மை ஓர் ஓவியரெனக் காட்டி நடித்திருக்கிறார். ஒருவர் இன்னொருவரை அவமதிப்பதில் இரண்டு வகை உண்டு; சொந்த சொற்களை அல்லது செயல்களைக் கொண்டு எதிராளியை அவமதிப்பது ஒரு வகை; எதிராளியின் தவறுகளை நேர்முகமாக எடுத்துக் காட்டி உணர்த்துவது இன்னொரு வகை. இவை இரண்டுமே பண்பாடற்ற செயல்களாகும். எனவே தான் உயர்ந்த குணமும், சிறந்த பண்பாடும் கொண்ட அவர், எனக்காகத் தம்மை ஓர் ஓவியக் கலைஞராகக் காட்டிக்கொள்ள முயன்றிருக்கிறார்.'

சிரித்துக்கொண்டிருந்த அவள் பயபக்தியுடன் குனிந்து தன் நெஞ்சை இரு கரங்களாலும் போர்த்திக் கொண்டாள். அவள் மனத்திலே மானசீக வடிவாய் கொலுவீற்றிருந்த பரமேசுவரவர்மன் இப்போது இன்னும் ஒரு படி மேலே உயர்ந்தான். அவனுடைய எழிலார்ந்த வதன வடிவத்தைத் தன் மனக் கண்ணால் பார்த்து மகிழ்ச்சிப் பரவசத்தில் ஆழ்ந்தாள் அவள்.

"இளவரசியாரின் தனிமையில் குறுக்கிடுவதற்காக மன்னிக்க வேண்டும்!"

இலவந்திகைப் பள்ளியைச் சார்ந்த ஒற்றைத் தூண்குடை மண்டபத்தில் உட்கார்ந்து இனிய நினைவுகளில் சஞ்சரித்துக்கொண்டிருந்த உத்தமசீலி சட்டென்று கண்

மலர்த்தி நிமிர்த்தாள். சளுக்கியத் தளபதி வில்வேலி முகமெல்லாம் சிரிப்பாக அவளை நோக்கி வந்து கொண்டிருந்தார்.

அவரைப் பார்த்த அவள் மனம் கூம்பிச் சிறுத்தது. முகத்தில் நிலவிய அமைதியும் பொலிவும் வறண்டு போயின. திகிலுடன் எழுந்து நின்ற அவள், "வாருங்கள் ஐயா!" என்று உயிரற்ற குரலில் வரவேற்றாள்.

"எப்போதும் போலவே இன்றும் ஒரு நல்ல சேதியோடு வந்திருக்கிறேன், இளவரசி!" என்று கலகலப்பாகக் கூறினார் வில்வேலி.

உத்தமசீலி இதைக் கேட்டு உள்ளூறக் கலங்கினாள். 'இந்த மனிதரின் நிகண்டில் நல்ல சேதி என்பதற்குத் தீய சேதி என்றுதானே பொருள்?' —போலிப் புன்னகையுடன் அவரை மௌனமாகப் பார்த்தாள் அவள்.

"நீண்ட நாட்களாக நாம் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்த ஒரு மிகப்பெரிய நல்ல சேதி அது!" —வில்வேலி வார்த்தைப் பந்தல் போட ஆரம்பித்தார்.

உத்தமசீலி மேலும் கலவரமடைந்தாள். 'நீண்ட நாட்களாக ஆவலோடு எதிர்பார்த்த மிகப்பெரிய சேதி என்ன? ஒருகால், பல்லவ மன்னர் வரைந்து கொடுத்த ஓவியத்தின் மூலம் சளுக்கிய ஒற்றர்கள் அவரைக் கண்டுபிடித்துக் கொண்டுவந்து இவரிடம் ஒப்படைத்து விட்டிருப்பார்களோ? அதைத்தான் மிகப் பெரிய சேதி என்று கூறுகிறாரோ?' —இப்படி எண்ணியதுமே அவளுக்கு உயிரே போவதுபோல் ஆகிவிட்டது. பதற்றத்துடன் ஓரடி முன் வந்த அவள், "சொல்லுங்கள், ஐயா! சீக்கிரம் சொல்லுங்கள்!" என்று குழறினாள்.

வில்வேலி அவளைப் பார்த்துக் கடகடவெனச் சிரித்தார். பிறகு ஏதோ சிந்தனை செய்பவர்போல் புருவங்களை நெரித்துக் கொண்டார்.

உத்தமசீலிக்கு ஆத்திரம் பொங்கியது. அதை அடக்கிக் கொண்டு மெல்லச் சிரித்தவாறு, "உறையூரிலிருந்து என் பெரிய தந்தையார் என்னைப் பார்க்க வந்து விட்டாரா ஐயா? அதைத்தான் நல்ல சேதி பெரிய சேதி—என்கிறீர்களா?" என்று விக்கிரமாதித்தன் பல்லவபுரத்துக்கு வந்த விவரம் தனக்குத் தெரியாத மாதிரி கேட்டாள்.

வில்வேலி தம் கையைச் சொடுக்கிக்கொண்டு நிமிர்ந்தார். "ஆகா! அந்த விஷயத்தை இளவரசியாரிடம் இன்னும் நான் சொல்லவில்லையா? அதையல்லவா முதலில் சொல்லியிருக்க வேண்டும்?... மன்னியுங்கள் அம்மணீ! தங்கள் பெரிய தந்தையார் பல்லவபுரத்துக்கு வந்து இன்றோடு நான்கு நாட்களாகின்றன ஆனால், அவசர அவசியமான சில அரசியல் அலுவல்களை அவர் கவனிக்க வேண்டியிருந்ததால் தங்களை உடனே வந்து சந்திக்க முடியாமல் ஆகிவிட்டது. நானும் இங்கு சில தினங்களாக வராமல் இருந்ததற்கு அதுதான் காரணம். இளவரசியார் இதுபற்றித் தவறாக ஏதும் கருதிவிட வேண்டாம் என்று பணிவன்போடு கேட்டுக் கொள்கிறேன்."

உத்தமசீலி அவரை இளநகையுடன் ஏறிட்டு நோக்கினாள். 'விக்கிரமாதித்தர் பல்லவபுரத்துக்கு வந்து நான்கு தினங்களாகிவிட்டன என்னும் சேதி நாகோதரனின் வாயிலாக நான் ஏற்கனவே அறிந்திருப்பேன் என்று அஞ்சியே வில்வேலி இந்த உண்மையைச் சொல்லிவிட்டார்' என்று எண்ணி உள்ளூறச் சிரித்துக்கொண்ட அவள், "அதனால் என்ன ஐயா! அரசரவர்களுக்கு எத்தனையோ அலுவல்கள் இருக்கும். அவற்றையெல்லாம் முடித்துக்கொண்டு சாவதானமாகவே அவர் என்னைச் சந்திக்க வரலாம்" என்றாள் அமைதியான குரலில்.

"நல்லது, அம்மணீ! இப்போது நான் சொல்ல வந்த சேதியைச் சொல்கிறேன்; ஆந்திர இளவரசியார் இந்த நாட்டிலே ஆற்ற வந்திருக்கும் பணிக்கு உறுதுணையாயிருந்து

உதவி செய்வதற்காக மாமன்னர் விக்கிரமாதித்தரின் அழைப்பு நேரில் சிரவணபெள்குளத்துச் சமண சங்கத் தலைவரான அகளங்க அடிகள் இன்று பல்லவபுரம் வந்து சேர்ந்துவிட்டார்.”

அதிர்ச்சியுற்றுத் தலைநிமிர்ந்த உத்தமசீலி, “என்ன! அகளங்க அடிகளார் வந்திருக்கிறாரா?’ என்று வியப்பேறிய குரலில் வினவினாள்.

“ஆம், அம்மணீ!”

“அவர் வந்துகொண்டிருக்கிறாரா? அல்லது வந்துவிட்டாரா?”

“வந்தே விட்டார்! பல்லவபுரம் அரண்மனையில் இப்போது தங்கியிருக்கிறார். அவரைக் காணும்பொருட்டுத் தங்களை அழைத்துப் போகவே வந்திருக்கிறேன்.”

உத்தமசீலியின் மனம் உலைக்களமாகியது. சளுக்கிய விக்கிரமாதித்தரும் தளபதி வில்வேலியும் சேர்ந்து தம் அரசியல் சதி நாடகத்தின் முதல் அங்கத்தை ஆரம்பித்து விட்டார்கள் என்பதை அவள் புரிந்துகொண்டாள். நிஜமான அகளங்க அடிகள் ஆதுரசாலையிலே மரணப் படுக்கையில் கிடக்கிறார் என்பதும், அவர் உடல் நலம் தேறி எழுந்திருக்க ஓரிரு வாரங்களாவது ஆகும் என்பதும் அவளுக்குத் தெரியாதா என்ன? எக்காரணத்தை முன்னிட்டும் அரசியல் சக்தியைத் தீண்டத் துணியாத அந்தத் தூய மாமுனிவரின் பெயரால் இங்கே ஏதோ ஒரு சதி நாடகம் நடத்த வந்திருக்கும் வேடதாரி யாராயிருப்பான் என்பதை அறிய அவள் மனம் துடித்தது. தன்னை ஒருவாறு திடப்படுத்திக் கொண்டு வில்வேலியுடன் பல்லவபுரம் அரண்மனைக்குப் புறப்படத் தயாரானாள்.

# 53

## யார் அந்த வேடதாரி?

கந்தர்வச் சிற்பிகளால் சமைக்கப்பெற்ற மாபெரும் கலாலயம்போல் விளங்கிய பல்லவபுரம் அரண்மனைக்கு வந்து சேர்ந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி, அங்கே அவள் தங்குவதற்காக ஏற்கனவே திட்டமிட்டுத் துப்புரவு செய்யப்பட்டிருந்த ஓர் அழகிய மண்டபத்தில் அமர்ந்து மிரட்சியுடன் அங்குமிங்குமாகப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

நிலாக் காலங்களிலே உல்லாசமாகப் பொழுது போக்குவதற்கென அமைந்த வசந்த மண்டபம் அது. அந்த மண்டபத்துக்கு நேர் எதிரே—சுமார் நூறடி தூரத்துக்கு அப்பால்—மற்றோர் எழிலார்ந்த மண்டபமும் இருந்தது. பல்லவ அரச குடும்பத்தினர் இவ்வசந்த மண்டபத்தில் அமர்ந்தவாறே இசை, நடனம், நாடகம் முதலான கலை நிகழ்ச்சிகளைக் கண்டும் கேட்டும் களிப்பதற்காக அந்தக் கலாமண்டபம் அங்கே நிர்மாணிக்கப் பெற்றிருந்தது. ஆனால் அவ்விரண்டு மண்டபங்களும் இப்போது பொலிவிழந்து பாழ்பட்டுக் காட்சியளித்தன. அவற்றைச் சுற்றியிருந்த பூஞ்சோலைகளும் பொய்கைகளும் கூட அழிந்தும் சிதைந்தும் வறண்டு விட்டுமிருந்தன.

மாலைப்போது மங்கி வரும் நேரத்தில் இந்த அநுசிதமான காட்சிகளைப் பார்க்கப் பார்க்க உத்தமசீலியின் மனம் குழப்பம் அடைந்தது. அந்தக் குழப்பத்தை அங்கு நிலவிய பயங்கர அமைதி மேலும் மிகையாக்கியது.

'யாரோ போலி வேடதாரி வந்து ஏதோ சதி நாடகம் நடத்தப் போகிறான் என்பது தெரிந்திருந்தும் நான் ஏன் இங்கு வரச் சம்மதித்தேன்? அப்போதே ஏதேனும் பொய்க் காரணம் கூறி அவனைச் சந்திக்க மறுத்துவிட்டிருக்கலாமே!"

இப்படி நினைத்த அவள் தன்னையே நொந்துகொண்டு தவிக்கலானாள்.

'இல்லை; அந்த வேடதாரி யார் என்பதை அறியத்தான் வேண்டும். அது நான் போட்டிருக்கும் திட்டங்களுக்குப் பேருதவியாகவும் இருக்கக்கூடும்.'

அவளை இங்கே அழைத்து வந்து இருத்திவிட்டு அரண்மனைக்குப் போன தளபதி வில்வேலி நீண்ட நேரமாகியும் திரும்பி வராமல் இருக்கவே அவள் மனம் மீண்டும் கலக்கமுற்றது. 'அந்த வேடதாரியுடன் என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்தரும் வருவாரோ? அதனால்தான் வில்வேலி வர இவ்வளவு தாமதமாகிறதோ?' —தன்னை மீறிய பயத்தால் நடுங்கிப் படபடத்தவாறு எழுந்தாள் அவள்.

"இளவரசியாரை வெகு நேரம் காக்க வைத்துவிட்டேன். மன்னிக்க வேண்டும்" என்று குழைவுப் புன்னகையுடன் கூறிக்கொண்டே வசந்த மண்டபத்தை நோக்கி வந்தார் தளபதி வில்வேலி.

உத்தமசீலி அவரைப் பரபரப்புடன் ஏறிட்டுப் பார்த்தாள்.

மண்டபத்தின் கீழ்ப் படியில் வந்து நின்ற வில்வேலி மெல்லச் சிரித்தவாறு, "ஆந்திர இளவரசியாருக்கு இன்று ஒரு புனித நன்னாள்! அவளது மதிப்புக்குரிய அகளங்க அடிகளை முதன் முதலாகச் சந்திக்க வாய்ப்புத் தந்த இனிய பொன்னாளுமாகும்" என்றார் கலகலப்பான குரலில்.

உத்தமசீலியின் மனம் வேகமாக அடித்துக்கொண்டது. கண்ணிமைக்காமல் அவரைப் பார்த்துக்கொண்டே ஓரடி முன்னால் வந்தாள்.

"அகளங்க அடிகள் அதோ, ஆந்திர இளவரசியாரை ஆசீர்வதிக்கிறார்! வணக்கம் செலுத்துங்கள் அம்மணீ!" என்று விநயமாகக் கூறிக்கொண்டே எதிரேயிருந்த அந்தக் கலா மண்டபத்தை நோக்கித் திரும்பினார் வில்வேலி. உத்தமசீலியும் அவசரமாகத் தன் பார்வையை மேலே உயர்த்தினாள்.

அங்கே—

காவி உடை தரித்த ஆஜானுபாகுவான மனிதனொருவன் இடக்கையில் கமண்டலமும் வலக் கையில் மயிற் பீலிக் குஞ்சமும் ஏந்தியவாறு கலா மண்டபத்தின் மேடையிலே மெல்ல உலாவிக் கொண்டிருப்பது தெரிந்தது!

திக்பிரமையுற்றுச் சிலையாக சமைந்துவிட்டாள் உத்தமசீலி.

'என்ன பயங்கரமான தோற்றம்! ஆதுரசாலையில் பார்த்த அந்த உண்மையான அகளங்க அடிகளின் அருள் மேவிய புனிதத் தோற்றத்துக்கும், இந்த அரசியல் சூதாடியான போலித் துறவியின் விகாரத் தோற்றத்துக்கும் எவ்வளவு வேறுபாடு!'

குத்திட்டு நின்ற அவள் கண்களிலிருந்து குபுகுபுவெனக் கண்ணீர் பொங்கி வழிந்தது.

"இளவரசியார் ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார் போலும்!" என்று தமக்குள் மெல்ல முணுமுணுத்தார் வில்வேலி.

கண்களை இறுக மூடிக்கொண்டு நின்ற உத்தமசீலி திடுக்குற்று விழித்தாள். 'யார் அந்த வேடதாரி? அவன் மீது ஏற்பட்ட வெறுப்பால் அவனை யார் என்று அறிய மறந்து போய்விட்டேனே!' —பரபரப்போடு தன் பார்வையைக் கூர்மையாக்கிக்கொண்டு கலா மண்டபத்துப் பக்கம் செலுத்தினாள்.

மன்மத வர்மத் திரை சுருண்டு, ரதி வர்ணத் துகில் விரியத் தொடங்கிவிட்ட அந்த நேரத்தில் அப்போலித்

துறவியின் முகத்தை அவளால் அத்தனைத் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. ஆயினும் தன் கண்ணில் முழுச் சக்தியையும் திரட்டிக்கொண்டு அவனைக் கூர்ந்து நோக்க முயன்றாள் அவள்.

'ஒரு மகா புருஷரின் பெயரிலே பொய் வேடம் தரித்து வந்திருக்கும் இவன் யாராயிருப்பான்? இவனை இதற்குமுன் நான் பார்த்திருப்பதாக நினைவு இல்லையே!'

கண்ணிமைகளைப் படபடவெனக் கொட்டிக் கொண்டு மீண்டும் தன் பார்வையைச் செலுத்தினாள்.

'என்ன! இந்தப் பக்கவாட்டுக் கோணத்தில் பார்க்கும் போது?... அவன்... இல்லை, ...அவர் ...என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்தரைப்போல் அல்லவா தோன்றுகிறது!'

தீயை மிதித்தவள்போல் காலை உதறிக்கொண்டு நிமிர்ந்த அவள் மறுபடியும் அந்த மனிதனை உற்று நோக்கினாள்.

'இல்லை; நிச்சயமாக அவர் இல்லை. ஐம்பத்தைந்து வயதைக் கடந்துவிட்ட அவருடைய முகத் தோற்றமே வேறு. இந்த வேடதாரியை அத்தனை வயதுள்ளவனாக மதிக்க முடியாது. இவனுக்கு அதிகபட்சம் முப்பது வயது இருக்கலாம். அல்லது அதைவிட இன்னும் கொஞ்சம் அதிகமாகவோ குறைவாகவோ இருக்கலாம். அப்படியானால் இவன் யார்?'

அவளுக்குப் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது: 'இந்த நபர் பழையாறைச் சோழராக இருப்பாரோ? சளுக்கிய மன்னருடன் கூட்டுச் சேர்ந்து வந்து அவருடைய சதித் திட்டங்களுக்கு உடந்தையாகி இப்படியொரு போலி வேடத்தை ஏற்றிருப்பாரோ! அல்லது விக்கிரமாதித்தருக்கும் வில்வேலிக்கும் கூடத் தெரியாமல், அவர்களையும் ஏமாற்றி, என்னையும் ஏமாற்ற இந்த அடாத வேடத்தில் வந்திருப் பாரோ?'

அவள் மனம் அந்த ஊகத்தை உடனே மறுத்துவிட்டது. 'இல்லை; வில்வேலிக்குப் பழையாறைச் சோழரை நன்றாகத்

தெரியும். இவரை அவர் வந்து சந்தித்துவிட்டுப் போயிருக்கிறார். எனவே, வில்வேலியை ஏமாற்ற அவரால் முடியாது. அவருடைய வேடத்தைக் கண்டு இவர் ஏமாந்துவிடவும் மாட்டார். அவ்வாறானால் இந்த கபட வேடதாரி யார்?'

முதலில் தோன்றிய எண்ணத்தையே வேறு விதமாகத் திருப்பிப் போட்டுப் பார்த்தாள் அவள். 'விக்கிரமாதித் தருக்கும் தெரியாமலே—அவரிடம் தெரிவிக்காமலே—வில்வேலியும் பழையாறைச் சோழரும் சேர்ந்து இந்தச் சேதி நாடகத்தை நடத்துகிறார்களோ? அல்லது அந்த வேடதாரி பழையாறைச் சோழராக இல்லாமல் வேறு யாரேனும் ஒரு சாதாரணப் படை வீரனாகவோ படை அதிகாரியாகவோ இருப்பானோ? வில்வேலியின் தூண்டுதலால் அவன் இந்த வேடத்தைத் தாங்கி வந்திருப்பானோ? அல்லது வில் வேலிக்குத் தெரியாமல் சளுக்கிய மன்னர் விக்கிரமாதித்தரே இவ்வேடதாரியைத் தயார்ப்படுத்தி அனுப்பியிருப்பாரோ?"

அவளுடைய சிந்தனை மழுங்கியது; கண் பார்வையும் மங்கலாகியது.

# 54

# வில்வேலியின் திணறல்!

பனிப் பதுமையாக உறைந்து நின்றிருந்த ஆந்திர இளவரசியையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த வில்வேலி மெல்லக் கனைத்தவாறு, “போகலாமா இளவரசி?” என்றார் கரகரத்த குரலில்.

பதற்றத்துடன் திரும்பிய உத்தமசீலி, “எங்கே ஐயா?” என்று நடுக்கமிட்டுக் கேட்டாள்.

“தங்களின் மகத்தான இலட்சியத்தைச் செயலாக்குவதற் கான திட்டங்களைப் பற்றி விவாதிக்க!”

அவள் முகம் வெளுத்துவிட்டது. வேதனையுடன் தலைகுனிந்து மௌனம் சாதித்தாள்.

“இளவரசியாருக்கு என்ன தயக்கம்? மாபெரும் சமண சங்கத்தின் தலைவரான அகளங்க அடிகளோடு நேருக்கு நேர் பேச அச்சப்படுகிறாரா?”

“இல்லை, ஐயா...”

“ஆம் அம்மணி! அதற்காகத்தான் நீங்கள் அச்சப்பட்டுத் தயங்குகிறீர்கள் என்பது எனக்குத் தெரிகிறது. அந்தக் கவலை வேண்டாம். தங்கள் திட்டங்களை அவருடன் பரிமாறிக் கொள்ள நான் வேறோர் ஏற்பாடும் செய்திருக்கிறேன்.

மூச்சு முட்டி நின்ற அவள் அவரை வியப்புடன் விழித்து நோக்கினாள்.

“இளவரசியார் தம் மனத்தில் வைத்திருக்கும் திட்டங்களை என்னிடம் சாங்கோபாங்கமாகச் சொல்லலாம். அவற்றை நான் அகளங்க அடிகளிடம் அப்படியே எடுத்துப்

போய்த் தெரிவிப்பேன். பிறகு அவருடைய யோசனைகளை யெல்லாம் உங்களிடம் வந்து கூறுவேன். முடிவாக நம் மன்னர் பிரானிடம் அவற்றைச் சமர்ப்பித்து அவருடைய அநுமதியின் பேரில் உடனே செயலில் இறங்குவோம்.

விழியசைக்காமல் அவரையே பார்த்துக்கொண்டிருந் தாள் உத்தமசீலி.

வில்வேலி தயக்கத்துடன் அந்தக் கலா மண்டபத்தைத் திரும்பிப் பார்த்துவிட்டுத் தணிந்த குரலில் மேலும் சொன்னார்: "இந்த யோசனையை நான் மட்டும் கூறுவதாக நினைக்காதீர்கள் அம்மணீ! அகளங்க அடிகளின் விருப்பமும் இதுவேதான். அவர் அப்படி விரும்புவதன் காரணத்தை நான் சொல்லித்தான் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும் என்பதில்லை. ஏனென்றால், சமணத் துறவிகள் கடைப் பிடிக்கும் கடின சமிதிகளைப்பற்றியும் விரதங்களைப்பற்றியும் என்னைவிட நீங்கள் நன்றாக அறிவீர்கள்."

இவ்வளவு நேரம் பேசா மடந்தையாக நின்று கொண்டிருந்த உத்தமசீலி இதைக் கேட்டு மெல்லச் சிரித்தாள். அந்தச் சிரிப்பிலே வேதனையும் வெறுப்பும் வெடித்துச் சிதறின. "இது நல்ல யோசனைதான் ஐயா! ஆனால், நான் சொல்ல நினைத்ததும் சொல்ல விரும்புவதும் வேறு."

ஒருகணம் தயங்கிய வில்வேலி, "இளவரசியார் என்ன கூற விரும்புகிறார்?" என்று புருவங்களை மேலுயர்த்திக் கொண்டு கேட்டார்.

"முதலில் என் பெரிய தந்தையார் விக்கிரமாதித்தரை நான் சந்தித்தாக வேண்டும்! அவரைப் பார்த்து என் தந்தையார் கொடுத்தனுப்பிய பட்டோலையைக் கொடுக்க வேண்டும். அதன் பிறகே மற்ற விஷயங்களைப்பற்றிச் சிந்திக்க என்னால் இயலும்."

திகைத்துத் தலை நிமிர்ந்த வில்வேலி திருதிருவென விழித்தார். தம் உடம்பை அப்படியும் இப்படியுமாக

நெளித்துக்கொண்ட அவர், "என்ன இது, சங்கடம்!" என்று கைகளைப் பிசைந்தவாறு குழறினார்.

"நீங்களே சொல்லுங்கள், ஐயா! நான் இப்படி நினைப்பது நியாயம்தானே?"

"இளவரசியார் சொல்வதும் நியாயம்தான். ஆனால்.... ஒரு முக்கியமான விஷயத்தை நான் முன்னதாகவே சொல்ல மறந்துவிட்டேன்..."

"முதலில் சொல்ல வேண்டியதை முதலில் மறந்து விடுவது தளபதியாருக்கு வழக்கமாகிவிட்டது!"

"மன்னியுங்கள், அம்மணீ! சளுக்கியச் சக்கரவர்த்தி விக்கிரமாதித்தர் இப்போது இங்கு இல்லை. அவர் ஓர் அவசர காரியமாக இன்று பகல் உறையூருக்குப் புறப்பட்டுப் போய் விட்டார்."

இதைக் கேட்டு எவ்வித பரபரப்பும் அடையாத உத்தமசீலி, "அதனாலென்ன ஐயா! அவர் எப்போது ஓய்வு கிடைத்துத் திரும்பவும் வருகிறாரோ அப்போது அவரைச் சந்தித்துக் கொள்கிறேன்!" என்றாள் அமைதியாக.

"அகளங்க அடிகள் இங்கு வந்திருக்கிறாரே இளவரசி?" என்று துடிப்புடன் வினவினார் வில்வேலி.

"நீங்களும் என் பெரிய தந்தையாரும் தானே அவரை இந்நாட்டுக்கு அழைத்து வந்திருக்கிறீர்கள்? அவருக்குப் பதில் சொல்ல வேண்டிய பொறுப்பு உங்களைச் சார்ந்தது."

தளபதி வில்வேலியின் முகம் கறுத்தது. ஏதும் பேசத் தோன்றாமல் திக்கித் திணறினார் அவர்.

"சரி, ஐயா! நான் எனது இருப்பிடம் செல்ல அநுமதி தாருங்கள்!" என்றவாறு அந்த வசந்த மண்டபத்தை விட்டுக் கீழே இறங்கினாள் உத்தமசீலி.

ஆழ்ந்த யோசனையுடன் சில விநாடி மௌனமாய் நின்ற வில்வேலி, "இளவரசியாரிடம் ஒரு வேண்டுகோள்...." என்று தயக்கத்துடன் இழுத்தார்.

அவள் அவரைத் திரும்பிப் பார்த்தாள்.

"நம் மதிப்புக்குரிய அகளங்க அடிகள் இந்த அரண்மனையிலே தங்கியிருக்கச் சங்கடப்படுகிறார். அவர் இருப்பதற்கு ஏற்ற இடம் இலவந்திகைப்பள்ளிதான். எனவே, சளுக்கிய மன்னர் வரும்வரையில் இளவரசியார் இவ்வரண் மனையிலேயே இருக்கச் சம்மதம் அளிக்கவேண்டும்."

உத்தமசீலி இதைக் கேட்டு உள்ளூற அதிர்ச்சி அடைந்தாள். அந்த ஒரே நொடியில் அவள் மனத்தில் ஏதேதோ பயங்கரக் கற்பனைகள் எல்லாம் எழுந்து அலைமோதின. தன்னைச் சமாளித்துக்கொண்டு நிமிர்ந்து, "நல்லது ஐயா! தங்கள் விருப்பப்படியே செய்யலாம். ஆனால் நான் இந்த அரண்மனையில் இருக்க விரும்பவில்லை" என்றாள் உறுதியான குரலில்.

"அப்படியானால், தங்கள்...?"

"என் பெரிய தந்தையார் சென்றிருக்கும் உறையூருக்கே என்னை அனுப்பிவிடுங்கள்! அல்லது உங்களுக்கும் எனக்கும் நம்பிக்கையான பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்திலாவது நான் தங்கியிருக்க ஏற்பாடு செய்யுங்கள்."

இவ்வாறு கூறிவிட்டு, அரண்மனை வாயிலில் இறக்கி வைக்கப்பட்டிருந்த தன் சிவிகையை நோக்கி அமைதியாக நடந்தாள் உத்தமசீலி.

# 55

# வேடத்தைக் கலைத்தான்

மன அமைதி இழந்த ஓவியன் கறுப்புத் திரையில் சேற்றைக் குழைத்துத் தீட்டிய சித்திரங்கள்போல் அந்த முன்னிரவு நேரத்தில் பல்லவபுரம் அரண்மனையும் அதனைச் சார்ந்த கோட்டை கொத்தளங்களும் பிறவும் உருவழிந்து இருண்டு காணப்பட்டன. அரண்மனைப் பகுதிகளிலே கட்டுப்பாடற்றுத் திரிந்துகொண்டிருந்த சளுக்கியக் காவல் படை வீரர்கள் ஆடிப் பாடிக் கும்மாளியிட்டுச் சிரிக்கும் ஒலிகள் அவ்வப்போது எழுந்து அங்கு நிலவிய இடுக்காட்டு அமைதியை நொறுக்கிக் குதறின. அத்துடன் அந்த வசந்த மண்டபத்துக்கு மிக அருகிலிருந்து மதம் கொண்ட யானை ஒன்று மூர்க்காவேசமாகப் பிளிறும் ஒலியும் இடையிடையே கேட்டுக்கொண்டிருந்தது.

இலவந்திகைப் பள்ளியை நோக்கிச் சிவிகையில் புறப்பட்டுவிட்ட ஆந்திர இளவரசி உத்தமசீலியையே இமைக்காமல் பார்த்தவாறு இடிவிழுந்த பனைபோல் நின்றுகொண்டிருந்த வில்வேலி தம் தோள்மீது யாரோ கை போடுவதை உணர்ந்து சட்டென்று திரும்பினார்.

“தளபதியாருக்கு என்ன நேர்ந்தது.? ஏன் இப்படித் தளர்ந்து சோர்ந்து நிற்கிறார்?” என்று மமதை நிறைந்த மிடுக்கான குரலில் கேட்டுக்கொண்டே இருள் பூசிக் கிடந்த வசந்த மண்டபத்தில் வந்து அமர்ந்தான் அந்தப் போலித்துறவி.

சலிப்புடன் பெருமூச்சுவிட்டுத் தோளைக் குலுக்கிக் கொண்ட வில்வேலி, “எல்லாம் வீண் முயற்சியாகிவிட்டது”.

என்று முணுமுணுத்தவாறு அவனருகில் சென்று தூண் ஒன்றில் சாய்ந்து உட்கார்ந்தார்.

கடுவன் பூனைகள்போல் அவ்விருவரும் ஒருவரை யொருவர் விழித்துப் பார்த்துக்கொண்டு சற்று நேரம் மௌனமாயிருந்தனர்.

"சொல்லுங்கள் தளபதியரே! என்ன நடந்தது? ஏன் திரும்பிப் போய்விட்டாள்?" என்று ஆவலுடன் கேட்டுக் கொண்டே முன்னால் நகர்ந்து வந்தான் வேடதாரி.

தளபதி வில்வேலி தம் முகத்தை வெடுக்கென்று திருப்பிக்கொண்டு, "நான்தான் சொல்லிவிட்டேனே, எல்லாம் வீண் முயற்சி என்று!" என்றார் விரக்தி படிந்த குரலில்.

"ஏன் ஐயா? என்னை அவள் அடையாளம் கண்டு கொண்டு விட்டாளா? என்மீது எப்படிச் சந்தேகப்பட்டாள்?"

"எப்படிச் சந்தேகம் கொண்டார் என்று சொல்ல முடியாது. ஆனால் நீங்கள் அகளங்க அடிகள் இல்லை என்பது மட்டும் ஆந்திர இளவரசிக்குத் தெளிவாகத் தெரிந்துவிட்டது."

"அது எப்படித் தெரிய முடியும்? அவள் அந்தச் சமணத் துறவியைப் பார்த்ததே இல்லை என்கிறீர்களே?"

"எனக்கும் அதைப்பற்றித்தான் யோசனையாக இருக்கிறது..."

"என்னை இங்கே பார்க்க வந்தபோதாவது அவளிடம் அந்த நம்பிக்கை இருந்ததா?"

"அகளங்க அடிகள் வந்திருக்கிறார் என்று நான் சொன்னதை நம்பி மிகுந்த உற்சாகத்தோடு புறப்பட்டு வருகிறார் என்றுதான் முதலில் நினைத்தேன். ஆனால் இங்கு வந்த பின் அவருடைய பேச்சும் பாவனைகளும் என்னைத் திக்குமுக்காட வைத்துவிட்டன. நாம் நடத்த முனைந்த சதி நாடகத்தை ஏற்கனவே அறிந்தவர்போலவும் அதை இன்னும் சரியாகத் தெரிந்து கொள்ள வந்தவர் போலவுமே நடந்து கொண்டார்..."

"அதாவது, அந்தச் சமண முனிவரின் பெயரிலே வேடமிட்டு வந்திருப்பது யார் என்பதை அறிந்துபோக வந்தாள் என்று சொல்லுங்கள்?"

"அப்படித்தான் நினைக்கிறேன்."

"அவ்வாறானால் என்னை அவள் அருகில் நெருங்கிப் பார்க்க முயன்றிருக்க வேண்டுமே?"

"சமண சமயத்தில் ஆழ்ந்த நம்பிக்கையும் சமணத் துறவிகளிடம் மிகுந்த மதிப்பும் வைத்திருக்கும் அவர், காவியுடைதரித்த ஒரு வேடதாரியைத் தம் கண்ணால் பார்ப்பதும் பாபம் என்று எண்ணியோ என்னவோ அம்மாதிரி முயற்சி எதுவும் செய்யவில்லை."

காவல் படை வீரர்களின் ஆடல் பாடல் அட்டகாசச் சிரிப்போலி எல்லாம் அடங்கிவிட்டிருந்தன. ஆனால் அந்த யானைப் பிளிறல் ஒலி மட்டும் பயங்கரமாகக் கேட்டுக் கொண்டே இருந்தது.

கவலையுடன் பெருமூச்சு விட்ட போலித் துறவி, "அது சரி, ஐயா! இந்நாட்டுக்கு அவள் வந்திருக்கும் விஷயமாக இப்போது என்ன முடிவில் இருக்கிறாள்?" என்று வெகு அக்கறையாக வினவினான்.

"நம் சக்கரவர்த்தி விக்கிரமாதித்தர் பல்லவபுரம் வருவதற்கு முன்வரையில் ஆந்திர இளவரசி அவ்விஷயத்திலே மிகுந்த ஆர்வமும் உற்சாகமும் கொண்டிருந்தார் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. தமிழ் நாட்டை முழுக்க முழுக்க சமணமயமாக்கிவிட வேண்டுமென்ற வேட்கை அவரிடம் பொங்கி வழிந்துகொண்டிருந்தது. ஆனால் இப்போதோ அவருடைய நாட்டம் அதிலே சிறிதும் இல்லை என்றே தோன்றுகிறது."

"நீங்கள் எப்படி இந்த முடிவுக்கு வந்தீர்கள்?"

"அவர் இங்கு வந்திருக்கும் இலட்சியப் பணிக்கான திட்டங்களைத் தெரிவிக்கும்படி கேட்டேன். தம் பெரிய

தந்தையாரை நேரில் சந்தித்த பிறகே அதுபற்றிப் பேச இயலுமென்று அலட்சியமாகச் சொல்லிவிட்டுப் போய் விட்டார்.”

“சளுக்கிய மன்னர் இங்கு வந்து சென்ற விஷயம் அவளுக்குத் தெரியாதா?”

“நானே அவரிடம் சொன்னேன்: ஆனால் அது ஏற்கனவே அவருக்குத் தெரியும்போல் இருக்கிறது!”

“அவள் எப்படி அதை அறிந்திருக்க முடியும்?”

“அவருடைய சிவிகை தூக்கிகளில் ஒருவனான நாகோதரன் என்பவன் மூலம் அவ்விஷயத்தை அறிந்திருப் பார் என்று நினைக்கிறேன்...” என்று தயக்கத்துடன் சொன்ன வில்வேலி சில விநாடிகளுக்குப் பின் மேலும் கூறினார்: “நம் சக்கரவர்த்தியவர்கள் உறையூரிலிருந்து இங்கு வந்ததும், அந்தச் சிவிகை தூக்கி நாகோதரனால் பெருவளநல்லூரிலே எனக்கு ஏற்பட்ட சங்கடங்களைக் கூறினேன். அதைக் கேட்டுச் சினமுற்ற மன்னர்பிரான் அவனைச் சித்திரவதை செய்து கொல்லும்படி கட்டளையிட்டார். இலவந்திகைப் பள்ளி நந்தவனத்தில் வைத்து நம் வீரர்கள் அந்த தண்டனையை நிறைவேற்றிக் கொண்டிருந்தார்கள். நாங்களும் அதே இடத்தில் நின்று பல முக்கியமான விஷயங்கள் பற்றிப் பேசிக்கொண்டிருந்தோம். பாண்டிய நாட்டின் மேல் படையெடுக்கவிருப்பது, அதன் பின் ஆந்திர நாட்டைச் சளுக்கிய சாம்ராஜ்யத்துடன் இணைத்துக்கொண்டு விஷ்ணுவர்த்தனரை முடியிழக்கச் செய்து விரட்டியடிப்பது, பழையாறைச் சோழரின் கூட்டுறவோடு பல்லவ அரச பீடத்தை ஸ்திரப்படுத்திக்கொண்டு அவருடைய பெண்ணை எடுத்து உறவு கொள்வது முதலான விஷயங்களைப் பேசினோம். பிறகு அங்கிருந்து புறப்பட்டுச் சென்றோம். நாங்கள் சென்ற பின் எதிர்பாராத விதமாக அங்கு ஆந்திர இளவரசி வந்திருக்கிறார். அவரைப் பார்த்ததும் அந்தச் சிவிகை தூக்கியைச் சித்திரவதை செய்துகொண்டிருந்த நம்

வீரர்கள் பயந்து அவனைக் குற்றுயிரும் குறையுயிருமாக விட்டுவிட்டு ஓடிவிட்டிருக்கிறார்கள். தம்முடைய அநுமதியின்றித் தம் பணியாளனுக்குத் தண்டனை வழங்கியதை அறிந்து சினமுற்ற இளவரசி, என்னிடம்கூடத் தெரிவிக்காமல் உடனே அவனைத் திரமிள சமண சங்கத்தார் நடத்தும் ஆதுர சாலைக்கு அனுப்பி வைத்திருக்கிறார். அதோடு நில்லாமல் மறுநாள் அந்த ஆதுரசாலைக்குப் போய் அவனைப் பார்த்துவிட்டும் வந்திருக்கிறார். எனவே, சாகப் போகிறவன் தானே என்ற நினைப்பில் அச்சிவிகை தூக்கியின் காதுபட நாங்கள் பேசியதைக் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த அவன் அவற்றைத் தன் இளவரசியிடம் சொல்லிவிட்டிருப்பான் என்றே எனக்குத் தோன்றுகிறது..."

கோபாவேசத்துடன் தரையை ஓங்கிக் குத்திய போலித் துறவி, "அந்த அற்பப் பதர் நாகோதரன் எங்கே இருக்கிறான்? அவனை இங்கே இழுத்துவரச் சொல்லுங்கள்!" என்று கூவினான்.

"அவன் இப்போது ஆதுரசாலையில் தங்கிச் சிகிச்சை பெற்று வருகிறான். ஆயினும் அவனை உடனே அழைத்து வரும்படி ஆள் அனுப்பியிருக்கிறேன். இன்னும் சற்று நேரத்தில் வந்துவிடுவான்" என்றார் வில்வேலி.

கார்மேகங்கள் ஒன்றுடன் ஒன்று முட்டி மோதுவது போன்ற பேரொலி. அந்த மதம் கொண்ட யானையின் பிளிறில் ஒலிதான் அப்படி இடியோசைபோல் கேட்டது.

இருளை ஊடுருவிப் பார்த்தவாறு ஏதோ சிந்தனையில் இருந்த வில்வேலி சட்டென்று திரும்பி, "ஆமாம்; அந்த அப்பாவி அகளங்க அடிகளை நீங்கள் நடுவழியிலே தீர்த்துக் கட்டிவிட்டு வந்த விவரம்பற்றி இதுவரை என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லையே?" என்று இழுத்தாற்போல் வினவினார்.

இதைக் கேட்டுக் கடகடவென்று நகைத்த போலித் துறவி பெருமை வழியும் குரலில் கூறினான்: "எனக்கு நீங்கள் அனுப்பிய இரகசியச் சேதிப்படி ஏழெட்டு வீரர்களைத்

துணைக்கு அழைத்துக்கொண்டு அந்தச் சிரவணபெள் குளத்துச் சமண சங்கத் தலைவரின் பல்லக்கை பின் தொடர்ந்து வந்துகொண்டிருந்தேன். பெருவளநல்லூரை அடைந்த போது இருட்டும் வேளையாகி விட்டதால் அன்றிரவு அங்கேயே தங்கிவிட்டு மறுநாள் காலை புறப்படலாம் என்று அகளங்க அடிகள் சொன்னாராம். இரவுக் காலங்களில் சமணத் துறவிகள் பயணம் செய்வ தில்லை அல்லவா? ஆனால் அவரை அழைத்து வந்த நம் பல்லக்கு தூக்கிகள் அவ்வேண்டுகோளை ஏற்காமல் ஏதோ சாக்குபோக்குச் சொல்லிவிட்டுத் தொடர்ந்து பயணமாகி யிருக்கிறார்கள். ஆலம் பாக்கம் ஏரிக்கு வடக்கே-பெருவளநல்லூர்ச் சாலையில் பல்லக்கு வந்துகொண்டிருந்த போது, அதுவரை அதைப் பின்தொடர்ந்து வந்த நான் ஏற்கனவே திட்டமிட்டபடி என் ஆட்களை ஏவிவிட்டுப் பல்லக்கை மடக்கித் தாக்கும்படி கட்டளையிட்டேன். நம்முடைய திட்டம் அந்தப் பல்லக்குத் தூக்கிகளுக்கும் தெரியக் கூடாது என்பதாலேயே அப்படி வேற்றாட்கள் தாக்குவதுபோல் தாக்கச் செய்தேன். என்னுடைய வீரர்களுக்கும் பல்லக்குத் தூக்கிகளுக்கும் கடுமையான சிலம்பச் சண்டை நடந்துகொண்டிருந்த போது, நான் பல்லக்கினுள்ளிருந்த அகளங்கரை நையப்புடைத்துக் கழுத்தை நெரித்துச் சாலையோரம் தூக்கி எறிந்துவிட்டுப் பல்லக்கில் ஏறி அமர்ந்தேன். சண்டையிட்டுக்கொண்டிருந்த என் வீரர்கள் இருளில் ஓடி மறைந்து விடவே, விவரம் தெரியாத பல்லக்குத் தூக்கிகள் தொடர்ந்து தம் பயணத்தை மேற்கொண்டனர். பல்லவபுரம் அரண்மனையிலே அகளங்க அடிகளாக நான் வந்து இறங்கினேன்."

இந்த நெஞ்சுறுத்தும் விவரங்களை ஆர்வத்துடன் கேட்டுக்கொண்டிருந்த வில்வேலி நீண்ட பெருமூச்சு விட்டு, "ஹூம்! கடுகளவு பயனுமின்றி ஒரு பெரிய மனிதரின் உயிரைப் பலி கொண்டுவிட்டோம்!" என்று முனகினார்.

"பயனே இல்லாத பொருளாக நாம் மதிப்பது மனித உயிர் ஒன்றைத்தானே ஐயா?" என்று சிரித்தான் போலித் துறவி.

அவனையே முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்த வில்வேலி, "முதலில் இந்த வேடத்தைக் கலையுங்கள். பிறகு மற்றவற்றைப் பேசுவோம்" என்று கரகரத்தார்.

"ஏன், இந்தக் கோலத்தில் என்னைப் பார்க்க உங்களுக்கே பிடிக்கவில்லையா?"

"நான் அப்படிச் சொல்லவில்லை. இந்தப் பவித்திர மான ஆடைகளையும் புனிதச் சின்னங்களையும் இன்னமும் அணிந்துகொண்டிருக்க வேண்டாமே, என்றுதான் சொல்கிறேன்."

"ஏதேது! தளபதியார்கூடப் பவித்திரம், புனிதம் என்றெல்லாம் பேச ஆரம்பித்துவிட்டாரே! எப்போதிருந்து இதெல்லாம் நம்பிக்கை?"

"நம்பிக்கை உண்டோ இல்லையோ, ஆனால் இம்மாதிரி ஆடைகளும் சின்னங்களும் மனித மனத்தை மாற்றும் சக்தி படைத்தவை என்பதில் மட்டும் எனக்குப் பரிபூரண நம்பிக்கை உண்டு'

"உண்மைதான் ஐயா! கடந்த ஐந்தாறு தினங்களாக இந்தத் துறவி வேடத்தில் இருந்துவரும் நான் என்னை யறியாமலே ஏதோ ஒருவித மாறுதலுக்கு உள்ளாகிக் கொண்டிருப்பது போலத்தான் தோன்றுகிறது. அதை நினைத்து நானே சில சமயம் பயந்துகொண்டுமிருக்கிறேன்" என்று வெறுப்புடன் கூறிக்கொண்டே சிகையை அழுத்தி, மழித்த தலைபோல ஆக்கிக்கொள்ள உதவிய தலை உறையையும், கையிலிருந்த மயிற்பீலிக் குஞ்சத்தையும் கமண்டலத்தையும், போர்த்தியிருந்த காவியுடையையும் கழற்றி ஒரு மூலையில் வீசியெறிந்தான்.

அவனும் வில்வேலியும் அங்கிருந்து எழுந்து விளக்கேற்றிய அரண்மனை முன்றிலை நோக்கி நடந்தனர்.

# 56

## விநயாதித்தன்

யார் இந்த வாலிபன்? அவனுக்குச் சுமார் முப்பது வயது இருக்கும். சுட்ட செங்கல் நிறமாயிருந்த அவனது உடலின் ஒவ்வோர் அங்கமும் வாட்ட சாட்டமான வளர்ச்சி பெற்றுத் திண்மைப் புடைப்புடன் காணப்பட்டது. குறுகத்திரித்த சுருண்ட கேசம் தலையில் கூடைபோல் தோன்றினாலும் அவனது நீண்ட முகம் நிமிரும்போது அந்தக் குறை அத்தனை பெரிதாகத் தெரியவில்லை. நீண்ட முகத்துக்கு ஏற்ற தடித்த உதடுகள். கொட்டையற்ற முந்திரிப் பழத்தை உதடுகளுக்குமேல் ஒட்டி வைத்தாற்போன்ற மூக்கு. வீங்கிப்புடைத்த இமைச் சருமத்தின் அடியிலே ஒடுங்கிப் பளபளக்கும் சிறிய கண்கள்-என்றிவ்வாறு விளங்கிய அவன் கலகலவென்று சிரித்துக்கொண்டே கம்பீரமாக நிமிர்ந்து உட்கார்ந்தான்.

"சளுக்கிய இளவரசர் விநாயதித்தரை இப்போதுதான் என்னால் மகிழ்ச்சியுடன் பார்க்க முடிகிறது!" என்று கூறி மெல்ல நகைத்தார் வில்வேலி.

இவ்வளவு நேரம் சமணத் துறவி வேடத்திலிருந்த விநயாதித்தன், "இல்லை, இல்லை. நீங்களும் என் தந்தையாரும் சேர்ந்து என்னைப் பரதேசியாக்கிவிடப் பார்த்தீர்கள்" என்று சொல்லி முகத்தைச் சுளித்தான். பிறகு அவசரமாகத் திரும்பி, "அது சரி, ஐயா! பயனே இல்லாமல் ஒரு மனித உயிரைப் பலிகொண்டுவிட்டோம் என்கிறீர்களே, அந்தக் காரியத்தை நீங்கள்தாமே செய்யச் சொன்னீர்கள்? ஆந்திர இளவரசியின் இலட்சிய விஜயத்தை நமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்

கொள்ளலாம் என்ற நமது முந்தைய திட்டத்தை கைவிட்ட பின், அந்தச் சிரவணபெள்குளத்துச் சமண சங்கத் தலைவரை அநாவசியமாக இந்த நாட்டுக்கு ஏன் வரப் பண்ணினீர்கள்? அப்படி வந்தவரை என்னைவிட்டுக் கொல்லச் செய்து அவரைப் போல் வேடந்தாங்கப் பணித்தீர்கள்? இவை யெல்லாம் தேவையே இல்லாத வீண் காரியங்கள் அல்லவா?" என்று கேட்டான்.

"அவசரப்படாதீர்கள். இளவரசே! சளுக்கிய மாமன்னர் உங்களைவிட அறிவிலும் ஆற்றலிலும் வீரத்திலும் விவேகத்திலும் மூத்தவர். அவர் எந்த ஒரு காரியத்தையும் சிந்திக்காமல் செய்யமாட்டார். பல்லவ நாட்டில் சமண சமயம் மறுமலர்ச்சி பெறுமாயின் அது நம் ஆட்சி உறுதிப் பாட்டுக்குப் பேருதவியாக இருக்கும் என்று எண்ணியே ஆந்திர இளவரசியை இந்நாட்டுக்கு வரவழைத்தோம். அதே நோக்கத்துடன்தான் அகளங்க அடிகளையும் இங்கு வரப் பண்ணினோம். ஆனால், இந்நாட்டு நிலைமைகளை ஊன்றிக் கவனித்தபோது அந்த முயற்சி வெற்றி பெறாது போல் எனக்குத் தோன்றியது. ஏனென்றால், சுயாட்சி காலத்தில் மதமாற்சரியங்களாலும் கொள்கை வேறுபாடுகளாலும் பிளவுபட்டு விரோத குரோதத்துடன் வாழ்ந்து வந்த சைவர்களும் சமணர்களும் வைணவர்களும் பௌத்தர்களும் இப்போது வியக்கத்தக்க விதமாக ஒன்றுபட்டு ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள்போல் நேசம் பூண்டு நிற்கிறார்கள். தேசிய நெருக்கடி உணர்ச்சி ஒன்றே இப்போது அவர்களிடம் தலைதூக்கி நிற்கிறது. பிற சமயத்தாரைவிடச் சமணர்கள்தாம் நம்மைப் பெரிதும் வெறுக்கிறார்கள். தமது மாபெரும் பொது எதிரி என்று நம்மை அவர்கள் எதிர்க்கிறார்கள். இங்குள்ள திரமிள சமண சங்கத் தலைவரான சமந்தபத்திரர் என்பவரை நான் நேரில் சந்தித்துப் பேசியபோது இந்த உண்மை தெள்ளத் தெளிவாகத் தெரியலாயிற்று. எனவேதான் நாங்கள் முதலில் போட்ட திட்டத்தை உடனடியாக மாற்றிக் கொண்டோம். படை பலம் கொண்டு கைப்பற்றிய ஒரு நாட்டில் ஸ்திரமான

ஆட்சியை நிலைநாட்ட முடியவில்லையென்றால், பக்கத்து நாடொன்றின் மீது பாயவேண்டும் என்பது அரசியல் தந்திரங்களில் ஒன்று. அப்படி பாய்ந்தால்தான் முதலில் கைப்பற்றிய நாட்டில் பயத்தை உண்டு பண்ண முடியும். அந்தப் பயத்தை அடிப்படையாகக் கொண்டு அங்கே நிலையான ஆட்சிக்கு வழிகோலி விடலாம். இது தவிர, பல காலம் முயன்று கைப்பற்றிய நாடு கை நழுவிப் போய்விடாமல் இருக்க வேண்டுமானால் அதன் பக்கத்தில் மற்றொரு பலம் பொருந்திய நாட்டை விட்டு வைக்கக் கூடாது. அவ்வாறு விட்டு வைத்தால் அது என்றைக்கிருந்தாலுமம ஆபத்தாக முடியும். இதுவும் தவிர, வெற்றி பெற்ற ஒரு நாட்டில், அதை வெற்றி கொண்ட படை வீரர்களை அதிக நாட்களுக்கு வெறுமனே கட்டிப்போட்டு வைத்திருப்பதும் கூடாது. இதையெல்லாம் உத்தேசித்துத்தான் நம் மன்னர்பிரான் விக்கிரமாதித்தர் இந்தப் பல்லவ நாட்டின் தெற்கு எல்லையில் பலம் பொருந்திய சாம்ராஜ்யமாக விளங்கும் பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கத் தீர்மானித்தார். அதற்கான ஏற்பாடுகளிலும் இப்போது தீவிரமாகக் கவனம் செலுத்தி வருகிறார்...”

சளுக்கிய இளவரசன் சட்டென்று குறுக்கிட்டு, “இதெல்லாம் எனக்குத் தெரிந்த விவரங்கள்தான் தளபதியாரே! சமண சமயத்தின் துணை கொண்டு நம் ஆட்சியை இங்கே நிலைநாட்ட முடியாதென்பது தெரிந்த பின்னும், அதற்காக வரவழைக்கப்பட்ட ஆந்திர இளவரசியை உடனடியாக வேங்கிக்குத் திருப்பி அனுப்பாமல் வைத்துக் கொண்டிருப்பதும், அவளுக்காகச் சிரவண பௌகுளத்துச் சமண சங்கத்தலைவரை வரப் பண்ணியதும் ஏன் என்றுதான் கேட்கிறேன்?” என்றான் பொறுமை இழந்த குரலில்.

வில்வேலி இதைக் கேட்டு மெல்லச் சிரித்துவிட்டுச் சொன்னார்: “காரணம் இல்லாமல் ஒரு கடுகைக்கூட அப்பால் தூக்கிப் போடமாட்டார் நம் மன்னர்பிரான்

என்பது உங்களுக்குத் தெரியாதா? பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்க வேண்டுமென்ற திட்டம் உருவாகு முன்னே அந்தச் சமணத் துறவிக்கு நாங்கள் அழைப்பு அனுப்பி விட்டோம். அவரும் உடனே புறப்பட்டு வருகிறார் என்னும் சேதி எங்களுக்குக் கிடைத்தது. இந்நிலையில் அவரைத் தடுத்து நிறுத்த இயலாது என்று தெரிந்துதான் உங்களை விட்டு அந்தப் பயங்கர நாடகத்தை நடத்தச் செய்தார் நம் சக்கரவர்த்தி. அதற்கு மற்றொரு முக்கிய காரணமும் இருக்கிறது. நம்முடைய அழைப்பின்பேரில் அச்சமண சங்கத் தலைவர் இங்கு வந்தாலும் நமக்குச் சாதகமாக நடந்துகொள்வார் என்பது நிச்சயமில்லை. இங்குள்ள நிலைமைகளை அறிந்து நமக்கு எதிராக அவர் திரும்பினாலும் திரும்பலாம். நமது சுயரூபத்தை நாமும் அதிக நாட்கள் மூடி மறைத்து வைத்துக்கொள்ள முடியாது. நம்மை அவர் 'இனம்' கண்டு கொண்டால் நம்மீது வெறுப்படைந்து, தமக்கு மிகவும் நெருங்கிய தொடர்புடைய திரமிள சங்கத்தில் போய்ச் சேர்ந்து நமக்கு எதிரான நடவடிக்கைகளில் ஈடுபடுவாரே யானால் அவற்றைச் சமாளிக்க நம்மால் இயலாது. தலைமறைவாயிருக்கும் பரமேசுவரவர்மன் அவரைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள முற்பட்டால் நிலைமை இன்னும் மோசமாகிவிடும். பாண்டிய நாட்டிமீது படையெடுக்கவிருக்கும் இந்த நேரத்தில் இங்கே அப்படியொரு சூழ்நிலை உருவாக விடலாமா? எனவேதான் அந்தச் சமணத் துறவியைத் தீர்த்துக் கட்டிவிடுவது என்ற முடிவுக்கு வந்தோம். இனி, ஆந்திர இளவரசியைக் கொண்டு சாதிக்க எண்ணிய காரியத்தைக் கைவிட்ட பின்னும் அவரை வேங்கிக்குத் திருப்பி அனுப்பாமல் இங்கே நிறுத்தி வைத்திருப்பதன் காரணத்தைச் சொல்கிறேன். ஆந்திர மன்னர் விஷ்ணுவர்த்தனர் நெடுங்காலமாகத் தம் மனத்தில் வைத்திருந்த ஓர் இலட்சியத்தை நிறைவேற்றுவதற்காகத் தம்

அருமை மகளை இந்நாட்டுக்கு அனுப்பி வைத்திருக்கிறார். அந்தப் பெண்மணியும் அதே வேட்கையுடன் தன்னந்தனியாக இவ்வளவு தூரம் துணிந்து வந்திருக்கிறார். நாங்களும் அவரது விருப்பம் நிறைவேற உதவி புரிவதாக வாக்களித்தோம். வரவேற்றோம். அப்படிச் செய்துவிட்டுத் திடீரென்று அவரைத் திரும்பிப் போகும்படி சொன்னால் அதன் விளைவு என்ன ஆகும்? ஆந்திர இளவரசியாருக்கும் அவருடைய தந்தையான விஷ்ணுவர்த்தனருக்கும் நம்மீது மனக் கசப்பு ஏற்படும். அத்துடன், ஆந்திர நாட்டைப்பற்றிய நமது பிற்காலத் திட்டத்தை அந்தச் சிவிகைதூக்கி நாகோதரனின் மூலம் அறிந்திருந்தால் அக்கசப்பு உணர்ச்சி இன்னும் கடுமையாவ தோடு அவர்களை அது எச்சரிக்கை படுத்தியும் விடும். இந்தப் பல்லவ நாட்டைக் கைப்பற்றிக் கொண்டு அதன் ஆட்சியை நிலைப்படுத்துவதற்காக நாம் அனைவருமே இங்கு தங்கி விட்டிருக்கிறோம். நம்முடைய சொந்தச் சளுக்கிய நாடு அங்கே போதிய பாதுகாப்பின்றி அமைச்சர் குழுவின் மேற்பார்வையில் இயங்கி வருகிறது. ஆந்திர மன்னரையே அதன் தற்காலிகப் பாதுகாவலராக நியமித்து விட்டு வந்திருக்கிறோம். இந்நிலையில், நமது உள்நோக்கத்தை அவர் புரிந்துகொண்டால் நம்மைப் பழிவாங்குவதற்காகச் சந்தடி யின்றி மிக எளிதாக நம் தாய்நாட்டையே கபளீகரம் செய்து விடலாம். அப்படிச் செய்ய அவருக்குத் துணிவு இல்லை யென்றால் வேறு யாராவது ஒரு பலம் வாய்ந்த வனைச் செய்யும்படி தூண்டி விடலாம். மேலும், அவருக்கு இருப்பது ஒரே பெண். நம்மீது கொண்ட கோபத்தால் நம்மிடம் தெரிவிக்காமலே நமக்கு எதிரிகளாக இருக்கும் ஏதாவது ஒரு நாட்டின் அரச குடும்பத்தில் மண உறவு கொள்ள முயற்சி செய்வார். அப்படி ஓர் உறவு ஏற்பட்டுவிட்டால் அப்புறம் ஆந்திர நாட்டை நமது சளுக்கிய சாம்ராஜ்யத்துடன் இணைத்துக் கொள்வதென்பது சிரமசாத்தியமாகிவிடும்.

இதையெல்லாம் உத்தேசித்துத்தான் இளவரசி உத்தமசீலியை வேங்கிக்குத் திருப்பி அனுப்பாமல் இங்கேயே நிறுத்தி வைத்திருக்கிறோம். ஆனால் இன்றயை நிலையைப் பார்க்கும் போது நம் திட்டம் தவிடுபொடியாகி விடும்போல் தோன்று கிறது."-வில்வேலியின் குரல் கம்மியது.

இடுகாட்டு அமைதி நிலவிய அந்த அரண்மனை வட்டாரத்தை ஒரு குலுக்குக் குலுக்கிப் புரட்டியெடுப்பது போல் திடீரென்று அந்த யானையின் பிளிறல் ஒலி பயங்கரமாக எழுந்தது.

அதிர்ச்சியுற்ற விநயாதித்தன், "ஏன் ஐயா! எங்கிருந்து அந்தப் பிளிறல் ஒலி கேட்கிறது?" என்று வினவினான்.

"அது ஒரு விந்தையான விஷயம். அதோ பாருங்கள், அந்தப் பாழடைந்த மண்டபத்தில் ஒரு யானை கட்டிப் போடப்பட்டிருக்கிறது. அது பல்லவ மன்னன் பரமேசுவர வர்மனுடைய பட்டத்து யானையாகும். அதன் பெயர் 'அரிவாரணம்.' காஞ்சிக் கோட்டையைக் கைப்பற்றியதும் அங்கிருந்து இதை இங்கே கொண்டு வருவதற்கு நாங்கள் பட்டபாடு இருக்கிறதே, அது சொல்லுந் தரமன்று. இத்தனை மூர்க்காவேசமான யானையை நான் பார்த்ததே இல்லை. அதே சமயம் இதுபோன்ற புத்தியுள்ள ஒரு மிருகத்தை நான் கண்டதுமில்லை. இங்கு வந்த நாள்முதல் இப்படிதான் ஓயாமல் பிளிறிக்கொண்டும், அட்டகாசம் செய்துகொண்டும் இருக்கிறது. ஏதேதோ முயற்சி பண்ணிப் பார்த்தும் அதை அடக்கவே முடியவில்லை. பலநூறு யானைகளைப் பழக்கி வெற்றி கண்ட நம் யானைப் படை வீரர்கள் இந்த யானையின் அருகில் நெருங்கவே பயப்படுகிறார்கள். இறுதியில் இங்குள்ள ஓர் அடிமைப் பணியாள் அதை அடக்கி அமைதியுறச் செய்யும் வழியொன்றைக் காட்டினான். அது என்ன தெரியுமா? நந்திச் சின்னம் பொறித்த பல்லவ நாட்டுக் கொடியை அதன் கண்ணெதிரே காட்டினால் போதும்; உடனே பசுப்போல் சாதுவாகி அடங்கி விடுகிறது. அடங்கு

வதோடு மட்டுமல்ல; அந்தக் கொடியை அலுப்புச் சலிப் பின்றித் தன் துதிக்கையை வளைத்தும் முன்னங்கால்களை மடித்தும் வணங்கிக் கொண்டே இருக்கிறது. நந்திக் கொடியை மறைத்துவிட்டால் பழையபடி பிளிறி அட்டகாசம் செய்ய ஆரம்பித்து விடுகிறது. நமது சளுக்கிய வராகக் கொடியைக் கண்டுவிட்டாலோ அரண்டு மிரண்டு அமளிதுமளி செய்து விடுகிறது.”

“இப்படிப்பட்ட ஒரு பயங்கர யானையை இன்னமும் ஏன் உயிரோடு வைத்திருக்கிறீர்கள்?”

‘நமக்குப் பிடிக்காத-நமக்கு அடங்காத-எதையும் அழித்துவிட வேண்டியதுதான்! ஆனால் இந்த யானையைக் கொல்லாமல் வைத்திருப்பதற்கு ஒரு முக்கியமான காரணம் இருக்கிறது. பல்லவ மன்னனின் பட்டத்து யானையான இதை எப்படியாவது அடக்கியொடுக்கிப் பழக்கி அதன்மேல் நம் வீர மாமன்னர் விக்கிரமாதித்தரை ஏற்றிக் காஞ்சி நகர் வீதியிலே பவனியாகக் கொண்டு வர வேண்டும் என்பது என் ஆசை!”-கடகடவெனச் சிரித்தார் வில்வேலி.

இந்தச் சமயம், அங்கே வேர்க்க விறுவிறுக்க ஓடிவந்து நின்றான் ஒரு சளுக்கிய வீரன், அவசரமாகத் தலைநிமிர்ந்த வில்வேலி, “ஏனடா! எங்கே அந்தச் சிவிகைதூக்கி நாகோதரன்?” என்றார்.

“நேற்றுக் காலையே அவன் ஆதுரசாலையை விட்டு வெளியேறி விட்டானாம் ஐயா!”

“என்ன? வெளியேறிவிட்டானா?”

“ஆம், ஐயா! அந்த மருத்துவ விடுதியின் தலைவர் அப்படித்தான் சொன்னார். உடனே இலவந்திகைப் பள்ளியிலும் விசாரித்தேன். யாருக்கும் அவனைப்பற்றித் தகவல் தெரியவில்லை.”

தளபதி வில்வேலி அவனை வெறித்துப் பார்த்தார்.

"இன்னொரு விஷயம்!...சிரவணபெள்குளத்துச் சமண சங்கத் தலைவரான அகளங்க அடிகள் அந்த ஆதுரசாலையிலே இருக்கக் கண்டேன்."

இதைக் கேட்டு அதிர்ச்சியடைந்த வில்வேலியும் விநயாதித்தனும், "என்ன சொன்னாய்? அகளங்க அடிகளையா பார்த்தாய்? அவரை எப்படி உனக்குத் தெரியும்?" என்று ஒரே குரலில் கூவினார்.

"சிரவணபெள்குளத்துக்குப் போன பல்லக்குத் தூக்கிகளில் நானும் ஒருவன் என்பதை மறந்துவிட்டீர்களா ஐயா?" என்றான் வீரன் பணிவோடு.

வில்வேலியும் விநயாதித்தனும் ஒருவரையொருவர் பார்த்து விழித்தனர். சற்றுநேரம் கழித்து, "சரி; நீ போகலாம்" என்று அந்த வீரனை விரட்டிவிட்டுத் திரும்பிய வில்வேலி, "இளவரசே, அகளங்கரைத் தீர்த்துக் கட்டிவிட்டதாகச் சொன்னீர்கள். ஆனால் அவர் அந்தத் திரமிள சமண சங்கத்தில் இருக்கிறாராமே?" என்றார் படபடப்புடன்.

திக்கித் திணறிய விநயாதித்தன், "எனக்கும் அதுதான் விந்தையாக இருக்கிறது..." என்று குழறினான்.

"சரிதான்; ஆந்திர இளவரசிக்கு நம்முடைய சதி நாடகம் அனைத்தும் தெரிந்துவிட்டது! நேற்றுக் காலை அந்த ஆதுரசாலைக்குப் போன அவர் அங்கே உண்மையான அகளங்க அடிகளைப் பார்த்திருக்கிறார். அதனால்தான் என்னிடம் அத்தனை அலட்சியமாகப் பேசியிருக்கிறார். இந்த அரண்மனையில் தங்கிருக்கச் சம்மதியாமல் பெருவளநல்லூர் சேதியக் கலைஞர் இல்லத்துக்குப் போக அவர் அநுமதி கேட்டதிலும் ஏதோ உட்பொருள் இருக்கிறது" என்றார் அடைத்த குரலில்.

"கவலைப்படாதீர்கள், தளபதியாரே! இப்போதே போய் அந்த அகளங்கரையும் சமந்தபத்திரரையும் பிடித்து வந்து இந்தக் கோட்டைச் சிறையில் அடைத்து வைக்கிறேன்" என்று உறுமிக்கொண்டு எழுந்தான் விநயாதித்தன்.

"வேண்டாம்! அப்படிச் சென்றால் அது நாமே நம் தலையில் கல்லைத் தூக்கிப் போட்டுக்கொண்டதுபோல் ஆகிவிடும். தும்பை விட்டுவிட்டு வாலைப் பிடிக்கும் வீண் காரியத்தை நாம் ஏன் செய்ய வேண்டும்?" என்றவாறு அலட்சியமாக எழுந்து நின்ற வில்வேலி, சளுக்கிய இளவரசனின் காதில் ஏதோ இரகசியமாகச் சொன்னார்.

அதைக் கேட்டு அதிர்ச்சியுற்றுத் திரும்பிய விநயாதித்தன், தொலை தூரத்தில் கருங்குன்றம்போல் நின்று பிளிறிக்கொண்டிருந்த அந்த யானையைப் பயப்பிராந்தியுடன் விழித்துப் பார்த்தான்.

# 57

# கூலவாணிகனின் உதவி

செந்தமிழ்க் கோதையைச் செண்டாக்கிச் சிரமேற் சூடிப் போற்றி வளர்த்த பைந்தமிழ்ப் பெருநகர் மதுரையின் வட எல்லையை நெருங்கிக்கொண்டிருந்தது ஒற்றைக்காளை பூட்டிய ஒரு கூண்டு வண்டி. உறையூரிலிருந்து மதுரை நோக்கிச் செல்லும் பெருவழியிலே விரைந்து சென்ற அந்த வண்டியில் தானிய மூட்டைகள் அடுக்கப் பெற்றிருந்தன. அவை பனிச் சாரலில் நனைந்து விடாதிருக்கும் பொருட்டோ என்னவோ வண்டியின் பின் புறம் தாழைமடல்களாலான படல் ஒன்று சார்த்தப் பெற்றிருந்தது. முதியவயதினனாகத் தோற்றமளித்த கூலவாணிகனொருவன் வண்டியின் முன்னால் அமர்ந்து வெகு வேகமாய் ஓட்டிச் சென்றுகொண்டிருந்தான்.

பனிப் படலம் கலைத்து பரிதி காலூன்றும் அந்த இளங்காலை வேளையிலே, பின்னால் கடந்து போன பெருவழியின் தொலைதூரத்துக்கு அப்பால் சிறுமலை என்னும் குன்றுத் தொகுதி வானிலிருந்து இழிந்த மேகக் கூட்டம் போல் மங்கலாகத் தோற்றம் அளித்தது. அதனைச் சார்ந்த பிரதேசமெங்கும் மாவும், பலாவும், கமுகும், தெங்கும், வாழையும் கரும்பும் செழித்தொங்கி வளர்ந்திருந்தன. உள்ளியும், மஞ்சளும், கம்பும், சாமையும், கிழங்கு வகைகளும் வளமாகப் பயிராகியிருந்தன. அந்த இனிய பசுஞ்சூழலைப் பார்த்ததாலும், காலை இளம் பரிதியின் கததகப்பை ஏற்றதாலும் உற்சாகமடைந்த வண்டிக்காளை தன் கழுத்து மணியையும் காற் சலங்கைகளையும் ஆட்டிக் குலுக்கிக் கொண்டு முன்னிலும் அதிவிரைவாக ஓட ஆரம்பித்தது.

முதுகுப் புறமிருந்த மூட்டைகள்மேல் சாய்ந்து உட்கார்ந்திருந்த கூலவாணிகன் வண்டியின் உள்ளே மெல்ல எட்டிப் பார்த்தான். பிறகு ஆழ்ந்த பெருமூச்சு விட்டுத் தலையசைத்தவாறு திரும்பி, வண்டிக் கூண்டின் விளிம்புச் சட்டத்துக்கு நகர்ந்துகொண்டான். அவனுடைய அதட்டல் மிரட்டல் இன்றியே வண்டிக்காளை ஓடியது.

கடந்த நான்கு நாட்களாகத் தொடர்ந்து பயணமாகி வந்ததால் ஏற்பட்ட களைப்பும், காலைக் கதிரவனின் சுள்ளென்ற வெயில் உறைப்பும் அவனை வெகுவாகச் சோர்வடையச் செய்தன. ஆயினும் மதுரை நகர் நெருங்கி வருவதைக் கண்டு சிறிதே தென்பு பெற்றவனாய்ப் பார்வையை மேலே உயர்த்தினான்.

முருகக் கடவுளின் படை வீடுகளில் ஒன்றான திருப்பரங்குன்றம் மயூர வண்ணக் கொண்டலாக உயர்ந்தோங்கி நிற்பது தெரிந்தது. அந்தப் பரங்குன்றத்தையே சிறு பொழுது பார்த்துக்கொண்டிருந்த கூலவாணிகன் இடப்பக்கமாகத் திரும்பி, நீலம் பாரித்துக் கிடந்த கீழ்த் திசைவான் விளிம்பை நோக்கினான். அங்கே, குமர வடிவேலனே பொன் மயில் வாகனமேறிப் பூப்பிரதட்சணம் வருவது போல் எழிலார்ந்த ஒளி வட்டமாய்ப் பொற்கதிர் விரித்துக் கரகரவென மேலேறிக்கொண்டிருந்தது காலை இளஞ்சூரியன். அந்த செங்கோளப் பிழம்பைப் பார்த்து முருகப் பிரானையே தரிசித்தாற்போன்ற பரவசத்துடன் கைக்கூப்பிய வாணிகள் மெல்லத் தன் பார்வையை வேறுபக்கம் செலுத்தினான். இப்போது அழகப் பெருமாள் பள்ளிகொண்ட திருமாலிருஞ்சோலை சியாமள வண்ண மலையாய் நெடிதுயர்ந்து நிற்பது அவனுக்குப் புலனாயிற்று. அமர ஓவியமாக விளங்கிய அந்த அழகர்மலையை மகிழ்ச்சிப் பெருக்குடன் பார்த்துக்கொண்டு வந்த அவனது பார்வையை ஏதோ ஒரு கருந்திரை குறுக்கிட்டு மறைத்தாற்போல் இருக்கவே சட்டெனத் திரும்பினான்.

நான்மாடக்கூடல் என்னும் சிறப்புப் பெயர் பெற்ற மதுரைமா நகரின் வடப்புற நுழைவாயிற் கோபுரம் அவனெதிரே வானோங்கிக் காட்சியளித்தது.

பண்டு பெருமை வாய்ந்த பழம் பாண்டி நாட்டின் கோநகராம் மதுரை மண்ணை மிதித்ததுமே பெரிதும் உற்சாகமடைந்த கூலவாணிகன் வண்டியின் உட்புறமாகத் திரும்பி, "மதுரை நகரை அடைந்துவிட்டோம்" என்று குதூகலம் நிறைந்து வேகமாகச் செலுத்தினான். வடதிசை வாயிற்கோபுரத்தைக் கடந்து ஜன நடமாட்டம் மிகுதியாக இருந்த ஒரு பெரிய வீதியினுள் புகுந்து விரைந்தது வண்டி.

அது அறுவை வணிகர் வீதி. மீன் பிடிப்போரும், உப்பு வாணிகரும், கள், பிட்டு, அப்பம், வாசனை பண்டம், இறைச்சி முதலானவை விற்போரும் அங்கு வாழ்ந்தனர். அவர்களது இல்லங்கள் எளிமையில் அழகு கண்டு தூய்மையுடன் விளங்கின.

அந்தப் பெரிய வீதியைக் கடந்து வேறொரு வீதியில் திரும்பியது வண்டி. அது கைவினைஞர் வீதி. அங்கே பொற்கொல்லர், தச்சர், கருமார், மட்கலம், மட்பாவை செய்வோர், மாலை கட்டுவோர், நெசவாளர், தையற்காரர் ஆகியோர் வசித்தனர். அவர்களுடைய இல்லங்கள் ஒவ்வொன்றும் ஒரு கலைக்கோயில்போல் அத்தனை எழிலுற அமைந்திருந்தது.

வண்டி, மணிவணிகர் வீதியில் சென்று கணிகையர் வீதியில் புகுந்து, பின்னர் கூலவாணிகர் வீதியை வந்து அடைந்தது. அங்கே, பல வகை தானியங்கள் விற்போர் வசித்தனர். கூலவாணிகனின் வண்டியைப் பார்த்த அந்தத் தானிய வியாபாரிகள் தத்தமது கடைகளில் மூட்டைகளைக் கொண்டு வந்து இறக்கும்படி கையொலி எழுப்பி அழைத்தனர். பல்லவ நாட்டுச் சோழ மண்டலத்திலிருந்து அவன் வருகிறான் என்பதைத் தெரிந்துகொண்டே அவர்கள் அவ்வாறு வரவேற்றனர். சோழ மண்ணில் விளையும்

தானியங்கள் உயர்ந்த ரகமானவை என்பதாலும், அவற்றை வாங்கி விற்பதிலே அதிக லாபம் கிடைக்கும் என்பதாலுமே அவர்களிடையில் போட்டி ஏற்பட்டது.

ஆனால் அந்தக் கூலவாணிகனோ தன் வண்டியை நேரே ஓட்டிக்கொண்டு போய் வீதியின் கோடியில் ஒரு புறமாக நிறுத்திவிட்டுக் கீழே இறங்கிச் சுற்றுமுற்றும் பார்த்தான். பிறகு புன்முறுவல் பூத்தவனாய் வண்டியின் பின்னால் சென்று, "சேர வேண்டிய இடத்துக்கு வந்து சேர்ந்துவிட்டோம்! இறங்குங்கள், அம்மணீ!'' என்று வாஞ்சையுடன் சொல்லிக்கொண்டே, சாத்தியிருந்தே தாழம் படலை அகற்றினான். மறுகணம், அவ்வண்டியினுள்ளே பரவலாக அடுக்கப் பெற்றிருந்த தானிய மூட்டைகளின்மேல் எளிய ஆடை அணிகளுடன் சோகப் பதுமையாய் ஒடுங்கி முடங்கித் தலைகுனிந்து உட்கார்ந்திருந்த இளங்கோப்பிச்சி மிரட்சியுடன் அங்குமிங்கும் பார்த்தவாறு கீழே இறங்கினாள்.

"எங்கள் மதிப்புக்குரிய ஆபத்துதவி இளங்காரிக்குடையானின் தங்கையாருக்கு என்னால் இந்தச் சிறு உதவி செய்ய முடிந்ததே என்பதற்காகப் பெரிதும் மகிழ்ச்சியுறுகிறேன். ஆனால், அவர் செல்ல வேண்டிய வீதிவரை அழைத்துப் போய்விட முடியாத நிலையில் இங்கேயே இறக்கி விட்டு விட்டதற்காக வருந்தவும் செய்கிறேன். சுமை ஏற்றிய பார வண்டிகள் இந்த வீதியோடு நின்றுவிட வேண்டும் என்பது இந்நகரின் போக்குவரத்து விதிகளில் ஒன்று. அதை மீறிச் செல்வது தண்டனைக்குரிய குற்றமாகும். எனவேதான்...'' என்று தணிந்த குரலில் தயக்கத்துடன் சொல்லி நிறுத்தினான் கூலவாணிகன்.

கலவரம் அடைந்த நிலையில் நின்றுகொண்டிருந்த இளங்கோப்பிச்சி, "வருந்தாதீர்கள், ஐயா! இவ்வளவு தூரம் என்னை அழைத்து வந்து விட்டதற்காகவே உங்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்'' என்று நன்றியுணர்ச்சியோடு கூறினாள்.

கொஞ்ச நேரம் யோசித்த கூலவாணிகன், "தங்கையார் செல்ல வேண்டியது அடுத்துள்ள இராஜ வீதிதானே?" என்று வினவினான்.

இதற்கு மறுமொழி ஏதும் கூறாமல் சிறுபொழுது குழம்பித் தவித்த இளங்கோப்பிச்சி, 'ஆமாம்' என்று மெல்லத் தலையசைத்தாள்.

"அப்படியானால் புறப்படுங்கள், அம்மணீ! நீங்கள் செல்ல வேண்டிய இல்லம்வரை நானும் துணையாக வருகிறேன்."

"வேண்டாம் ஐயா! ஆலம்பாக்கத்திலிருந்து எனக்கு உங்கள் வண்டியில் இடம் கொடுத்து ஏற்றி வந்ததால் நீங்கள் அடைந்த கஷ்ட நஷ்டங்கள் போதும். இனியும் உங்களை வீண் சிரமத்துக்கு உள்ளாக்க நான் விரும்பவில்லை.

"ஓ,...நேற்றுக் காலை உறையூர் சுங்கச் சாவடியிலிருந்து சளுக்கிய வீரர்கள், நான் ஏற்றி வந்த தானிய மூட்டைகளில் சிலவற்றைப் பலவந்தமாகப் பறித்துக்கொண்டதையும், பிறகு என்னைச் சோதனை செய்வதற்காக வெகு நேரம் அடைத்து வைத்திருந்ததையும் சொல்கிறீர்களா? அடிமைப்பட்டுக் கிடக்கும் ஒரு நாட்டின் பிரஜைகளான நாம் அது போன்ற கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாகித்தானே தீரவேண்டும், அம்மணீ! அந்த வரையிலாவது என்னையும் உங்களையும் தொடர்ந்து பயணம் செய்ய அனுமதித்தார்களே, அது நம் பூர்வ ஜன்ம பலன் என்றுதான் சொல்ல வேண்டும். வாருங்கள், தாயே! நீங்கள் செல்லவேண்டிய இல்லம் வரையில் அழைத்துப் போய்விட்டால்தான் என் மனம் அமைதியடையும்."

"இல்லை, ஐயா! இனி நானே என் உறவினர் இல்லம் தேடிக் கால்நடையாகச் சென்றுவிடுவேன். நீங்கள் உங்களுடைய அலுவல்களைக் கவனிக்கப் போகலாம்" என்று கண்டிப்பாக மறுக்கும் குரலில் கூறினாள் இளங்கோப்பிச்சி.

"ஆகட்டும், அம்மணீ! என் அலுவல்களை முடித்துக் கொண்டு ஊர் திரும்பும்போது நீங்களும் வருவீர்களா? அல்லது நான் போகும் வழியிலே உங்கள் இல்லத்துக்குச் சென்று ஏதேனும் சேதி சொல்ல வேண்டுமா?"

"அவசரச் சேதி ஒன்றும் இல்லை. நான் இங்கிருந்து ஆலம்பாக்கத்துக்குத் திரும்பிப் போக இரண்டு மூன்று மாதங்களாவது ஆகலாம்."

"இங்கே யாருடைய இல்லத்தில் தங்கியிருக்க வந்திருக்கிறீர்கள் என்பதை நான் அறியலாமா தாயே?"

"என் தந்தையாரின் தமக்கையை மணந்த அத்தையன்பர் ஒருவர் இந்த மதுரை நகரில் இருக்கிறார்; அவரைப் பார்க்கத்தான் வந்தேன்."

"உங்கள் அத்தையன்பர் இங்கே என்ன உத்தியோகம் பார்க்கிறார்?"

"அவர் பெரிய நாட்டாண்மைக்காரர்!" என்றாள் அவள்.

"அப்படியானால் சரி; நான் விடைபெற்றுக் கொள்கிறேன். கவனமாக வீடுபோய்ச் சேருங்கள் அம்மணீ!" என்று சொல்லிக் கரம் கூப்பினான் கூலமவாணிகன்.

பிரதிபலன் கருதாது பிறருக்கு உதவி செய்வதிலே பேரின்பம் காணும் நற்குடிப் பெருமகனான அந்த வணிகனுக்குத் தன் மனப்பூர்வமான நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்ட இளங்கோப்பிச்சி, அடுத்திருந்த இராஜ வீதியில் இறங்கி நடக்கலானாள்,

விசாலமான அந்த வீதியின் இருமருங்கும் வான் உயர்ந்த மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும் அருங்கலை நுணுக்க வேலைப்பாடுகளுடன் வரிசையாய் நின்றன. பாண்டியப் பேரரசின் அமைச்சர் குழாமும், அறிஞர் பெருமக்களும், தீந்தமிழ்ப் புலவர்களும், ஐம்பெருங் குழுவும்,

எண்பேராயமும், அரசாங்க உயர்தர அதிகாரிகளும், படைத் தலைவர்களும் அந்த வீதியில்தான் வசித்து வந்தனர். ஆங்காங்கே தேர் நிற்கும் நிலைகளும், பட்டிமண்டபங்களும், உரை மேடைகளும், கலா மன்றங்களும், கல்விச் சாலைகளும், கடிகைகளும், அறக்கோட்டங்களும், ஆதுரசாலைகளும் நிர்மாணிக்கப்பட்டு விளங்கின. ஒவ்வொரு மாளிகையின் உச்சியிலும் கயல் கொடி கம்பீரமாகக் காற்றில் அசைந்தாடிப் பறந்துகொண்டிருந்தது.

இப்படி எழிலார்ந்த கோலத்தில் காட்சியளித்த அவ்வீதியின் ஓரமாகவே நடந்துகொண்டிருந்தாள் இளங் கோப்பிச்சி. அவள் மனம் ஒரேடியாகக் கலக்கமடைந்திருந்தது. அந்தத் தெளிவற்ற திகைப்பால் கால்களும் பின்னலிட்டன. ஆயினும் தன்னைச் சமாளித்துக்கொண்டு மேலே நடந்து கொண்டேயிருந்தாள்.

ஆலம்பாக்கம் அநந்தமதியின் இல்லத்திலிருந்து மதுரை அரண்மனைக்குப் போய்விட வேண்டும் என்று அவள் பலமுறை எண்ணியது உண்டு. அன்றொரு நாள் அவளுடைய தந்தையின் கட்டளைப்படி அவளைப் பழையாறைக்கு அழைத்துப் போவதற்காக வந்த ஆபத்துதவி சம்புவராயனைப் பெருவளநல்லூர் சேதிக் கலைஞரிடம் அனுப்பிவைத்தாளே, அப்படி அவனை அனுப்பியதற்குக் காரணமே இதுதான். பழையாறைக்குப் போக விரும்பாத அவள் தன் அத்தையாரான பாண்டிய மகாராணி மங்கையர்க்கரசியிடம் வந்து சேர்ந்துவிட வேண்டும் என்று திட்டமிட்டாள். அதன்படி அன்று விடியற்சாம நேரத்தில் அந்த இல்லத்தி லிருந்து புறப்பட்டபோதுதான் சற்றும் எதிர்பாராத விதமாக ஆந்திர இளவரசியின் உத்தரவுபேரில் அங்கு வந்து கதவைத் தட்டிய சளுக்கிய வீரர்கள் அவளையும் அநந்தமதியையும் பல்லவபுரம் இலவந்திகைப்பள்ளிக்கு அழைத்துச் சென்று விட்டனர். அதனால் அவளுடைய அந்த முதல் முயற்சி தடங்கலாகி நின்று போயிற்று. பிறகு பல்லவபுரத்திலிருந்து

திரும்பி வந்ததும், முதலில் செய்த முடிவுப்படி மதுரைக்குப் போகலாமா, அல்லது தன் தந்தையிடமே பழையாறைக்குச் சென்றுவிடலாமா என்று குழப்பத்தில் அங்கேயே சில தினங்கள் இருந்தாள். இறுதியில் நான்கு நாட்களுக்கு முன்பு நடந்த அந்த வேதனை மிக்க நிகழ்ச்சிகள் அவளது முதல் முடிவையே மேற்கொள்ளச் செய்து விட்டன.

ஆமாம்; அளவற்ற அன்பாவேசத்துடன் கோவிந்த வர்மனை அவள் எதிர்பார்த்துக் கொண்டிருக்க, அவனோ அவளைத் திரும்பியும் பார்க்காமல் புறக்கணித்துச் சென்றது அவளுக்குப் பேரதிர்ச்சியாகிவிட்டது. அந்த அதிர்ச்சியுடன் அன்றிரவு யாரோ ஒரு மர்ம மனிதனால் எறியப்பட்ட ஓலையில் வரையப்பெற்றிருந்த சேதிகள் அவளை மேலும் குழப்பிக் கலக்கிவிட்டன. தன் தந்தையின் பயங்கரப் போக்கையும், தனது எதிர்கால வாழ்க்கையை முறித்துப் போடத் தக்க அவரது புதிய முடிவையும், பல்லவ நாட்டை விழுங்கிவிட்ட சளுக்கிய விக்கிரமாதித்தன் பாண்டிய நாட்டின்மீது படையெடுக்க ஆயத்தம் செய்வதையும் அறிந்து மனம் குமுறிய அவள், அந்த நாசகாரமான முயற்சிகளைத் தகர்த்தெரியும் பொருட்டு உடனே மதுரைக்குப் போயாக வேண்டும் என்ற முந்தைய முடிவுக்கே வந்தாள். தன் அத்தையன்பரான பாண்டியப் பேரரசர் நெடுமாறரை நேரில் சந்தித்து அவ்விவரங்களைத் தெரிவித்தால் அவர் அவற்றுக்குச் சரியான பரிகாரம் கண்டுவிடுவார் என்று அவளுக்குத் தோன்றியது. அத்துடன் பாண்டிய நாட்டின்மேல் சளுக்கியர் போர் தொடுக்கவிருக்கும் இரகசிய சேதியை அவரிடம் முன்னதாகத் தெரிவித்து எச்சரிக்க வேண்டியது தன் தலையாய கடமை என்றும் எண்ணினாள். எனவே, அநந்தமதியிடம் அந்த முடிவைக் கூறினால் அவள் அதற்கு ஏதாவது தடை சொல்லித் தன்னைப்போகவிடாமல் தடுத்துவிடுவாள் என்று அஞ்சி அவளிடமும் சொல்லிக் கொள்ளாமல் அன்றிரவே ஆலம்பாக்கம் இல்லத்தைவிட்டு

வெளியேறி விட்டாள். அந்தச் சமயம் அதிர்ஷ்டவசமாக மதுரைக்குத் தானிய மூட்டைகளை வண்டியில் ஏற்றிக்கொண்டு அந்தக் கூலவாணிகன் அவ்வழியே வரவே, தன்னை மதுரை நகர்வரையில் கொண்டுபோய் விட்டு விடும்படி அவனிடம் தயவாகக் கேட்டுக்கொண்டாள். அவளை ஆபத்துதவி இளங்காரிக்குடையானின் தங்கை என்று எண்ணிய கூலவாணிகனும் அவளது வேண்டு கோளுக்குச் செவிசாய்த்துத் தன் வண்டியில் ஏற்றிக்கொண்டு வந்து, இதோ இந்த மதுரை நகரில் சேர்ப்பித்துவிட்டுப் போய்விட்டான். இங்கே வந்த பிறகு தான் அவளுக்கு ஒரு பெரிய விஷயம் புலனாயிற்று.

அவள் பழையாறைச் சோழ இளவரசி என்பது இந்நகரில் உள்ள யாருக்குமே தெரியாது. பாண்டியப் பேரரசருடைய மைத்துனியின் மகள் என்று தன்னை யாரிடமாவது அறிமுகப்படுத்திக் கொள்ளவும் அச்சமா யிருந்தது. அப்படிச் சொன்னால் அதை யாராவது நம்புவார்களா என்று அவளுக்கே சந்தேகமாகவும் இருந்தது. அத்தனை எளிய பரிதாப கோலத்திலே அவள் இங்கு வந்து சேர்ந்திருந்தாள். இந்நிலையில், மாபெரும் பாண்டிய மன்னரின் அரண்மனைக்கு அவளால் எவ்வாறு செல்ல முடியும்? அப்படிச் செல்ல முயன்றாலும் அவளை எதிரிநாட்டு வேவுகாரி என்று எண்ணிச் சிறைப்படுத்தி விடுவார்களே! விசாரணைக்குப்பின் உண்மை வெளிப்பட்டு எல்லாம் நல்லபடியாக முடியும் என்றாலும், அதுவரையில் அநுபவிக்க வேண்டிய கஷ்டங்களையும் அவமானங்களையும் தாங்கும் மனத் துணிவு வேண்டுமே? மேலும் இங்கு வந்துள்ள காரியம் அத்தனை நாட்பட்டுச் சாவதானமாகச் செய்யக் கூடியதும் அல்ல; பாண்டிய மன்னரிடம் உடனடியாகத் தெரிவித்து உரிய நடவடிக்கை எடுக்கச் செய்யவேண்டிய அவசர விஷயங்கள்! இந்த இக்கட்டான பிரச்னையை எங்ஙனம் சமாளிப்பது?-

இராஜ வீதியைக் கடந்து அரண்மனைக்குச் செல்வதற்கென அமைந்த தனிப் பெரும் சாலையொன்றில் ஏறி நின்ற இளங்கோப்பிச்சி, தொலைதூரத்துக்கு அப்பால் வெள்ளிப் பனிமலைபோல் தோற்றமளித்த—'புகழாபரணம்' என்னும் பெயர் கொண்ட—மாபெரும் பாண்டியர் அரண்மனையைத் திகிலுடன் பார்த்தவாறு திகைத்து நின்றாள். அழகும் கம்பீரமும் உறுதியும் விளங்கிய அந்தப் பிருமாண்டமான அரண்மனையையும், அதைச் சார்ந்த கோட்டை கொத்தளங்களையும், அவற்றைக் காவல் புரிந்து நிற்கும் ஆயிரக்கணக்கான யவன-சோனக வீரர்களையும் பார்த்த போது அவளையறியாமலே அவள் மனத்தில் ஒருவித அச்சம் சூழ்ந்துகொண்டது. அந்த இமய வரை போன்ற அரண்மனையுடன் தன் பழையாறை அரண்மனையை ஒப்பிட்டு நோக்கி உள்ளூறக் குன்றிக் குறுகினாள். இத்தகைய பிரமிப்பு உணர்ச்சியாலும் தாழ்மை உணர்ச்சியாலும் தளர்வடைந்து நின்ற அவள் தான் வந்த காரியத்தையே சிறிது சிறிதாக மறக்கத் தலைப்பட்டாள்.

'தீர ஆலோசியாமல் திடீரென இங்கு புறப்பட்டு வந்தது எவ்வளவு பெரிய பைத்தியக்காரத்தனமாகிவிட்டது!'

தன்னையே நொந்துகொண்டு கண்கலங்கிய இளங்கோப்பிச்சி அந்தச் சாலையில் நிற்கவும் அஞ்சியவளாய் அங்கிருந்து திரும்பி வேறொரு சிறிய பாதையில் இறங்கி நடக்கலானாள்.

# 58

# திருக்கைக் கோட்டி

**எ**ங்கே போவது, என்ன செய்வது என்ற தெளிவே இல்லாமல் கால்போன போக்கில் நடந்துகொண்டிருந்த சோழ இளவரசி களைப்பும் சோர்வுமாக ஓரிடத்தில் நின்று சுற்றுமுற்றும் பார்த்தாள்.

பகல் போது கழிந்து மந்தாரத் திரை போர்த்த மாலை நேரமும் வந்துற்றிருப்பதை இப்போதுதான் அவளால் உணர முடிந்தது. அத்துடன் அவள், சைய மலையில் பிறந்த வையைப் பெரு நதியின் திருமருத முன்துறையோரம் வந்து நின்றுகொண்டிருப்பதையும் அறிந்தாள்.

'ஆடல் அறியா அரிவை போலவும் ஊடல் அறியா உவகையள் போலவும் வேண்டு வழி நடந்து' வனப்புடன் சென்றுகொண்டிருந்த வையை ஆற்றையே வெறித்துப் பார்த்துக்கொண்டு நின்றாள்.

அந்தத் திருமருத முன்துறையைச் சார்ந்து பழைமையான சிவன் கோயில் ஒன்று இருப்பது தெரிந்தது. அங்கே ஏதோ திருப்பணி வேலைகள் நடந்து கொண் டிருப்பதுபோல் தோன்றியது.

திகிலடைந்து நின்ற இளங்கோப்பிச்சி, 'அந்தக் கோயிலுக்குப் போய் இறைவனைத் தரிசித்தாலாவது மனத்தில் தெளிவும் தைரியமும் பிறக்கும்; அதனால் மேற்கொண்டு என்ன செய்யலாம் என்பதற்கு ஏதாவது மார்க்கம் தோன்றினாலும் தோன்றும்' என்று எண்ணிய

வளாய் ஆற்றில் இறங்கி மனச்சோர்வும் நீங்க நீராடிவிட்டு எழுந்து கோயிலை நோக்கி நடந்தாள்.

அது மண்டளியான சிறியதொரு கோயில்தான். ஆனால், மிக்க வனப்புடன் அது விளங்கியது. அந்தக் கோயிலின் வலப்புறம்-திருநிலையறையைச் சார்ந்தாற் போல்-புதிதாக ஒரு மண்டபம் கட்டும் வேலை மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. மற்றொருபுறம் செப்பேடுகளில் ஏதோ எழுதும் வேலையும் நடைபெற்றுக்கொண்டிருந்தது. இந்த வேலைகளை, ஸ்ரீகாரியஞ் செய்வார். ஸ்ரீகாரியக் கண்காணிநாயகம் முதலான கோயில் அதிகாரிகள் வெகு கவனமாக மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்தனர்.

கோயிலை அடைந்த இளங்கோப்பிச்சி அங்கு நிர்மாணமாகிக்கொண்டிருந்த புதிய மண்டபத்தைப் பார்த்தவாறு சற்றுநேரம் நின்றிருந்தாள். அதனைக் கட்டும் வேலையில் ஈடுபட்டிருந்த கலைஞர்களின் உரையாடலி லிருந்து அம்மண்டபம் எடுப்பிக்கப்படுவதற்கான சில விவரங்கள் அவளுக்குத் தெரியலாயின.

மண்டபத்தின் பெயர் 'திருக்கைக் கோட்டி.' சைவசமயத்தின் ஜீவ மலர்களாகத் தோன்றி, அதற்குப் புத்துயிரும் புது மணமும் ஊட்டிச் சென்ற ஞானமா வள்ளல்களான திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தரும் பாடியருளிய தீந்தமிழ்த் திருப்பதிகப் பாக்கள் அனைத்தையும் சேகரித்துச் செப்பேடுகளில் பொறித்துப் பூசனைக்குரிய புனிதப் பொருளாக வைத்துப் போற்றிக் காக்கவே அந்தத் திக்கைக் கோட்டி என்னும் மண்டபம் அங்கே எடுப்பிக்கப் பட்டு வந்தது. அதற்காகவே தமிழ் விரகர் பலர் சேர்ந்து பட்டய எழுத்தாளரைக் கொண்டு திருப்பதிகப் பாக்களைச் செப்பேடுகளிலே பொறிக்கும் பணியில் ஈடுபட்டிருந்தனர். இந்த அரிய திருப்பணியை மேற்கொண்டு நடத்தச் செய்திருப்பவர் பாண்டிய மகாராணி மங்கையர்க்கரசியே ஆவார். அவருடைய யோசனையாலும் பொருளுதவியாலுமே அந்த அற்புத மண்டபம் அங்கு உருவாகிக்கொண்டிருந்தது.

தன் அத்தையார் செய்து வரும் அறப் பணியின் மேன்மையை அறிந்து வியப்பும் மகிழ்ச்சியும் பெருமையும் கொண்ட இளங்கோப்பிச்சி கோயிலுக்குச் செல்லத் திரும்பினாள்.

இந்தச் சமயம், கோயில் குருக்கள் ஒருவர் அவசரமாக வெளியே வந்து அங்கு நின்றிருந்த ஸ்ரீகாரியக் கண்காணி நாயகத்தை அணுகி, "ஐயா, இறைவனுக்கு அந்தி பூசை நடத்த வேண்டிய நேரம் நெருங்கிவிட்டது; இன்னமும் திருப்பதிக ஓதுவார் வரக் காணோமே!" என்று கவலை தோய்ந்த பரபரப்புடன் முறையிட்டார்.

ஸ்ரீகாரியக் கண்காணிநாயகம் தம் அருகில் நின்ற ஸ்ரீகாரியஞ் செய்வாரைக் கோபத்துடன் நோக்க, அவர் தயங்கித் தத்தளித்துக் கைகளைப் பிசைந்தவாறு, "மன்னியுங்கள், ஐயா! நம் திருப்பதிக ஓதுவாருக்கு இன்று உடல் நலம் சரியில்லை என்று கேள்விப்பட்டேன். அதனால் அவர் வர இயலாமலாகிவிட்டிருக்கலாம். இன்றைய ஒருபொழுது மட்டும் திருப்பதிக விண்ணப்பம் இல்லாமலே அந்தி பூசையை நடத்தி முடிக்கச் சொல்லுங்கள்" என்று பணிவும் குழைவுமாக வேண்டிக்கொண்டார்.

"அது எப்படி முடியும் ஐயா? இங்கே அந்தி சந்தி பூசைக்கு முன்பு திருப்பதிக விண்ணப்பம் செய்தே ஆக வேண்டும் என்பது அரசியாரின் கட்டளை ஆயிற்றே! அதை வழக்கமாக ஏற்று நடத்தி வரும்போது இன்று மட்டும் அது இல்லாமல் எப்படிப் பூசையை நிறைவேற்றுவது?" என்று அங்கலாய்த்தார் குருக்கள்.

கோயில் அதிகாரிகள் இருவருக்கும் என்ன செய்வதென்றே தோன்றவில்லை. ஒருவரையொருவர் பார்த்து விழித்துக்கொண்டு நின்றனர்.

இவர்கள் பேச்சை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்த இளங்கோப்பிச்சி மெல்ல அருகில் வந்து, "ஐயா!" என்றாள். மூவரும் அவளைத் திரும்பிப் பார்த்தனர்.

"தங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்றால், இன்று நானே திருப்பதிகம் ஓதும் பணியை ஏற்கிறேன். அந்தப் பேற்றினை எனக்கு அளித்தருளுங்கள்."

குருக்கள், "நீங்கள் யார் அம்மணீ? உங்களுக்குத் திருப்பதிகப் பாக்கள் அனைத்தும் பிழையறப் பாடம் உண்டா?" என்று வியப்புடன் வினவினார்.

தான் யார் என்ற கேள்விக்கு மறுமொழி கூறாமல் "உச்சரிப்புக் குற்றமின்றித் திருப்பதிகப் பாக்களைத் ஓதக் கற்றிருக்கிறேன் ஐயா!" என்று பணிவுடன் பகர்ந்தாள் இளங்கோப்பிச்சி.

ஒரு கணம் யோசித்த குருக்கள், "எல்லாம் ஐயனின் திருவினை! சரி; வாருங்கள், அம்மணீ!" என்றவாறு கோயிலினுள் பிரவேசித்தார்.

மணியோசை கணகணத்தது.

திருநிலையறைக்கு வெளியே ஒருபுறமாகப் போய் ஒதுங்கி அமர்ந்த இளங்கோப்பிச்சி, அங்கு தயாராக வைக்கப் பெற்றிருந்த மகர யாழை எடுத்து மடியில் வளர்த்திக்கொண்டு அதன் தந்திகளை இதமாக ஊர்ந்தாள். பிறகு ஒரு விநாடி தியானத்திலிருந்து அவள் தன் தீஞ்சுவைக்குரலை மெல்லத் திறந்து அப்பரின் பாடல் ஒன்றை யாழின் இனிய நாதத்தோடு இணைந்து பாடலானாள்:

"சங்கநிதி பதுமநிதி இரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார் அவர் செல்வம் மதிப்போம் அல்லோம்
மாதேவர்க்(கு) ஏகாந்தர் அல்லராகில்
அங்கமெல்லாம் குறைந்து அழுகு தொழுநோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பர் ஆகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே!"

கோயிலில் குழுமியிருந்த பக்தர்கள் அனைவரும் கரக்கம்பம் சிரக்கம்பம் செய்து கண்ணீர் மல்கி நின்றனர்.

தன்னை மறந்த நிலையில் அமர்ந்திருந்த இளங்கோப்பிச்சி மீண்டும் தன் மென்குரலெடுத்து ஞானசம்பந்தப் பெருமானின் பதிகம் ஒன்றை இசைக்கலானாள்:

“மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை,
வரி வளைக்காக மடமணி
பங்கயச் செல்வி, பாண்டிமாதேவி
பணிசெய்து நாடோறும் பாட
பொங்கழல் உருவன் பூதநாயகன், நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவாய் ஆவதும் இதுவே!”

தூப தீபப் புகையொளி பரவ, மணியோசையும் மலராஞ்சலி மணமும் சூழ, வேத மந்திரம் முழங்க இறைவனுக்கு அந்தி பூசை நிறைவேறியது.

யாழினைத் தோளில் அணைத்தபடி எழுந்து நின்று கரம் குவித்துக் கண்மூடி மெய்ம்மறந்திருந்த இளங்கோப்பிச்சி, தன்னை யாரோ அன்பொழுகத் தழுவி உச்சி முகர்வதை உணர்ந்து திடுக்குற்றுப் பின்னால் திரும்பினாள்.

அங்கே, வெண்ணீறணிந்த நுதலும் ஞானப் புன்முறுவலுமாக நின்றுகொண்டிருந்தார் பாண்டிய மகாராணி மங்கையர்க்கரசி! வியப்பாலும் திகைப்பாலும் அளவுக்கு மீறிய ஆனந்தத்தாலும் வெலவெலத்துவிட்ட இளங்கோப்பிச்சி வாய்ச்சொல் எழுப்பவும் சக்தி இழந்து சிலையாகச் சமைந்து நின்றாள்.

மகாராணியார் அவளிடம் ஏதும் பேசவில்லை; எதைப் பற்றியும் கேட்கவில்லை. பாசப் பரிவுடன் அவளை மெல்ல அணைத்துப் பற்றியவாறு கோயிலைவிட்டு வெளியே சென்று, அங்கு நிறுத்தி வைத்திருந்த தமது முத்துச் சிவிகையில் அமர்த்தினார். பிறகு ஸ்ரீகாரியக் கண்காணி நாயகத்தினிடம் திருக்கைக்கோட்டி சம்பந்தமாக இரண்டொரு வார்த்தைகள்

பேசி முடித்துக்கொண்டு திரும்பிய அவர் சிவிகையில் அமர்ந்தார்.

அதற்குள் அந்தக் கோயிலைச் சுற்றிக் குழுமியிருந்த மக்களிடையே, "சோழ இளவரசி இளங்கோப்பிச்சி!... பழையாறைச் சோழரின் செல்வக் குமாரி!...நம் பாண்டி மாதேவியாரின் தம்பி மகள்!" என்ற சொற்கள் வியப்புடன் கலந்து வேகமாய்ப் பரவின.

சிவிகை புறப்பட்டுவிட்டது!

புகழாபரணம் அரண்மனைக்கு வந்து சேர்ந்த இளங்கோப்பிச்சி தன் அத்தையார் மங்கையர்க்கரசியிடம் எல்லா விவரங்களையும் கூறி முடித்தாள்.

அவள் சொன்னவற்றை அமைதியாகக் கேட்டுப் புன்னகை பூத்தவராய் எழுந்த பாண்டிமாதேவி, "இறைவன் நம்மை ஏதோ ஒரு பெரும் சோதனைக்கு உள்ளாக்கப் போகிறான் என்றே தோன்றுகிறது! சரி, குழந்தாய்! நீ சொல்ல வந்திருக்கும் சேதிகளை உன் அத்தையன்பரிடமே வந்து சொல், வா!" என்றவாறு அவளை அரண்மனை மேன்மாடத்துக்கு அழைத்துச் சென்றார்.

மங்கையர்க்கரசியாரைப் பின்பற்றி மேன்மாடத்தை அடைந்த இளங்கோப்பிச்சி, அங்கே ஏதோ ஓர் அதிசயக் காட்சியைக் கண்டவள்போல் வியப்புற்று வாசல் திரைக்குப் பின் ஓடி ஒளிந்தாள். பிறகு தன்னைமீறிய படபடப்புடன் நெஞ்சை அழுத்திப் பிடித்துக்கொண்டு மெல்ல எட்டிப் பார்த்தாள்.

விசாலமான அந்த அழகிய சித்திரகூடத்தின் நடுவிலே, நீண்டதொரு பொன்னாசனத்தில் சற்றே சாய்ந்தவாறு அமர்ந்திருந்தார் பாண்டியப் பேரரசர் நெடுமாறர். அவரது வலப்புறம் அமைச்சர் குலச்சிறையார் வீற்றிருக்க, இடப்புறம் கம்பீரமாக நிமிர்ந்து நின்று ஒரு கையை இடுப்பின் மேல் ஊன்றி மறுகையில் ஓலையொன்றைப் பிரித்துப் பிடித்தவாறு ஆவேசமாக ஏதோ பேசிக்கொண்டிருந்தான் பல்லவ இளவரசனான கோவிந்தவர்மன்!

# 59

# வல்லவனுக்கே வையகம்

ஓங்கி உலகளந்த நீல வண்ண மாலவன் போன்ற அதிகாயபாகுவான தோற்றம்; வெற்பில் தவமியற்றும் வெள்ளெருக்குச் சடைமுடியான்மேல் வெண்ணீறணிந்த திருமேனி; சிவாநுபூதி பெற்ற சிவநேசச் செல்வர்க்குரிய அருள் பொலியும் ஞான முகம்; அறுபத்தைந்து வயதுக்கும் மேற்பட்ட முதிய பருவமாயினும் சிறிதளவு தளர்ச்சியும் அடையாத வீறார்ந்த வீரச் செருக்கு-என்றிவ்வாறு விளங்கிய பாண்டியப் பேரரசர் நின்றசீர் நெடுமாறன் என்னும் அரிகேசரி மாறவர்மர், தாம் வீற்றிருந்த பொன்னாசனத்தை விட்டு எழுந்து, நெடிய வளர்ச்சியினால் ஏற்பட்ட கூனலுடன் தலைகுனிந்து ஆழ்ந்த சிந்தனையில் லயித்தவராய் மெல்ல உலாவிக் கொண்டிருந்தார்.

அறிவார்ந்த சிவப் பழமாக அமர்ந்திருந்த அமைச்சர் குலச்சிறையார் அமைதிப் புன்முறுவலுடன் எழுந்து தம் எதிரே நின்றிருந்த கோவிந்தவர்மனைப் பரிவோடு பார்த்தவாறு நிதானமாகப் பேசினார்:

"பல்லவ இளவரசே! இவ்வளவு நேரம் நீங்கள் சொன்ன விவரங்கள் அனைத்தையும் கவனமாகக் கேட்டோம். சளுக்கிய ஆக்கிரமிப்பாளரைப் பல்லவ நாட்டின் மண்ணிலிருந்து விரட்டியடிக்க வேண்டியது அவசியம் என்றும், அந்த மிகப் பெரிய பணியில் எந்த விநாடியும் ஈடுபடத் தக்க தயார் நிலையில் பல்லவக் குடிமக்கள் ஒருமுகமாகத் திரண்டு நிற்கிறார்கள் என்றும், அவர்களது

எழுச்சி மிக்க பலத்தைத் திரட்டும் வேலை இப்போது வெகு தீவிரமாக நடைபெற்றுக்கொண்டிருக்கிறது என்றும், பாண்டிய மன்னரின் படை பல உதவி கிடைக்குமானால் அந்த முயற்சி இன்னும் சிறப்பாக அமையும் என்றும், இவ்விவரங்களையே உங்கள் சகோதரரான மாமன்னர் பரமேசுவரவர்மர் இந்த ஓலையில் வரைந்து அனுப்பி யிருக்கிறார் என்றும் சொல்கிறீர்கள். உங்களுடைய முயற்சியும் கோரிக்கையும் போற்றத்தக்கவை என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. ஆனால்...” பேச்சைத் துண்டுபடுத்திவிட்டுச் தம் மன்னர் பக்கம் திரும்பினார் அமைச்சர்.

ஆசனத்தின் தலைப்பில் இடக்கையை மடித்து ஊன்றியவாறு கம்பீரமாக நின்றிருந்த கோவிந்தவர்மன் உள்ளார்ந்த பரபரப்போடு நிமிர்ந்து மன்னர் நெடுமாறரையும் அமைச்சர் குலச்சிறையாரையும் பார்த்தான்.

சிந்தனை வயப்பட்டவராய் உலாவிக்கொண்டிருந்த நெடுமாறர் மெல்லத் தலையசைத்துவிட்டு மேலும் உலாவலானார். அவருடைய தலையசைப்பில் ஏதோ ஒரு குறிப்பை உணர்ந்துகொண்டவர்போல் புன்னகை புரிந்த குலச்சிறையார் தம் பேச்சைத் தொடர்ந்தார்: “ஆம், இளவரசே! சளுக்கியர் ஆதிக்கத்தில் சிக்குண்டு கிடக்கும் பல்லவ நாட்டை மீட்க வேண்டுமென நீங்கள் முனைந்து நிற்பது நியாயமே. அது உங்கள் பொறுப்பும் கடமையுமாகும். ஆனால், அதற்காக எங்களிடம் வந்து படையுதவி கோருவதன் நோக்கம் என்ன?”

கோவிந்தவர்மன் அவரை உற்று நோக்கினான். ‘இவ்வளவு பெரிய நாட்டின் மதியமைச்சர் இத்தனை சிறுபிள்ளைத்தனமான கேள்வி கேட்கிறாரே’ என்று அவனுக்கு உள்ளூற வியப்பு ஏற்பட்டது. அதை இளஞ் சிரிப்பால் மெழுகி மறைத்துக் கொண்ட அவன், “நலிவுற்றவர் தம் நம்பிக்கையான வலிவுள்ளவரிடம் உதவி கோருவதில் என்ன நோக்கம் இருக்க முடியும் என்பதை அமைச்சரே நன்கு அறிவார்!” என்றான் அமைதியான குரலில்.

குலச்சிறையார் இதைக் கேட்டுக் குலுங்கிச் சிரித்தார். "என்னுடைய கேள்வியின் பொருள் அதுவல்ல, இளவரசே! உங்களுக்கு நாங்கள் படையுதவி அளிப்பதால் எங்களுக்கு என்ன பலன் என்றுதான் கேட்கிறேன்."

திடுக்குற்றுவிட்டான் கோவிந்தவர்மன். இப்படியொரு கேள்வியை அவன் கொஞ்சமும் எதிர்பார்க்கவேயில்லை. எதிர்பார்த்திருந்தால் இங்கே வரவும் துணிந்திருக்கமாட்டான். அவனுக்கு ஒரே குழப்பாகிவிட்டது. இலாப—நஷ்ட நோக்கில் எழுப்பப்பட்ட அந்தக் கேள்விக்கு விடை பகரத்தெரியாமல் திணறிய அவன் ஒரு விநாடிக்குப் பிறகு வெடுக்கென்று தலை தூக்கி மிடுக்கான குரலில் சொன்னான்: "பயனா அமைச்சரே! பக்கத்து இல்லத்தில் குடியிருந்தவனைப் பலமிக்க முரடன் ஒருவன் வந்து பலாத்காரமாக வெளியேற்றிவிட்டு அதைப் பறித்துக்கொள்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அந்த அநியாயச் செயலை அக்கம் பக்கத்து இல்லத்தார் அநுமதித்துவிட்டால் பிறகு அவர்களுடைய இல்லங்களுக்கும் அதே கதி நேராதென்பது என்ன நிச்சயம்? தத்தமது பாதுகாப்புக்காகவேனும் அவர்கள் அந்த இல்லத்தைப் பறிகொடுத்தவனுக்காகப் பரிந்துபோய் உதவி செய்ய வேண்டியது அவசியம் அல்லவா? உங்களிடம் நாங்கள் உதவி கோருவதால் நீங்கள் பெறக்கூடிய பயனும் இப்படிப் பட்டதாகத்தான் இருக்கும் என்று நினைக்கிறேன்."

"அருமையான உவமானம்! ஆனால் பக்கத்து இல்லத்தில் பலமற்ற ஒருவன் குடியிருப்பதைவிடப் பலம் வாய்ந்த ஒரு முரடன் குடியேறினால் அது தமக்கெல்லாம் பாதுகாப்பாக இருக்கும் என்று அக்கம் பக்கத்து இல்லத்தார் நினைக்கத் தலைப்பட்டால்? அப்படி நினைப்பதிலும் கொஞ்சம் நியாயம் இருப்பதுபோல் தோன்றுகிறதே!"

"அநியாயத்துக்குத் தலை வணங்குகிறவர்களும், அதர்மத்துக்குத் துணை போகிறவர்களும்தான் இப்படி ஒரு வித்தார நியாய வாதம் பேசுவார்கள்."

"உண்மைதான். ஆயினும், நியாயம் தர்மம் இவை இரண்டும் நிலையானதொரு வரையறையில் எப்போதுமே உட்பட்டு நிற்பதில்லை. அவரவர் நன்மையில் அநியாயம் நியாயமாகவும், அதர்மம் தர்மமாகவும், தர்மம் அதர்ம மாகவும், நியாயம் அநியாயமாகவும் தோன்றலாம்; இல்லையா?"

கோபத்தால் குமுறிப் பெருமூச்சுவிட்ட கோவிந்த வர்மன் அவரை விழித்து நோக்கினான். "அமைச்சரே! தர்ம நியாயங்களைப்பற்றித் தங்களிடம் வாதிடுவதற்காக நான் இங்கு வரவில்லை. இனத்தாலும், மொழியாலும், மதத்தாலும், மண்ணின் குணத்தாலும் ஒருமைப்பட்ட ஒரு நட்பு நாட்டினிடம் உரிமையுடன் உதவி கோரவே வந்தேன். உங்களால் அதைச் செய்ய இயலுமா என்பதை மட்டும் கூறி எனக்கு அன்போடு விடையளிக்க வேண்டுகிறேன்."– உணர்ச்சிப் பெருக்கால் அவன் குரல் கம்மிக் கரைந்தது.

குலச்சிறையார் தம் மன்னரைத் திரும்பிப் பார்த்தார். அவர் முன் போலவே மெல்லத் தலையசைத்துவிட்டு அமைதியாகப் போய் ஆசனத்தில் அமர்ந்தார்.

"பல்லவ இளவரசரின் மனத்தை நோகச் செய்ததற்காக மிகவும் வருந்துகிறேன். அத்துடன் இன்னொரு கசப்பான விஷயத்தையும் கேட்டு அவர் மனத்தை இன்னும் அதிகமாக நோக வைக்க வேண்டியிருக்கிறதே என்று எண்ணி இப்போதே வருந்த ஆரம்பிக்கிறேன்" என்று குறும்பாகக் கூறியவாறு ஓரடி முன்னால் வந்த குலச்சிறையார் மேலும் சொன்னார்: "ஆம், இளவரசே! சளுக்கிய ஆதிக்கத்தை அழித்து ஒழிப்பதற்காகப் பாண்டிய மன்னரிடம் படை உதவி கோரிப் பல்லவ மன்னர் பரமேசுவரவர்மர் கொடுத்தனுப்பியதாகத் தாங்கள் எடுத்து வந்திருக்கும் இந்த நிரூபம் அவர் கைப்பட எழுதியது அல்ல என்றும், இது ஒரு தகூடலேகையிட்ட ஓலையென்றும் நாங்கள் ஐயப்படுகிறோம். அப்படி இல்லையென்று தங்களால் மறுத்துக் கூற இயலுமா?"

அக்கினிக் கணைகளால் சூழப்பட்டவன்போல் அதிர்ந்து விட்டான் கோவிந்தவர்மன். அவமானமும், பீதியும் ஒருசேரக் கிளர்ந்தெழுந்து அவனை உருட்டிப் புரட்டி எடுத்தன. அந்த ஒரு கண நேரத்தில் ஏதேதோ எண்ணி ஓரேயடியாகக் குழம்பி போனான். 'முன்பின் யோசியாமல் பெரும்பிடுகு முத்தரையர் இப்படி ஒரு சங்கடத்தில் நம்மைச் சிக்கவைத்துவிட்டாரே' என்று அவர்மீது அவனுக்குக் கோபம் பொங்கியது. நெருப்பைத் தீண்டிய ஊமைக் குழந்தை போல் திக்கித் திணறித் திருதிருவென விழித்த அவன் சட்டென்று தன்னைச் சமாளித்துக்கொண்டு நிமிர்ந்து, "என்ன இது விந்தை! ஏன் இப்படிக் கேட்கிறீர்கள் அமைச்சரே?' என்றான் அசட்டுச் சிரிப்புடன்.

"எங்களுக்கும் அது விந்தையாக இருப்பதால்தான் இவ்வாறு கேட்கிறோம்..."

"இல்லை என்று நான் மறுத்துக் கூறினால் அதற்கு நீங்கள் என்ன பதில் சொல்வீர்களாம்?"

"சளுக்கியர் ஆட்சியில் சிக்கித் தவிக்கும் பல்லவ நாட்டு மக்கள் தம் குடிமையுரிமையைப் பெறவேண்டும் என்ற பேரார்வுடன் குமுறி நிற்கிறார்கள் என்பதென்னவோ உண்மைதான். ஆனால் அவர்களின் அந்த எழுச்சித் துடிப்பைச் சளுக்கியருக்கு எதிராகத் திருப்பிவிடும் முயற்சி நடைபெறுவதாகக் கூறுவது முற்றும் பொய். அம்மாதிரியான முயற்சி எதுவும் இதுவரையில் அங்கு நடைபெறவேயில்லை. அந்தப் பணியை முன்னின்று செய்யவேண்டிய பல்லவ மன்னருக்கே அதில் கடுகளவு ஆர்வமும் நம்பிக்கையும் இல்லை. அப்படிச் செய்ய அவர் முன் வரவும் இல்லை. உங்களைப் போன்ற சிலர் அவ்வாறு செய்தாலும் அதற்கு அவர் ஆதரவு தர மறுக்கிறார்; அல்லது வேண்டாம் என்று தடுக்கிறார். சளுக்கியருக்குப் பயந்து சேதியக் கலைஞ ரொருவரின் இல்லத்திலே தலைமறைவாகப் புகலடைந்து கிடந்த அவர் இப்போது சளுக்கியத் தளபதியின் சூழ்ச்சிக்கு

இரையாகித் தாமே வலியப் போய் அவனிடம் சிக்கிக் கொண்டிருக்கிறார். அப்படிச் சிக்கியவரின் கதி என்ன ஆயிற்று என்பது இன்றுவரை யாருக்கும் தெரியாது. இந்நிலையில், அவர் எங்களிடம் படை உதவி கோரி ஓலை அனுப்பியிருக்கிறார் என்றால், அந்த ஓலை மெய்யானதுதான் என்று எங்களால் எப்படி நம்ப முடியும்?"

கோவிந்தவர்மனின் உடல் கிடுகிடுவென நடுங்கியது. அந்த நடுக்கத்தினூடே அவன் மனத்தில் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது. 'நமக்கு எதிராகத் திரும்பிச் சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் சேர்ந்துகொண்ட பழையாறைச் சோழர் இந்தப் பாண்டிய மன்னரையும் தம் பக்கமாகச் சாய்த்துகொண்டார் போலும்! இல்லையானால், இவர்களுக்கு நம்மைப்பற்றி இத்தனை உண்மைகளும் இவ்வளவு தெளிவாக எப்படித் தெரிந்திருக்க முடியும்?'-ஆத்திரமும் சினமும் அவன் அறிவைக் குழப்பின. "துரோகி! எல்லாம் அந்தப் பழையாறைச் சோழரின் திருவிளையாடல்! தாம் கெட்டதுமன்றிச் சத்திய சீலரான பாண்டிய மன்னரின் நெஞ்சிலும் நஞ்சைக் கலந்து விட்டிருக்கிறார் அவர்!" என்று வெறி பிடித்தவன்போல் கூவினான்.

அமைதியே வடிவாக வீற்றிருந்த நெடுமாறர் இதைக் கேட்டு மென்முறுவல் பூத்தார். அமைச்சர் குலச்சிறையாரோ கலகலவெனச் சிரித்துக்கொண்டே, "அப்படியானால் இந்த ஓலையைப்பற்றி நாங்கள் சந்தேகப்பட்டது சரிதான் என்று பல்லவ இளவரசரே ஒப்புக்கொள்கிறாரோ?" என்றார் குத்தலாக.

திகிலடைந்த நிலையில் வேர்த்து விறுவிறுத்து மௌனமாக நின்றான் கோவிந்தவர்மன்.

"கவலைப்படாதீர்கள், இளவரசே! தாங்கள் எடுத்து வந்த ஓலை தகூடலேகைதான் என்றாலும், அதிலே கண்டபடி தங்களுக்குப் படை உதவி கொடுத்துதவ நாங்கள் விருப்பமுள்ளவர்களாகவே இருக்கிறோம். ஆனால், ஒரு நாடு இன்னொரு நாட்டுக்குப் படை உதவி அளிப்பதென்பது மிகப்

பெரிய விஷயமாகும். பலம் பொருந்திய ஒருவனுக்கு உதவி செய்வதிலே எவ்வித முன்யோசனையும் தேவையில்லை. அப்படிச் செய்வதால் மேலும் பலமும் பெருமையும்தான் வந்து சேரும். பலஹீனனுக்கு உதவுவதோ அப்படிப் பட்டதல்ல; அதைப்பற்றிப் பலதும் சிந்திக்கவேண்டியிருக் கிறது. ஏனென்றால், பலஹீனனுக்கு உதவி செய்து அது பயனற்றுப் போய்விட்டால் எதிராளியின் கோபம் தன் எதிரியை விட்டுவிட்டு அவனுக்கு எதிராக உதவி செய்தவன் மேல் திரும்பும். அப்போது தர்மம் தலை காக்காது; அவனுடைய தலையையே அது கொய்துகொண்டு போய் விடும்.'' — இதமாகச் சிரித்தவாறு இப்படிக் கூறினார் குலச்சிறையார்.

“எனவே, பாண்டியரின் படை உதவி எங்களுக்குக் கிடைக்காது என்று சொல்கிறீர்கள், அப்படித்தானே?'' என்றான் கோவிந்தவர்மன் அலட்சியமாக.

''அது மட்டுமல்ல, இளவரசே! எங்களுடைய நன்மையையும் பாதுகாப்பையும் உத்தேசித்து, மாவீரனான சளுக்கிய விக்கிரமாதித்தனிடம் நாங்கள் நேசமாகப் பணிந்து போகவும் முடிவு செய்திருக்கிறோம்!'' என்று அமைச்சர் குலச்சிறையார் சொல்லிக்கொண்டிருக்கும்போதே, “இல்லை, இல்லை! இனி அதற்கு இடமே இல்லை!'' என்று திடீரென்று எழுந்த ஓர் ஆவேசக் குரல் கேட்டு அங்கிருந்த அனைவரும் திடுக்குற்றுத் திரும்பினர்.

அந்த மேன்மாடத்தின் வாயிற்புறத்தே திரைமறைவில் ஒடுங்கி நின்று, இவ்வளவு நேரம் அங்கு நிகழ்ந்த உரையாடல் களையெல்லாம் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்த சோழ இளவரசி இளங்கோப்பிச்சி, செங்கரும்பு வில்லிலிருந்து விடுபட்ட பூங்கணைபோல் சரேலெனப் பாய்ந்து வந்தாள்.

அதிகமுக்கியமான அரசியல் பேச்சு நடைபெறும் இடத்திலே தாம் பிரவேசிப்பது உசிதமாகாது என்று எண்ணி வெளிப்புற அறையிலேயே வீற்றிருந்த பாண்டிமா தேவியும் தமது தம்பி மகளின் இந்த ஆவேச நடத்தையைக் கண்டு மெய் விதிர்த்தவராய் அவளைப் பின்தொடர்ந்து விரைந்து வந்தார்.

# 60

# வட எல்லையில் போர்க் குமுறல்

"**வா**ருங்கள், மகாராணி! நல்ல தருணத்தில் வந்தீர்கள்!" என்று பணிவுடன் தலை வணங்கிய குலச் சிறையார், பாண்டியமாதேவியையும் சோழ இளவரசியையும் வியப்போடு மாறி மாறிப் பார்த்தார்.

சற்றும் எதிர்பாராத விதமாக அங்கு இளங்கோப் பிச்சியைக் கண்ட கோவிந்தவர்மன் ஆச்சரியத்தில் மூழ்கினான். ஏற்கனவே கலங்கிக் கிடந்த அவன் மனம் இப்போது ஒரேயடியாக அலைப்புற்றுக் கூளமாகியது. சிந்திக்கும் திறனை இழந்து அவளையே விழித்துப் பார்த்துக்கொண்டிருந்தவன் வெடுக்கென்று தன் முகத்தை வேறு பக்கம் திருப்பி கொண்டான்.

சிந்தனை மோனத்திலிருந்து விடுபட்டதால் ஏற்பட்ட ஒருவிதக் களைப்புக் கிறக்கத்துடன் மெல்லத் தலைநிமிர்ந்து பாண்டிய மன்னர், உணர்ச்சிப் பிழம்பாகத் தம் எதிரே வந்து நின்ற இளங்கோப்பிச்சியை ஏறிட்டுப் நோக்கினார். எந்தச் சூழ்நிலையிலும் எவ்விதச் சலனங்களையும் பிரதிபலித்துக் காட்டாமல் ஆழ்ந்த அமைதியே நிலவும் வியப்புடன், "யார்?...என் மைத்துனர் பழையாறைச் சோழரின் செல்வ மகள் இளங்கோப்பிச்சியா?" என்று சாந்தம் நிறைந்த இளநகையுடன் கேட்டுக்கொண்டே தம் தேவியின் பக்கம் திரும்பினார் அவர்.

"ஆம், சுவாமீ! சற்று முன்தான் அவள் நம் அரண்மனைக்கு வந்து சேர்ந்தாள்..." என்று புன்னகை புரிந்து

கொண்டே ஓர் ஆசனத்தில் அமர்ந்த மங்கையர்க்கரசியார் சிறிது தொலைவில் விறைப்பாக நின்றுகொண்டிருந்த கோவந்தவர்மனை நோக்கி, "பல்லவ இளவரசர் நலம் தானே?" என்றார் அன்பும் பாசமும் இழைந்த குரலில்.

அவரது ஒளி பொருந்திய திருமுகத்தைப் பார்த்து உணர்ச்சிக் கனல் பொங்க நின்ற கோவிந்தவர்மன் இரு கரங்களையும் கூப்பி, "பாண்டியமாதேவியின் அன்பாசியால் நன்னலமே!" என்றவாறு வணங்கினான்.

"பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரும் நலம்தானே?"-கனிவுடன் வினவினார் பாண்டிமாதேவி.

"திருவருளின் துணையால் அவரும் நலமாக இருப்பா ரென்றே நம்புகிறேன், தாயே!" குரல் கம்மித் தேயத் தலைகுனிந்தான் கோவிந்தவர்மன்.

பல்வேறு உணர்ச்சியலைகளை உள்ளடக்கிக்கொண்டு ஒரு சில விநாடிகள் தீய்ந்து பொசுங்கின.

"இளவரசி, இப்படி வந்து அமரலாமே!" என்று பரிவோடு கூறி அங்கு நிலவிய அமைதியைக் கலைத்தார் மாமன்னர் நெடுமாறர்.

இதுவரை எங்கோ வெறித்துப் பார்த்துக்கொண்டு விறைந்து நின்றிருந்த இளங்கோப்பிச்சி சட்டென்று திரும்பி, "இல்லை! சளுக்கிய விக்கிரமாதித்தனுடன் நீங்கள் நேசமாகப் போவதற்கு இனி இடமே இல்லை!" என்று முதலில் சொன்ன அதே சொற்களை முன்னிலும் ஆவேசமாக வீசினாள்.

குலச்சிறையாரும் கோவிந்தவர்மனும் அவளைத் திகிலுடன் உற்று நோக்க, பாண்டிமாதேவி மௌனமாகத் தலைகுனிந்து அமர்ந்திருந்தார்.

"இளவரசி! ஏன் இப்படிப் படபடக்கிறாய்? என்ன சொல்ல விரும்புகிறாய்?" என்று வாஞ்சையுடன் கேட்டுக் கொண்டே மெல்லத் தம் ஆசனத்தைவிட்டு எழுந்தார் நெடுமாறர்.

"பேரரசே! தங்கள் புகழ் மிக்க பாண்டிமா நாட்டை நோக்கிப் பேரபாயம் ஒன்று வெகு வேகமாக வந்து கொண்டிருக்கிறது. அதை முன்கூட்டியே தங்களிடம் தெரிவித்துவிட்டுப் போகவே இங்கு வந்தேன்."-சுற்றுப்புறச் சூழலை மறந்து இப்படிப் பொரிந்தாள் இளங்கோப்பிச்சி.

நெடுமாறர் இதைக் கேட்டு மெல்ல நகைத்தார். "பாண்டிய நாட்டுக்குப் பேராபத்தா?...இளவரசி, நீ என்ன சொல்கிறாய்?"

"ஆம், அரசே! பல்லவ நாட்டை விழுங்கிய சளுக்கிய விக்கிரமாதித்தன் பாண்டிய நாட்டின்மீதும் படையெடுத்து வரப்போகிறான். அதற்கான முயற்சிகளில் இப்போது அவன் அதி தீவிரமாக முனைந்திருக்கிறான்." ஆத்திரமும் அவசரமும் செருமிக் குமுறிய குரலில் இவ்வாறு படபடத்தாள் இளங்கோப்பிச்சி.

இந்தச் சேதி கேட்டு அதிர்ச்சியுற்ற கோவிந்தவர்மன் புள்ளெனத் துள்ளி நிமிர்ந்தான்.

ஆனால் பாண்டிய மன்னரோ எவ்விதப் பதற்றத்துக்கும் உள்ளாகாமல், "அப்படியா?..." என்று சாவதானமாகத் தலையசைத்துக்கொண்டார். பிறகு அதே அமைதியுடன் அவளைப் பார்த்து, "ஆமாம்; இந்தச் சேதியை நீ எப்படி அறிந்தாய் இளவரசி?" என்று, அவள் சொன்னதை நம்பாதவர் போல் புருவங்களை நெரித்துக்கொண்டு விளித்தார்.

இளங்கோப்பிச்சியின் முகம் இருண்டது. தனக்குக் கிடைத்த அந்த மர்ம ஓலையை எடுத்து அவரிடம் காட்டி விடலாமா என்று ஒரு கணம் நினைத்தவள் மறு விநாடியே அவ்வெண்ணத்தை மாற்றிக் கொண்டாள். 'சற்றுமுன் பல்லவ இளவரசர் கொண்டுவந்த ஓலையைத் தகூடலேகை என்று அலட்சியப்படுத்தி ஒதுக்கிவிட்டாற்போல் இதையும் ஒரு பொய் ஓலையென நினைத்துவிட்டால் என்ன செய்வது?'-திகைத்து நின்று அவள் தன்னைச் சமாளித்துக் கொண்டு உறுதியான குரலில் சொன்னாள்: "அந்தச் சேதியை எப்படி

அறிந்தேன் என்று விளக்குவதைவிட என் கண்ணால் கண்டு வந்த சில விவரங்களைச் சொல்வது இன்னும் பயனுள்ளதாக இருக்கும் என்று நினைக்கிறேன், அரசே! உறையூர் மார்க்கமாக நான் மதுரைக்கு வரும் வழியில் சளுக்கியரின் கடல் போன்ற சேனைகள் பாண்டிய நாட்டின் வட எல்லை நோக்கித் திரண்டு செல்வதைப் பார்த்தேன். பிறகு உறையூர் சுங்கச் சாவடியில் என் வண்டியைச் சோதனையிடுவதற்காகச் சளுக்கியக் காவல் அதிகாரிகள் நிறுத்தி வைத்திருந்தபோது, அவர்கள் தமக்குள்ளே பேசிக் கொண்ட பேச்சுக்களிலிருந்து மேலும் சில விவரங்களை என்னால் அறிய முடிந்தது. பல்லவ நாட்டின் பல்வேறு இடங்களில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த சளுக்கிய படைகளில் பெரும்பாலானவை இப்போது பாண்டிய நாட்டின் வட எல்லையில் போய்க் குவிந்து கொண்டிருக்கின்றன என்றும், நெல்வேலி* என்னுமிடத்தி லிருந்து திடீரெனப் போரை ஆரம்பித்துப் பின் பாண்டிய நாட்டு அமைச்சர் குலச்சிறையாரின் சொந்த ஊரான மிழலைக் கூற்றத்து மணமேற்குடி வழியாக ஊடுருவி வந்து மதுரை நகரை முற்றுகையிடத் திட்டமிடப்பட்டிருக்கிறது என்றும் அவர்கள் பேசிக்கொண்டார்கள். ஆக, இன்னும் ஓரிரண்டு வாரங்களுக்குள் பாண்டிய நாட்டின்மேல் சளுக்கிய விக்கிரமாதித்தன் போர் தொடுக்கப் போகிறான் என்பதை இவ்விவரங்களிலிருந்து நான் தெரிந்து கொண் டேன். இவற்றை விடத் தங்களுக்கு வேறென்ன ஆதாரம் வேண்டும் அரசே?"

சற்று நேரம் வரையில் அந்தச் சித்திரகூடத்திலே மயான அமைதி நிலவியது. பலத்த சிந்தனையில் மூழ்கியவராய் மௌனமாக உலாவிக்கொண்டிருந்த பாண்டியப் பேரரசர்

---

* நெல்வேலி என்பது புதுக்கோட்டைச் சீமையிலிருந்த நெல்மெலி என்னும் ஊராகும். அது தென்பாண்டி நாட்டின் திருநெல்வேலி அல்ல; தென்னார்க்காடு மாவட்டத்தில் உள்ள நெய்வேலியும் அல்ல.

ஏதோ ஒரு திடமான முடிவுக்கு வந்தவர்போல் பெருமூச்சு விட்டு நிமிர்ந்து, "இளவரசி! எனக்காகவும் எனது மாபெரும் பாண்டிய நாட்டுக்காகவும் நீ செய்த இந்தப் பேருதவிக்கு நான் பெரிதும் நன்றியுடையவனாக இருக்கிறேன். நெடுந்தூரப் பயணம் செய்து வந்ததால் மிகவும் களைத்துச் சோர்ந்து காணப்படுகிறாய். போ, உன் அத்தையாருடன் போய் நிம்மதியாக ஓய்வு எடுத்துக்கொள்" என்றார்.

தயங்கி நின்ற இளங்கோப்பிச்சி திடுமெனத் தலை தூக்கி, "என் மதிப்பு மிக்க அத்தையன்பர் அந்த மாபெரும் விஷயமாக என்ன முடிவு செய்திருக்கிறார் என்பதை நான் அறிய விரும்புகிறேன்!" என்று உறவின் உரிமைச் செருக்கோடு உரத்த குரலில் கேட்டாள்.

ஆழ்ந்த கவலையில் பிறந்த சோகச் சிரிப்புடன் அவளைக் கூர்ந்து நோக்கி நெடுமாறர், "எந்த முடிவைப் பற்றிக் கேட்கிறாய் இளவரசி?" என்று இதமாக வினவினார்.

"பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கவிருக்கும் விக்கிரமாதித்தனுக்குத் தாங்கள் தெரிவிக்கப் போகும் முடிவுபற்றி!"

"ஓ,...அந்த முடிவா? மாவீர மகாபுருஷனான சளுக்கியச் சக்கரவர்த்தி விக்கிரமாதித்தனை நானே நேரில் சென்று தரிசித்து என் கண்களைப் புனிதமாக்கிக்கொள்வது என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன்."

அதிர்ச்சியுற்றுத் திரும்பிய இளங்கோப்பிச்சி, "என்ன சொன்னீர்கள், அரசே?" என்று நடுங்கிய குரலில் கேட்டாள்.

"ஆம், குழந்தாய்! அதுதான் என் தீர்மானம்."

"அதாவது?..."

"தண்டெடுத்து வரும் விக்கிரமாதித்தனை செண்டு கொடுத்து வரவேற்றுச் சரணாகதியாகிவிட வேண்டும் என்பதே என் முடிவு."

"அரசே!..."

"அதைத் தவிர வழி இல்லை, இளவரசி! வடக்கே நருமதை ஆறு முதல், தெற்கே தென்னகத்தின் புதுக் கோட்டைச் சீமை வரையிலுள்ள மிகப் பெரிய நிலப்பரப்பை தனதாக்கிக்கொண்டு வலிமை மிக்க மாபெரும் வல்லரசாக விளங்கும் இரண ரசிக விக்கிரமாதித்தன் எங்கே, இந்த எளிய சிறிய பாண்டிய நாட்டின் மன்னனான நான் எங்கே? மதங்கொண்ட வேழத்தை எதிர்க்கச் சிறு நரி துணியலாமோ?"

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டுக் கலகலவெனச் சிரித்தாள். 'அடல் கருங்கூந்தல் வெள்ளெயிற்றுச் செவ்வாய்ப் பொற்சூலக் கைவல்லி'யான துர்க்கை அம்மனே வந்து எழுந்தருளி வந்த நின்று சிரிப்பதுபோல் அத்தனை கோபா வேசமாகச் சிரித்து முழக்கிய அவள் தன் இரு கரங்களையும் இடுப்பின்மேல் கம்பீரமாக ஊன்றிக்கொண்டு செருக்கும் மிடுக்குமாக நிமிர்ந்து நெடுமாறரை நேரிட்டுப் பார்த்தவாறு கணீரென்ற குரலில் சொன்னாள்: "பழம் பெருமை வாய்ந்த பாண்டியப் பேரரசின் மாமன்னரே! சேரரையும் பரவரையும் எதிர்த்துப் பாழி, செந்நிலம் முதலான பல போர்க்களங்களைக் கண்டு வெற்றி வாகை சூடிய சந்திர குலச் செம்மலே! தங்களைவிட அறிவிலும் அநுபவத்திலும் வயதிலும் கல்வி கேள்விகளிலும் மிக மிகத் தாழ்ந்த—குறைந்த—ஓர் எளிய சிறிய அபலைப் பெண்ணாக நான் இருந்தாலும், பார்புகழ் கொண்ட சோழ மகாவம்சத்தில் பிறந்தவள்—அந்த வம்சத்தின் வாரிசாக இன்று இருக்கும் மாவீரரான பழையாறைச் சோழரின் பட்டத்துச் செல்வ மகள் என்ற ஒரே தகுதியின் பேரில்—தங்களுக்குச் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன்; அவற்றைத் தயை கூர்ந்து செவிமடுக்க வேண்டுகிறேன், அரசியல் விழிப்புள்ள ஒரு சமுதாயத்தின் வாழ்வு ஆழ்கடலைப் போன்றது. அந்த வாழ்வில் நிரந்தரமான பரபரப்பும் அலைத் துடிப்புமே இருக்கும். ஜீவனுள்ள ஓர் அங்கத்தைப் போல அது இயங்கும். அதன் கவர்ச்சிகளும் செயல்களும் அதனுடைய எல்லைப்புறச் சத்திகளால்

உருவாகின்றன. போரோ, அல்லது அமைதியோ எதுவும் அதன் உள்நாட்டு நிலைமையால் அல்லது கொள்கையால் வரையறுக்கப் பெறுவதில்லை. அதனுடைய உட் துடிப்புக்கள் எல்லாம் வெளித் துடிப்புக்களால் வீறு கொள்பவையே. விரிந்து பரந்த உலகில் ஓர் உன்னத இடம் பெற விரும்பும் எந்த அரசாங்கமும் வெளிநாடுகளின் சண்டை சச்சரவுகளைப் புறக்கணித்து விட்டுத் தன் உள் நாட்டில் அமைதியாக வாழவிரும்புவது வடிகட்டின மதியீனமாகும். அத்தகைய அமைதி, அடிமை நாடுகளில் நிலவும் அமைதி போன்றது ஆகும். தனது தாய் நாட்டின் நியாயமான எல்லைகளைத் தீண்டும் ஒவ்வோர் அந்நியத் தாக்குதலையும் கண்டு எந்த நாட்டின் இரத்தம் கொதிக்கிறதோ, அந்த நாடே அரசியல் விழிப்புள்ள நாடு எனலாம். ஓர் அரசாங்கத்துக்கு 'நாம்' என்ற உணர்ச்சி இருக்க வேண்டியது அவசியம்தான்; ஆனால் அதற்கு அபாயம் ஏற்படும்போது 'நான்' என்ற உணர்ச்சியோடு அது ஆர்த்தெழ வேண்டும். போரிட்டுத் தனது பலத்தைப் பரிசோதிக்காமலே எதிரியிடம் சரணாகதி அடைவது போன்ற கோழைத்தனம் உலகில் வேறெதுவுமே இருக்க முடியாது. ஏனென்றால், வீரமும் விவேகமும் அற்ற செம்மறியாடு சிங்கத்தின் தோலைப் போர்த்திக் கொண்டு பயமுறுத்துவது போல் சில பலவீனமாக நாடுகள் வெறும் கோஷங்களாலேயே நாடு பிடிக்கும் தந்திரத்தைக் கைக் கொள்ளலாம். அந்த போலி ஆரவாரத்தைக் கண்டு அஞ்சி ஒரு நாட்டின் சுயாதிக்க உரிமையை விட்டுக் கொடுக்கவோ அடகு வைக்கவோ முயல்வது அறியாமையே ஆகும்."

இளகோப்பிச்சி சட்டென்று தன் குரலை உயர்த்தி ஆவேசமாக வார்த்தைகளைக் கக்கினாள்: "மாண்பு மிக்க அத்தையன்பரே! தங்கள் பாண்டிய நாட்டில் போதிய படை பலம் இல்லை என்ற ஒரே காரணத்துக்காக, பல நூறு காதங்களுக்கு அப்பாலிருந்து வந்திருக்கும் ராஜரீக அநுபவமற்ற வெறும் வீரனான விக்கிரமாதித்தனுக்குத் திறை செலுத்திப் பணிந்துபோக நினைப்பது கிரீடஜாதியில் பிறந்த

உங்களைப் போன்ற ஒரு பேரரசுக்கு அழகே அல்ல. எதிரியின் விடாய்ப்பை ஏற்கப் போதிய பலம் உங்களிடம் இல்லையென்றால் சரணாகதியே அதன் இறுதி முடிவு என்று கொள்வதும் தவறு. இம்மாதிரி சமயங்களில் ராஜீய கண்ணோட்டத்துடனும் இராஜ தந்திர உறவுடனும் நமது சொந்தச் சகோதர நாடுகள் சிலவற்றின் உதவியைக் கோரி அல்லது அவற்றுடன் கூட்டுச் சேர்ந்து, பொது எதிரியை முறியடிப்பதே புத்தியுடைமை. நமக்குள் ஆயிரம் வேற்றுமைகள் இருக்கலாம். ஆனால் அந்நியரின் பயமுறுத்தல் கோஷம் எழும்போது சிங்கத்தின் பிடரியைப்போல் ஒன்று சேர்ந்து சிலிர்த்தெழவேண்டும். இத்தகைய சிந்தனையோ முயற்சியோ செய்யாமல், ஆதிக்க வெறியெடுத்து அலைந்து வரும் பண்பாடற்ற ஒரு மிலேச்சனின் காலடியில் தாமரைப் பூப்போன்ற இந்த எழிலார்ந்த பாண்டிய நாடு மிதிபட்டு நசுங்குண்டு போக அநுமதிப்பது வழிவழியாகத் தொடரக் கூடிய பேரவமானமாகும். உங்களுடைய சொந்த நாட்டின் விஷயத்தில் எங்கோ இருக்கும் சின்னஞ்சிறு அடிமைச் சிற்றரசு ஒன்றின் இளவரசி இவ்வளவுதூரம் தலையிட்டுப் பேசுவது தவறு என்றாலும், அப்படிப் பேச எனக்கு உரிமை உண்டு என்றே நினைக்கிறேன். எவ்வாறெனில், அந்தச் சளுக்கிய விக்கிரமாதித்தன் பல்லவ நாட்டைக் கபளீகரம் செய்ததோடு அல்லாமல் இந்தப் பாண்டிய நாட்டையும் தன்னடிப்படுத்திக் கொண்டுவிட்டானானால் அப்புறம் அவன் மளமளவென்று முன்னேறி எஞ்சியுள்ள சேர நாட்டையும் எடுத்து விழுங்கிவிடுவான். அதன் பின் வட வேங்கடத்துக்குத் தெற்கேயும் கன்னிக்குமரிக்கு வடக்கேயும் பண்டு புகழ் கொண்ட தண்டமிழ்நாடு ஒன்று இருந்தது என்பதே எதிர்காலத்துக்குத் தெரியாமல் மறைந்து போய் விடும். எனவேதான் தங்களின் அந்த அவசர முடிவை மறு பரிசீலனை செய்ய வேண்டுமாய்ப் பணிவுடன் கேட்டுக் கொள்கிறேன்."

அனல் மாரியெனப் பொழிந்து தள்ளிய இளங்கோப் பிச்சி சட்டென்று திரும்பிச் சுற்றுமுற்றும் சுழன்று

நோக்கினாள். அந்தச் சித்திரகூடத்தில் இருந்த அனைவரும் தன்னையே விழியசைக்காமல் பார்த்துக்கொண்டிருந்ததை அப்போதுதான் உணர்ந்தவள்போல் வெலவெலத்து நடுங்கினாள். அதிலும் கோவிந்தவர்மனின் பார்வையே அவளை வெகுவாகக் குன்றிக் குறுகச் செய்துவிட்டது. இவ்வளவு நேரம் அவளிடம் பொங்கிக் குமுறிய உணர்ச்சி யாவேசம் இப்போது இருந்த இடம் தெரியாமல் மறையவே, அவள் பாய்ந்தோடித் தன் அத்தையாரின் பின்னால் ஒளிந்து கொள்வதுபோல் ஒடுங்கி நின்றுகொண்டாள்.

பாண்டியப் பேரரசர் மகிழ்ச்சிப் பரவசத்தோடு தம் மனைவியாரின் பக்கம் திரும்பி, "தேவி! உன் தம்பி மகளின் பேச்சைக் கேட்டாயா? இந்த வீரமா செல்வியைப் பெற்ற பழையாறைச் சோழரே பாக்கியசாலி! அவரை மைத்துனராக் கொண்ட நானும் பாக்கியசாலியே!" என்றார்.

தன் பேச்சின் விளைவை அறிய நெடுமாறரின் முகத்தையே கூர்ந்து பார்த்துக்கொண்டிருந்தாள் இளங்கோப் பிச்சி.

இந்தச் சமயம், எங்கோ தொலைதூரத்துக்கு அப்பால் நீண்ட மணியோசை ஒலிப்பது கேட்டது. அதைத் தொடர்ந்து எட்டுத் திக்கும் எதிரொலிக்கும் வண்ணமாக முரசொலியும் கொம்பொலியும் சேர்ந்து எழுந்து முழங்கின.

அந்த முழக்கப் பேரொலியைக் கேட்டுச் சடாரென்று ஓங்கி நிமிர்ந்து நெடுமாறர் கடகடவென உரக்கச் சிரித்தார். சிரித்துக்கொண்டே விரைந்து போய், சிலையாகச் சமைந்து நின்ற பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனின் திண்ணிய தோளில் தம் வலக்கரத்தை வாஞ்சையோடு போட்டு அவனை அணைத்தவாறு திறந்த வெளியாயிருந்த மேன்மாடத்துத் தளத்தை நோக்கி நடந்தார்.

இதுவரையில் அங்கே நடந்தது, இனி நடக்கப்போவது எல்லாம் முன்கூட்டியே தமக்குத் தெரியும் என்பதுபோன்ற மந்தகாசப் புன்முறுவலுடன் அவர்களைப் பின் தொடர்ந்தார்

அமைச்சர் குலச்சிறையார். ஒன்றும் புரியாமல் ஒடுங்கி முடங்கி நின்றிந்த இளங்கோப்பிச்சியும், கவலை தோய்ந்த முகத்தினராய்க் காணப்பட்ட மகாராணி மங்கையர்க்கரசியும் தயங்கித் தயங்கி அவர்கள் பின்னால் சென்றனர்.

ஒளியை இருள் விழுங்கிக்கொண்டிருந்த அந்த முன்னிரவு நேரத்தில் மதுரை மாநகர் ஒரு புதிய சோபையுடன் விளங்கியது.

மேன்மாடத்துத் திறந்த வெளித் தளத்துக்கு வந்து சேர்ந்த மாமன்னர் நெடுமாறர் அங்கிருந்த ஒரு சிறிய மேடையின்மேல் ஏறி நின்று, வடதிசை தொலை தூரத்துக்கு அப்பால் தம் பார்வையைச் செலுத்தினார். அவர் பார்த்த திசைப்பக்கம் மற்றவர்களும் திரும்பினர். அங்கே-

புகழாபரணம் அரண்மனையின் வடக்குக் கோட்டை வாயில் திறக்கப்பட்டிருந்தது. அதன் மாபெரும் அகழிப்பாலம் இறங்கி வழி இணைத்திருந்தது. அங்கிருந்து தொடங்கி முடிவு தெரியாத தூரத்துக்கு அப்பால்வரை-கரி, பரி, தேர், காலாட் படைகள் கொண்ட மாபெரும் சேனா சமுத்திரம் அணிவகுத்து நின்றிருந்தது! முனையெதிர் மோகர் படை, ஏழகப்படை, மறவர் படை என்று முப்பெரும் பிரிவுகளாகப் பிரிந்திருந்த அந்தப் படைகள், மீனக் கொடிகளை ஏந்திப் பாண்டிய நாட்டின் வட எல்லைத் திசை நோக்கி நின்று அவ்வப்போது விண்ணை முட்டும் போர்க் கோஷங்கள் எழுப்பிக் கொண்டிருந்தன!

மிகப் பெரிய அந்தச் சேனைத் தொடருக்குக் கிழக்கே மற்றொரு பெரும் படையும் அணிவகுத்து நின்று கொண்டிருந்தது. புலிக்கொடி ஏந்தி நின்ற அப்படை, பாண்டியப் படைகளைப்போல் வடதிசைப் பக்கமாக நில்லாமல், ஏனோ அரண்மனைக் கோட்டையைப் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தது.

தோள்கள் விம்மிப் புடைக்க இந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டிருந்த பாண்டியப் பேரரசர் வீறார்ந்த மிடுக்குடன் திரும்பி, "சோழ இளவரசி, அதோ பார்! பாண்டியநாட்டின்மேல் படையெடுத்து வரவிருக்கும் சளுக்கியவிக்கிரமாதித்தனுக்கு நான் சொல்லப்போகும் பதில் அது தான்! அதுவேதான்!" என்று இடியென முழங்கிச் சிரித்தார்.

இளங்கோப்பிச்சி இதைக் கேட்டு வியப்பால் நீர்த்துச் சிலிர்த்தாள். சற்றுமுன் பாண்டிய மன்னர் சளுக்கியரிடம் சரணாகதியடையப் போவதாகச் சொன்னதும், தமது நாட்டின்மேல் விக்கிரமாதித்தன் படையெடுத்து வரவிருக்கும் சேதி தமக்குத் தெரியாத மாதிரி நடந்துகொண்டதும் வெறும் குறும்புத்தனமான நடிப்பு என்பதைப் புரிந்து கொண்ட அவள் வெட்கத்துடன் தலைகுனிந்தாள்.

இரண்டாவது தடவையாக முரசு முழங்கியது. கொம்பொலி கிளம்பி வானைப் பிளந்தது. மறுகணம், பாண்டிய நாட்டுப் படைகள் வட எல்லையை நோக்கிப் பேராரவாரமிட்டுச் செல்லும் ஓசை கொந்தளித்துக் குமுறும் கடல் அலையொலிபோல் கேட்டது.

படைகள் பெயர்ந்து செல்லும் அந்தப் பயங்கரக் காட்சியை இமைக்காமல் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்த நெடுமாறர் பெருங் குரலெடுத்துச் சிரித்துக் கொண்டே திரும்பி, "பல்லவ இளவரசே! உங்களிடம் ஒரு சேதி!" என்றவாறு அவனை நோக்கி வந்தார். "இதோ, தனித்து நிற்கிறதே ஒரு பெரும் படை; இது யாருடைய படை— எதற்காக, யாருக்காக அது காத்துக்கொண்டிருக்கிறது— என்பது உங்களுக்குத் தெரியுமா?"

பிரமித்து நின்றிருந்த கோவிந்தவர்மன் அவரைத் துடிக்கும் மனத்துடன் ஏறிட்டுப் பார்த்தான். ஆனால் அதற்குமேல் அவனிடம் ஏதும் சொல்லாமல் சித்திர கூடத்தை நோக்கி நடந்தார் பாண்டிய மன்னர்.

# 61

# அரிவாரணம்

**சி**த்தூர வண்ணமாய்ச் சிவந்து கிடந்த கீழ்த் திசைத்துரியத்தில் செங்கதிர்ச் சூரியன் தலைதூக்கி எழுந்த அந்த இளங்காலை நேரத்திலே, பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளி பரபரப்பும் விறுவிறுப்புமாகக் காணப்பட்டது.

பள்ளி மாளிகையின் முகப்பு வாயிலுக்கும், தொலைதூரமதில் சுவரின் பிரதான நுழை வாயிலுக்கும் இடையே அமைந்த விசாலமான அழகிய பாதையின் இருமருங்கும் நூற்றுக்கணக்கான சளுக்கிய காவல்வீரர்கள் ஈட்டிகளையும் எறிவேல்களையும் ஏந்தியவாறு வரிசையாக நின்றுகொண்டிருந்தனர். அவர்களுக்குப் பின்னால் அங்கே இந்நாள்வரை பல்வேறு அலுவல்களுக்காக அமைக்கப் பட்டிருந்த பணியாட்களும் பணிப்பெண்களும் கைகட்டி வாய் பொத்திக் கும்பல் கும்பலாக நின்றுகொண்டிருந்தனர். அவர்கள் அனைவருடைய முகங்களிலும் ஒருவித ஆழ்ந்த சோகமும் பிரிவுத் துயரும் நிலவிக் கிடக்க, தம் பார்வை முழுவதையும் ஒரே திசையில் செலுத்திக் கொண்டிருந்தனர்.

அவர்களது பார்வை சென்ற திசையிலே—பள்ளி மாளிகையின் முகப்பு வாசலில்—பல்லவ மன்னன் பரமேசுவர்மனுடைய பட்டத்து யானையான அரிவாரணம் மிகமிக அமைதியாக நின்றுக்கொண்டிருந்தது. முத்து முகப்படாமும், நாகலிங்க மலர் மாலையும் அணிந்து கம்பீரமாகக் காட்சியளித்த அந்தக் களிற்றின் முதுகில் அழகிய அம்பாரியொன்று ஏற்றிக் கட்டபட்டிருந்தது. பகட்டான ஆடையணிகளுடன் நின்றிருந்த பாகன் ஒருவன் சிறிதும்

பயமின்றி அதன் திண்ணிய துதிக்கையையும் வெண்ணிற மருப்பையும் தடவி விட்டவாறு, அவ்வப்போது அதற்குக் கரும்புக் கழியும், கதலித் தண்டும், கமுகுக் குலையுமாக எடுத்து ஊட்டிக்கொண்டிருந்தான். கரிய மலைபோன்ற தன் கனத்த பேருடலை அப்படியும் இப்படியுமாக அசைத்துக்கொண்டு பாகன் கொடுத்த பசிய உணவுகளை வாங்கி வெகு அலட்சியமாக உண்டுகொண்டிருந்தது யானை.

அந்த யானைக்குப் பின்னால், ஆந்திர இளவரசியின் சிவிகை தூக்கிகளில் ஐந்து பேர் மட்டும் பயப்பிராந்தியுடன் நடுக்கமுற்றுத் தலைகுனிந்து நின்றுகொண்டிருந்தனர்.

இத்தனை நாட்களாக யாருக்கும் அடங்காமல், யாரையும் நெருங்கவிடாமல் மதம் கொண்டாற்போன்ற நிலையில் மூர்க்காவேசமாக அமளி துமளி பண்ணிக் கொண்டிருந்த அந்த அரிவாரணம் இன்று எப்படி இவ்வளவு சாதுவாக-சாந்தமே வடிவமாக-அடங்கியொடுங்கி நிற்கிறது? அம்பாரி சுமந்து பல்லவபுரம் அரண்மனையிலிருந்து இலவந்திகைப் பள்ளி வரையிலும் வந்து இத்தனை அமைதியாக நின்று கொண்டிருக்கிறதே! ஆமாம்; அப்படி அது அமைதி பூண்டு நின்றதற்குக் காரணம்-

அதன் எதிரே—இருபதடி தூரத்தில்—சளுக்கிய வீரனொருவன், வீழ்ந்துவிட்ட பல்லவ நாட்டின் பார் புகழ் கொண்ட நந்திக் கொடியை ஏந்தியவாறு குதிரைமீது அமர்ந்திருந்தான்! அவன் பிடித்திருந்த கொடியில் பொறித்திருந்த நந்திச் சின்னத்தைத் தன் சிறிய சிவந்த கண்களால் வெகு கவனமாகப் பார்த்துக் கொண்டுதான் அத்தனை பதவிசாக நின்றுகொண்டிருந்தது அந்த யானை!

யாரை ஏற்றிக்கொண்டு எங்கே போக, அது இங்கே வந்து காத்து நிற்கிறது?...

"கசப்பான காட்சி! என்ன செய்வது? காரியம் ஆக வேண்டியிருக்கிறதே!" என்று முகத்தைச் சுளித்துக் கரகரத்த குரலில் முனகியவாறு அந்த ஒற்றைத்தூண் குடை மண்டபத்துக்குப் பின்னாலிருந்து எழுந்து நின்றார் சளுக்கியத் தளபதி வில்வேலி.

"எந்தக் காட்சியைப் பார்த்துவிட்டுத் தளபதியார் இப்படி வயிறெரிந்து பேசுகிறார்?" என்று மமதைச் சிரிப்புடன் கேட்டுக்கொண்டே அங்கு வந்து சேர்ந்தான் சளுக்கிய இளவரசனான விநயாதித்தன்.

"நீங்கள் பார்க்கவில்லையா, இளவரசே? அதோ பாருங்கள், நம் கண்ணெதிரேயே நம்முடைய வீரன் பல்லவ நந்திக் கொடியைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு நிற்கிறான்."

"அற்பப் பதர்! இந்த அநியாய காரியத்தைச் செய்ய அவன் எப்படித் துணிந்தான்?"-பற்களை நறநறவெனக் கடித்துக்கொண்டே அங்கிருந்து பாய்ந்து செல்லத் திரும்பினான் விநயாதித்தன்.

சடாரென்று தாவி அவனுடைய தோளைப் பற்றி இழுத்து நிறுத்திய வில்வேலி, "என்ன இருந்தாலும் விநயாதித்தருக்கு இவ்வளவு அவசரம் கூடாது!" என்றார் அலட்சியச் சிரிப்புடன். "அதோ, அந்தப் பொல்லாத யானை அம்பாரியோடு அமைதியாக வந்து நின்றுகொண்டிருக்கிறதே, அதை நீங்கள் பார்க்கவில்லையா இளவரசே?"

தன் தடித்த உதட்டை மடித்துக் கடித்தவாறு முகத்தைச் சுளித்த விநயாதித்தன், "ஓகோ! இந்த விஷயத்தை நீங்கள் முதலிலேயே சொல்லியிருக்கலாம்" என்று சலிப்புடன் முணுமுணுத்துக்கொண்டே மண்டபத்தின் கீழ்ப்படியில் போய் பொத்தென்று உட்கார்ந்தான்.

இலவந்திகைப்பள்ளியின் முகப்பு வாயிலையே வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்த வில்வேலி மெல்லத் திரும்பி, "இளவரசர் இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தார்?" என்று அடித்தொண்டையில் கேட்டார்.

"நமது வரித் தண்டல் அதிகாரிகள் என்னென்ன வரிகளைச் சொல்லி ஜனங்களிடமுள்ள செல்வங்களைச் சுரண்டிப் பிழைக்க முடியுமோ அவ்வளவையும் பறித்து விட்டு மேற்கொண்டு வரிபோட வழியில்லாமல் திண்டாடிக்

கொண்டிருந்தார்கள்...'' என்று கோணல் சிரிப்புடன் இழுத்தாற்போல் கூறினான் விநயாதித்தன்.

“ஏன் ‘காற்றுக் காணம்” என்ற பெயரிலே சுவாசிக்கும் காற்றுக்கு வரிபோட்டு வசூலிக்கச் சொல்வதுதானே?”

‘‘அந்த வரி ஒன்றுதான் பாக்கியிருக்கிறது; அது அவசியம் போட வேண்டிய வரிதான். ஆனால் வரி என்று சொல்லிக்கொண்டு ஜனங்களிடம் போனால் இனி ஓர் ஆழாக்கு நெல்லையோ அரைக்குன்றிமணி பொன்னையோ கூட வசூலிக்க முடியாத நிலை ஏற்பட்டிருக்கிறதே!”

“என்ன! இந்த அடிமை நாட்டு மக்கள் நமக்கு வரி கொடுக்க மறுக்கிறார்களா?”

“அப்படியல்ல, தளபதியாரே! வரியாகக் கொடுக்க அவர்களிடம் இப்போது ஒன்றுமே இல்லை. வரித் தண்டல் செய்யப் போவோரையே அடித்துப் பிய்த்துத் தின்றிவிடும் அளவுக்கு நாட்டிலே வற்கடம் நிலவிக் கிடக்கிறது.”

‘‘நமது வரித் தண்டல் அதிகாரிகள் மிகவும் சாமர்த்தியசாலிகள்தாம்! இவ்வளவு சீக்கிரம் இத்தனை பிரமாதமாகத் தம் கடமையை நிறைவேற்றியிருக்கிறார்களே!’

“அதில் சந்தேகமில்லை. ஆயினும் நாம் அதோடு திருப்திப்பட்டுவிட முடியாது.”

“முற்றும் உண்மை. ஏனென்றால், நம்மிடமுள்ள படை பலம் ஒன்றை மட்டுமே நம்பிப் பாண்டிய நாட்டின்மேல் திடீரென்றுப் போர் தொடுக்க முடிவு செய்துவிட்டார் நம் மன்னர்பிரான். இந்த நெருக்கடியான நேரத்தில் நமக்குப் பொன்னும், வெள்ளியும், உணவுப்பொருட்களும் இரட்டிப்பு அளவில் தேவைப்படுகின்றன. இவற்றை எப்படிச் சமாளிப்பது என்று இரவு பகலாக நான் கவலைப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.”

“இதையெல்லாம் உத்தேசித்துத்தான் நம் வரித்தண்டல் அதிகாரிகளுக்கு இன்று ஒரு புது வழி சொல்லிக் கொடுத்து

அனுப்பிவிட்டு வந்திருக்கிறேன்!'' என்று பெருமையுடன் கூறிக்கொண்டே எழுந்த விநயாதித்தன், தளபதி வில்வேலியைக் கூர்ந்து பார்த்து அவர் கண்ணுக்கு நேரே ஏதோ சித்திரம் வரைவதுபோல் தன் கை விரலை வெறுமனே ஆட்டி அசைத்து அபிநயித்தான்.

வெற்ற வெளியில் அவன் வரைந்து காட்டிய சித்திரக் குறிப்பை உடனே புரிந்துகொண்ட வில்வேலி, "ஓகோ! அந்த வழியா? அதையெல்லாம் நாங்கள் ஏற்கனவே நடத்தி முடித்து விட்டோமே!" என்றார் அலட்சியமாக.

"இல்லை; ஒரு சில இடங்களில்தாம் நீங்கள் அந்தக் காரியத்தை நடத்தியிருப்பீர்கள். இன்னும் அப்படி நடத்த வேண்டிய இடங்கள் ஏராளமாக இருக்கின்றன. மேலும், நீங்கள் அந்த முறையை நடத்திய விதம் வேறு; நான் நடத்தச் சொல்லியிருக்கும் முறை வேறு. இந்தப் புதிய முறையால் நாம் இதுவரையில் காணாத அளவுக்குப் பொன்னும் பொருளும் பெறப்போவது ஒரு புறமிருக்க, இந்நாட்டு மக்கள் தமக்கிடையே எவ்வித வேற்றுமையுமின்றி ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள்போல் ஒன்றுபட்டு நிற்கிறார்கள் என்று அன்று சொன்னீர்களே, அந்த ஒற்றுமையின் அஸ்திவாரம் அடியோடு குலைந்து அவர்கள் ஒருவரோடொருவர் வெட்டுப்பழி குத்துப்பழி நடத்திக்கொள்ளும்படியான ஒரு பயங்கர நிலைமையையும் அது தோற்றுவிக்கப் போகிறது."

''ஆகா! சக்கரவர்த்தி விக்கிரமாதித்தருக்குப் பின் மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தைக் கட்டிக் காக்கக்கூடிய சகல தகுதிகளையும் பெற்றுவிட்டார் எங்கள் விநயாதித்தர்! இனி நான் எள்ளளவு கவலையும் கொள்ள வேண்டிய தில்லை!'' என்று உற்சாக விம்மலுடன் கூவிச் சொன்ன வில்வேலி சட்டென்று நிமிர்ந்து, "அதோ, நம் நாடகத்தை நடத்த வேண்டிய நேரம் நெருங்கிவிட்டது. நீங்கள் இங்கேயே சற்றுத் தலைமறைவாக நில்லுங்கள்; நான் சென்று வருகிறேன்" என்றவாறு இலவந்திகைப்பள்ளியை நோக்கி வேகமாக நடந்தார்.

# 62

## பயணம் எங்கே?

**செ**ம்மாதுளம் பழம் பிளந்து செம்பொன் முத்துக்கள் ஒளி சிந்தினாற்போல் தன் செவ்விதழ் திறந்து முறுவலித்துக் கொண்டே இலவந்திகைப்பள்ளியின் மேன்மாடத்திலிருந்து இறங்கி முகப்பு வாயிலை நோக்கிவந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி.

“வாருங்கள், இளவரசி! தங்கள் வருகையை எதிர்பார்த்து நீண்ட நேரமாகக் காத்திருக்கிறேன்” என்று பணிவும் குழைவுமாக வரவேற்றார் தளபதி வில்வேலி.

முகப்பு வாயிலின் முன் படியில் வந்து நின்ற உத்தமசீலி அங்கே அவளது பயணத்துக்காகச் செய்யப்பெற்றிருந்த ஏற்பாடுகளைப் பார்த்துப் பிரமித்துவிட்டாள். “ஏனய்யா! இன்று நான்தான் பெருவளநல்லூருக்குப் பயணமாகிறேனா அல்லது எனக்குமுன் வேறு யாராவது வேறெங்கேனும் பயணப்படப் போகிறார்களா?”-வியப்பேறிய குரலில் இளநகை கலவையிட இவ்வாறு கேட்டாள்.

“இளவரசியார் என்ன இப்படிச் சொல்லிவிட்டார்கள்? எல்லாம் தங்களுக்காகவேதான் அம்மணி!”-உடல் குலுங்கச் சிரித்த வில்வேலி மேலும் சொன்னார்: “மாபெரும் சளுக்கிய சாம்ராஜ்யத்தின் மகா சக்கரவர்த்தி விக்கிரமாதித்தருடைய அன்புத் தம்பியாரின் அருமைப் புதல்வியான உத்தமசீலியார் ஓரிடத்திலிருந்து இன்னோரிடத்துக்குப் பயணமாவதென்பது சாதாரண விஷயமா? இந்தப் பயணத்துக்கு இன்னும் சிறப்பான ஏற்பாடுகளைச் செய்ய அவகாசமும் வசதியும்

இல்லையே என்று நான் கவலைப்பட்டுக்கொண்டிருக் கிறேன்?"

உத்தமசீலி உள்ளூறத் திகிலடைந்தாள். சளுக்கியத் தளபதி எவ்வளவுக்கெவ்வளவு அன்பும் பரிவும் காட்டிப் பணிந்து குழைந்து பேசுகிறாரோ அவ்வளவுக்கவ்வளவு அவர் நெஞ்சிலே நஞ்சு ஊற்றெடுக்கும் என்பதை அவள் அறியாதவளா என்ன? ஆயினும் தன்னை வெகுவாகக் கட்டுப்படுத்திக்கொண்டு நிதானமாகக் கேட்டாள்: "இத்தனை காவல் வீரர்களும் என்னுடன்தான் வரப்போகி றார்களா, ஐயா?"

"இல்லை, அம்மணீ! தாங்கள் எப்போதுமே அமைதியையும் எளிமையையும் விரும்புகிறவர் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். அவ்வாறில்லையானால் இந்தப் பல்லவபுரம் அரண்மனையில் தங்கியிருக்கப் பிரியப்படாமல் பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் குடிலுக்குப் போக அநுமதி கேட்பீர்களா? இதெல்லாம் தங்கள்பேரில் நாங்கள் வைத்திருக்கும் அன்பையும் மதிப்பையும் காட்டுவதற்காகவும், இராஜகுலப் பெண்மணிகள் பயணப்படும்போது நடத்தவேண்டிய சில சம்பிரதாய முறைகளுக்காகவும் செய்யப்பட்ட ஏற்பாடுகள்தாம். இந்த வீரர்கள் தங்களுடன் வந்து தங்களுக்குச் சிரமம் தர மாட்டார்கள்.

"மிக்க மகிழ்ச்சி, ஐயா! ஆனால் நான் எப்போதும்போல் சிவிகையிலேயே பயணப்படுகிறேனே? யானைமீது அம்பாரி கட்டிப் போவதெல்லாம் எனக்கு அடியோடு பிடிக்காது" என்று தயக்கத்துடன் இழுத்தாள் உத்தமசீலி.

"தயவுசெய்து அப்படியெல்லாம் சொல்லாதீர்கள், அம்மணீ! தங்களுக்குப் பிடிக்காவிட்டாலும் தங்கள் பெரிய தந்தையாரின் கௌரவத்தை உத்தேசித்தாவது தாங்கள் இந்த யானை மீதுதான் பயணம் செய்தாக வேண்டும் என்பது என் விருப்பம். இப்படி நான் வேண்டிக்கொள்வதற்கு வேறு சில

காரணங்களும் உள்ளன. அன்றொரு நாள் பெருவளநல்லூர்ச் சாலையிலே நமக்கு ஏற்பட்ட அந்தக் கசப்பான அநுபவங்களை இதற்குள் நாம் மறந்துவிடக் கூடாது. அத்துடன், சேதியக் கலைஞருடைய இல்லத்தில் தங்கி யிருக்கப் போகும் தங்களை அவர் அன்பாகவும் மதிப்பாகவும் வைத்து நடத்த வேண்டும் என்பதை அவருக்குச் சொல்லாமல் சொல்வதற்காகவும் இப்படி ஓர் உயர்ந்த வாகனத்தை நான் ஏற்பாடு செய்ய வேண்டியதாயிற்று. வெளிப்பகட்டுக்களைப் பார்த்து மயங்கும் வேடிக்கை உலகம் தானே அம்மணீ இது? இளவரசியிடம் இன்னொரு மகிழ்ச்சி கரமான விஷயத்தையும் சொல்ல விரும்புகிறேன். இதோ நிற்கிறதே, இந்த யானை சாதாரண யானை என்று நினைக்காதீர்கள்? இது பல்லவ பரமேசுவரவர்மனுடைய பட்டத்து யானை. இதன் பெயர் அரிவாரணம். இந்த மதிப்பு வாய்ந்த யானையின் மீது எங்கள் மதிப்புக்குரிய ஆந்திர இளவரசியாரை ஏற்றி அனுப்புவதிலே நாங்கள் எல்லையற்ற பெருமையடைகிறோம். மாமன்னர் விக்கிரமாதித்தர் பெற்ற மகத்தான வெற்றியின் பலனை அவருடைய அருமைத் தம்பியாரின் செல்வ மகள் அநுபவிக்க வேண்டாமா?”

இவ்வளவு நேரம் அச்சமும் திகிலுமாகக் குழம்பி நின்ற உத்தமசீலி இந்தச் சேதி கேட்டுப் பரபரப்பும் குதூகலமும் அடைந்தாள். ‘என் இதயப் பேரரசர் பரமேசுவரவர்மரின் பட்டத்து யானையா இது? என் அன்பின் மாமன்னர் அமர்ந்த அதே யானையின்மேல் நானும் அமர என்ன பாக்கியம் செய்திருக்க வேண்டும்! அவர்மீது நான் கொண்ட தூய காதலின் சக்தியே இந்த அரிய சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்துவிட்டதா? அல்லது எதிர்காலத்தில் இந்த யானையின்மேல் நாங்கள் இருவரும் ஒன்றாக அமர்ந்து காஞ்சிமாநகரின் வீதியிலே பவனியாக வரப் போவதை இந்நிகழ்ச்சி இப்போதே எனக்குக் குறி சொல்லிக்

காட்டுகிறதா?'—உற்சாகம் துளும்பப் புன்னகை புரிந்த உத்தமசீலி, "தளபதியாரின் அன்பு உள்ளத்துக்கு நான் என்றும் நன்றியுடையவளாக இருப்பேன்!" என்று தேனினுமினிய குரலில் கூறிக்கொண்டே வாசலில் நின்ற அரிவாரணத்தை நோக்கிச் சென்றாள்.

யானையின் வலப் பக்கவாட்டில் போய் நின்ற அவள் சுற்றிலும் தன் பார்வையை ஓட்டினாள். இந்நாள்வரை அவளுக்கு ஊழியம் புரிந்து வந்த பணிப்பெண்களும், பணியாட்களும், காவல் வீரர்களும் கண்ணீர் சோர அவளைப் பார்த்துக் கரம் குவித்தனர். அந்த இலவந்திகைப் பள்ளியில் தங்கியிருந்த மிகச் சில நாட்களுக்குள் அவர்களுடைய உள்ளங்களை அவள் எந்த அளவுக்குக் கவர்ந்து விட்டிருக்கிறாள் என்பதை இந்த உருக்கமான காட்சி, கூறாமல் கூறிக் காட்டியது. இமையோரத்தில் கசிந்த கண்ணீரை இலேசாகத் துடைத்து விட்டுக்கொண்டு யானையின் அருகில் போய் நின்றாள்.

"இளவரசி! பல்லவபுரம் அரண்மனையில் சகல வசதிகளுடனும் தங்கியிருக்குமாறு தங்களை நான் வேண்டிக்கொண்டேன். ஆனால் தாங்களோ பெருவள நல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்துக்குப் போக விரும்புவதாகத் தெரிவித்தீர்கள். எனவே, என்மீது தங்களுக்கு எவ்வித மனவருத்தமும் இருக்காதென்று நம்பலாம் அல்லவா?" என்று கேட்டார் வில்வேலி.

"தளபதியார்மீது வருத்தமா? என் விருப்பத்துக்கு மதிப்பளித்த தங்களை வாழ்த்திக் கொண்டல்லவா இருக்கிறேன்!"

"இல்லை, அம்மணி! உறையூருக்குத் தங்களை நான் அனுப்பவில்லையே என்று உள்ளூற வருந்தினாலும் வருந்துவீர்கள்."

"அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை, ஐயா! உரகபுரத்துக்குப் போவதைவிடப் பெருவளநல்லூருக்குச்

செல்லவே பெரிதும் விரும்பினேன். ஏனென்றால், இப்போதைக்கு உறையூர் சென்று என் பெரிய தந்தையாருக்குச் சிரமம் கொடுக்க நான் விரும்பவில்லை."

"மகிழ்ச்சி அம்மணீ! இப்போதுதான் என் மனச் சுமை நீங்கியது!" என்று குழைவாகச் சொன்ன வில்வேலி, யானைப் பாகனைப் பார்த்துப் புறப்படச் சமிக்ஞை செய்தார். யானைப்பாகன் ஓடி வந்து, அம்பாரியில் ஏறுவதற்குத் தோதாக நூலேணியை இறக்கிவிட்டான்.

வில்வேலிக்கு வணக்கம் செலுத்திய உத்தமசீலி நூலேணியில் தன் வலது காலை எடுத்துவைத்து ஏற முயன்றபோதுதான், எதிரே குதிரைமீது அமர்ந்திருந்த சளுக்கிய வீரன் நந்திக்கொடியை உயர்த்திப் பிடித்துக் கொண்டிருந்ததைப் பார்த்தாள். அவளுக்கு ஒரே வியப்பும் திகைப்புமாகி விட்டது. சட்டென்று திரும்பி, "என்ன இது, தளபதியாரே! ஏன் இந்த வீரன் பல்லவ நந்திக்கொடியை ஏந்திக் கொண்டிருக்கிறான்?" என்று வினவினாள்.

வில்வேலி இதைக் கேட்டு அடித் தொண்டையில் கனைத்துச் சிரித்தவாறு, "ஓ,...இந்த விஷயத்தைத் தங்களிடம் நான் சொல்லவில்லையா? மறந்துவிட்டேன். அதைப்பற்றி நீங்கள் ஒன்றும் கவலைப்படாதீர்கள், அம்மணீ! வழிப் பயணத்தின்போது தங்களுக்கு எவ்விதமாந இடைஞ்சலும் ஏற்படக் கூடாதே என்பதற்காகத்தான் இப்படியொரு தந்திரத்தைச் செய்திருக்கிறேன். உயிராபத்து இன்றித் தாங்கள் பெருவளநல்லூருக்குப் போய்ச் சேர இந்த நந்திக் கொடியே உத்தரவாதம் அளிக்கப் போகிறது. புறப்படுங்கள், அம்மணீ!" என்றார்.

**கீ**ழ் வானப் பொய்கையில் மலர்ந்த பொற்கமலக் கதிரவன் ஆயிரமாயிரம் இதழ்ச் சுடர்களை விரித்து வீசியவாறு மெல்லமெல்ல மேலேறிக்கொண்டிருந்த அந்த முறுகிய காலை நேரத்திலே, வனப்பும் விசாலமுமாக அமைந்த பல்லவபுரம் சாலையில் சளுக்கியக் குதிரைமீது நந்திக்

கொடியை ஏந்திப் பிடித்து விரைந்துகொண்டிருக்க, அவ்வழகிய கொடின்மீது தன் பார்வையைப் பதித்தவாறு வெகு உற்சாகமாக நட.ந்துகொண்டிருந்தது அரிவாரணம்.

பூஜைக்குத் தொடுத்த புனித மலர் மாலையைப்போல் அம்பாரியில் அமர்ந்து சாய்ந்திருந்த ஆந்திர இளவரசி உத்தமசீலி தன் மனத்தைப் பல்வேறு இன்பக் கனவுகளின் மேல் ஏற்றிப் பறக்க விட்டுக்கொண்டிருந்தாள். அந்த இனிய பயணம் அவளுக்கு அத்தனை மகிழ்ச்சியை ஊட்டியது.

இப்படித் தன்னை மறந்து இன்பக் கனவுகளிலே சஞ்சரித்துக்கொண்டிருந்த அவள், பல்லவபுரம் எல்லையைக் கடந்து பெருவளநல்லூர்ச் சாலையில் ஏறியபோது, வானம் குமுறுவதுபோன்ற ஒரு பயங்கரப் பேரொலி எழவே, திடுக்குற்று நிமிர்ந்து சுற்றுமுற்றும் பார்த்தாள். இவ்வளவு நேரம் உற்சாகமாக விரைந்து சென்று கொண்டிருந்த அரிவாரணம்தான் அப்படிப் பெருங் குரலெடுத்துப் பிளிறியது!

பரபரப்படைந்த உத்தமசீலி தன் பார்வையை அங்குமிங்குமாக ஓட்டினாள்.

இது என்ன விந்தை! இந்நேரம்வரை நந்திக்கொடியை ஏந்திப் பிடித்துச் சென்றுகொண்டிருந்த குதிரைவீரன் இப்போது சளுக்கிய வராகக் கொடியை அல்லவா உயர்த்திப் பிடித்துக்கொண்டிருக்கிறான்? அந்த வராகக் கொடியைப் பார்த்துவிட்டுத்தான் இந்த யானை இப்படிப் பிளிறலிட்டு முழங்குகிறதோ?... நந்திக் கொடியை மறைத்துச் சளுக்கிய வராகக் கொடியை ஏந்திய அவ்வீரன் தன் குதிரையைக் காற்று வேகமாகச் செலுத்திக்கொண்டிருந்தான்! அதைப் பார்த்த அரிவாரணமும் அரண்டு மிரண்டு வெறிகொண்டு விட்டாற்போல் பிளிறியவாறு அவனைப் பின்தொடர்ந்து ஓட ஆரம்பித்தது.

குலை நடுங்கிய உத்தமசீலி அம்பாரியின் திரையை நீக்கி யானைப்பாகனை எட்டிப் பார்த்தாள். அவனோ, சாலையின்

குறுக்கே வளைந்து நீண்டு தாழ்ந்து வளர்ந்திருந்த ஒரு மரக் கிளையில் தாவிக்கொண்டு தன் கையில் இருந்த அங்குசத்தை யானையின் முறக் காதை நோக்கி வீசி ஏறிந்தான். இதனால் மேலும் சினமடைந்த அரிவாரணம் தன் துதிக்கையைச் சுருட்டி நிமிர்த்தி ஓங்கிக்கொண்டும், காற்று மண்டலமே கனல் பரக்க வீசிக்கொண்டும், பூமியதிர, திசைகள் நடுநடுங்க முக்கார முழக்கமிட்டு ஓடியது.

ஆகா! அந்தக் குதிரை வீரன் எங்கே? அவன் சென்ற திசையே தெரியவில்லையே!...

அரிவாரணத்துக்கு ஏற்பட்ட வெறியாவேசம் சிறிதும் தணியவில்லை. அதற்கு மாறாக, தன் முதுகில் அமர்ந்திருந்தவர்கள்மீது அதன் கோபம் திரும்பவே துதிக்கையைத் தலைக்குமேல் சுழற்றித் துழாவிப் பாகனைத் தூக்கியெறிய முயன்றது. அவன் அங்கே இல்லை என்று தெரிந்துகொண்டதும், அதே வேகத்தில் அம்பாரியை அடித்துச் சாய்க்கத் துழாவியது. இதனால் சங்கிலிக் கட்டுக்களிலிருந்து தளர்ந்த அம்பாரி இடது பக்கம் சாயவே அதனுள், நடுங்கிக் சுருண்டு உட்கார்ந்திருந்த உத்தமசீலி வலதுபுறமாகச் சரிந்து சங்கிலியைப் பற்றிக்கொண்டு யானையின் விலாப்பக்கம் தொங்கலாடினாள்.

அப்படித் தொங்கலாடிய அவளையும் அம்பாரியையும் இழுத்தெறிந்து மிதித்துத் துவைத்துப் போட முயல்வது போல் தன் பனைபோன்ற துதிக்கையை அப்படியும் இப்படியுமாக வளைத்து நெளித்துத் துழாவி முன்னிலும் அதியாவேச வெறியுடன் ஓடியது அந்த அரிவாரணம் என்ற பயங்கர யானை.

# 63

# நெருப்புக் கணை

ஆலம்பாக்கம் அநந்தமதியின் இல்லத்து முன்வாயில் வேலியோரம் மெல்ல உலாவியவாறு சுற்றிலும் தன் பார்வையை வெகு உன்னிப்பாகச் செலுத்திக் கவனித்துக் கொண்டிருந்தான் ஆபத்துதவி இளங்காரிக்குடையான். அவனைப் போலவே அவனுடைய அன்னை அநந்தமதியும் அந்த இல்லத்தின் சித்திரத் திண்ணையருகில் நின்று அங்குமிங்குமாகத் தன் பார்வையை ஓட்டிக்கொண்டிருந் தாள். மிகப் பெரிய பொக்கிஷம் ஒன்றை மறைத்து வைத்துக் கொண்டு அதைக் கண்ணும் கருத்துமாகக் காபந்து செய்வது போல் தோன்றியது அவர்களுடைய அந்த விழிப்பான கண்ணோட்டம்.

காலைச் சூரியன் கரகரவென மேலேறித் தன்னை மரங்களுக்குப் பின்னால் ஒளிக் கோலம் போடுவதைக் கண்டு தனக்குள் எதையோ ஊகித்துக் கொண்டவனாய்த் தயங்கி நின்ற இளங்காரி தன் தாயை நோக்கிச் சாடை மூலம் ஏதோ விசாரித்தான். அவள் அங்கிருந்தவாறே மெல்லத் தலை யசைத்துவிட்டுத் திரும்பி, ஒருக்களித்துச் சாத்தியிருந்த கதவை ஓசையின்றித் திறந்துகொண்டு உள்ளே எட்டிப் பார்த்தாள். அங்கே—

எளிமையும் தூய்மையுமாக விளங்கிய சிறிய அறையொன்றில் அப்போதுதான் காலை வழிபாட்டை முடித்துக் கொண்டு வந்த கோலத்தில் அமர்ந்திருந்தான் பரமேசுவரவர்மன். அவனுக்கு வலப் பக்கவாட்டில் ஆழ்ந்த

சிந்தனையுடன் கவலையே வடிவாகத் தலைகுனிந்து வீற்றிருந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

நெடுநேரமாக அங்கு உறைந்து கிடந்த அமைதியை மெல்ல நீவிக் கலைப்பதுபோன்று தன் தொண்டையைக் கமகப்படுத்திக்கொண்ட பரமேசுவரவர்மன், "ஏனய்யா! சோழ இளவரசி இளங்கோப்பிச்சியைப்பற்றி ஏதேனும் தகவல் கிடைத்ததா?" என்று கவலையுடன் கேட்டான்.

"அவள் எங்கே சென்றாள் என்ற விவரம் இன்றுவரை தெரியவில்லை, அரசே!" என்று கரகரத்த குரலில் சொன்ன முத்தரையர், "எங்கே சென்றிருக்கப் போகிறாள்? தன் தந்தையிடம்தான் போய்ச் சேர்ந்திருப்பாள். சளுக்கிய விக்கிரமாதித்தனின் மருமகளாகப் போகிறவள் அல்லவா? இனிமேல் இங்கிருக்க அவளுக்கு என்ன, தலைவிதியா?" என்றார் அலட்சியமாக.

சிறுபொழுது ஏதோ யோசனையில் இருந்த பரமேசுவரவர்மன், "அதுசரி, முத்தரையரே! அன்றைய தினம் அவ்வளவு பெரிய சளுக்கியப் படைகள் எங்கே எதற்காகப் பெயர்ந்து சென்றன, தெரியுமா?" என்று அடைத்த குரலில் விளித்தான்.

"அதுதான் எனக்கும் புரியாத புதிராக இருக்கிறது அரசே!..."

"சரி; நாம் புறப்படுவோம்" என்றவாறு எழுந்தான் பரமேசுவரவர்மன்.

அம்பு விடுபட்டபின் நிமிரும் வில்லைப் போலச் சட்டென்று தலைதூக்கிய முத்தரையர், "புறப்படுவோம்!... ஆனால், எங்கே போவது என்ற முடிவை மன்னவரவர்கள் இன்னமும் தெரிவிக்கவில்லையே?" என்றார் தயக்கத்துடன்.

"முடிவா?... அந்த முடிவை நான் முன்னரே தெரிவித்து விட்டேன்" என்று இளநகை புரிந்து இதமாகக் கூறினான் பரமேசுவரவர்மன்.

"அதாவது?.."

"என் மதிப்புக்குரிய முத்தரையர் தமது சந்திரலேகை அரண்மனைக்குப் போய்ச் சேரவேண்டியது; நான் நாகைத் துறைமுகத்துக்குப் பயணமாக வேண்டியது."

"மன்னரவர்கள் நாகைத் துறைமுகத்துக்குப் போய்?..."

"அமைதியின் நிழலை நாடி ஈழத்துக்குப் பயண மாவேன்."

"சந்திரலேகை அரண்மனைக்கு நான் சென்று?..."

"இன்றுவரை உங்கள் எண்ணத்தில் பின்னியிருந்த கானல் திட்டங்களைக் கலைத்துவிட்டு யதார்த்த வழியை நோக்கிச் சிந்தனையைத் திருப்பிக்கொள்ள வேண்டியது."

"அதாவது, பழையாறைச் சோழரின் வழியைப் பின்பற்றிக் கொள்ளவேண்டும் எனச் சொல்கிறார் மன்னர்; அப்படித்தானே?"—மலைபோன்ற தம் உடலை முறுக்கி நெளித்தவாறு கசப்புக் கமறலெடுக்கும் குரலில் மேலும் சொன்னார் முத்தரையர்: "மாமன்னரவர்கள் என்னைத் துரோகியாகிவிடு என்று சொல்வதைக் கூடப் பொறுத்துக் கொள்ள முடிகிறது; ஆனால் கோழையாகிவிடு என உபதேசிக்கிறாரே, அதைத்தான் என்னால் பொறுக்கவே இயலவில்லை!"

பரமேசுவரவர்மன் இதைக் கேட்டுப் புன்முறுவல் பூத்தான். "போர்க்களத்திலே எதிரியின் பளபளப்பான நீண்ட கத்தி நெஞ்சிலே பாய, வான் நோக்கிப் பூமியில் வீழ்ந்து அழகாகச் சாவதுதான் வீரம் என்று என் அருமை நண்பர் சந்திரலேகைச் சிற்றரசர் நினைத்துக்கொண்டிருக்கிறார்; அது தவறு. சமய சந்தர்ப்பங்களில் கெடுபிடிகளால் கோழை யாகவும் துரோகியாகவும் மாறுவதுகூட வீரத்தின்பாற் பட்டதே என்பதை இனிமேலாவது அவர் தெரிந்து கொள்ள வேண்டும்."

பழையாறைச் சோழரின் துரோக நடத்தையை மனத்தில் கொண்டே பல்லவ மன்னன் இவ்வாறு குத்தலாகப் பேசுகிறான் என்றெண்ணி உள்ளூறக் குமைந்து கனன்ற முத்தரையர் தம்மை ஒருவாறு தேற்றிக்கொண்டு நமட்டுச் சிரிப்புடன் சொன்னார்: " வீரத்துக்கு மன்னரவர்கள் தரும் புதிய விளக்கத்தை இனிப் புரிந்துகொள்ள முயற்சி செய்வேன். அப்படிப் புரிந்துகொண்டு நான் நடக்கப்போவதைக் கண்டு மகிழவாவது மன்னர் தம் ஈழத்துப்பயணத்தைக் கைவிட்டு விட வேண்டும் என்று விரும்புகிறேன்."

பரமேசுவரவர்மன் அவரைக் கனிவுடன் பார்த்து அமைதியாகச் சொன்னான்: "மன்னியுங்கள், ஐயா! என் எதிர்கால வாழ்க்கையைப்பற்றி ஒரு தெளிவான முடிவுக்கு நான் வந்துவிட்டேன். தயவு செய்து அந்த முடிவை மாற்ற முயற்சி செய்யாதீர்கள். என்னுடைய விருப்பப்படி ஈழநாட்டுக்குப் போய்ச் சேர என்னை விட்டுவிடுங்கள்."

முத்தரையர் சோர்ந்து தளர்ந்தார். பெருவளநல்லூர்ச் சாலையோரமுள்ள ஜினாலயத்துக்குப் பின்னால் அவனை எதிர்பாராமல் சந்தித்தது முதல் அங்கிருந்து வலுக்கட்டாய மாக இளங்காரியின் இந்த இல்லத்துக்கு அழைத்து வந்து இருக்கப் பண்ணின கடந்து ஐந்து நாட்களாக அவனிடம் அவர் எவ்வளவோ விஷயங்களைப் பேசி, எத்தனையோ விவரங்களைக் கூறி, அவனது ஈழநாட்டுப் பயண உத்தேசத்தைக் கைவிடும்படி வற்புறுத்தி வேண்டிக்கொண்டும் அவன் அவற்றையெல்லாம் ஏற்காமல் — பொருட்படுத்தாமல் — தனது அந்த முடிவையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்ததைக் கேட்டு உள்ளூற ஆத்திரமும் சலிப்பும் அடைந்தார். 'பொறுப்புணர்ச்சியற்ற இளைஞன் என்றும், இடுக்கண்களைக் கண்டு அஞ்சி ஓடி ஒளியும் கோழை என்றும் பழையாறைச் சோழர் இவன்மீது சாட்டிய குற்றச்சாட்டுகள் சரியானவைதாமோ' என்ற சந்தேகம்கூட இப்போது அவருக்குத் தோன்றி விட்டது. முகத்தைச் சுளித்து உடம்பை

நெளித்தவாறு சற்று நேரம் மௌனமாயிருந்த அவர் ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவராய்த் திடுமெனத் தலைதூக்கித் தம்மிடமிருந்தே ஓலைச் சுருள் ஒன்றை எடுத்துப் பரமேசுவரவர்மனிடம் விரைப்பாக நீட்டி, "அரசே! நான் இவ்வளவு சொல்லியும் தாங்கள் இதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளாமல் ஈழநாட்டுக்குப் பயணமாகியே தீருவதென்று முடிவு செய்து விட்டீர்கள். இனி தங்களைத் தடுத்து நிறுத்த என்னால் இயலாது. ஆனால் அப்படிப் போகுமுன் இவ்வோலையில் தாங்கள் கைச்சாத்து இட்டு விட்டே செல்லவேண்டும். இதுவே நான் தங்களிடம் கோரும் இறுதியான வேண்டுகோள்" என்றார் அடைத்த குரலில்.

பரமேசுவரவர்மன் அந்த ஓலையை வாங்கி அதில் தன் பார்வையை மேலோட்டமாகச் செலுத்தினான். பல்லவ நாட்டுக் குடிமக்கள் சளுக்கியப் பகைவரை விரட்டியடிப்ப தற்காகப் பெரும்பிடுகு முத்தரையர் திரட்டும் இரகசியப் படையில் சேரவேண்டும் என்று அவன் கட்டளையிடுவது போல் வரையப்பெற்ற ஓலை அது.

அதைப் பார்த்த பரமேசுவரவர்மன் மெல்லச் சிரித்துக் கொண்டே அவரைக் குறுகுறுவெனக் கூர்ந்து நோக்கினான். பிறகு அலட்சியமும் மிடுக்குமாக நிமிர்ந்து, "இந்த ஓலையில் நான் அவசியம் கைச்சாந்து இடத்தான் வேண்டுமா, ஐயா?" என்று கேட்டான்.

"அந்நிய ஆதிக்கத்தில் அடிமைப்பட்டுக் கிடக்கும் பல்லவ நாடு வீரசுதந்தரம் பெற்றுத் தலைநிமிர வேண்டு மாயின் மாமன்னவரவர்கள் தம் விலைமதிப்பற்ற கைச்சாத்தை இதில் இட்டே ஆகவேண்டும்!"

"அது தேவையில்லை என்று கருதுகிறேன். ஏனென்றால் சந்திரலேகைச் சிற்றரசரே இவ்வோலையில் தம் கைச்சாத்தை இட்டுக் கொள்ளலாம். இதற்காக அவர் என்னிடம் வந்து இவ்வளவு சிரமப்பட்டுக் கேட்க வேண்டியதில்லை."

"அரசே!..."

"இன்னும் தெளிவாகச் சொல்ல வேண்டுமா, ஐயா? பாண்டிய மன்னரிடம் நான் படையுதவி கோரியதாக என்னுடைய கைச்சாத்தைத் தகூடலேகை செய்து வரைந்த ஓலையொன்று என் தம்பியின் மூலம் அனுப்பப்பட்டிருக் கிறதே, அவ்வாறே இதிலும் செய்து கொள்ளலாம் என்கிறேன்."

இடியால் தாக்குண்டவர்போல் நடுநடுங்கி விட்டார் முத்தரையர். அன்றைய தினம் அந்த ஜீனாலயத் தருகில் இருந்து தாமும் கோவிந்தவர்மனும் பழையாறைச் சோழரைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்த விவரங்களை மட்டுமல்லாது, தாம் பாண்டிய மன்னருக்கு எழுதியனுப்பிய தகூடலேகை ஓலை பற்றியும் அவன் தெரிந்து கொண்டிருக்கிறான் என்பதைப் புரிந்துகொண்ட அவர் திக்குமுக்காடித் திணறி விட்டார். என்ன பேசுவதென்றே அவருக்குத் தோன்ற வில்லை. குற்ற உணர்ச்சியால் குப்பென்று வியர்த்துக் கொட்டத் தாள முடியாத அவமானத்துடன் தலைகுனிந்தார் அவர்.

பரமேசுவரவர்மனோ அவரைக் கண்ணிமைக்காமல் உறுத்து நோக்கியவாறு மேலும் கூறினான்: "ஆம். ஐயா! இன்னும் ஒரு விஷயத்தையும் நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். சில நாட்கள் முன்வரையில் சளுக்கிய விக்கிரமாதித்தனை என் பொன்னாட்டின் மண்ணிலிருந்து விரட்டியடிக்க வேண்டுமென்ற ஆர்வமோ தன்மான உணர்ச்சியோ இன்றிக் கோழைபோல் நான் ஒடுங்கிக் கிடந்ததென்னவோ உண்மைதான். ஆனால் எதிர்பாராத விதமாகப் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளிக்குப் போய் என் உருவ ஓவியத்தைச் சளுக்கியத் தளபதியிடம் வரைந்து கொடுத்துவிட்டு வரும்போது தெய்வத்தின் குரல் ஒன்றைச் செவியில் ஏற்றேன். 'குகையிலிருந்து வெளிப்படும் புலியைப் போல,. கட்டவிழ்த்துக் கொண்டு பாயும் காளையைப்போல, மதர்ப்புற்றுத் திமிறியோடும் யானையைப்போல நீயும் .உன் உண்மை வடிவெடுத்து வெளியே வா' என்று அந்தத் தெய்வக்

குரல் எனக்குக் கட்டளையிட்டது. அக்கணமே அதன் கட்டளையை ஏற்றுக் கொண்டேன். ஆதிக்க வெறிகொண்ட சளுக்கியனைத் தூக்கியெறிந்து பந்தாட ஆவேச வீறுபெற்றேன். கோழைபோல் ஈழத்துக்கு ஓடி ஒளிய வேண்டுமென்ற என் திட்டத்தைக் கைவிட்டேன். பகைவரைச் சாய்ப்பதற்காகப் பல திட்டங்களுடன் உங்களைப் பார்க்க ஓடோடியும் வந்தேன். அப்படி வந்த என்னை அந்த ஒரே கணத்தில் பழைய கோழையாகவும், தன்னம்பிக்கையற்றவனாகவும் நீங்கள் ஆக்கிவிட்டீர்கள். ஆம், ஐயா! என்னுடைய அனுமதியின்றி எனது கைச்சாத்தைத் தகூடலேகை செய்ய நீங்கள் துணிந்தீர்களே, அதைத்தான் குறிப்பிடுகிறேன். உங்களுடைய உண்மைச் சொரூபத்தை என்னால் அப்போதுதான் புரிந்துகொள்ள முடிந்தது. என்னை நீங்கள் எள்ளளவும் மதிக்கவில்லை. எனக்குரிய கௌரவத்தை அளிக்கவும் நீங்கள் தயாராக இல்லை. என்னை ஒரு கோழையாகவும் உபயோகமற்றவனாகவும் கருதி, உங்கள் இஷ்டம்போல் ஆட்டிப் படைக்கத் திட்டமிட்டிருக்கிறீர்கள். எனவேதான் என் அநுமதியின்றியே அப்படி ஒரு காரியத்தைச் செய்யத் துணிந்திருக்கிறீர்கள். அதை நான் அங்கீகரித்தால் நீங்கள் ஆட்டுவிப்பதைப் போலெல்லாம் ஆடி, உங்கள் இஷ்டத்துக் கெல்லாம் வளைந்து கொடுத்து, உங்களுக்கு என்றென்றும் அடிமையாகவே இருக்கும்படியாகிவிடும். அத்தகைய முதுகெலும்பற்ற ஒரு மன்னனாக இருந்து புவியாள்வதைவிட இன்றைய நாடோடி நிலையிலேயே நான் இருக்க விரும்புகிறேன். என்னுடைய கனவுகள் அடியோடு சிதைந்து விட்டன. என் செவியில் ஒலித்த அந்தத் 'தெய்வக் கட்டளை'யை இப்போது முற்றும் மறந்துவிட்டேன். அதற்கு நான் தகுதியற்றவன் என்றும் தீர்மானித்துவிட்டேன். அதன் ஜீவ களை பொருந்திய நிழலையும் என் இதயத்திலிருந்து துடைத்தெறிந்து விட்டேன். நான் இப்போது ஓர் அசக்தன். எவ்விதப் பந்த பாசமோ சொந்தத் தொடர்புகளோ

உரிமைகளோ இல்லாத பரதேசி. இதே நிலையிலேயே என் பழைய தீர்மானத்துடன் ஈழத்துக்குப் பயணமாகிவிடப் போகிறேன். மண்ணுக்காகவும் மகுடத்துக்காகவும் என் மானத்தை அடகு வைக்க வேண்டிய கட்டாய கெடுபிடிகளில் சிக்கிக்கொள்ளா முன்பே இந்நாட்டை விட்டுப்போய் விட விரும்புகிறேன். இனி உங்கள் இஷ்டம்போல் படைகளைத் திரட்டுங்கள், பாண்டியரிடம் படை உதவி பெறுங்கள்; சளுக்கியரிடம் போரிட்டு வெற்றியடையுங்கள்; என் அன்புத் தம்பி கோவிந்தவர்மனைக் கைக்குள் போட்டுக் கொண்டு பல்லவ சாம்ராஜ்யத்தின் மணி முடியை அவனுக்குச் சூட்டி உங்கள் இஷ்டம்போல் அவனை ஆட்டிப் படையுங்கள்; அல்லது நீங்களே பல்லவ அரியணையில் ஏறி..."

"அரசே!"—வெறி பிடித்தவர்போல் அலறிக் கூவினார் முத்தரையர். "மன்னியுங்கள் அரசே, என்னை மன்னியுங்கள்! இவ்வளவு பெரிய பழிகளை என்மீது சுமத்தாதீர்கள். இவற்றை என்னால் தாளவே முடியாது. இந்த விஷயத்தில் நான் கோழை. சத்தியத்துக்குக் கட்டுப்பட்ட மாபெரும் கோழை நான்." —பாரிய தூண் ஒன்றில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விம்மிப் பொருமினார் முத்தரையர். "நான் செய்தது தவறுதான் அரசே! தங்கள் கைச்சாத்தைத் தகூடலேகை செய்தது மிகப்பெரிய தவறுதான். ஆனால் திட்டமிட்டுத் தவறான நோக்கத்துடன் செய்த தவறல்ல அது. என் மார்பிலும் தோளிலுமாகப் போட்டு வளர்த்த எனதருமைப் பல்லவச் செல்வருக்கா நான் துரோகம் நினைப்பேன்? இந்த இழிபெயரை ஏற்பதற்காகவா இத்தனை காலம் ஊண் உறக்கத்தைத் துறந்து, உற்றார் உறவினரை மறந்து, அரண்மனைச் சுக போகங்களை உதறித் தள்ளிக் காட்டிலும் மேட்டிலுமாகச் சுற்றித் திரிந்தேன்?ஐயையோ! என்னை யறியாமலே எவ்வளவு பெரிய பழிபாவத்துக்கு உள்ளாகி விட்டேன்!" அனலிடைப் பட்ட புழுப்போல் நெளிந்து புலம்பினார் அவர்.

பனிச் சிலையாக உறைந்து உட்கார்ந்திருந்தான் பரமேசுவரவர்மன்.

தூணில் முகம் புதைத்துப் பொருமிக்கொண்டிருந்த முத்தரையர் சடாரென்று திரும்பினார். "அரசே! தங்கள் மீதும் தங்களது நாட்டின்மீதும் நான் கொண்ட பேரன்பினால் அவசரப்பட்டு காரியத்தைச் செய்துவிட்டேன். அந்தக் குற்றத்துக்குரிய தண்டனையை ஏற்கவும் நான் சித்தமாகி விட்டேன். இதோ, என் வீர வாளாலேயே அதை நிறைவேற்றி விடுங்கள்" என்று ஆவேச விம்மலுடன் அரற்றிக் கொண்டே, தம் இடையில் தொங்கிய வாளைப் பளீரென உருவியெடுத்துக் கீழே எறிந்துவிட்டு, அதே வேகத்துடன் தமது மார்புக் கவசத்தைப் படீரெனக் கிழித்து விண்ணென்று புடைத்த நெஞ்சைத் திறந்து காட்டியவாறு பரமேசுவரவர்மனை நோக்கி விறைப்பாக நடந்து சென்றார்.

# 64

# பல்லவ மன்னனின் கேள்வி!

**சி**வந்து கிடந்த பரமேசுவரவர்மனின் முகம் சுந்தரக்களை பெற்று மலர்ந்தது. "வருந்தாதீர்கள், ஐயா! இந்த மாபெரும் மார்புக்குள்ளே மறைந்திருக்கும் பூப்போன்ற இதயத்தை நான் நன்றாக அறிவேன். அந்த அன்பு உள்ளத்தை நோக வைத்துவிட்டதற்காகப் பெரிதும் துயரப்படுகிறேன்" என்று வாஞ்சைப் பெருக்குடன் கூறிக் கொண்டே போய் அவரை அணைத்துத் தழுவினான் அவன்.

முத்தரையரின் கண்கள் மகிழ்ச்சிப் பெருக்கால் நீரைச் சொரிந்தன. பல்லவ மன்னனின் கடல்போன்ற இரக்க உள்ளத்தையும், தாய்போல் மன்னித்துப் பொறுக்கும் சுபாவத்தையும், பூமியையொத்த சகிப்புத் தன்மையையும் அறிந்து மனம் நெகிழ்ந்து அவர் மெல்லப் பெருமூச்சுவிட்டுப் பின்னால் நகர்ந்தவாறு, "அப்படியானால் மன்னரவர்கள் தமது ஈழத்துப் பயணத்தைக் கைவிட்டு விட்டாரல்லவா?" என்று ஆவலுடன் வினவினார்.

தலைகுனிந்த பல்லவ மன்னன் 'இல்லை' என்பதுபோல் மெல்லத் தலையசைத்தான்.

திடுக்குற்ற முத்தரையர், "ஏன் அரசே? இன்னமும் அந்த எண்ணத்தை மாற்றிக்கொள்ள என்ன தயக்கம்?" என்று துடிப்போடு கேட்டார்.

"என் மனத்தில் நீண்ட காலமாகவே ஒரு கேள்வி இருந்து வருகிறது. அதுதான் அந்த எண்ணத்தை முதலில் தோற்றுவித்தது. அதுவே அவ்வெண்ணத்தை இப்போது

மாற்றிக்கொள்ளவிடாமலும் தடுத்துக்கொண்டிருக்கிறது" என்று எங்கோ பார்த்தவாறு தணிந்த குரலில் கூறினான் பரமேசுவரவர்மன்.

"மன்னரவர்களின் மனத்தில் உள்ள அந்தக் கேள்வியை நான் அறியலாமா?"

"அவசியம் நீங்கள் அதை அறியத்தான் வேண்டும். இமயம் முதல் குமரிவரை ஒரே பூமியாக விரிந்து பரந்துள்ள நாடு இந்தப் பாரத நாடு. இதில் வாழும் பல கோடி மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடு, நாகரிகம், குணம், குறிக்கோள் எல்லாமே ஆயிரங்காலத்துப் பயிர்களாக வளர்ந்து, அடிப்படையில் ஒருமைகொண்டு திகழ்கின்றன. மக்கள் பேசும் மொழிகளிலும் அவர்கள் மேற்கொள்ளும் மதங் களிலும் தான் சிறிதளவு வேற்றுமை தெரிகிறதே தவிர, வேறெந்தப் பிரிவினைப் பாங்கும் அவர்களிடம் இருப்பதாகத் தெரியவில்லை. உண்மையில் பார்க்கப்போனால் மொழி களும் சமயங்களும் வேற்றுமைக்குரிய அம்சங்களே அல்ல; அவை ஒரு மாபெரும் சமுதாயத்தின் உள் வளர்ச்சியைக் காட்டும் தேசீய நாகரீகச் சின்னங்கள். அந்தச் சின்னங்களே அச்சமுதாயத்தை இணைக்கும் பொற்சங்கிலிகளாகவும் விளங்குகின்றன. எனவே, இயற்கையில் ஒருயிரும் ஓருடலுமாக அமைந்த இந்தப் பழம்பெரும் பாரத நாட்டைப் பல்வேறு துண்டுகளாகப் பிரித்துப் பலப்பல ராஜ்யங்களாகப் பகுத்து அவை ஒவ்வொன்றுக்கும் ஒரு மன்னன் என்றும் ஓர் அரசாங்கம் என்றும் ஏற்படுத்திக்கொண்டு தனித்து வாழ்வதிலே என்ன பொருள் இருக்கிறது? இமயம் முதல் குமரிவரை ஒரே நாடாகவும் ஒரே இராஜாங்கமாகவும் ஒருமித்து இருக்கத் தக்க அடிப்படை அம்சங்கள் ஆழ்ந்த அஸ்திவாரத்துடன் அமைந்திருக்கும்போது அதைச் செயற்கையாக வெட்டிப் பிரித்துக்கொண்டு வாழவேண்டிய அவசியம் என்ன? இப்படித் துண்டுபட்டுத் தனித்தனி நாடுகளாக நிற்பதால்தானே அவற்றினிடை அடிக்கடி

போரும், பூசலும், பகையும், இரத்தக் களரியும் ஏற்படுகின்றன? இவை அனைத்தும் ஒன்றுபட்டு ஒரே நாடாகவும் ஒரே அரசாங்கமாகவும் விளங்கினால் இந்த அநாச்சாரத் தீமைகள் அழிந்து மறைந்துவிடும் அல்லவா? ஆகவே, அந்த மகத்தான ஒருமைப்பாட்டைக் காணும் பொருட்டு நானே அதற்குரிய முதல் வழியைத் திறந்துவிட்டால் என்ன என்று எண்ணத் தோன்றுகிறது. அதாவது, வடக்கே நருமதை ஆறு முதல் தெற்கே நம் புதுக்கோட்டைவரையில் உள்ள ஒரு பெரும் நிலப் பரப்புக்கு அதிபதியாக விளங்கும் சளுக்கிய விக்கிரமாதித் தனை நான் எதிர்க்காமல் விட்டுவிட்டால், அவன் இன்னுங் கொஞ்ச காலத்துக்குள் வடக்கிலும் தெற்கிலும் மேற்கிலுமாகத் தனித்து நிற்கும் சில நாடுகளையும் எளிதில் கைப்பற்றி இந்த நாவலந் தீவு முழுமையிலும் ஒரே ஆட்சியை நிலைநாட்டி விடுவான். இதனால் தனி மனிதனான எனக்கும் என்போன்ற இன்னும் சிலருக்கும் பாதகமாகுமே தவிர, பழம் பெருமை வாய்ந்த இந்தப் பாரத நாடும் அதில் உள்ள பல கோடி மக்களும் போரோ, பூசலோ, பகையோ இன்றி அமைதியாக ஆனந்த வாழ்க்கை வாழலாம் அல்லவா? இதுதான் என் மனத்தில் எழுந்துள்ள கேள்வியாகும்.

பரமேசுவரவர்மனின் இந்த நீண்ட பேச்சை வெகு கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்த முத்தரையர் சொன்னார்: "ஒன்றே குலம் ஒருவனே தேவன் என்ற சைவ சித்தாந்த அறநெறிக் கொள்கையிலும், யாதும் ஊரே யாவரும் கேளிர் என்னும் தமிழ் நெறித் தத்துவத்திலும் ஊறித் திளைத்த பல்லவ மாமன்னரின் பரந்த உள்ளத்திலே இத்தகையொரு கேள்வி எழுந்ததுபற்றி நான் சிறிதும் ஆச்சரியப்படவில்லை. ஆனால், அரசியல் கலையில் வல்லுநரான அவர் இந்தக் கேள்விக்குரிய பதிலையும் அறிந்தே இருப்பார் என்றே எண்ணுகிறேன். ஆயினும் அதை என் வாயிலாக அறிய விரும்புகிறார் என்றால் அதற்கு நான் மறுமொழி சொல்லியே ஆகவேண்டும். ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் எழவேண்டிய இந்தக் கேள்வி

மன்னரவர்களின் மனத்தில் மிகவும் முந்திக்கொண்டு எழுந்துவிட்டது. இப்படிச் சொல்வதன் காரணத்தைச் சொல்ல வேண்டாமா? அதையும் சொல்கிறேன்.”

முத்தரையர் உற்சாகமாக நிமிர்ந்து மீண்டும் பேசினார்: “நாடு என்பது ஒரு குறிப்பிட்ட எல்லைகளைக் கொண்டு நிலப்பரப்பின் நீள அகலத்தை அளந்து காட்டும் ஓர் அளவைச் சொல் அல்ல. மாண்புமிக்க மக்கள் தொகுதியொன்றின் ஜீவத் துடிப்புள்ள நிழலே நாடு எனப் பெயர் பெறுகிறது. அந்த நாட்டில் அரசாங்கம் என்று ஒன்று தோன்றுவது மக்களுக்காகத்தானே தவிர நாட்டுக்காக அல்ல. அரசாங்கம் என்பது மக்களின் நல்வாழ்வுக்காகப் பல சட்ட திட்டங்களை வகுத்து அவற்றைச் செயல்பட வைக்கும் ஒரு தர்ம ஸ்தாபனம் போன்றது. எந்த அரசாங்கமும் ஒரு குறிப்பிடும் சக்தி அளவு இயங்கும் தன்மை வாய்ந்ததாகவே இருக்க முடியும். இப்படி ‘மக்களுக்காக இயங்கும் அரசாங்கம்’ என்னும்போது அதன் ஆட்சிக்கு ஓர் எல்லையும் இருந்தாக வேண்டுமென்பது அவசியமாகிறது. அப்போதுதான் அரசாங்கத்தின் நிழல் மக்களின்மேல் முழுமையாகப் படர்ந்து நிற்க இயலும். இந்தப் பாரத நாடோ பல்லாயிரம் காதப்பரப்பளவில் பலகோடி மக்களைத் தன்னகத்தே கொண்ட மிகப்பெரிய நாடு. அதில் ஒரே மன்னன், ஒரே அரசாங்கம் என்று ஏற்பட்டால் மக்களுக்குச் சம நீதி கிடைப்பது அரிதாகிவிடலாம். ஏனென்றால், மன்னனின் ஆணைகள் அரசாங்கத்தின் மூலமே மக்களிடம் செல்கின்றன. அரசாங்கம் அவற்றைக் காற்றிலே ஏற்றி அனுப்ப முடியாது. மக்கள் சமுதாயம் இன்று வளர்ந்துள்ள அளவுக்கு வளர்ந்திருக்கும் போக்குவரத்துச் சாதனங்களின் துணைகொண்டே அவை செல்ல முடியும். அதில் தடங்கலோ தாமதமோ ஏற்பட்டால் எந்த ஒரு விநாடியும் ஏதேனும் ஒரு பகுதி மக்களுக்கு அநீதி நிகழ்ந்துவிடலாம். அநீதி நிகழப் பார்த்துக் கொண்டிருக்கும் ஓர் அரசாங்கத்தை நல்ல அரசாங்கம் என்று சொல்ல முடியாதென்பது ஒருபுறமிருக்கட்டும்; அநீதியால் துன்பத்துக்குள்ளான அந்தப் பகுதி மக்கள் அரசாங்கத்தை

வெறுப்பர். அவர்களில் ஒரு சுயநலக்காரன் — அல்லது மனிதாபிமானத்தை மிகுதியாகக் கொண்ட ஒருவன் — அந்த வெறுப்புணர்ச்சியைப் பயன்படுத்திக் கலகக் கொடியை உயர்த்துவான்; தன் பகுதி மக்களை அவ்வரசாங்கத்திலிருந்து பிரிந்து போகவும் தூண்டுவான். உலகில் அவ்வப்போது பல புதிய புதிய நாடுகள் தோன்றுவதற்கு இதுதான் அடிப்படைக் காரணம். பல்லவ மாமன்னரைப் போலவே அவருக்குமுன் இந்தப் பாரத நாட்டில் ஒரே அரசாங்கத்தை நிலைநாட்ட முயன்ற பல பேரரசர்கள் இத்தகைய கோளாற்றினால்தான் படுதோல்வி அடைந்தனர். இந்தப் பல்லவ சாம்ராஜ்யத் தையே எடுத்துக் கொண்டாலும், அதன் விரிந்த பகுதிகளெங் கும் மன்னரது ஆணைகள் சரிவரச் செயல்பட வேண்டும் என்பதற்காகவே என்போன்ற சில சிற்றரசர்களின் குறுநில ஆட்சி முறைக்கு அதில் இடமளிக்கப்பட்டிருக்கிறது. அதாவது, ஒரு முழுக் கழஞ்சுப் பொன் நாணயம் சரியாகச் செலாவணியாக, கழஞ்சுக் காசு, மாடைக் காசு போன்ற சில்லறை நாணயங்கள் தேவைப்படுவது போலான விஷயம் இதுவும். இம்மாதிரியானதோர் அடிப்படையிலேயே இந்த மாபெரும் பாரத நாட்டில் பல நூறு அரசாங்கங்கள் இப்போது இயங்கி வருகின்றன. மற்றப்படி இவை துண்டுபட்டு நிற்பதற்கு வேறு வேற்றுமை என்று எதுவும் இல்லை. ஆயிரம் ஆண்டுகளுக்குப்பின் இந்தப் பிரிவினை நிலை அடியோடு தகர்ந்து போகலாம். மனித அறிவு வளர்ந்து, போக்குவரத்துச் சாதனங்களும் பிறவும் விரிவடையும்போது தேச தேசங்களின் எல்லைகள் தாமாகவே நெருங்கி வந்து சுருங்கிவிடலாம். இமயத்தில் நின்று பிறப்பிக்கப்படும் கட்டளை குமரியில் கேட்கக்கூடிய காலம் வரும்போது இந்த அழகிய பாரத நாடும் ஒரே ஆட்சியின்கீழ் ஒருமித்து நின்றுவிடலாம். ஆனால் இன்றுள்ள நிலைமையில் பல்லவ நாடு என்றும், பாண்டியநாடு என்றும், சேர நாடு என்றும், சளுக்கிய நாடு என்றும், கங்க நாடு என்றும் பிரிந்து நிற்பதே இப்போதைய அரசியல் தர்மமாக நாம் கொள்ள வேண்டியிருக்கிறது. இந்தத் தர்மத்தை மீறி, ஒரு நாடு இன்னொரு நாட்டை விழுங்க

முற்படுமேயானால் அதை அடக்கியொடுக்குவதையும் ஒரு தர்ம நெறிச் செயலாக ஏற்க வேண்டியிருக்கிறது. ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் வரப்போகும் ஒன்றுபட்ட பாரத சமுதாயத்தினர் இன்றைய நமது இந்தப் பிரிவினைத் தர்மத்தை அறிந்து ஆச்சரியப்படலாம்; சிலர் முகம் சுளிக்கலாம்; கூடி வாழத் தெரியாத குறுகிய புத்தியுடையவர்கள் என்றும் கையகல நிலப் பரப்பில் வேற்றுமை வெறிகொண்டு வாழ்ந்த பேதையர் என்றும் எள்ளி நகையாடலாம்; இது பேதமை ஆகும். ஏனென்றால், அவ்வந்தக் கால மக்களின் மனவளர்ச்சியையும், தேவைகளையும், சௌகரியங்களையும் ஒட்டியே ஒவ்வோர் வகையான அரசியல் தர்மம், சமூக நியதி, மொழியுணர்வு, சமய நெறி, கலைஞான அமைப்பு முதலானவை உருவாகின்றன. இவ்வுண்மையை உணராமல் அவற்றை எல்லாக் காலங்களின் மேலும் இழுத்துப் போட்டுக்கொள்ள முயல்வது வடிகட்டின அறியாமையே ஆகும். எனவேதான், பல்லவ மன்னரின் அந்த மதிப்புக்குரிய கேள்வி ஆயிரம் ஆண்டுகளுக்குப் பின்னால் எழவேண்டிய ஒன்று என்கிறேன். அத்துடன், இன்றைய பாரதத்தின் அரசியல் தர்மப்படி உருவாகிச் சீரும் சிறப்புமாக இயங்கி வந்த பல்லவ நாட்டைப் பழி வாங்க வேண்டும் என்ற பகைமை உணர்ச்சியினாலும், மண்ணாசையாலும், பொன்னாசையாலும், ஆதிக்க அதிகார வேட்கையாலும் உந்தப்பட்டு வந்து கைப்பற்றிக் கொண்டிருக்கும் சளுக்கியரை அடக்க வேண்டியது அவசியத்திலும் அவசியம் என்கிறேன். இதனை ஓர் அறப்போராகவும் கொள்ள வேண்டுமெனக் கூறுகிறேன்."

கோடை மழை பொழிந்து ஓய்ந்தாற்போல் முத்தரையர் தம் பேச்சை நிறுத்தினார். சிந்தனையில் ஆழ்ந்து சிலையாக அமர்ந்திருந்தான் பரமேசுவரவர்மன்.

அவனையே சற்று நேரம் இமைக்காமல் பார்த்துக் கொண்டிருந்த முத்தரையர் இளநகையுடன் அருகில் வந்து, "மன்னரவர்களின் ஈழப் பயணத் திட்டம் இப்போது எந்நிலையில் இருக்கிறது?" என்று தணிந்த குரலில் கேட்டார்.

பரமேசுவரவர்மன் வாய் திறவா மௌனியாகவே உட்கார்ந்திருந்தான்.

"அரசரவர்களின் மௌனத்தைப் பார்த்தால் அவரது வினாவுக்கு நான் அளித்த மறுமொழிகள் திருப்தியளிக்க வில்லை என்றே தோன்றுகிறது?"

இப்போதும் பரமேசுவரவர்மன் மௌனமே சாதித்தான்.

"அப்படியானால் மன்னரவர்களின் அந்த வினாவுக்கு இனி வாய் மொழியால் விடை பகர்ந்து பயனில்லை; அவரது நாட்டில் இன்று நடைபெறும் சில நடப்புகளைத்தான் அவருக்குக் காட்டியாக வேண்டும் என்று நினைக்கிறேன்!"

மெல்ல தலைநிமிர்ந்த பரமேசுவரவர்மன் அவரை அமைதியாக நோக்கினான்.

"ஆம், அரசே! தங்களின் ஈழத்துப் பயணத் திட்டத்தைக் கைவிடும்படி இனி நான் கேட்கப் போவதில்லை; ஆனால் அந்தப்பயணத்தை மேற்கொள்ளுமுன் தங்களுக்குச் சில காட்சிகளைக் காட்ட விரும்புகிறேன். இந்த வேண்டு கோளுக்காவது மன்னரவர்கள் தயைகூர்ந்து செவிசாய்க்க வேணுமாய்ப் பணிவுடன் கோருகிறேன்.

ஓங்கிப் பெருமூச்சுவிட்ட பரமேசுவரவர்மன் தன் இருக்கையைவிட்டு எழுந்தான். உற்சாகமடைந்த முத்தரையர் அவசரமாக வெளியே சென்று அநந்தமதியையும் இளங் காரியையும் அழைத்து அவர்களிடம் ஏதோ இரகசியமாகச் சொல்லிவிட்டு, தம்முடையதும் இளங்காரிக் குடையானது மான இரு புரவிகளைக் கொண்டு வந்து வாசலில் நிறுத்தினார்.

பல மாதங்களுக்குப் பின் முதன் முதலாகப் புரவிமீது ஏறி அமர்ந்தான் பரமேசுவரவர்மன். இன்னொரு புரவியில் முத்தரையரும் தாவி ஏறினார். அடுத்த கணம் அவ்விரு குதிரைகளும் பல்லவபுரத்தை நோக்கி விரைந்தன.

# 65

# அன்னையின் தரிசனம்

**நா**ழிகை வட்டிலில் கடிகையான் நேரம் கணித்துப் பல்லவபுரம் நகர மாந்தருக்கு அறிவிப்பதற்கென அமைந்த அழகிய கோபுரம் ஒன்றின் அடிவாரத்துக்கு வந்து சேர்ந்தனர் பரமேசுவரவர்மனும், பெரும்பிடுகு முத்தரையரும்.

அரண்மனைக் கோட்டைக்கு நேர் எதிரே தண்ணிழல் படர்ந்த மாஞ்சோலைச் சூழலில் தன்னந்தனியே அமைந்திருந்தது அந்தக் கடிகைக் கோபுரம். எட்டு பட்டைகள் தீர்த்த வடிவிலே அடி பருத்துத் தலை சிறுத்துத் திண்மையுடன் காணப்பட்ட அது சுமார் நான்கு 'குடிதாங்கிக் கோல்' (தொண்ணூற்றாறு அடி) உயரத்துக்கு மேலெழும்பி நீள் விசும்பை முத்தமிடுவதுபோல் கம்பீரமாக நின்றிருந்தது. எக்காளக் கருவிக்குப் பூண் பிடித்திருப்பதுபோல் அந்தக் கோபுரத்தின் சுற்றுப் பரப்பில் பன்னிரண்டு அடி உயர இடைவெளிக்கு ஒன்றாக எட்டுப் பிதுக்கக் கரைகள் இருந்தன. அவ்வொருவொரு வளைவுக் கரைக்கும் ஒரு சாளரமென எட்டுச் சாளரங்கள் திசைக்கு ஒன்றாய் அமைந்திருந்தன. அதன் படிக்கட்டு கீழ்த்தளத்திலிருந்து தொடங்கி உட்புறமாகவே சுழன்று மேலே சென்றது.

இப்படி விளங்கிய அந்தக் கடிகைக் கோபுரத்தில் கடந்த பல திங்கட்களாக நேரம் கணித்து அறிவிக்கும் தொழில் நடைபெறாதிருந்ததால் அது கவனிப்பாரின்றிப் பாழ்பட்டுக் காட்சியளித்தது.

சுற்றிலும் தம் பார்வையை வெகு உன்னிப்பாகச் சுழலவிட்டுப் பார்த்துக்கொண்டு நின்றிருந்த முத்தரையர் புரவிகளை மறைவானதோர் இடத்தில் கட்டிப் போட்டு விட்டுத் திரும்பி வந்து, "வாருங்கள், அரசே! தயவுசெய்து இந்தக் கடிகைக் கோபுரத்தின் உச்சித் தளத்துக்கு என்னோடு வாருங்கள்!" என்று குழைவாகக் கூறிக்கொண்டே கோபுரச் சுழற் படிகளின்மேல் ஏறினார். உள்ளார்ந்த திகைப்புடன் தயங்கி நின்ற பரமேசுவரவர்மனும் அவரைப் பின் தொடர்ந்து ஏறினான்.

கால்கள் சோர்வுற்றுக் களைப்படைந்த நிலையில் கோபுர உச்சித் தளத்தை அவ்விருவரும் அடைந்தனர். அங்கே பிரும்மாண்டமான வெண்கல வட்டையொன்று களிம்பேறிக் கறுத்துத் தொங்கிக்கொண்டிருந்தது. அதன் எதிரே நாழிகை கணக்கிடுவதற்கென அமைந்த 'குறுநீர் கன்னல்' எனப்படும் காலேந்திரக் கருவி பாழ்பட்டுப் பழுதுற்ற நிலையில் கிடந்தது.

உச்சிக் கோபுரத்தின் வெளிச் சுற்றுத் தளத்தில் வந்து நின்ற பரமேசுவரவர்மன் அதன் கைப்பிடிச் சுவரைப் பற்றியவாறு தொலைதூரத்துக்கு அப்பால் தன் பார்வையைச் செலுத்தினான். ஒரு காலத்தில் தேவேந்திரனின் அமராவதி பட்டணம்போல் அத்தனை அழகுடன் விளங்கிய அந்தப் பல்லவபுரம் நகர் இப்போது புகை படிந்த ஓவியமாகப் பொலிவிழந்து காட்சியளித்தது. இடுகாட்டைப் பார்க்கும் துறவிபோல் ஒருவித ஆழ்ந்த விரக்திப் புன்முறுவலோடு அந்தக் களையிழந்த நகரின் காட்சிகளைப் பார்த்தவாறு அமைதியாக நின்றிருந்தான் பரமேசுவரவர்மன்.

பெரும்பிடுகு முத்தரையர் எங்கே? அதோ, வெள்ளைப் பனி மலைபோல் தோன்றும் பல்லவ அரண்மனையின் மேன்மாடங்களைப் பார்த்துக்கொண்டு நிற்கிறார்!...

வழக்கம்போல் அந்த அரண்மனைப் பகுதிகளும் பாழடைந்து காணப்பட்டன. சளுக்கியக் காவல் வீரர்கள் மதர்ப்படைந்த களிறுகள்போல் அங்கு மிங்குமாக

உலாவிக்கொண்டிருந்தனர். கீழே மிகப் பெரிய குதிரைப் படையொன்று அரண்மனையின் தெற்கு வாயிலை நோக்கி அணிவகுத்து எங்கோ புறப்படுவதற்குத் தயாராக நின்று கொண்டிருந்தது. அரண்மனையைச் சார்ந்த ஜேஷ்டா தேவி கோயிலுக்கு எதிரே, பணியாளர்களுக்கெனத் தனியாக அமைந்த வேளத்தைச் சுற்றிப் பலத்த காவல் போடப் பெற்றிருந்தது. நூற்றுக்கணக்கான காவல் வீரர்கள் ஈட்டிகளை யும் கத்திகளையும் ஏந்தி நின்று அதனை வெகு கவனமாகக் கண்காணித்துக் கொண்டிருந்தனர். முத்தரையரும் இப்போது அவ்வேளத்து மேன்மாடப் பகுதியைத்தான் கூர்ந்து பார்த்தவாறு நின்றிருந்தார்.

உச்சிப் போது நெருங்கி வரும் அந்த நேரத்தில் திடீரென்று தாரை முழங்கும் ஒலி கேட்டது. வேளத்தைச் சுற்றிப் பரவலாக நின்ற காவல் வீரர்கள் அவ்வொலி கேட்டு எச்சரிக்கை பெற்றவர்களாய்ச் சிறுசிறு குழுவாகக் கூடினர்.

இந்நேரம்வரை அந்த வேளத்து மேன்மாடத்தையே இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த முத்தரையர் அவசரமாகத் திரும்பி, "அரசே! தயைசெய்து இந்தக் காட்சியைப் பாருங்கள்!" என்று துயரம் முட்டிய குரலில் படபடத்தார்.

சிந்தனையில் ஆழ்ந்தவனாய்த் துவண்டு நின்று கொண்டிருந்த பரமேசுவரவர்மன், அவர் சுட்டிக் காட்டிய திசைப்பக்கம் தன் பார்வையைத் திருப்பினான். அங்கே—

அரண்மனை வேளத்து மேன்மாடத்தின் சிறிய கதவொன்று திறக்கப்பட்டது. மறுகணம், வெண்ணிற ஆடை புனைந்து வயதான தோற்றத்துடன் விளங்கிய பெண்மணி யொருவர் இரு கரங்களிலும் நீண்ட இரும்புச் சங்கிலிகள் இழுபட்டுத் தொங்க வெயில் எரிக்கும் தளத்தை நோக்கி வெளியே வந்தார். அவரது அண்ணாந்த பார்வை அந்த ஜேஷ்டாதேவி கோயில் பக்கமே திரும்பியிருந்தது. நடுங்கித் துவளும் தம் கரங்களை மேலே உயர்த்திக் குவித்தவாறு

பிரார்த்தனையில் ஈடுபட்டவராய் அப்படியே சமைந்து நின்றார் அவர்.

"பார்த்தீர்களா, அரசே? அவர்தாம் இந்தப் பார் புகழ் கொண்ட பல்லவ நாட்டின் பல கோடி மக்களுக்கும் சொந்தமான ஞானத்தாய்! தங்களைப் பத்து மாதம் சுமந்து பெற்ற அன்னை காடவன்தேவி! தம் இஷ்ட தெய்வத்தை நேரில் தரிசித்து வழிபாடு செய்யவும் உரிமை இழந்த நிலையிலே நிற்கும் அவரது பரிதாபக் கோலத்தைப் பாருங்கள், அரசே!" என்று நெஞ்சு அடைக்கக் குரல் தழுதழுக்க விம்மிக் குழறினார் முத்தரையர்.

ஆனால் பரமேசுவரவர்மனோ எவ்விதச் சலனமுமின்றித் தன் அன்னையின் தொலைதூர உருவத் தோற்றத்தையே அமைதியாகப் பார்த்துக்கொண்டு நின்றான். அவனது ஒளி மங்கிய கண்கள் பனித்துத் தாழ்ந்தன.

அவசரப் பரபரப்புடன் நிமிர்ந்த முத்தரையர் தம் இடுப்புப் பட்டியில் செருகி வைத்திருந்த திருமுக ஓலைச் சுருளை எடுத்துப் பல்லவ மன்னனின் எதிரே நீட்டி, "இப்போதாவது இதில் தங்களது மேலான கைச்சாத்தை இட்டருளுங்கள், அரசே!" என்று இறைஞ்சுவதுபோல் கரகரத்தார்.

பரமேசுவரவர்மன் அவரைப் பார்த்து அவலப் புன்முறுவல் பூத்தான். "ஹீம்! விதி வலிமை வாய்ந்தது! அதன் விருப்பத்துக்குக் குறுக்கே நிற்க நான் யார்?"—பெருமூச்சுவிட்ட அவன் அந்தக் கடிகைக் கோபுர உச்சித் தளத்திலிருந்து அகன்று போய்ப் படிகளில் இறங்கலானான். தோல்விச் சுமையால் தலைதொங்க அவனைப் பின் தொடர்ந்தார் முத்தரையர்.

பல்லவபுரத்துக்கும் தவத்துறைக்கும் இடையே குறுகலான வண்டிப்பாட்டையொன்றில் முன்னும் பின்னுமாக விரைந்துகொண்டிருந்த அவ்விரு குதிரைகளும்

சட்டென்று வேகத்தைக் குறைத்துத் திமிறலிட்டுக் கனைத்தன. முன்னால் சென்ற முத்தரையர் தம் குதிரைமீதிருந்து கீழே குதித்து இறங்கிச் சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தார்.

அந்த வண்டிப் பாட்டைக்கு வடகிழக்கே சுமார் அரை குரோச தொலைவுக்கப்பால் சிற்றூர் ஒன்றின் பக்கமிருந்து ஏதோ கூக்குரலும் அழுகையொலியுமாகச் சேர்ந்து நாற்புறமும் எதிரொலிப்பது கேட்டது.

பரமேசுவரவர்மன் அணுகி வந்த முத்தரையர், “அரசே! தாங்கள் காண வேண்டியதும், நான் காட்ட விரும்பியதுமான மற்றொரு காட்சி! தயைசெய்து என்னோடு வாருங்கள்!” என்று கம்மிய குரலில் கூறிக்கொண்டே தம் குதிரையின் சேணக் கயிற்றைப் பற்றி நடத்திக்கொண்டு அந்தச் சிற்றூரை நோக்கி வேகமாக நடந்தார். மறுமொழி ஏதும் கூறாமல் மௌனம் சாதித்த பரமேசுவரவர்மனும் அவர் பின்னால் சென்றான்.

அது ஒரு சிற்றூர்தான். விவசாயிகளும் வணிகர்களும் தொழில் விற்பன்னர்களும் அங்கே வசித்து வந்ததால் அவ்வூரின் அமைப்பு மிக அழகாகவே காணப்பட்டது. ஆனால் அதன் உட்புற நிலையோ பாழ்பட்டு வறுமை மிஞ்சி பரிதாபக் கோலத்துடன் விளங்கியது. எங்கும் எதிலும் ஒருவித வறட்சித் தன்மையே தலைவிரித்தாடியது. அச்சிற்றூரை நெருங்கிய பரமேசுவரவர்மனும் முத்தரையரும் இடிந்து தூர்ந்த கூவல் ஒன்றின் அருகில் தம் குதிரைகளை நிறுத்தி விட்டுச் சற்றுத் தள்ளிப்போய் நகர்ந்து கிடந்த ஒரு ‘நடு கல்’ லின் பின்னால் மறைந்து நின்றவாறு கூக்குரல் எழுந்த இடத்தை நோக்கிப் பார்வையைச் செலுத்தினர்.

நான்கு வீதிகள் சேரும் அந்த நாற்சந்தியின் மேலண்டைப் பக்கமாக–‘நிலைக்களம்’ எனப்படும் வரித் தண்டல் சதுக்கமொன்றை ஒட்டினாற்போல் — பிரும்மாண்டமான ‘ஊர்ப் பண்டார’ க் கட்டிடம் எழும்பி நின்றது. வரியாக வசூலிக்கப் பெறும் காசுகளைச் சேர்த்து வைப்பதற்கான ‘கருவூலம்’ ஒன்றும், தீர்வையாகத் தாண்டப்படும் தானிய வகைகளைச் சேமித்து வைப்பதற்கான ‘களஞ்சியம்’

ஒன்றுமாக இரு பகுதிகளைக் கொண்டு அது விளங்கியது. ஆனால் அந்தக் கருவூலத்திலும் களஞ்சியத்திலும் இப்போது ஒரு செப்புக் காசோ ஒரு தானிய மணியோகூட இன்றி அவை வெறிச்சோடிக் கதவுகள் திறந்தே கிடந்தன. நிலங்களின் தன்மைகளைத் தரம் பிரித்து அறிந்து வரி விதிப்புக்குத் தோதாக எழுதி வைக்க உதவும் 'தரவு சாத்து' என்கிற நூலும், நிலவரிக் கணக்குகளைக்கொண்ட 'வரிப் பொத்தகம்' என்ற நூலும், மற்ற வரிகளைப் பதிந்து வைக்கும் 'புரவு வரி' என்ற நூலும், வசூலிக்கப்பெற்ற வரிக் கணக்குகளை மட்டுமே கொண்ட 'வரியிலீடு' என்ற நூலும் தாறு மாறாகக் கிழிந்து அங்குமிங்குமாய்ச் சிதறிக் கிடந்தன.

இப்படி அலங்கோலமாய்க் காட்சியளித்த அந்த நிலைக் களத்தில் அவ்வூர்க் குடிமக்கள் அவ்வளவு பேரும் திரண்டு வந்து குழுமியிருந்தனர். வறுமையாலும், பிணியாலும், பசியாலும் வதைபடும் தோற்றத்துடனிருந்த அவர்களைப் பார்க்கவே மிகவும் பரிதாபமாக இருந்தது. இரைச்சலிட்டுப் பேசிக்கொண்டிருந்த ஆண்களிடையேயும் அழுது புலம்பிக்கொண்டிருந்த பெண்களிடையேயும் திடீரென்று அமைதி நிலவியது. அவர்கள் அனைவரது பார்வையும் மேல் நோக்கி நிமிர்ந்து எதிரேயிருந்த பண்டாரக் கட்டிடத்தின் கூரை முகட்டில் போய்ப் பதிந்தது.

அங்கே, இருபத்தைந்து வயது மதிக்கத்தக்க வாலிப னொருவன் அலட்சியமாக நின்று கொண்டிருந்தான். தன்னை நோக்கி நின்ற பெரும் ஜனத் திரளையே விழியசைக்காமல் பார்த்துக்கொண்டிருந்த அவன் சட்டென்று நிமிர்ந்து வீராவேசமான குரலில் உரக்கப் பேசினான்: "பெரியோர்களே, தாய்மார்களே, வீர சகோதர சகோதரிகளே! சளுக்கியரின் காட்டாட்சியால் இந்த நாடே இப்போது சின்னாபின்னப் பட்டுக் கொண்டிருக்கிறது. நாளுக்கு நாள் அவர்களுடைய கொடுமைகள் அளவு மீறிப் போகின்றன. வரி என்ற பெயரால் நம்மையெல்லாம் வாட்டி வதைத்துப் பழிக்கிறார்கள். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு புது வரியாகச் சொல்லிக் கொண்டு நம் சொத்துக்களைச் சூறையாடுகிறார்கள். இந்த

அநியாயக் கொடுமைகளை எதிர்க்கச் சக்தியின்றி நாம் அடங்கியொடுங்கிக் கிடக்கிறோம். எத்தனை காலத்துக்கு இந்த ஈன வாழ்க்கை வாழப் போகிறோம்? நம்முடைய சண்டாளருக்குக் காட்டியே ஆகவேண்டும். அதற்காகவே இன்று நான் உங்கள் முன்னே உயிர்த் தியாகம் செய்ய முன்வந்திருக்கிறேன். அநியாய வரிகளை எதிர்ப்பதற்காகவே ஓர் இளைஞன் ஊர்ப் பண்டாரத்தின் மீதேறிக் குதித்து உயிரை விட்டான் என்ற சேதியை அந்த ஆணவத்திமிர் பிடித்த சளுக்கிய வரித் தண்டல்காரர்களின் செவிகளிலே படும்படி செய்யுங்கள். இதைத் தவிர உங்கள் உய்வுக்கு இப்போது வேறு வழியே இல்லை. வாழ்க, பரமேசுவரவர்மர்! வாழ்க, பல்லவ நாடு!" — அனல் தெறிக்கப் பேசி நிறுத்திய வாலிபன் சடாரெனக் கீழே நோக்கிப் பாய்ந்தான். அடுத்த விநாடி அந்த நிலைக்களமெங்கும் ஒரே இரத்த வெள்ளம்!

ஜனக் கூட்டத்திலிருந்து 'ஹா, ஹா' என்ற அலறல் ஒலியும், அழுகைக் கூக்குரலுமாக எழுந்து எட்டுத் திக்கு களையும் கிடுகிடுக்க வைத்தன.

சிவந்த கண்களில் நீர் கசியப் பெருமூச்சு விட்டுத் திரும்பிய முத்தரையர், அங்கே அமைதியாக நின்று கொண்டிருந்த பரமேசுவரவர்மனை நோக்கி வேதனை செறிந்த குரலில், "பார்த்தீர்களா அரசே? நெஞ்சின் ஈரலைக் குத்திக் கிழிப்பது போன்ற இந்தப் பயங்கரப் பரிதாப நிகழ்ச்சி இங்கு மட்டுமே நிகழ்வதாக நினைக்காதீர்கள். அரசாங்கத்தின் வரிக் கொடுமைகளையும் வேறு பல அநீதிகளையும் எதிர்க்க மக்கள் இறுதியாக மேற்கொள்ளும் இந்தப் பழமையான முறை இப்போது ஒவ்வொரு சிற்றூரிலும், பேரூரிலும், பெரிய நகரங்களிலும் கூடத் தினந்தினம் நடந்துகொண்டுதான் இருக்கிறது. சளுக்கியர் இழைக்கும் கொடுமைகளை நேரிடையாக எதிர்த்து நிற்க வாய்ப்பில்லாத மக்கள், கோபுரங்களின் மேலேறிக் குதித்துப் பிராமத் தியாகம் செய்துகொள்வதும், தீ மூட்டி அதில் வீழ்ந்து இறப்பதுமாகத் தம் மனக் குமுறலை வெளிக் காட்டிக்கொண்டிருக்கிறார்கள்" என்றார்.

# 66

## வாதாபி கணபதி

மாலைப் போது வருகை தரவிருந்த நேரத்தில் தவத்துறைக்கு அண்மையில் உள்ள சென்னிவாய்க்கால் என்னுமிடத்தைச் சார்ந்து சென்ற கிளை வழி ஒன்றில் விரைந்து கொண்டிருந்த அவ்விரு குதிரைகளும் ஏதோ ஒரு பயங்கரக் காட்சியைக் கண்டு மிரட்சியுற்றாற்போல் பெருங் குரலெடுத்துக் கனைத்துத் திமிறியவாறு பாதையைவிட்டுத் திரும்பித் தறிகெட்டு ஓட ஆரம்பித்தன. இதனால் திக்கு முக்காடிவிட்ட பரமேசுவரவர்மனும் முத்தரையரும் புரவிகளை அடக்கிச் சாந்தப்படுத்திப் பாதைக்குத் திருப்பிக் கொண்டுவந்து சேர்த்துவிட்டுத் தம் பார்வையை அங்குமிங்கு மாகச் செலுத்தி நோக்கினர்.

கூப்பிடு தூரத்தில்—சென்னிவாய்க்கால் கரை மேட்டில்—பழைமையான ஞாழற் கோயில் ஒன்று இருப்பது தெரிந்தது. அந்தக் கோயிலின் எதிரே அடிதடி கலவரம் நடப்பதற்கு அறிகுறியாக 'ஆ'கார, 'ஊ' காரக் கூக்குரல்களும் புழுதிப் படலமும் எழுந்தன.

தாம் எதிர்பார்த்துத் தேடி வந்த ஏதோ ஒன்று கிடைத்து விட்டாற்போல் உற்சாகமடைந்த முத்தரையர், "அரசே! தாங்கள் இங்கேயே இருங்கள். நான் போய் அங்கு என்ன நடக்கிறதெனப் பார்த்துக்கொண்டு வந்து விடுகிறேன்" என்றவாறு அந்தச் சென்னிவாய்க்கால் ஞாழற் கோயிலை நோக்கி விரைந்தார்.

களைப்பும் சோர்வுமாகப் பாதையின் ஓரம் நின்றிருந்த பரமேசுவரவர்மன், 'நாமும்தான் போய்ப் பார்ப்போம்' என்று எண்ணியவனாய் முத்தரையர் சென்ற வழியாகப் புரவியை நடத்திக்கொண்டு நடக்கலானான்.

சென்னி வாய்க்காலின் கரை மேட்டில் ஏறிய பரமேசுவரவர்மனுக்கு அந்த ஞாழற் கோயிலின் எதிரே நிகழ்ந்துகொண்டிருந்த அடிதடி கலகக் காட்சி இப்போது ஓரளவு புலனாயிற்று. பரபரப்புடன் சற்று வேகமாக நடந்துகொண்டே அந்நெஞ்சுறுத்தும் காட்சியைக் கூர்ந்து பார்த்தான்.

சமணத் துறவிகள்போல் மழித்த தலையும் காவியுடையுமாகத் தோன்றிய சுமார் ஐம்பது அறுபது பேர் ஒரு குழுவாகவும், நூற்றுக்கு மேற்பட்ட ஊர் மக்கள் ஒரு குழுவாகவும் நின்று கம்பு, ஈட்டி, கத்திகளுடன் மூர்க்காவேசமாக ஒருவரையொருவர் தாக்கிப் போரிட்டுக் கொண்டிருந்தனர்!

பரமேசுவரவர்மனுக்கு ஒன்றும் புரியவில்லை. 'கோயிலின் எதிரே அவர்கள் இப்படிப் பயங்கரச் சண்டையிட்டுக் கொண்டிருக்கக் காரணம் என்னவாயிருக்கும்?' என்று தன்னைத் தானே அவன் கேட்டுக்கொண்டான். அத்துடன், சமணத் துறவிகள்போல் தோற்றமளிப்பவர்கள் ஈட்டி, கத்திகளை ஏந்திப் போரிடுவது அவனுக்கு விந்தையிலும் விந்தையாக இருந்தது. தன்னை மீறிய ஒரு துடிப்புடன் —தன் நிலையையும் மறந்தவனாய்— அந்த ஞாழற் கோயிலை நோக்கி விரைந்தான்.

"அக்கிரமம் எல்லை கடந்துவிட்டது! அநியாயம் வரம்பு மீறிப் போய்விட்டது!" என்று முணுமுணுத்துக்கொண்டே கோயிலின் பின்புறமிருந்து வெளிப்பட்டு வந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

சற்றுமுன் அங்கே வெறியாவேசத்துடன் போரிட்டுக் கொண்டிருந்தவர்களில் ஒருவரைக் கூட இப்போது

காணோம். கத்திகளும், கம்புகளும், ஈட்டிகளும்தான் ஆங்காங்கே சிதறிக் கிடந்தன. அவற்றுடன் விலைமதிப்பு வாய்ந்த ஆபரணங்களும், பொற்காசுகளும், பொன் வெள்ளிகளாலான வேறு சில பொருட்களும் இறைந்து கிடந்தன.

பிரமையுற்ற நிலையில் நின்று இதையெல்லாம் சுற்றிச் சுழன்று பார்த்த பரமேசுவரவர்மன், "என்ன இது? இங்கே என்ன நடந்தது?" என்று கேட்டுக்கொண்டே திரும்பினான்.

"நாடெங்கிலுமுள்ள திருக் கோயில்களில் இப்போது என்ன நடந்துகொண்டிருக்கிறதோ அதுவேதான் இங்கேயும் நடந்திருக்கிறது அரசே!'' என்று சலிப்புடன் சொல்லி முகத்தைச் சுளித்த முத்தரையர் தொடர்ந்து சொன்னார்: "இந்த ஞாழற் கோயிலில் எழுந்தருளியுள்ள ஞாழற் பெருமான் தம் பொக்கிஷத்தில் நிறைய ஆபரணங்களைப் பூட்டிவைத்துக்கொண்டு அவற்றைப் பாதுகாக்க முடியாமல் மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்தாராம். அவருடைய சிரமத்தைப் போக்கிப் புண்ணியம் கட்டிக்கொண்டு போயிருக்கிறார்கள் சளுக்கிய வீரர்கள்."

இதைக் கேட்டதும் பரமேசுவரவர்மனின் கண்கள் அனல் துண்டங்களாயின. "சளுக்கிய வீரர்களா? அவர்களுக்கு இங்கென்ன வேலை?"

"அவர்களுடைய பிரதான அலுவலே இப்போது இதுவாகத்தான் இருக்கிறது, அரசே!... மக்களிடம் வரி என்ற பெயரால் கொள்ளையடித்த செல்வங்கள் போதாதென்று இம்மாதிரியான கோயில்களிலும் தங்கள் இரத்தக் கறை படிந்த கரங்களை நீட்டத் தொடங்கிவிட்டார்கள்."

பல்லவ மன்னனின் முகம் நெருப்பெனச் சிவந்து பழுத்தது.

முத்தரையர் மேலும் சொன்னார்: "இதிலே வேதனை தரும் விஷயம் என்னவென்றால், மதிப்புக்குரிய சமணத் துறவிகள்போல் வேடமிட்டுக்கொண்டு வந்து இந்த

மாபாதகச் செயலை அவர்கள் நடத்துகிறார்கள் என்பதுதான்!"

சினத்தால் உடல் முறுக்கேறித் துடிக்க ஓங்கி நிமிர்ந்தான் பரமேசுவரவர்மன்.

"அந்த அநியாயக்காரர்கள் அப்படிக் காவியுடை வேடமிட்டு வரக் காரணம் என்ன தெரியுமா அரசே? கோயில் சொத்துக்களைச் சூறையாடுவதோடு அல்லாமல், இப்போது நாட்டிலே சைவர்களும் சமணர்களும் ஒன்றுபட்டு நிற்பதையும் கலைத்துக் குலைத்தெறிய வேண்டும் என்பதே அவர்கள் நோக்கம். அதற்காகவே இந்தப் புதிய தந்திரத்தைக் கையாள்கிறார்கள். சைவ— வைணவக் கோயில்களில் சமணத் துறவிகள் புகுந்து கொள்ளையடிக்கிறார்கள் என்ற சேதி பரவினால் மக்களிடையே நிலவும் ஒற்றுமை தகர்ந்து, பழைய விரோத-குரோதம் தலைதூக்கிவிடும் என்று அவர்கள் எதிர்பார்க்கிறார்கள்."

பரமேசுவரவர்மனின் நிழல் தீண்டிய புற்பூண்டுகள் கருகித் துவண்டன!

"ஆனால் அதிர்ஷ்டமாக அவர்களின் அந்தத் தீய நோக்கம் சிறிதும் நிறைவேறவில்லை. அவர்களுடைய போலி வேடத்தைப் புரிந்துகொண்ட சைவர்களும் சமணர்களும் ஒன்று சேர்ந்தே அவர்களை எதிர்த்து வருகிறார்கள். சற்றுமுன் இந்தக் கோயிலில் கொள்ளையிட வந்த சளுக்கிய வேடதாரிகளை அடித்து நொறுக்கி விரட்டியவர்களில் பெரும்பாலோனோர் சமணப் பெருமக்களே!" என்று அடைத்த குரலில் சொன்னார் முத்தரையர்.

பரமேசுவரவர்மன் பயங்கரமாகச் சிரித்தான் "நம்மைப்பற்றி நாம் தவறாக எடை போட்டு எதிரியின் பலத்தைக் குறைத்து மதிப்பிட்டுவிடக்கூடாதே என்பதற்காக இத்தனை காலம் பொறுமையோடு காத்திருந்தேன்! இனி அந்தப் பொறுமைக்கே இடமில்லை! இனி என்னால் பொறுக்கவும் இயலாது!" என்று இந்திராயுதம் மோதலிடுவது

போல் கர்ஜித்த அவன், "முத்தரையரே! எங்கே அந்த ஓலை? எங்கே அந்தத் திருமுக ஓலை?" என்றவாறு அவரை நோக்கிப் பாய்ந்து சென்றான்.

பெரும்பிடுகு முத்தரையர் விம்மிப் புடைத்த தம் புஜங்களைக் குலுக்கி நேராக நிமிர்ந்து நின்றுகொண்டு தாம் வரைந்து வைத்திருந்த திருமுக ஓலையை எடுத்துப் பல்லவ மன்னனின் எதிரே மிடுக்குடன் நீட்டினார்.

பளீரென்ற ஓர் ஒலி!

பரமேசுவரவர்மனின் பரந்த மார்பிலும் அவனது வலக்கரத்திலும் செங்குருதி சொட்டிற்று. தன் கையைக் கொண்டே தனது மார்பில் ஓங்கி அறைந்து கீறி வழித்தெடுத்த இரத்தத்துடன் நிமிர்ந்த அவன் அந்தத் திருமுக ஓலையில் குருதிக் கைச்சாத்து இட்டுவிட்டுத் திரும்பி, "மாவீர முத்தரையரே! எடுத்துச் செல்லுங்கள் இந்த ஓலையை! எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவாகச் சளுக்கிய அரக்கர்களைச் சங்காரம் பண்ண என் நாட்டு மக்களைப் போர் அணிக்குத் திரட்டிக்கொண்டு வாருங்கள்!" என்று முழங்கினான்.

மகிழ்ச்சியால் பூரித்துக் குலுங்கிய முத்தரையர் தம் இரு கரங்களையும் நீட்டி அவ்வோலையைப் பணிவுடன் பெற்றுக் கண்களில் ஒற்றிக்கொண்டு நிமிர்ந்து, "மாமன்னரவர்களை இன்னும் இரண்டொரு வாரங்களுக்குள் சேதியக் கலைஞர் பரவாதிமல்லர் இல்லத்தில் வந்து சந்திக்கிறேன்" என்று உற்சாகமாகக் கூவியவாறு தம் குதிரையின்மீது தாவி ஏறி அமர்ந்தார். மறுகணம், அந்தக் குதிரை காற்றெனக் கடுகி மறைந்தது.

உணர்ச்சிக் கனல் பரக்க ஓங்கி உயர்ந்து நின்றுகொண்டிருந்த பரமேசுவரவர்மன் சற்றே அமைதி அடைந்தவனாய் ஆழ்ந்த சிந்தனையுடன் அந்த ஞாழற் கோயிலை நோக்கி நடந்தான்.

கோயலின் வலப்புறத் திருச்சுற்றையொட்டிப் பெரியதொரு ஞாழல் மரம் பசுமைக் குடை விரித்து வளர்ந்து நின்றது. அதன் அருகில் ஞாழற் பெருமானின் சந்நிதானத்தைப் பார்த்தாற்போல்—சிறியதொரு கோயில் புதிதாக எழுப்பப் பெற்றிருக்க, அதில் வாதாபி கணபதி எழிலுற வீற்றிருந்தார்.

சளுக்கியப் புலிகேசியை அடக்கியொடுக்கி வாதாபி நகரைத் தீக்கிரையாக்கிய பல்லவ மன்னன் நரசிம்மவர்மனின் படைத் தளபதியான பரஞ்சோதியார், அங்கிருந்து அழகிய விநாயகர் படிமங்கள் சிலவற்றை எடுத்து வந்து தம் சொந்த ஊரான திருஞ்செங்காட்டங்குடியில் ஒன்றும், அவ்வூருக்கு அண்மையில் உள்ள திருப்புகலூரில் ஒன்றும், திருவாருரில் ஒன்றுமாக எழுந்தருளுவித்தார். மற்றொரு படிமம் இந்தச் சென்னி வாய்க்கால் ஞாழற் கோயிலில் பிரதிஷ்டையாகியது.

அந்த வாதாபி விநாயகரின் சந்நிதானத்திலே வந்து நின்ற பரமேசுவரவர்மன் கரம் குவித்து மெய்யொடுங்கிக் குரல் குழைய வேண்டினான்: “மதுரமொழி நல்லுமையாள் செல்வரே! அன்று அதர்மத்தை எதிர்த்து இராஜசூய வேள்வி தொடங்குமுன் மகா கணபதியான உம்மைத்தான் முதன் முதலாகப் பூஜை செய்து வணங்கினான் தருமபுத்திரன்; இன்று நானும் அவ்வாறே உமது திருவடி முன் வந்து நிற்கிறேன். அதர்மத்தை அழிக்கும் வல்லமையை எனக்கு அளித்தருள வேணும், தந்தி முகனே!”—தன்னை மறந்த நிலையில் மெல்லக் கண் மூடினான் அவன்.

இந்தச் சமயம், எங்கோ தொலை தூரத்துக்கு அப்பால் யானை ஒன்றின் பயங்கரமான பிளிறில் ஒலி எழுந்து அந்தப் பிரதேசத்தையே கிடுகிடுக்க வைத்தது!

# 67

# கழற்றறிவான்

**கா**ர்காலத்து இருண்ட வானம் குமுறுவது போன்ற பேரோசை! எங்கோ வெகு தூரத்துக்கு அப்பால் இருந்து எழுந்த யானையின் பிளிறல் ஒலிதான் அப்படிக் கேட்டது.

ஒலிகளுக்கெல்லாம் முதல் ஒலியாய், உயிர்களுக் கெல்லாம் மூலாதாரமாய், பொருள்களுக்கெல்லாம் மூலப் பெரும்பொருளாய் விளங்கி அமர்ந்திருந்த வாதாபி கணபதியின் சந்நிதானத்திலே தன்னை மறந்து நின்று கொண்டிருந்த பரமேசுவரவர்மனின் செவிகளிலும் அந்த யானையின் பிளிறல் ஒலி விழத்தான் செய்தது. ஆனால் அப்பேரொலி, வெளியிலிருந்து வந்து இறங்குவதாக அவனுக்குத் தோன்றவில்லை; தன் உள்ளத்திலிருந்தே எழுந்து செவிக் குழியில் நிறைவதாக எண்ணி, அவ்வொலியின் அதிர்ச்சியில் ஏதோ ஓர் இன்பத்தை நுகர்பவன்போல்-அந்த ஒலியிலேயே ஒன்றி ஐக்கியமாகிவிட விழைபவன்போல்-விநாயகரின் அருள் பொழியும் திருமுகத்தைக் கண்ணிமைக் காமல் பார்த்தவாறு நின்றிருந்தான் அவன்.

"விரிந்த பரந்த கடல் 'ஓ' என்ற ஓசையை எழுப்புகிறது. வெள்ளிய சங்கினை எடுத்துச் செவியில் பொருத்தினால் 'ஓ' என்னும் ஒலி கேட்கிறது. இயற்கையாய் ஒலியாய், பிரணவ நாதமாய்ப் பரிணமிக்கிறது. 'ப்ரண' என்றாலே 'பழைய' என்றுதான் பொருள். அதாவது, பழைமைக்கு பழைமை, முதன்மைக்கும் முதன்மை என்பது கருத்து. இப்படிப் பழைமையிலும் பழைமையான, முதன்மையிலும் முதன்மை

யான 'ஓ' என்னும் ஒலியே ஒலிகளுக்கெல்லாம் மூல ஒலியாய், ஒலிகளை உருவாகக் கொண்ட எழுத்துக்களுக்கெல்லாம் உயிர் முதல் எழுத்தாய் நின்று, அவ்வொலியை இயற்கையாக எழச் செய்யும் சங்கின் வடிவாகவும், அதனை உணரவைக்கும் செவியுறுப்பின் உருவாகவும் அமைந்தது. ஒளி வடிவான இறைவன் ஒலி வடிவாகவும் இருக்கிறான். எல்லாவற்றுக்கும் மூல காரணனான அவன், எல்லா ஒலிகளுக்கும் முதல் ஒலியான 'ஓ' என்ற ஒலியின் எழுத்துருவமாகவும் விளங்குகிறான். அவனது அந்த அற்புத ஒலியுருவத்துக்கு 'ஓ' என்னும் எழுத்தைப் போன்றதோர் இன்னொரு வடிவம் என்ன? உடலைச் சுருட்டிப் போட்டுப் படம்எடுத்து நிற்கும் பாம்பைச் சொல்லலாம்; அதேபோல் அதனினும் சிறப்பான இன்னொரு வடிவம் என்ன? நீண்டு சுருண்ட துகிக்கையுடன் கூடிய யானையின் முகமே அதற்குச் சரியான வடிவாய் அமைந்திருக்கிறது. எல்லா உயிரினங்களிலும் பெரிதாக—வலிமை மிக்கதாக—விளங்கும் யானை தன் உணவுக்கென உயிர்க்கொலை செய்யாமல் பசிய தழைகளையும் தாவரத் தண்டுகளையுமே உண்டு தன்பால் அன்பு செலுத்துவோரிடம் தனது வலிமையைக் காட்டாமல் அடங்கியொடுங்கி அன்பு காட்டி அவர்களுக்கு வேண்டும் உதவிகளையெல்லாம் செய்கிறது. இதே போன்றுதான் மூத்த முதல்வராம் முன்னறி நாயகர் ஓங்கார நாதத்தின் எழுத்து வடிவான வேழமுகம் தாங்கி வந்து மனிதர்கள் வேண்டும் வரங்களையெல்லாம் வரையிலாது வாரி வழங்குகிறார். இதோ, இங்கு வீற்றிருக்கும் வாதாபி கணபதியும் எளியேனான நான் வேண்டும் வரத்தை வழங்கியே தீருவார். அவர் அவ்வரத்தை எனக்கு வழங்கச் சித்தம் கொண்டுவிட்டார் என்பதற்கு அறிகுறியாகத்தான் அவரது ஓங்கார நாத ரூபம் என் உள்ளத்திலிருந்து எழுந்து செவிகளில் இறங்கி ஒலிக்கிறது போலும்...''—இவ்வாறு தனக்குள் மந்திர வாசகம் செய்துகொண்டே தன்னில் தான் நின்று லயித்தனவனாய் அந்த வாதாபி கணபதியின் சிறிய

கோயிலை மும்முறை வலம் வந்து கும்பிட்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன் திடுக்குற்றவன்போல் தலைதூக்கிச் சுற்றுமுற்றும் பார்த்தான்.

தொலைதூரத்துக்கு அப்பால் கேட்டுக்கொண்டிருந்த யானையின் பிளிறல் ஒலி இப்போது மிகச் சமீபத்தில் நெருங்கிக் கேட்டது.

இதனால் பரபரப்படைந்த அவன், எதிரே வீற்றிருந்த விநாயகரின் முகத்தை உற்று நோக்கினான். உலகத்தின் ஒலிகளுக்கெல்லாம் மூலாதார சுருதியாய் விளங்கும் அவர் ஒலிப்புலன் அற்ற கட்செவியார்போல் மௌனமாக அமர்ந்திருந்தார்.

பிளிறல் முழக்கம் இப்போது பன்மடங்காகியது. அத்துடன், மரஞ்செடி கொடிகள் முறிந்து சாயும் ஒலியும் சேர்ந்து எழுந்தது.

சடாரென்று திரும்பிய பரமேசுவரவர்மன் அந்த ஞாழற் கோயிலைவிட்டு வெளியே விரைந்து வந்தான்.

இது என்ன ஆச்சரியம்! அதோ, வெறி கொண்ட நிலையில் ஆவேசப் பிளிறலிட்டு அந்தக் காட்டுப் பிரதேசத்தையே அதிரடித்துக்கொண்டு ஓடி வருகிறதே ஒரு கொம்பானை!

வியப்பின் மிகுதியால் வேர் பாய்ந்து நின்று, பயங்கர மூர்க்கத்துடன் தறிகெட்டு ஓடி வரும் அந்த யானையையே விழி புரட்டாமல் பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவர வர்மனின் மனத்தில் ஒரு சந்தேகம் எழுந்தது: 'என் கண்ணெதிரே காணும் இந்தக் காட்சி உண்மையானது தானா? அல்லது இவ்வளவு நேரம் வாதாபி கணபதியின் சந்நிதானத்திலே நின்று அவரது மனமோகன வடிவத்தை நெஞ்சகத்தில் நிறுத்தி வெற்றிவரம் வேண்டி நின்றதால் அதன் உருவெளியாக இவ்வீறார்ந்த காட்சி தென்படுகிறதா''
—அவசரத் துடிப்புடன் கண்களைத் துடைத்து விட்டுக்

கொண்டு இன்னும் சற்றுத் தூரம் ஓடிப்போய் நின்று அந்த யானையைக் கூர்ந்து நோக்கினான் அவன்.

புழைக் கையை வானோக்கித் தூக்கி வளைத்துச் சுழற்றி எதிர்ப்பட்ட மரஞ் செடி கொடிகளையெல்லாம் முறித்துச் சாய்த்து மிதித்துத் துவைத்துக்கொண்டு கோபாவேசத் திமிறலுடன் ஞாழற் கோயிலை நோக்கி வந்துகொண்டிருந்த அந்த வேழம் சடாரென்று திரும்பிச் சென்னி வாய்க்கால் கரைச் சரிவுப் பக்கமாக ஓடத் தொடங்கியது. பரமேசுவர வர்மனும் அதைப் பின்தொடர்ந்து ஓடுபவன்போல் ஓடி வாய்க்கால் கரை மேட்டில் ஏறி நின்றுகொண்டு அந்த யானையை அரக்கப் பரக்கக் கூர்ந்து நோக்கினான்.

'இது என்ன விந்தை! என் பட்டத்து யானை அரிவாரணம்போல் அல்லவா இது தோன்றுகிறது?...காஞ்சி அரண்மனையில் இருந்த என் அன்னையாரைச் சளுக்கியர்கள் சிறைப் பிடித்துக் கொண்டுபோய்ப் பல்லவ அரண்மனைக் கோட்டையில் அடைத்து வைத்திருப்பது போல் இந்த யானையையும் இழுத்துச் சென்று அங்கே கட்டிப் போட்டு வைத்திருந்தார்களே! அங்கிருந்து எப்படி இது வெளியேறி வந்திருக்கு?... ஓ,... இதன்மீது யாரோ பயணம் செய்து வந்ததற்கு அறிகுறியாக அதன் முதுகில் அம்பாரிக் கட்டுகள் தென்படுகின்றனவே?...அப்படியானால் அம்பாரி எங்கே?...அதை எங்கேனும் அடித்துச் சாய்த்து இழுத்தெறிந்து விட்டதோ?'

துள்ளிப் பாய்ந்து மேலும் சற்றுத்தூரம் ஓடிப்போய் நின்ற பரமேசுவரவர்மன் தன் பார்வையை வெகு தீர்க்கமாகச் செலுத்தி நோக்கினான்.

'கண்மண் தெரியாமல் தறிகெட்டு ஓடும் அந்த யானையின் விலாப் பக்கம் ஏதோ வதங்கிய பூமாலைபோல் சரிந்து தொங்கலாடுகிறதே, அது என்ன? அதற்கு அலங்காரமாகச் சூட்டிய மாலையாக இருக்குமோ?... அல்லது அம்பாரியில் வந்தவர் அணிந்திருந்த பட்டுத்துகிலாக

இருக்குமோ?... இல்லை, இல்லை; அது ஒரு மனித உருவமாகத் தோன்றுகிறது! அதிலும் ஒரு பெண் உருவம்போலவே தோன்றுகிறது!... யார் அந்தப் பெண்மணி?'

இயற்கையாகவே அவனிடம் அபரிமிதமாகக் குடி கொண்டிருந்த மனிதாபிமான உணர்ச்சியும், இடுக்கண் களையும் இரக்க சிந்தையும் இப்போது பொங்கிப் பீறிட்டுவிடவே, தன்னைமீறிய துடிப்புத் துணிவுடன், தான் யார், தனது நிலை என்ன என்பவற்றையும் மறந்து — வீசியெறிந்த வேலைப்போல் அந்த யானையை நோக்கி விரைந்தோடினான்.

எட்டுத் திக்கும் எதிரொலி கிளம்ப ஒரு பயங்கரப் பிளிறல்!

யானைப் பிளிறல்போல் எழுந்து முழங்கிய அந்த ஒலி உண்மையில் யானையின் பிளிறல் அல்ல; பரமேசுவரவர்மன் தான் அப்படி ஒரு விசித்திர ஒலியை எழுப்பிக்கொண்டு ஓடினான்.

வெறிகொண்ட அந்த யானை முன்னிலும் வேகமாக ஓட ஆரம்பித்தது. பரமேசுவரவர்மன் மீண்டும் அதே போன்ற பயங்கரப் பிளிறல் ஓசையை எழுப்பினான். மூர்க்கா வேசத்துடன் ஓடிக்கொண்டிருந்த அந்த முரட்டு யானை, ஏதோ பாறைமீது மோதிக்கொண்டாற்போல் சடாரென்று சுழன்று திரும்பியது.

"அரிவாரணா!..."

மத்தகத்தை மேலுயர்த்தி வளைத்துத் தன் முறக்காது களை முன்னால் சாய்த்துக் கருங்குன்றம்போல் ஆடாது அசையாது நின்றது அரிவாரணம்.

அந்தச் சென்னி வாய்க்காலின் மேற்குப் புறமாகக் 'கூற்றன் வாய்' என்னும் பெயருடன் அமைந்திருந்த ஒரு மதகு மேட்டின்மேல் ஏறி நின்ற பரமேசுவரவர்மன் தன் இரு கைகளையும் வாயில் வைத்துக் குவித்து முன்போலவே விசித்திர ஒலியொன்றை எழுப்பினான். அது வெறும் ஒலி

நீட்டலாக இல்லை; ஏதோ ஒரு மறுமொழியில் சில சொற்களைச் சேர்த்துக் கூவுவதாகவே கேட்டது.

ஆமாம்; அது ஒரு மொழிதான். அறுபத்து நான்கு கலை ஞானங்களில் ஒன்றான பைமீல வாதம் என்னும் கலையில் நன்கு தேர்ச்சியடைந்திருந்த பரமேசுவரவர்மன், விலங்குகள் பறவைகள் முதலானவை கழறும் மொழிகளை அறியும் திறனும், அஃவற்றுடன் பேசும் வல்லமையும் பெற்றிருந்த தாலேயே இப்போது யானைக்குரிய மொழியில் அப்படி யொரு விசித்திரக் குரல் எழுப்பிக் கூவினான்.

தொலைதூரத்துக்கு அப்பால் குன்றென நின்று கொண்டிருந்த களிறு அவனுடைய கூப்பாட்டுக்கு மறுமொழி தருவதுபோல் தன் இரு கால்களையும் மேலே உயர்த்திப் பரிதாப ஓலமாக ஒரு நீண்ட பிளிறலிட்டது.

வலக் கையை ஆட்டிப் பெருங் குரலெடுத்துப் பிளிறிய பரமேசுவரவர்மன் மதகு மேட்டின் மேலிருந்து குதித்திறங்கித் தலைதெறிக்க ஓடினான். மறுகணம், அந்த யானையும் மலையுச்சியிலிருந்து உருட்டித் தள்ளப்பட்ட பாறைபோல் அவனை நோக்கி ஓடி வந்தது.

## 68

# யுக மலர்கள்

மஞ்சள் நீராடிய மாலைக் கன்னி தான் உடுத்தியிருந்த ரதிவர்ணத் துகிலைக் களைந்து உலர்த்துவதற்காக விரித்து நீட்டிப் போட்டாற்போல் சலசலத்து ஓடிக்கொண்டிருந்த சென்னி வாய்க்கால் கரையோரம் கவலையே வடிவாக அமர்ந்திருந்தான் பரமேசுவரவர்மன். அவனது மடியிலே வதங்கிய பூச்சரமாகத் துவண்டு கிடந்தாள் ஆந்திர இளவரசி உத்தமசீலி. சற்றுத் தொலைவில் 'ஆர்' மரமொன்றின் அடியிலே அமைதியின் மறு உருவாக நின்று கொண்டிருந்தது அரிவாரணம். அதற்குச் சிறிது அப்பால் அவன் ஏறி வந்த குதிரையும் நின்றிருந்தது.

மாலைப்போது மறைவதற்குமுன் புவனத் தாயைத் தரிசித்துவிட வேண்டுமென்பதற்காகவோ என்னவோ அவசர அலங்கோலத்துடன் வானக் கூரையில் தோன்றி விட்டிருந்த அரை வட்ட நிலா தன் வெளிறிய முக பிம்பத்தைச் சென்னி வாய்க்காலின் தெள்ளிய நீர்ப் பரப்பிலே மிதக்கப் போட்டு அதை உற்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தது. அந்த வெளிறிச் சாம்பிய நிலவைப்போலவே தன் மடியில் சாய்ந்து கிடந்த உத்தமசீலியின் களையிழந்த முகத்தைக் கலங்கிய கண்களுடன் குனிந்து பார்த்துக் கொண்டிருந்தான் பரமேசுவரவர்மன்.

அவள் பிரக்ஞை இழந்துவிட்டிருந்தாள். அவளுடைய சங்குநிற மேனியெங்கும் குருதிக் கோலம் உறைந்திருந்தது.

அவளது உள்ளங்கையிரண்டும் செக்கச் சிவந்த செம்பருத்திப் பூக்கள்போல் இரத்தம் கட்டிக் கொப்புளித்து வீங்கியிருந்தன.

'அன்றொரு நாள், பூவுலக அழகையெல்லாம் கவிபாடிக் காட்ட வந்த வானுலக தேவதைபோல் அந்த ஜினாலயத்துக் குளக்கரைப் படியில் அமர்ந்திருந்தாளே, அவ்வெழிலோவியப் பாவையா இவள்? வையத்தின் அவலத்தையெல்லாம் வாரிக் கொட்டி வார்த்தெடுத்த முற்றுப் பெறாச்சிலை புழுதியில் வீழ்ந்து கிடப்பதுபோல் அல்லவா இப்போது இவள் தோற்றமளிக்கிறாள்.'

பெருமூச்சு விட்டு நிமிர்ந்த பரமேசுவரவர்மன் பக்கவாட்டில் சாய்ந்து ஓடை நீரில் ஒரு கை அள்ளி அவளது வெளுத்த முகத்தில் தெளித்து வாயிலும் கொஞ்சம் புகட்டினான். அப்போதும் அவள் மூர்ச்சை தெளியாமல் கண் மூடியே கிடந்தாள்.

'சளுக்கிய விக்கிரமாதித்தனின் அன்புக்கும் பரிவுக்கும் உடையவளாய் —அவனது அழைப்பின் பேரில் —இந்த நாட்டுக்கு வந்து, சகலவிதமான பாதுகாப்புக்களுடனும் சுக சௌகரியங்களுடனும் இலவந்திகைப்பள்ளியில் தங்கியிருந்த இவளுக்கு இந்தக் கதி ஏன் ஏற்பட்டது? எங்கே போக-யாரைக் காண-இவள் பயணப்பட்டு வந்திருப்பாள்? இந்த யானையின் முரட்டுக் குணத்தையும் அடங்காத போக்கையும் நன்கு அறிந்தவனான சளுக்கியத் தளபதி வில்வேலி இதன்மீது இவள் பயணம் செய்ய எப்படி அநுமதித்தான்? தெரியாமல் இந்தத் தவற்றை அவன் செய்து விட்டிருப்பானா? அல்லது தெரிந்தே திட்டமிட்டு ஏதோ சதி எண்ணத்துடன் இவளைப் பழி வாங்கவேண்டும் என்பதற்காக இவ்வாறு பயணப்பட வைத்திருப்பானா? அப்படியானால் அதன் காரணம் என்னவாயிருக்கும்?"

பரமேசுவரவர்மனின் உடல் இலேசாக அதிர்ந்தது.

"என்னை இவள் காதலிக்கிறாள் என்பதையும், அதனால் என்னைக் கண்டுபிடிப்பதற்காகச் செய்த

பெரியதொரு முயற்சியைத் தகர்த்துவிட்டாள் என்ற விவரத்தையும் தளபதி வில்வேலி அறிந்து இவளை இந்த வகையில் ஒழித்துக் காட்டத் துணிந்தானோ?"

அவன் சட்டென்று நிமிர்ந்து அங்கே அமைதியாக நின்றிருந்த அரிவாரணத்தை ஏறிட்டுப் பார்த்தான்.

'என்னைத் தவிர யாருக்குமே அடங்காத இந்த யானை, இவளை அம்பாரியில் அமர்த்தி அனுப்பும்வரையில் எப்படிச் சும்மாயிருந்தது? அப்புறம் ஏன் இப்படி மூர்க்காவேசம் கொண்டு மிரண்டு ஓடி வந்தது? அன்றொரு நாள் அந்தக் குளக்கரையில் என்னைச் சந்தித்தபோது, "கோழை போல் மறைந்து வாழும் நீங்கள் வீரனாக வெளிவரவேண்டும்" என்ற பொருள்பட என்னிடம் சொன்னாளே, அதன் உட்பொருள் என்ன? சளுக்கிய விக்கிரமாதித்தனையும் அவனுடைய சாம்ராஜ்ய விஸ்தரிப்புச் செயலையும் விரும்பாமலிருந்தால் தானே இவளால் அப்படிச் சொல்லமுடியும்? தன் சொந்தப் பெரிய தந்தையை இவள் திடீரென்று எதிர்க்கவும் வெறுக்கவும் காரணம் என்னவாக இருக்கும்? என்மீது கொண்ட காதலினால் இவளது மனம் அவ்வாறு மாறி விட்டதா? அல்லது அத்துடன் வேறு காரணங்களும் இருக்குமா? இதையெல்லாம் தெரிந்து கொண்டுதான் வில்வேலி இவளை இத்தனை பயங்கரமாகப் பழிதீர்க்க முனைந்தானோ?'

குழம்பித் தவித்த மனத்துடன் அவளைக் கூர்ந்து நோக்கினான் பரமேசுவரவர்மன்.

'இவளுடைய நிலையைப் பார்த்தால் இப்போதோ இன்னுங் கொஞ்ச நேரத்திலோ என் மடியிலேயே தன் ஆவியைப் பிரித்துக் கொள்வாள்போல் இருக்கிறதே! இறைவா, இது என்ன சோதனை!'

அவனுக்கு நெஞ்சு வலித்தது. கண்கள் கலங்கி நீர் கோத்தன. மெல்லக் குனிந்து அவளது மென்மையான நெற்றியில் தன் நெற்றிபட வைத்து, "இளவரசி!" என நடுங்கும்

குரலில் அழைத்தான். அவனுடைய விழிகளில் தளும்பியிருந்த கண்ணீர், கூம்பிய காயாம்பூ மலர்களாக மூடிக் கிடந்த அவள் கண்ணிமைப் போர்வைமேல் வழிந்து நிறைந்தது.

அறுத்துப் போட்ட மாதவிக் கொடிபோல் அசைவற்றுத் துவண்டு கிடந்த அவளது பூப்போன்ற மென்னுடல் மெல்ல அசைந்ததைக் கண்டு சட்டென நிமிர்ந்தான் பரமேசுவர வர்மன்.

வெளுத்துக் கிடந்த அவள் வதனத்தில் சிறிதளவு ஜீவகளை படர்ந்தது. வறண்ட அதரங்களில் ஈரம் சுரந்தது. இளங்காற்றில் அசையும் நாணற்பூச் செண்டுபோல் அவளுடல் மெல்ல அசைவுற்றது. வைகறையில் முகையவிழும் நீலக்குவளை மலர்களை நயனங்கள் மிருதுவாகப் பிரிந்தன.

அவள் அவனைப் பார்த்தாள்.

"இளவரசி! இதோ, நீங்கள் விரும்பிய கோலத்தில் வெளிப்பட்டு வந்திருக்கிறேனே, என்னைத் தெரிய வில்லையா?"— ஆழ்ந்த அன்பின் குழைவோடு அவள் முகத்துக்கு நேரே சாய்ந்து புன்முறுவலுடன் கேட்டான் பரமேசுவரவர்மன்.

அவள் உடல் அதிர்ந்தது. வியப்பும் மிரட்சியுமாக இமைகளைப் படபடவெனத் தட்டிக்கொண்டே துடிப்புற்று எழுந்திருக்க முயன்றவள், எதிரே நின்றிருந்த அரிவாரணத்தைப் பார்த்துப் பயந்து நடுங்கியவளாய், முறிந்த அல்லித் தண்டுபோல் மீண்டும் அவன் மடியிலேயே சாய்ந்துவிட்டாள். திரும்பி வந்த அவளது நினைவும் உணர்வும் மறுபடி கழன்று போய்விட்டன.

திருமஞ்சனமாடி நின்ற மாலைக்கன்னியை அந்தப்புரத் துக்கு அனுப்பிவிட்டு அவளுக்குக் காவல் நிற்க வந்த இருட்கிழவியின் கரிய முந்தானையிலே நித்திலப் பூக்களை வாரியிறைத்த நிலாமடந்தை பாலாபிஷேகமும் செய்யத் தொடங்கினாள்.

சிந்தனையில் லயித்தவனாய் ஆந்திர இளவரசியின் வாடிச் சாம்பிய வதனத்தையே பார்த்துக்கொண்டிருந்த பரமேசுவரவர்மன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவன்போல் பெருமூச்சு விட்டு நிமிர்ந்து சுற்றுமுற்றும் பார்த்தான். பிறகு தன் மடியில் நினைவிழந்து கிடந்த அவளை வாரியெடுத்து மார்பில் சாய்த்தவாறு எழுந்து அரிவாரணத்தை நோக்கி நடந்தான்.

"ஐயா!"

துணுக்குற்றுப் பின்னால் திரும்பினான் பரமேசுவர வர்மன். சோனக (அராபிய) நாட்டுமிளகு வியாபாரிகள் போல் தோற்றமளித்த இருவர் தமக்குள் பலத்த சர்ச்சையிட்டுக் கொண்டே அவனை நோக்கி ஓடி வந்தனர்.

அவர்களில் ஒருவன் அவசரமாக முன்வந்து, "ஏனய்யா, பல்லவ மன்னர் பரமேசுவரவர்மரின் ஆட்சிக் காலத்திலே ஒரு மரக்கால் மிளகு ஐந்து மாடைக் காசுக்கு விற்றது என்கிறேன். இவன் ஏழு மாடைக் காசு என்கிறான். எங்களில் யார் சொல்வது சரி, ஐயா?" என்று பணிவு கலந்த ஆத்திரத்துடன் கேட்டான்.

புன்முறுவல் பூத்த பரமேசுவரவர்மன், "இப்போது ஒரு மரக்கால் மிளகு என்ன விலை?" என்று வினவினான்.

இவ்வளவு நேரம் அவனையும் அவன் அணைப்பில் துவண்டு சாய்ந்து கிடந்த உத்தமசீலியையும் துருதுருவெனப் பார்த்துக்கொண்டிருந்த இன்னொரு வியாபாரி சட்டென்று முன்னால் வந்து, "ஆறு மாடைக் காசு ஐயா!" சலிப்புடன் கரகரத்தான்.

அவ்விருவரையும் கூர்ந்து நோக்கி மெல்லச் சிரித்த பரமேசுவரவர்மன் அமைதியாகச் சொன்னான்; "ஏழு மாடைக் காசு என்பவர் 'சளுக்கிய மன்னன் வாழ்க' என்று கோஷமிடட்டும்; ஐந்து மாடைக் காசு என்பவர் 'பல்லவ மன்னன் வாழ்க' என்று கோஷிக்கட்டும்; இப்படிக்

கோஷித்தால் உங்களிடையே வித்தியாசப்படும் அந்த ஒரு மாடைக் காசு ஒழிந்து போய்விடும்!"

அவ்விரு வியாபாரிகளும் ஒருவரையொருவர் அர்த்த புஷ்டியுடன் பார்த்து விழித்தனர். அதைக் கடைக்கண்ணால் கவனித்துக்கொண்ட பரமேசுவரவர்மன், அரிவாரணத்தின் பக்கம் திரும்பி அதன் காதில் ஏதோ சொன்னான். உடனே உற்சாகமாகப் பிளிறிச் சுழன்ற அந்த யானை மெல்ல முழந்தாளிட்டது. ஒரு கையால் உத்தமசீலியை அணைத்துச் சாய்த்துக்கொண்டு மறு கையால் யானையின் செவியைப் பற்றி ஏறி பிடரியில் அமர்ந்தான். எழுந்து நின்ற அரிவாரணம் சற்றுத் தொலைவிலிருந்த அவ்விரு வியாபாரிகளையும் பார்த்துப் பயங்கர உறுமலிட்டுக்கொண்டே விரைந்து நடந்தது.

அதைப் பின் தொடர்ந்து குதிரையும் சென்றது.

பயப்பிராந்தியுடன் பின்னால் ஓடி வாய்க்கால் கரைமேட்டில் ஏறி நின்ற சோனக வியாபாரிகளில் ஒருவன் தன் இடையில் சுருட்டிச் செருகி வைத்திருந்த ஓவியக் கிழியொன்றை அவசரப் பரபரப்புடன் எடுத்துப் பிரித்து நிலவொளியில் வைத்து உற்று நோக்கினான். அன்றொரு நாள் பல்லவபுரம் இலவந்திகைப்பள்ளியில் சளுக்கியத் தளபதியின் கட்டளைக்கிணங்கிப் பரமேசுவரவர்மன் தன் உருவத்தை ஓவியமாகத் தீட்டி உத்தமசீலியிடம் கொடுத்து விட்டு வந்தானே, அந்த ஒரு கண் அழிந்த ஓவியம்தான் அதிலே மங்கலாகத் தென்பட்டது!

# 69

## மதுவில் மிதந்த மனம்

பழச்சாறு, அரிசி, தாதகி மலர் முதலானவற்றிலிருந்து இறக்கி வாசனை ஏற்றப்பட்ட செந்நிற மதுவைச் சுவைத்துப் பருகிக் கிண்ணத்தை ஒருபுறமாக உருட்டிவிட்டு நிமிர்ந்த சளுக்கிய இளவரசன் விநயாதித்தன், கமறிக் காந்தலெடுத்த தன் தொண்டையைச் செருமிக்கொண்டே ஆசனத்தின் இடது பக்கம் சாய்ந்தவாறு, "அது சரி, தளபதியாரே! அந்தச் சமண முனிவர் அகளங்கர் உயிரோடு இருக்கிறார் என்று நாம் கேள்விப்பட்டோமே, உண்மைதானா? அவ்விஷயம்பற்றி நீங்கள் மேலும் ஏதாவது விவரம் அறிந்தீர்களா?" என்று வெகு அக்கறையாகக் கேட்டான்.

'தேட் கடுப்பன்ன நாட்படு தேறலை' உறிஞ்சிப் பருகிச் சுகம் காண்பதில் கவனமாயிருந்த தளபதி வில்வேலி தம் சிவந்த கண்களை உருட்டிப் புரட்டி அவனை வெறித்துப் பார்த்துக் கொண்டே குழறித்துவளும் குரலில் கூறினார்: "இன்று மாலை நானே அந்தத் திரமிள சமண சங்கத்துக்குப் போய் இருந்தேன். அங்கே, ஓர் ஈ, எறும்புகூட என் கண்ணில் தென்படவில்லை.

புருவச் சதைகளுக்குமேல் செருகிச் சுழன்ற தன் சிறிய விழிகளைக் குரூரமாக மலர்த்திப் புஜங்களை முறுக்கிக் கொண்டு திரும்பிய விநயாதித்தன், "அதாவது?..." என்று அடித் தொண்டையில் இழுத்தான்.

"சமந்தபத்திரர், அகளங்க அடிகள் உட்பட அங்கிருந்த சமண முனிவர்கள் அனைவரும் வேறெங்கோ இடம் பெயர்ந்து போய்விட்டார்களாம்!"

"எங்கே போய் இருப்பார்கள்?"

அதுதான் எனக்கும் தெரியவில்லை, இளவரசே! அந்த விஷயத்தை அறிந்து வரும்படி நம் ஒற்றர்கள் சிலரை அனுப்பியிருக்கிறேன்."

"நீங்கள் சொல்வதைப் பார்த்தால் அந்தச் சமண முனிவர்களுக்கு நம் திட்டங்கள், நோக்கங்கள் அனைத்தும் தெரிந்துவிட்டன என்றல்லவா ஆகிறது?"

"அதில் சிறிதும் சந்தேகமில்லை. அப்படி அவர்களுக்குத் தெரியாமல் இருந்திருந்தாலும், நம் ஆந்திர இளவரசி உத்தமசீலியே அவர்களிடம் அவ்விவரங்களைச் சொல்லி எச்சரிக்கை செய்துவிட்டிருப்பார்."

"அவ்வளவு தூரத்துக்கு அவள் துணிந்து விட்டாளா?"

"துணிந்துவிட்டார் என்று நிச்சயமாகத் தெரிந்துதானே இன்று காலை நானும் அந்தக் காரியத்தைச் செய்யத் துணிந்தேன்!" என்று அலட்சியமாகச் சிரித்துக் கூறிக் கொண்டே பொற்கிண்ணத்தில் யவன நாட்டு மதுவை வெறியுடன் ஊற்றி நிறைத்தார் வில்வேலி.

"தாங்கள் கேட்டுக்கொண்டபடி இந்தப் பல்லவபுரம் அரண்மனையில் அவள் தங்கியிருக்க மறுத்ததற்காக அல்லவா அத்தனை பெரிய தண்டனையை அளித்ததாக முன்பு சொன்னீர்கள்?" என்று முகத்தைச் சுளித்துக் கேட்டான் விநயாதித்தன்.

"ஆம், இளவரசே! முதலில் நாம் திட்டமிட்டவாறு இந்த அரண்மனையில் ஆந்திர இளவரசியை ஒரு சிறைக்கைதி போல் அடைத்து வைப்பதற்காகத்தான் அப்படியொரு நைச்சியமான வேண்டுகோளை வெளியிட்டேன். ஆனால் நம்முடைய உள்நோக்கத்தை அவர் எப்படியோ புரிந்து

கொண்டு அந்த வேண்டுகோளை ஏற்க அடியோடு மறுத்து விட்டார். அதற்குமேல் அவரை இலவந்திகைப் பள்ளியில் இருத்தி வைப்பது பல வகையிலும் நமக்குப் பாதகமாகலாம் என்று தோன்றியது. அத்துடன் அவருடைய சிவிகை தூக்கியான நாகோதரன் நமது கண்காணிப்பிலிருந்து தப்பிச் சென்றுவிட்ட சேதி அந்த எண்ணத்தை மேலும் உறுதியாக்கியது. எனவேதான்...” —மீதமுள்ள சொற்களை மமதையான ஒரு விஷமச் சிரிப்பினால் நிறைவாக்கி முடித்துவிட்டுக் கிண்ணத்தில் நுரைத்துப் பொங்கிய மதுவை எடுத்து ஒரே மிடறில் பருகித் தீர்த்தார் தளபதி வில்வேலி

முந்திரிப் பழம்போன்ற தன் மூக்கின் முனையை மெல்ல வருடியவாறு ஏதோ சிந்தனையில் இருந்த விநயாதித்தன் நிதானமாகத் திரும்பி, “ஏனய்யா! நம்முடைய நோக்கங் களையும் திட்டங்களையும் அவள் புரிந்துகொண்டதால் தான் இந்த அரண்மனையில் தங்கியிருக்கச் சம்மதிக்கவில்லை என்பது சரி; ஆனால் பெருவளநல்லூருக்குப் போக விரும்பிய காரணம் என்னவாக இருக்கும்?'' என்று புருவங்களை மேலுயர்த்திக் கேட்டான்.

இந்தக் கேள்விக்கு உடனே மறுமொழி கூறாமல், மதுவிலே நனைந்து தொங்கிய தம் அரிவாள் மீசையைத் துடைத்து ஒதுக்கி விட்டுக்கொண்டு மௌனமாயிருந்த வில்வேலி சில விநாடிகளுக்குப் பின், “நானும் அதுபற்றிப் பலவாறாக யோசித்தேன்; சரியான காரணமாக எதுவும் புலப்படவில்லை” என்று முணுமுணுத்தார்.

“பெருவளநல்லூரிலிருக்கும் சேதியக் கலைஞரின் இல்லத்துக்குத்தானே அவள் போக விரும்பினாள்?”

‘ஆம்’ என்று தலையசைத்தார் தளபதி வில்வேலி.

“அந்த மனிதரைப்பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?”

“காலஞ்சென்ற நம் ஜன்மப் பகைவன் நரசிம்மவர்ம னால் வாதாபியிலிருந்து அழைத்து வரப்பட்ட சளுக்கியப் பிரஜையான அவர் ஒரு கற்பனாவாதி. கல்லைச் செதுக்கிச்

சிலைகள் சமைப்பதும், மலையைக் குடைந்து கோயில்கள் அமைப்பதும்தான் உலகத்தில் மனிதன் சாதிக்கக்கூடிய மகத்தான காரியங்கள் என மமதையோடு எண்ணிக் கொண்டிருப்பவர். இத்தகைய அசட்டுக் கலைப் பித்துக்கொண்ட அவருக்கு நாட்டுப்பற்று, மதப்பற்று, மொழிப் பற்று என்பவையெல்லாம் வெறும் சுண்டைக்காய்கள். தமது கலை முயற்சிகளுக்கு யார் வந்து ஆதரவு தந்தாலும் அவர்களை 'இந்திரன், சந்திரன்' என்று போற்றித் துதிபாடத் தயங்காதவர். மொத்தத்தில் அவர் ஒரு பரிதாபத்துக்குரிய பிரகிருதி."

"அந்த அசட்டுக் கலைப் பித்தரிடம் காரியக்காரியான ஆந்திர இளவரசி அத்தனை மதிப்பும் நம்பிக்கையும் கொண்டு அவரது இல்லத்தில் போய் இருக்க விரும்பியதன் நோக்கம் என்ன? நம்முடைய திட்டங்களைத் தெரிந்து கொண்ட அவள் நேரே தன் சொந்த நாட்டுக்கு அல்லவா ஓடிப் போக முயன்றிருக்க வேண்டும்?"

"நானும் இம்மாதிரியான ஒரு கேள்வியை எனக்குள் எழுப்பிப் பார்க்கத் தவறவில்லை, இளவரசே! இந்தக் கேள்விக்கு நான் ஊகித்துக் கொண்ட பதில் இதுதான்: "மாமல்லபுரத்திலே சேதியக் கலைஞர் பரவாதிமல்லரைக் கொண்டு கணேசர் கோயிலொன்றை எடுப்பிக்கச் செய்த நரசிம்ம பல்லவன் அது நிறைவாகு முன்னே இறந்து போனான். அவனுக்குப் பின் அந்தக் கோயில் இன்றுவரை முழுமை பெறாமல் மூளியாகவே கிடக்கிறது. அதனைத் தம் வாழ்நாளைக்குள் எப்படியாவது நிறைவாக்கி முடித்துவிட வேண்டும் என்ற ஒரே இலட்சியத்துடன் இருந்து வருகிறார் பரவாதிமல்லர். இந்த விவரத்தை அறிந்த ஆந்திர இளவரசி அவ்வழகிய கற்கோயிலை ஜீனதேவருக்குரிய சமண ஜீனாலயமாக மாற்றி முடிக்கப் பெரிதும் விருப்பம் கொண்டு அதற்குத் தேவையான எல்லா உதவிகளையும் தானே முன் வந்து செய்வதாக அவரிடம் தெரிவித்தார். ஆனால்

அவருடைய அந்த விருப்ப விண்ணப்பத்தைச் சேதியக் கலைஞர் அப்போதைக்கு ஏற்கவும் இல்லை, இயலாதென மறுக்கவும் இல்லை. எனவே, தாம் இந்த நாட்டுக்கு வந்த மூல இலட்சியம் நம்மால் சிதைந்து போனதால், அந்த முற்றுப்பெறாக கணேசர் கோயிலையாவது சமணக் கோயிலாக மாற்றி முடிக்க முயன்று பார்க்காமலே என்ற நோக்கத்துடன் அவர் பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்தில் போய்த் தங்கியிருக்க முடிவு செய்திருப்பார் என்று எனக்குத் தோன்றுகிறது."

"எனக்கென்னவோ இது சரியான காரணமாகப் படவில்லை..." என்று முகத்தைச் சுளித்து மோவாயைத் தடவிவிட்டுக்கொண்ட விநயாதித்தன் ஒரு கண யோசனைக்குப் பின், "ஏனய்யா! அந்தச் சேதியக் கலைஞருடன் ஓவியம் பயிலும் மாணவன் ஒருவன் அவருடனேயே இருப்பதாகவும், அவனைக் கொண்டுதான் பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனின் உருவ ஓவியத்தை வரைந்து வாங்கியதாகவும் முன்னொரு முறை சொன்னீர்களே, அவன் இப்போது அங்கேதானே இருக்கிறான்?" என்று கரகரத்த குரலில் வினவினான்.

"அத்தியந்தகாமன் என்ற அந்த அப்பாவி ஓவியனை தானே கேட்கிறீர்கள்? அவனுக்கு அச்சேதியக் கலைஞரின் இல்லத்தை விட்டால் வேறு போக்கிடம் இல்லை!... ஏன் இப்படிக் கேட்கிறீர்கள் இளவரசே?"

"பல்லவ மன்னனின் உருவ ஓவியத்தை வரைந்து கொடுக்க அவ்வோவியனை வரவழைக்கலாம் என்ற யோசனையை முதலில் தெரிவித்தவள் உத்தமசீலிதானே?"

"ஆமாம், அதனால் என்ன?"

"அவன் அங்கு இருப்பதையும், ஆந்திர இளவரசி அவ்விடம் செல்ல விரும்பியதையும் இணைத்து உங்கள் சிந்தனைக்கு வேலை கொடுத்துப் பார்த்தீர்களா என்று கேட்கிறேன்!"

வில்வேலி இதைக் கேட்டுக் குதிரை கனைப்பதுபோல் உரக்கச் சிரித்துக்கொண்டே வெகு அலட்சியமாகச் சொன்னார்; "சற்றுமுன் சுவைத்துப் பருகிய சோம பானம் இளவரசரின் மூளையை இவ்வளவு சீக்கிரம் இத்தனை அருமையாகச் சாணை பிடிக்கத் தொடங்கிவிடும் என்று நான் எதிர்பார்க்கவில்லை; மிக்க மகிழ்ச்சி! ஆனால், என்னுடைய மூளைக்கு அவ்வளவு வேலை கொடுத்து அதைச் சிரமப்படுத்த நான் எப்போதுமே முயலுவதில்லை. எனவே தான், ஆந்திர இளவரசியைப்பற்றிய பிரச்னைக்கு எளிதானதொரு முடிவைத் தேடிப் பிடித்து அதைச் செயல்படுத்தியும் விட்டேன்."

"நீங்கள் செய்த அந்தப் பயங்கரக் காரியத்தை அவளுடைய தந்தையான விஷ்ணுவர்த்தனர் கேள்விப் பட்டால் என்னென்ன விபரீதங்கள் விளையும் என்பதை யாவது சிந்தித்துப் பார்த்தீர்களா?" என்றே சற்றே காரமான குரலில் கேட்டான் விநயாதித்தான்.

வில்வேலி இப்போதும் அதே அலட்சியச் சிரிப்புடன்தான் பதில் சொன்னார்: "விஷ்ணுவர்த்தனருக்கு இவ்விஷயம் எப்படியும் தெரியத்தான் போகிறது. ஆனால், அதற்கு நாம் பொறுப்பாளிகளல்லர் என்று காட்டிக் கொள்ளவே அந்த வெறிகொண்ட யானையை வைத்து ஆந்திர இளவரசியின் பிரச்னைக்கு முடிவு கட்டினேன்."

"அவர் உங்கள் நாடகத்தை நம்பவேண்டும்!"

"அவரை நம்பும்படி செய்வதற்கு ஏற்ற சாட்சிகளாகப் பயன்படுத்தத்தான் ஆந்திர இளவரசி யானைமீது பயணப்படும்போது அவருடைய சிவிகை தூக்கிகளை அருகிலேயே நிறுத்தி வைத்திருந்தேன்! நாமும் நம்மைச் சார்ந்தவர்களும் சொன்னால்தானே விஷ்ணுவர்த்தனர் நம்பமாட்டார்? அவரே தம் மகளுக்காக நியமித்து அனுப்பிய பணியாட்கள் சொல்லும்போது அதை அவர் நம்பித்தானே ஆகவேண்டும்?"

வியப்புடன் அவரை விழித்து நோக்கிய விநயாதித்தன் இரகசியக் குரலில் கேட்டான்: "உத்தமசீலியை ஏற்றிக் கொண்டு அரிவாரணத்தைச் செலுத்திச் சென்ற யானைப்பாகனும், அந்த யானைக்கு முன்னால் பல்லவ நந்திக் கொடியை உயர்த்திக் காட்டிக்கொண்டு போன குதிரை வீரனும் திரும்பி வந்துவிட்டார்களா ஐயா?"

"நான் சொல்லிக் கொடுத்தபடியே காரியத்தை வெற்றிகரமாக அவர்கள் முடித்துவிட்டுத் திரும்பி வந்தும் சேர்ந்து விட்டார்கள்! சளுக்கிய வராகக் கொடியைக் காட்டியதும் அந்தப் பொல்லாத யானை மிரண்டு ஓடிய பயங்கரச் சம்பவத்தை அவர்கள் விளக்கிச் சொன்னபோது நானே சற்று ஆட்டம் கண்டுவிட்டேன்!" என்று வன்மம் கலந்த பெருமையுடன் சொன்னார் வில்வேலி.

"இதெல்லாம் சரிதான்; ஆனால் என் தந்தையாரின் அநுமதியின்றி—அவருக்குத் தெரியாமலே—இவ்வளவு பெரிய காரியத்தை நீங்கள் செய்யலாமா?"

"ஓ!... சளுக்கிய மாமன்னர் விக்கிரமாதித்தரின் சாம்ராஜ்ய விஸ்தரிப்புக்குத் தேவையெனக் கருதி அவருடைய சொந்த மைந்தரையே நான் கொலை செய்தாலும் அதை அவர் மகிழ்ச்சியுடன் வரவேற்று என்னைப் பாராட்டுவார் என்பது எனக்கு நன்றாகத் தெரியும் இளவரசே!" என்று ஆணவச் சிரிப்போடு கூறித் தம் எதிரிலிருந்த மதுக் கிண்ணத்தை வீசியெறிந்தார் வில்வேலி.

# 70

# கறுப்புக் கனவு

**பா**றை போல் முகம் இறுகிக் கறுக்க 'உர்' ரென்று உட்கார்ந்திருந்த விநயாதித்தன் எதையோ நினைத்துக் கொண்டவன்போல் சடக்கெனத் தலைதூக்கி, "ஆமாம்; பழையாறைச் சோழர் நம்முடன் கூட்டுச் சேர்ந்திருப்பதாக வும் அவருடைய மகளை எனக்கு மணம் செய்து வைக்கப் போவதாகவும் சொன்னீர்களே, அந்த விஷயங்கள் என்ன ஆயின?" என்று மிகவும் அக்கறையாக விசாரித்தான்.

"அவை முற்றும் முடிவான விஷயங்கள் தாம் இளவரசே! அந்த மனிதரின் கூட்டுறவால்தான், தலைமறைவாயிருக்கும் பரமேசுவரவர்மனைப்பற்றியோ, இந்த அரண்மனைக் கோட்டைச் சிறையிலிருந்து தப்பியோடி விட்ட கோவிந்தவர்மனைப்பற்றியோ நாம் கவலைப்படாமல் ஓரளவு தைரியமாக இருக்கிறோம். இன்னும் சில திங்கட்களில் பல்லவ நாட்டையும் பாண்டிய நாட்டையும் ஒரே குடையின் கீழ் ஒன்றாக இணைத்து அதன் ஏக சக்கராதிபதியாக உங்களுக்கு முடிசூட்டிப் பழையாறைச் சோழரின் மகளையும் மணம் செய்து வைத்து, அரசியல் அநுபவமுள்ள அந்தச் சோழச் சிற்றரசரையே துணையாக அமர்த்தி ஆட்சி நடத்தும்படி ஏற்பாடு பண்ணிவிட்டால் அப்புறம் நமது வராகக்கொடியை அசைக்க யாராலும் முடியாது. மாமன்னர் விக்கிரமாதித்தரின் இப்போதைய திட்டம் இதுதான்.

இந்த விவரங்களைக் கேட்டு உற்சாக மகிழ்ச்சியுற்ற விநயாதித்தன் கம்பீரமாக நிமிர்ந்து, "இவ்வளவு பெரிய

திட்டங்களை வைத்துக்கொண்டு என் அருமை மாதுலரான பழையாறைச் சோழரை இன்னமும் எனக்கு அறிமுகம் செய்துவைக்காமல் இருக்கிறீர்களே!'' என்று கொஞ்சிக் குழைந்தான்.

''அவசரப்படாதீர்கள்! நானும் அவரைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். அநேகமாக இன்றோ நாளையோ அவர் இங்கு வந்தாலும் வரலாம்'' என்று அமர்த்தலாகக் கூறினார் தளபதி வில்வேலி.

சிறுபொழுது அமைதிக்குப் பின் தனக்குள் மெல்லச் சிரித்துக்கொண்ட விநயாதித்தன் குறுக்கில் வளர்ந்த தன் பருத்த உடலை நாணக் கோணலுடன் நெளித்து வளைத்துக் கொண்டு, "ஏனய்யா! என் பட்டத்து ராணியாக வரவிருக்கும் பழையாறைச் சோழரின் மகளை நீங்கள் எப்போதாவது பார்த்தீர்களா!" என்று தணிந்த குரலில் கேட்டான்.

"இதற்குள் இம்மாதிரி நினைவுகளிலெல்லாம் உங்கள் நெஞ்சை அலையவிடக் கூடாது இளவரசே! இராஜ குல ஆடவர்கள் எப்போதும் மண்ணைப் பெண்ணாகவும், பெண்ணை மண்ணாகவும் மதிக்கவேண்டும். கிரீட ஜாதியினர் கடைப்பிடிக்க வேண்டிய தர்மம் இது" என்றார் தளபதி.

''புதிய தத்துவம்!'' என்று கூறிக் கண் சிமிட்டி நகைத்தான் விநயாதித்தன்.

அந்தப் பல்லவபுரம் அரண்மனையில் முன்போல் அத்தனை படை வீரர்களின் நடமாட்டம் இன்று காணப்படவில்லை. ஆங்காங்கு சில காவல் வீரர்கள் மட்டுமே சோம்பலுடன் உலாவிக் கொண்டிருந்தார்கள்.

அரண்மனை முகப்புக்கூடத்தில் அமர்ந்திருந்த வில்வேலி தம் பார்வையைச் சுற்றிலும் செலுத்தியவாறு, "இந்நேரம் நமது மாபெரும் படைகள் அனைத்தும் பாண்டிய நாட்டின் வட எல்லையான நெல்வேலிக்குப் போய்ச் சேர்ந்துவிட்டிருக்கும். நாளை மறுநாள் பாண்டிய நாட்டு

மண்ணில் குருதிச் சேற்றைக் குழப்ப, நம் மாவீர மாமன்னர் விக்கிரமாதித்தர் உறையூரிலிருந்து புறப்பட்டு விட்டிருப்பார். அவருக்குமுன் நான் அங்கு போய்ச் சேரவேண்டும். இது மன்னரிடமிருந்து இன்று எனக்கு வந்துள்ள தகவலும் கட்டளையும் ஆகும்'' என்று கவலைச் செறிவுடன் முணுமுணுத்தார்.

இதைக் கேட்டு உள்ளூறப் பயந்தவன்போல் அவர் முகத்தை ஏறிட்டு நோக்கிய விநயாதித்தன், "ஏனய்யா! நீங்களும் என் தந்தையாரும் நெல்வேலிப் போர்முனைக்குப் போய்விட்டால், நான் ஒருவனே காஞ்சி அரண்மனைக் கோட்டையையும் இந்தப் பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையையும் எப்படித் தன்னந்தனியாகப் பாது காப்பேன்? அதற்குப்போதிய படை வீரர்களையும் இங்கு விட்டுவைக்கவில்லையே!', என்று அடைத்த குரலில் கேட்டான்.

"பயப்படாதீர்கள் இளவரசே! எந்த வகையிலும் எதிர்க்க ஆளில்லாத இந்தப் பராரிநாட்டின் கோட்டைகளை ஒரு சாதாரண போர் வீரன் கூடக் கட்டிக் காத்துவிடுவான். ஆயினும் அதற்கான சில எளிய தந்திர உபாயங்களை உங்களுக்குச் சொல்லிக் கொடுத்துவிட்டுப் போகிறேன். அவற்றின்படி பார்த்துக்கொண்டால் எவ்வித அசம்பா விதமும் நடைபெறாது தடுத்துவிடலாம். பழையாறைச் சோழரும் உங்களுக்கு உதவியாக இருக்க ஏற்பாடு செய்கிறேன். அத்துடன் போர்க்களத்திலிருந்து நானோ, நம் மன்னர் பிரானோ இங்கு அடிக்கடி வந்து முக்கியமான காரியங்களைக் கவனித்துக் கொள்வோம்." — அலட்சியமிடுக்குடன் இவ்வாறு கூறிக்கொண்டே எழுந்தார் வில்வேலி.

இந்தச் சமயம், அங்கே வேர்க்க விறுவிறுக்க ஓடிவந்து நின்றான் ஒரு தடித்த மனிதன். இன்று மாலை தவத்துறையை அடுத்த சென்னிவாய்க்கால் கரையில் பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனை அணுகி, மிளகு விலைபற்றிய தம்

சர்ச்சைக்கு நியாயம் கோரினார்களே, அந்தச் சோனக வியாபாரிகளில் ஒருவன்தான் அவன்.

திகைப்புற்ற வில்வேலி அவனை விழித்துப் பார்த்து, "யார்? பல்லவ பரமேசுவரவர்மனின் உருவ ஓவியத்தை எடுத்துக் கொண்டு அவனைத் தேடிப் பிடிக்கச் சென்ற ஒற்றன்தானே நீ?" என்று அடித் தொண்டையில் அதட்டி கேட்டார்.

சோனக வியாபாரிபோல் வேடமிட்டிருந்த அந்தச் சளுக்கிய ஒற்றன், "ஆம், பிரபு!" என்று பணிவுடன் கூறி வணங்கிவிட்டுச் சற்றே முன்வந்து, "கண்டு பிடித்து விட்டோம் ஐயா! இத்தனை நாட்களாக நம் கண்ணில் மண்ணைத் தூவி மறைந்து திரிந்துகொண்டிருந்த பல்லவ மன்னரைக் கண்டுபிடித்துவிட்டோம்!'' என்று மகிழ்ச்சி முட்டக் குழறினான்.

மதுப் போதையில் கிறங்கியிருந்த வில்வேலியும் விநயாதித்தனும் இந்தச் சேதி கேட்டு விதிர்ப்படைந்து நிமிர்ந்தனர். "எங்கே? எப்படி?" என்று பரபரப்புடன் வினவிக் கொண்டே சுற்றுமுற்றும் பார்த்தவாறு பாய்ந்து வந்தார் வில்வேலி.

தன்னிடமிருந்த பல்லவ மன்னனின் உருவ ஓவியச் சுருளைப் பிரித்துக் காட்டி உற்சாகமாகச் சொன்னான் சளுக்கிய ஒற்றன்: "தவத்துறைக்கு அண்மையிலுள்ள சென்னிவாய்க்கால் என்னுமிடத்தில் அவரைப் பார்த்தோம்!"

"இந்த ஓவியத்திலுள்ள உருவத் தோற்றத்துடனேயே அவன் இருந்தானா? அதில் சந்தேகமில்லையே?"

"எள்ளத்தனையும் சந்தேகம் இல்லை, ஐயா! இதே உருவம்தான், இதே தோற்றம்தான். ஆனால்... ஒரே ஒரு மாற்றம்... விந்தைக்குரிய பெரிய மாற்றம்."

"இதே தோற்றம், ஆனால் பெரிய மாற்றம்! என்னடா உளறுகிறாய்?"

"ஆம், பிரபு இவ்வோவியத்தில் உள்ளபடியே அவருடைய அங்க அவயவங்கள் அனைத்தும் அச்சில் வார்த்தெடுத்த மாதிரி அப்படியே அமைந்திருந்தன. ஆனால் அவரது கண்கள் மட்டும்..."

"கண்களா? கண் என்று ஒருமையில் சொல்லடா கபோதி! ஒரு கண் குருடான ஒற்றைக் கண்ணன்தானே அவன்?"

"அதுதான் இல்லை, ஐயா! காந்தம்போல் கவரும் தன்மை வாய்ந்த அழகிய இரு கண்களும் அவருக்கு நன்றாகவே இருக்கின்றன. இந்த ஓவியத்தில் உள்ளதுபோல் அவர் ஒரு கண் குருடர் அல்லர்."

வியப்பின் சிகரத்துக்குத் தூக்கியெறியப்பட்ட வில்வேலி "உண்மைதானா? அவன் ஊனக்கண்ணற்ற உருவத்தினனா?" என்று குழறிய குரலில் வினவினார்.

"நாங்களும் முதலில் இந்தச் சிறு வேற்றுமை கண்டு ஏமாந்துவிடத்தான் இருந்தோம், ஐயா! பிறகு இவ்வோவியத்தின் பழுதுபட்ட கண்ணை மறைத்துக்கொண்டு இதிலுள்ள மற்ற உருவ அமைப்புகளை ஒப்பிட்டுப் பார்த்த போது எங்கள் சந்தேகம் அறவே நீங்கிவிட்டது. அவர் தாம் பல்லவ மன்னர். அதில் சிறிதும் ஐயமே இல்லை."

இந்நேரம்வரை தன்னை மீறிய பயப் பிராந்தியுடன் வெலவெலத்து நின்றுகொண்டிருந்த விநயாதித்தன், "அப்படியானால், அத்தியந்தகாமன் என்று அந்த ஓவியக் கலைஞன் நம்மை ஏமாற்றுவதற்காகச் செய்த விஷமத் தனமான காரியம் என்றல்லவா இது தோன்றுகிறது?" என்று கேட்டான்.

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியவராய் விறைந்து நின்று கொண்டிருந்த வில்வேலி தலைகுனிந்து உலாவியவாறு, "இல்லை, இல்லை! இந்த ஒற்றன் சொல்வதைப் பார்த்தால், அத்தியந்தகாமன் என்ற பெயரில் இங்கு வந்து பல்லவ

மன்னனின் உருவ ஓவியத்தை வரைந்து கொடுத்துவிட்டுப் போன அந்த ஓவியக் கலைஞனே பல்லவ பரமேசுவர வர்மனாக இருப்பானோ என்னும் சந்தேகம் எனக்கு இப்போது ஏற்பட்டுவிட்டது!" என்று அடித் தொண்டையில் கரகரத்தார். "நான் ஏமாந்துவிட்டேன். இல்லை, ஏமாற்றப் பட்டுவிட்டேன்.

"எனக்கும் அப்படித்தான் தோன்றுகிறது பிரபு! ஏனென்றால், நாங்கள் பார்த்தபோது பல்லவ மன்னர் ஓர் எளிய ஓவியக் கலைஞரைப் போலத்தான் காட்சியளித்தார்" என்று உள்ளடங்கிய குரலில் இழுத்தான் அந்த ஒற்றன்.

ஒரு கண மௌனத்துக்குப் பின் திடுமெனத் தலை தூக்கிய வில்வேலி, "ஏனடா! பல்லவ மன்னனை நீ பார்த்ததாகச் சொல்வது உண்மைதானா? அல்லது அவனைப் பார்த்த மாதிரி கனவு கண்டு உளறுகிறாயா?" என்று கல்லைக் கொட்டி அரைப்பதுபோல் பல்லை நறநறவெனக் கடித்துக் கேட்டார்.

வெடவெடவென நடுங்கிக்கொண்டே பின்னால் நகர்ந்த ஒற்றன் திக்கித் திணறலிட்டுச் சொன்னான்: "அப்படியெல்லாம் இல்லை, ஐயா! அந்தச் சென்னி வாய்க்காமல் கரையோரம் நாங்கள் பார்த்த மனிதர் பல்லவ மன்னர்தாம் என்று தீர்மானித்ததற்கு இவ்வோவியத்தில் உள்ள உருவ ஒற்றுமையோடு இன்னொரு பெரிய ஆதாரத்தையும் எங்கள் கண்ணாரக் கண்டோம். அதாவது, இத்தனை நாட்களாக இந்த அரண்மனையில் கட்டிப் போட்டுப் வைக்கப்பட்டிருந்த பல்லவ மன்னரின் பட்டத்து யானை அரிவாரணம் அங்கே அவருடன் இருக்கக் கண்டோம்."

இடியொலி கேட்ட சர்ப்பம்போல் அதிர்ந்து நிமிர்ந்த வில்வேலியும் விநயாதித்தனும் ஒரே குரலில், "என்ன! பல்லவ மன்னனுடன் அவனது யானையையுமா பார்த்தாய்?" என்று வியப்புக் கலவையிட்ட மிரட்சியுடன் விளித்தனர்.

"அது மட்டுமல்ல, ஐயா! இன்னோர் ஆச்சரியமான காட்சியையும் பார்த்தோம். அதைத்தான் என்னால் இன்னமும் உண்மையென்று நம்ப முடியாமல் இருக்கிறது." —மூச்சடைக்க முணுமுணுத்தான் ஒற்றன்.

"அது என்ன, நம்ப முடியாத காட்சி? நம் ஆந்திர இளவரசி உத்தமசீலியின் உயிரற்ற உடல் அங்கே கிடக்கக் கண்டாயா?" துடிப்புடன் வினவினார் தளபதி வில்வேலி.

உள்ளார்ந்த வியப்போடு கண்களை அகல விரித்த ஒற்றன், "ஆம், பிரபு! ஆனால் ஆந்திர இளவரசியை உயிரற்ற உடலாகப் பார்க்கவில்லை; பிரக்ஞையிழந்த நிலையிலே பல்லவ மன்னரின் அணைப்பில் அவர் துவண்டு கிடக்கக் கண்டோம்..." என்று சொல்லிக்கொண்டிருக்கும் போதே, பசித்த புலிபோலப் பாய்ந்து வந்த வில்வேலி அவனுடைய தொண்டையைப் பேய்ப் பிடியாகப் பிடித்து நெரித்து, "முட்டாள் பதரே! நம் ஜன்மப் பகைவனையும், அவனது அணைப்பிலிருந்த அந்தத் துரோகிப் பெண்ணையும் ஒன்றாகப் பார்த்த அதே இடத்தில் ஒரே வெட்டாக வெட்டி நமனுலகுக்கு அனுப்பிவிட்டு அவர்களின் இரத்தம் தோய்ந்த கத்தியுடன் என்னைப் பார்க்க ஓடி வந்திருக்க வேண்டியவனான நீ, வெறும் விவரங்களை மட்டும் சேகரித்துச் செண்டாக்கித் தூக்கிக்கொண்டு வந்திருக் கிறாயே! உன்னை என்ன செய்தால் தகும்?" என்று பயங்கர உறுமலுடன் கர்ஜித்தார்.

விழி பிதுங்கத்துவண்டு பரிதாபமாக ஊளையிட்ட ஒற்றன், "மன்னியுங்கள் பிரபு! நாங்களும் அப்படிச் செய்யத்தான் முயன்றோம். ஆனால் அந்த மூர்க்க மிருகமான யானை எங்களை எப்படியோ அடையாளம் கண்டு கொண்டு முரட்டுத்தனமாகப் பிளிறி விரட்டியது. நாங்கள் பார்த்த விவரங்களைத் தளபதியாரிடம் எடுத்து வந்து சேர்க்கும் வரையிலாவது எங்கள் உயிர் உடலில் தரிக்க வேண்டுமே என்பதற்காக அவர்களைக் கொல்லும் முயற்சியைக்

கைவிட்டுவிட்டுப் பின்வாங்கிக் கொண்டோம். ஆயினும் அவர்கள் எங்கே போகிறார்கள் என்பதை அறிவதற்காக என் தோழனை அவர்களுக்குப் பின்னால் மறைந்து செல்ல அனுப்பிவிட்டு நான் மட்டுமே இங்கு ஓடி வந்தேன்...” என்று முனகிக்கொண்டே வில்வேலியின் பேய்ப் பிடியிலிருந்து நழுவி மூர்ச்சித்துப் பாய்ந்தான்.

விநயாதித்தன் வில்வேலியை முறைத்துப் பார்க்க, வில்வேலி அவனை விறைத்து நோக்கினார்.

“பார்த்தீர்களா, தளபதியாரே! நான் அநுமானித்தது நூற்றுக்கு நூறு சரியாகிவிட்டது. ஆந்திர இளவரசி உத்தமசீலி இந்தப் பல்லவபுரம் இலவந்திகைப்பள்ளியில் இருந்து கொண்டு ஒரு பெரிய நாடகமே நடத்தியிருக்கிறாள். அவளுடைய அபாரமான நடிப்பில் நீங்கள் மட்டுமல்ல, என் தந்தையாரும்கூட ஏமாந்து விட்டிருக்கிறார். இதற்கெல்லாம் பொறுப்பாளி நீங்களேதாம்” என்று இரைந்து கூவினான் விநயாதித்தன்.

வில்வேலி இதைக் கேட்டுக் கலகலவென்று நகைத்தார்.

“ஹூம்! ஆபத்தாம், ஏமாந்துவிட்டோமாம்! இளவரசே, நாளை இரவு இதே நேரத்துக்குள் அவ்விருவரையும் பிடித்துக் கட்டி இங்கே இழுத்துக்கொண்டு வந்து சேர்க்கிறேனா, இல்லையா பாருங்கள்!” என்று அலட்சிய ஆக்ரோஷத்துடன் முழக்கமிட்டுக்கொண்டே அங்கிருந்து மின்னலெனப் பாய்ந்து சென்று மறைந்தார் அவர்.

# 71

# இளங்காரிக்குடையான்

அநந்தமதி தன் காதுகளையே நம்பாதவள் போல் முதலில் கேட்ட அதே கேள்வியை அவசரமாகத் திருப்பிக் கேட்டாள்: "உண்மைதானா ஐயா? நீங்கள் சொல்வது உண்மைதானா?"

நெடுந்தூரப் பயணம் செய்து வந்ததால் ஏற்பட்ட களைப்புடன் துவண்டு நின்றுகொண்டிருந்த கூலவாணிகன், அநந்தமதி கொடுத்த நீராகாரத்தைப் பருகிவிட்டுச் சற்றே தென்புபெற்று நிமிர்ந்து உறுதியான குரலில் சொன்னான்: "ஆம், தாயே! நான்தான் உங்கள் இளைய மகளை என் வண்டியில் ஏற்றிக்கொண்டுபோய் மதுரை நகரில் சேர்ப்பித்தேன். ஊர் திரும்பும் வழியில் அந்த விவரத்தை உங்களிடம் சொல்லிவிட்டுப் போகவே இங்கு வந்தேன்."

சித்திரத் திண்ணையில் அமர்ந்து யாருடைய வரவையோ எதிர்நோக்குபவன்போல் இருளை ஊடுருவிப் பார்த்துக் கொண்டிருந்த ஆபத்துதவி இளங்காரிக்குடையானும் இதைக் கேட்டு வியப்புற்றவனாய்க் கூலவாணிகனின் அருகில் நெருங்கி வந்தான்.

'சோழ இளவரசி இளங்கோப்பிச்சியை என் மகளென்றே இந்தக் கூலவாணிகன் நம்பிக்கொண்டிருக் கிறானே' என்று உள்ளூற எண்ணி அதிசயப்பட்டுக் கொண்டே அநந்தமதி அவனைப் பார்த்து, "அது சரி, ஐயா! மதுரை நகரில் எங்கே கொண்டுபோய் என் மகளை இறக்கிவிட்டீர்கள்?" ஆவலுடன் கேட்டாள்.

“என்னுடைய வண்டியில் அரிசி மூட்டைகள் ஏற்றியிருந்ததால் அந்தப் பெண்மணியைக் கூலவாணிகர் வீதியிலேயே இறக்கிவிட வேண்டியதாயிற்று, தாயே!” என்று வருத்தத்துடன் சொன்னான் வாணிகன்.

“மதுரையில் யாரிடம் போவதாக அவள் உங்களிடம் சொன்னாள்?”

“தம் அத்தையன்பரைப் பார்க்கப் போவதாகச் சொன்னார் அம்மா!”

அநந்தமதியும் இளங்காரிக்குடையானும் ஒருவரை யொருவர் கலவரத்துடன் பார்த்துக்கொண்டனர். அவ்விரு வரையும் கூர்ந்து கவனித்த கூலவாணிகன், “ஏன், அம்மணீ! உங்கள் செல்வ மகள் ஏதேனும் மன வருத்தத்தால் உங்களிடம் சொல்லிக்கொள்ளாமல் மதுரைக்குப் போய்விட்டாரா என்ன?” என்று தணிந்த குரலில் கேட்டான். “அப்படியானால் நான் அந்தப் பெண்மணியை உங்கள் அநுமதியின்றி அழைத்துப்போய் மதுரையில் சேர்த்தது தவறு என்றல்லவா ஆகிறது?”

“அதெல்லாம் ஒன்றுமில்லை, ஐயா! நீங்கள் செய்த உதவிக்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்” என்று மெல்ல முணுமுணுத்தாள் அநந்தமதி.

கூலவாணிகன் இதைக் கேட்கடு முகம் மலர்ந்தான். “மகிழ்ச்சி தாயே! நான்சென்றுவர விடை தாருங்கள்!” என்றவாறு பின்னால் நகர்ந்த அவன் ஏதோ நினைத்துக் கொண்டவன்போல் சட்டென்று நின்று, “ஏனய்யா, உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா?” என்று இளங்காரிக் குடையானைப் பார்த்து இரகசியக் குரலில் கேட்டான்.

இருளில் புதைந்து கிடந்த பல்லவபுரம் சாலையையே துருவிப் பார்த்துக்கொண்டு சிந்தனையில் ஆழ்ந்து உட்கார்ந்திருந்த இளங்காரி, “என்ன விஷயம்?” என்றான் கரகரத்த தொனியில்.

பயப்பிராந்தியுடன் சுற்றுமுற்றும் நோக்கிய கூலவாணிகன் முதுகை வளைத்துத் தலையை நீட்டி மிகமிகத்தாழ்ந்த குரலில் கிசுகிசுத்தான்: "நமது பொன்னான பல்லவ நாட்டை விழுங்கி ஏப்பமிட்ட சளுக்கியச் சண்டாளர்கள் இப்போது பாண்டிய நாட்டையும் சுருட்டிக் கொள்ள முனைந்து விட்டார்களே, உங்களுக்குத் தெரியுமா?"

தூக்கிவாரிப் போட்டவன்போல் துடித்துப் பதறி எழுந்த இளங்காரி, "என்ன?" என்று குழறிக்கொண்டே கூலவாணிகனின் அருகில் பாய்ந்து சென்றான். "என்ன சொன்னீர்கள் பெரியவரே? சளுக்கியர்கள் பாண்டிய நாட்டின் மேல் படையெடுக்கப் போகிறார்களா?"

"ஆம், ஐயா! அநேகமாக நாளை மறுநாளைக்குள் பாண்டிய நாட்டைப் படைகொண்டு தாக்க ஆரம்பித்து விடுவான் சளுக்கிய விக்கிரமாதித்தன்."

"நீங்கள் எப்படி இந்த விஷயத்தை அறிந்தீர்கள்?"

"கடந்த வாரம் நான் மதுரைக்குப் போகும் வழியில், காஞ்சியிலும் பல்லவபுரத்திலுமாக நிறுத்தி வைக்கப் பெற்றிருந்த சளுக்கியப் படைகள் பாண்டி நாட்டின் வட எல்லையை நோக்கித் திரண்டு சென்றதை என் கண்ணாரக் கண்டேன். பிறகு, உறையூர் சுங்கச் சாவடியில் என் வண்டியைச் சோதனையிட்ட சளுக்கிய அதிகாரிகள் இவ்விஷயமாகத் தமக்குள் பேசிக்கொண்டதையும் கேட்டேன். புதுக்கோட்டைக்கு அண்மையில் உள்ள நெல்வேலி என்னுமிடத்திலிருந்து போரைத் தொடங்கி, மின்னல் வேகத்தில் மதுரையைத் தாக்கத் திட்டமிட்டிருக் கிறானாம் விக்கிரமாதித்தன்."

"அப்படியா!" என்று கண்களை அகல விரித்த இளங்காரி துடிப்புடன் நிமிர்ந்து, "பெரியவரே! சளுக்கியரின் படையெடுப்பை எதிர்த்து நிற்கும் தயார் நிலையில் பாண்டிய நாடு காணப்பட்டதா? அல்லது அவர்களுக்குப் பணிந்து

போகும் தன்மையில் அது அடங்கிக் கிடந்ததா?" என்று பரபரத்த குரலில் கேட்டான்.

"நான் சென்றபோது யுத்தத்துக்கான எவ்வித அறிகுறியுமின்றி சகஜ நிலைமையிலேயே மதுரை நகர் காணப்பட்டது. ஆனால் அன்றைய முதல் சாமத்துக்குப் பின் நகரெங்கும் ஒரே பரபரப்பு, ஆவேச வீரத் துடிப்பு பாண்டிய நாட்டின் முப்பெரும் படைகளும் பொங்குமான கடல்போல் குமுறிக் கொந்தளித்துப் பெயர்ந்து வட எல்லையை நோக்கிச் சென்றன. அந்த மாபெரும் படைகளுக்குப் பாண்டியப் பேரரசர் நெடுமாறரின் அருமைப் புதல்வரான இளவரசர் கோச்சடையர் தலைமை ஏற்றுச் சென்றிருப்பதாகவும் கேள்விப்பட்டேன். யுத்தம் ஆரம்பமாகி அதில் சளுக்கிய விக்கிரமாதித்தன் நேரிடையாக வந்து கலந்துகொள் வானாகில் அவனை நேருக்கு நேர் எதிர்த்து நின்று போரிடப் பாண்டியப் பேரரசர் நெடுமாறரே யுத்த சன்னத்துக்களுடன் புறப்பட்டுவிடுவார் என்றும் பேசிக் கொள்ளப்பட்டது."

திகிலடைந்து நின்றுகொண்டிருந்த அநந்தமதி வாசல் நிலையைவிட்டுத் தடுமாற்றத்துடன் வெளியே வந்து, "ஏன் ஐயா! இந்த விவரங்களெல்லாம் என் மகளுக்குத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"நன்றாகத் தெரியும், தாயே! பாண்டிய நாட்டில் பயங்கர யுத்தம் மூளப்போகும் தறுவாயில் இந்தப் பெண் தன் உறவினரின் இல்லம் நாடித் தனிமையில் செல்வது நல்லதல்லவே என்று நானும் நினைத்தேன். ஆனால் உங்கள் மகளோ அதைப்பற்றியெல்லாம் சிறிதும் அச்சம் கொண்ட தாகவே தெரியவில்லை. மதுரை நகருக்கு எப்படியும் போய்ச் சேர்ந்துவிட வேண்டுமென்னும் ஆர்வத் துடிப்புத்தான் அவரிடம் காணப்பட்டது" என்று புன்முறுவலுடன் சென்ன கூலவாணிகன் இளங்காரியைப் பார்த்து, "அரசியல் விவகாரங்களையும் நாட்டு நடப்புக்களையும் உடனுக்குடன் அறியும் வாய்ப்புப்பெற்ற ஆபத்துதவி வீரரான உங்களுக்குக்

கூடவா இவ்வளவு பெரிய சேதி இந்நாள்வரை தெரியாமல் இருந்தது? என்னால் இதை நம்ப முடியவில்லையே!" என்று வியப்பு விரவிய குரலில் வினவினான்.

இளங்காரி இதற்குப் பதிலேதும் கூறாமல் வேதனையுடன் பெருமூச்சு விட்டுத் தலைகுனிந்தான். கூலவாணிகனோ தன் சந்தேகக் கேள்வியை மேலும் தொடர்ந்தான்: "சளுக்கியர்கள் பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்கப் போகிறார்கள் என்னும் சேதி நேரிடையாகத் தங்களுக்குத் தெரியாமற் போனாலும், இப்போது நம் நாட்டில் நடந்து வரும் ஓர் அக்கிரமக் கெடுபிடிச் செயலின் வாயிலாகவாவது அவ்விஷயத்தைத் தாங்கள் ஊகித்துத் தெரிந்துகொண்டிருக்க வேண்டும்! ஒருகால் அதுவும் உங்களுக்குத் தெரியாமல் இருக்கிறதா? அல்லது எல்லா வற்றையும் தெரிந்து கொண்டே என்னிடம் இப்படி எதுவும் தெரியாத மாதிரி பேசுகிறிர்களா?"

சட்டென்று நிமிர்ந்து இளங்காரி, கூலவாணிகனைக் கூர்ந்து நோக்கினான்.

"ஆம், ஐயா! நம் பல்லவ மன்னருக்கு எதிராகச் சளுக்கியருடன் கூட்டுச் சேர்ந்து குலாவி வரும் அந்தப் பச்சைத் துரோகி பழையாறைச் சோழர், கடந்த சில வாரங்களாகச் சளுக்கிய வீரர்களின் துணையோடு நாடெங்கும் ஓர் அக்கிரம அநியாய காரியத்தைச் செய்து வருகிறார். அதாவது, சளுக்கியர்கள் பாண்டிய நாட்டின்மேல் தொடுக்கவிருக்கும் யுத்தத்துக்காக நம் நாட்டு மக்களிடமுள்ள எல்லாவித போர்க் கருவிகளையும் மிரட்டிப் பயமுறுத்திப் பறித்துச் சேர்த்துக் கொண்டு போய் அவர்களுக்குக் கோடுத்து வருகிறாராம். உழவர்களின் உழவுக் கருவிகள், தொழிலாளர் களின் தொழிற் கருவிகள் முதலானவற்றைக் கூட அவர் ஈவிரக்கமின்றிப் பலாத்காரமாகப் பிடுங்கிக் கொண்டுபோய் விடுகிறாராம். நாடெங்கும் இப்போது இதே பேச்சாகத் தான் இருந்து வருகிறது. மதுரையிலிருந்து திரும்பி வரும் போது

நானே சில சிற்றூர்களிலும் பேரூர்களிலும் இந்த அக்கிரமச் செயல் நடந்துகொண்டிருந்ததைப் பார்த்தேன். வழித் துணைக்காக என்னிடம் வைத்திருந்த ஓர் ஈட்டியையும் அரிவாளையும் கூடப் பழையாறைச் சோழரின் ஆட்கள் வந்து பறித்துக்கொண்டு போய்விட்டார்கள்."- ஆத்திரமும் சினமும் பொங்க இவ்வாறு குமுறிக் கூறினான் கூலவாணிகன்.

இளங்காரியின் உடல் அதிர்ந்து நடுங்கியது. தன் தாயை விழித்துப் பார்த்த அவன் சரேலென்று இல்லத்தினுள் விரைந்து சென்றான். அநந்தமதியும் அவனைப் பின் தொடர்ந்து ஓடினாள்.

# 72

# நிழல் மனிதர்

"கேட்டீர்களா, அம்மா? நிலைமை மிகவும் மோசமாகி விட்டது. அந்தக் கூலவாணிகன் சொன்ன சேதிகளைச் சந்திரலேகைச் சிற்றரசரிடமோ பல்லவ மன்னரிடமோ நான் உடனடியாகப் போய்த் தெரிவிக்க வேண்டும்'' என்று படபடத்தான் இளங்காரி.

''ஆமாம், மகனே! எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக இந்தக் காரியத்தை நீ செய்தாக வேண்டும். ஆனால், அவர்களை எங்கே போய்ச் சந்திப்பாய்? சந்திரலேகைச் சிற்றரசர் நம்மிடம் எந்த இடத்தையும் திட்டவட்டமாகக் குறிப்பிட்டுச் சொல்லவில்லையே!" என்று கிலேசத்துடன் குழறினான் அநந்தமதி.

"இன்று மாலைக்குள் நாங்கள் இங்கு வராவிட்டால் நேரே சேதியக் கலைஞரின் இல்லத்துக்குப் புறப்பட்டு வா' என்று முத்தரையர் என்னிடம் சொல்லிவிட்டுப் போனா ரம்மா! ஆகையால் நான் இப்போதே பெருவளநல்லூருக்குப் பயணப்படுகிறேன்."

"அப்படியானால் சரி" என்று தலையசைத்த அநந்தமதி தயக்கத்துடன் அவனைப் பார்த்து, "நம் இளவரசர் கோவிந்தவர்மர் படை உதவி கோரும் பொருட்டுப் பாண்டிய மன்னரிடம் போயிருப்பதாகச் சொன்னாயே; இப்போது சளுக்கியர்கள் பாண்டிய நாட்டின்மேல் படையெடுக்க விருப்பதால் அவருடைய நிலைமை அங்கே என்ன ஆகும்?" என்று வினவினாள்.

"நானும் அதைத்தான் நினைத்துக் குழம்பிக்கொண் டிருக்கிறேனம்மா!" என்று முணுமுணுத்தான் இளங்காரி.

"பல்லவ இளவரசர் மதுரைக்குப் போயிருக்கும் சேதியை எப்படியோ அறிந்து கொண்டுதான் அவரைப் பின் தொடர்ந்து போயிருப்பாரோ, நம் சோழ இளவரசி இளங்கோப்பிச்சி?"

"அம்மா! இனிமேல் அந்தத் துரோகியின் மகளைப்பற்றி என்னிடம் எதுவும் கேட்காதீர்கள்" என்று சீறிச் சினந்து சொல்லிக்கொண்டே வெளி வாசலுக்கு விரைந்து வந்தான் இளங்காரி.

"வணக்கம், ஐயா! உங்களிடம் விடை பெற்றுக் கொண்டு புறப்படத்தான் காத்திருநக்கிறேன்" என்றவாறு கைக்கூப்பினான் வாசலில் நின்றிருந்த கூலவாணிகன்.

"புறப்பட்டு விட்டீர்களா, பெரியவரே? நல்லது. நானும் உங்களுடன் வருகிறேன். தயவுசெய்து என்னைப் பெருவளநல்லூர் வரையில் உங்கள் வண்டியில் ஏற்றிக் கொண்டுபோய் விட்டுவிடுங்கள்" என்று தயவாக வேண்டிக் கொண்டே சாலையில் நின்றிருந்த ஒற்றை மாட்டு வண்டியை நோக்கி நடந்தான் இளங்காரி.

**வை**கறைப் போதின் மசக்கை இருள் விலகுமுன்பே பெருவளநல்லூரை அடைந்த இளங்காரிக்குடையான், சேதியக் கலைஞரின் இல்லத்து வேலியோரம் வந்து நின்று அங்குமிங்குமாகத் தன் பார்வையைச் செலுத்தி நோக்கினான்.

அழகுத் தேவதையின் தவச் சாலைபோல் அத்தனை அழகுடன் விளங்கி வந்த அந்தச் சிறிய இல்லம் இன்று பாழ்பட்டுக் காணப்பட்டது. முன்புறமிருந்த எழில்மிகு பூங்காவும், பின்புறமிருந்த வளம்பெறு தோட்டமும் அழிந்து வெறும் பொட்டல் வெளியாகக் காட்சியளித்தன. விளக்கின் ஒளி கண்டு பல நாட்களானாற்போல் அந்த இல்லமும் அதன்

சுற்றுப்புறச் சூழலும் இருளின் ஆதிக்கத்தில் அழுந்திக் கிடந்தன.

“மாபெரும் சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் இல்லமா இது? நம்பவே முடியவில்லையே? இந்த இல்லம் இருக்கும் நிலையைப் பார்த்தால் இங்கே அவர் இப்போது வாசம் செய்வார் என்றும் தோன்றவில்லையே!’

திகிலைடந்து நின்ற இளங்காரி வேலிப் படலைத் திறந்து கொண்டு தயங்கி உள்ளே சென்றான். அவன் சந்தேகப்பட்டது போலவே அந்த இல்லத்து முன்வாயில் சாத்தித் தாழிடப் பட்டிருந்தது. திரை நீக்கப்பட்ட சாளரங்களில் சில மூடியும், சில திறந்தும் கிடந்தன. அப்படித் திறந்திருந்த ஒரு சாளரத்து வழியே உள்ளே எட்டிப் பார்த்தான். தொட்டால் ஒட்டிக்கொள்ளும்படியான காரிருளைத் தவிர வேறு ஒன்றுமே அவன் கண்ணுக்குப் புலனாகவில்லை. அந்த இருள் மூட்டத்தில் வௌவால்களும் துரிஞ்சல்களும் பறந்து கிரீச்சிடும் ஒலிதான் கேட்டது.

‘என்ன இது சங்கடம்! பரவாதிமல்லர் தம் இல்லத்தை இப்படிப் பாழடையப் போட்டுவிட்டு எங்கே போயிருப்பார்? எக்காரணத்தினால் அவர் இங்கிருந்து வெளியேறியிருப்பார்? சந்திரலேகைச் சிற்றரசர் இவ்விடத்தில் வந்து தம்மைச் சந்திக்கும்படி என்னிடம் சொன்னதிலிருந்து அவருக்கும் விஷயம் தெரியாது என்றல்லவா ஆகிறது? அவரும் என்னைப்போல் இங்கு வந்து இல்லத்தின் நிலைமையைப் பார்த்துத் திரும்பி விட்டிருப்பாரோ? அப்படியானால் இனி அவரையோ, பல்லவ மன்னரையோ நான் எங்கு சென்று சந்திப்பது?’

குழம்பித் தவித்த இளங்காரி ஒவ்வொரு சாளரமாக எட்டிப் பார்த்தான். இருளின் சூனியத்தையே அவன் கண்கள் ஸ்பரிசித்து மழுங்கின. கலவரத் திணறலுடன் சற்று நேரம் தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு நின்றவன், வலப் பக்கவாட்டில் அமைந்திருந்த கலைக்கூடத்தை நோக்கிச்

சோர்வுடன் நடந்தான். அந்த அழகிய கலைக்கூடமும் கவனிப்பாரற்ற நிலையிலேயே பாழடைந்து இருண்டு காணப்பட்டது. அதன் வாயில்களும் சாளரங்களும் சாத்திக் கிடந்தன.

"சரி; இனிமேல் இங்கிருந்து பயனில்லை. ஆலம்பாக்கத் துக்கே திரும்பிப் போக வேண்டியதுதான்" என்று முணு முணுத்துக்கொண்டே பின்புறத் தோட்டத்தை நோக்கி நடக்க முற்பட்ட இளங்காரி, ஏதோ மரத்தில் மோதிக் கொண்டவன் போல் திடுக்குற்று நின்றான்.

அவன் எதிரே கடைந்து நிறுத்திய கல் தூண்போல் ஒரு பெரிய தென்னை மரம் நின்றிருந்தது. அந்த மரத்தின் அடிச் சுற்றில் பளிச்சென்று ஓர் ஒளிக்கீற்று எங்கிருந்தோ வந்து தெறித்துக் கிடப்பது தெரிந்தது. அவ்வொளிக்கீற்றைப் பார்த்துப் பரபரப்படைந்த இளங்காரி சடாரென்று திரும்பினான். கண்களை நிமிண்டிவிட்டு வெளிச்சம் வரும் திசையை நோக்கினான்.

அன்றொரு நாள் பல்லவ மன்னன் பரமேசுவர வர்மனைப் பார்க்கவேண்டி மண்டகப்பட்டுக் குகைக் கோயிலிலிருந்து புறப்பட்டு வந்து பெரும்பிடுகு முத்தரையர், நந்தியாவட்டைச் செடியொன்றின் பின்னால் மறைந்து நின்றுகொண்டு இந்தக் கலைக்கூடத்தின் சாளரத்து வழியே உள்ளே எட்டிப் பார்த்தாரே, அதே சாளரப் பக்கமிருந்து தான் அந்தச் சன்னமான ஒளிக்கற்றை வெளிப்பட்டது.

வியப்பால் வெலவெலத்து நின்ற இளங்காரி ஓசை யின்றி அடி மேல் அடி வைத்து நடந்து போய் அச்சாளரத்துச் சுவரோரம் ஒடுங்கி முடங்கிச் சாய்ந்துகொண்டு, ஒளி வரும் இடைவெளி வழியே தன் பார்வையை வெகு கூர்மையாகச் செலுத்தினான்.

அங்கே, முக்கோண வடிவில் அமைந்த சிறியதோர் அறையின் மூலையில் நிறுத்தி வைக்கப்பெற்றிருந்த செப்புச்

சிலையொன்றின் கையில் மாவிலைக் கொழுந்து போன்ற திரி விளக்கு மங்கலாக எரிந்து கொண்டிருப்பது தெரிந்தது.

இளங்காரி தன் கழுத்தை இன்னங் கொஞ்சம் மேலே நீட்டி அவ்வறையின் மற்றப் பகுதிகளையும் கூர்ந்து பார்த்தான். விளக்கு ஏந்தி நின்ற அந்தச் சிலையையும், அதற்குப் பக்கவாட்டிலே அமைந்த குறுக்குச் சுவரொன்றின் மேல் படிந்திருந்த அச்சிலையின் நிழலையும் தவிர அங்கு வேறொன்றும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், எங்கோ அதல பாதாளத்திலிருந்து ஏதோ சில விசித்திர ஒலிகள் இலேசாக விட்டுவிட்டு எழுந்து ஒலிப்பது கேட்டன. இரும்பு, எஃகு, தாமிரம் முதலிய உலோகப் பொருட்கள் ஒன்றுடன் ஒன்று இடிபட்டு மோதி உருள்வது போன்ற ஒலிகள் அவை!

அச்சத்தால் மனம் அதிர்ச்சி நடுங்கிய இளங்காரி தன் கட்புலனோடு செவிப் புலனையும் கூர்மையாக்கிக்கொண்டு குதிகாலை மேலுயர்த்தி நிமிர்ந்து அந்த அறையை மீண்டும் கவனித்தான்.

'கிரீச்' என்ற ஓர் ஒலி! அதைத் தொடர்ந்து சிலையின் நிழல் படிந்திருந்த குறுக்குச் சுவரின் அப்புறமிருந்து இன்னும் இரண்டு நிழல்கள் மெல்ல மெல்ல மேலெழும்பின. பிறகு அவ்விரு நிழல்களும் அந்தச் சிலைக்குரிய நிழலின் இருபுறமுமாகப் பிரிந்து நிலைத்து நின்றன.

அவை என்ன நிழல்கள்? சந்தேகமில்லை; யாரோ இருவர் எங்கோ ஓரிடத்தில் எதிரெதிரே ஒருவரையொருவர் பார்த்தவாறு நிற்கிறார்கள்! அவர்களுடைய உருவங்களின் நிழல்களே அந்தச் சுவரில் அப்படி நீண்டு படிந்து நிற்கின்றன!...

வலப்புறம் தெரிந்த நிழலுருவம் தாடியும் மீசையுடன் ஒரு யோகியின் வடிவிலே விளங்கியது. இடப்புறம் தெரிந்த நிழலுருவம் கைகளை இடுப்பின்மேல் கம்பீரமாக ஊன்றிக் கொண்டு நிமிர்ந்து நிற்கும் பாவனையிலே தோற்றமளித்தது.

# 73

# நிலவறை தானம்

**வீ**ரச் செருக்குடன் நிமிர்ந்து நின்ற நிழலுருவம் விளக்கேந்திய சிலையின் நிழலை மையப்படுத்தி அதன் வலமாகவும் இடமாகவும் உலாவியவாறு, தன் எதிரே நீண்ட தாடியை வருடிக்கொண்டு நின்ற நிழலுருவத்துப் பக்கம் திரும்பிக் கரகரப்பான குரலில் பேசியது: "என்னுடைய சக்திக்கு இயன்ற அளவு நான் இந்த காரியத்தைச் சரியாகவே செய்து முடித்துவிட்டேன். ஏறத்தாழ முப்பதாயிரம் வீரர்களுக்குப் போதுமான போர்க் கருவிகளையும் பிற சாதனங்களையும் கொண்டுவந்து சேமித்துவிட்டேன். இவ்வளவுதான் இப்போதைக்கு என்னால் செய்ய முடிந்தது. இவற்றுக்குமேல் சேமிக்க இடமும் இல்லை, சூழ்நிலையும் ஒத்துவராது. இவற்றை வைத்துக்கொண்டு வெற்றிக்குப் பாடுபடுவது இனி அவர்கள் பொறுப்பு.

சாளரத்தின் வெளியே சுவரோரம் ஒடுங்கி முடங்கி நின்றுகொண்டிருந்த ஆபத்துதவி இளங்காரிக்குடையான் இந்தப் பேச்சைக் கேட்டு வியப்பின் எல்லையைத் தொட்டான். அவன் உடல் பீதியால் நடுங்கியது. தன் கண்ணையும் காதையும் கூர்மையாக்கிக்கொண்டு அந்தக் கலைக்கூடத்தின் குறுக்குச் சுவரில் தெரிந்த நிழலுருவங்களை மீண்டும் உன்னிப்பாகக் கவனித்தான்.

பின்னால் கைகளைக் கோத்தவாறு உலாவிக்கொண்டிருந்த நெடிய நிழலுருவம், யோகியின் வடிவிலே நின்ற நிழலுருவத்தின் அருகில் போய்த் தழுதழுத்த குரலில் கூறியது:

"கலைஞரே! தங்களின் ஆர்வமிக்க ஒத்துழைப்பாலும் உயரிய யோசனைகளாலும்தான் இந்தச் சிரம சாத்தியமான காரியத்தை என்னால் சாதிக்க முடிந்தது. தங்களுக்கு நான் பெரிதும் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன்."

வருத்தம் தோய்ந்த மென்னகையொலி. அந்த தாடியுருவம்தான் அப்படிச் சிரித்தது. "நான் செய்த உதவிகளுக்குப் பின்னொரு காலத்தில் எவ்வித பலனையும் எதிர்ப்பார்க்காமல் இப்போதே அவற்றுக்குரிய கூலியாக வெறும் 'நன்றி'யை மட்டும் பெற்றுக்கொண்டு அமைதி யடையச் சொல்கிறீர்கள்; அப்படித்தானே நண்பரே?"

இரண்டு நிழலுருவங்களும் ஒன்றையொன்று தழுவிக் கொண்டு கலகலவெனச் சிரித்தன.

சிறுபொழுதுக்குப் பின் அந்த நெடிய உருவம் மீண்டும் பேசியது: "அப்படியல்ல, கலைஞரே! போர்க் கருவிகளைச் சேமிக்க வேண்டும் என்று நான் திட்டமிட்டபோது அவற்றை எங்கே பத்திரப்படுத்திப் பாதுகாப்பது என்று தெரியாமல் விழித்துகொண்டிருந்தேன். என் அரண்மனையையோ அல்லது வேறு இடங்களையோ அதற்கெனப் பயன் படுத்தினால் அந்த இரகசியம் எப்படியும் அம்பலமாகி விடலாம் என்றும் பயந்தேன். இந்நிலையில் தாங்களே முன்வந்து தங்கள் இல்லத்து நிலவறையை என்னிடம் ஒப்படைத்தீர்களே, அது சாதாரண உதவி என்று நான் எண்ண முடியுமா? அதிலும், என் உயிரைப் பணயம் வைத்துச் சேமித்த படைக்கலன்களை நன்கு பத்திரப்படுத்துவதற்குத் தோதான இடத்தைக் கொடுத்திருக்கிறீர்களே! தங்களுடைய இல்லத்தில் அப்படியொரு நிலவறை இருக்கிறதென்ற விவரம் எனக்கே இத்தனை காலமாகத் தெரியாமல் இருந்தது ஆச்சரியம்தான்!"

இதைக் கேட்டு மெல்லச் சிரித்த தாடி உருவம் தணிந்த குரலில் கூறியது: "ஆமாம், அன்பரே! என் இல்லத்தில் ஒரு நிலவறை இருக்கிறதென்ற விஷயம் என்னைத் தவிர வேறு

யாருக்குமே தெரியாதுதான். இந்த நிலவறை இங்கே உருவானதன் காரணத்தைச் சொல்கிறேன், கேளுங்கள்: காலத்தால் அழிக்க முடியாததாகவும், உலகமே இதுவரையில் கண்டிராத வகையிலுமாக ஓர் அற்புதக் கற்கோயிலை என் வாழ்நாளுக்குள் எப்படியும் நிர்மாணித்து விட வேண்டும் என்ற பெரு வேட்கையுடன் இருந்து வரும் நான் அதற்கான ஆரம்ப முயற்சிகளில் ஈடுபட்டபோது துரதிர்ஷ்டவசமாக பல்லவருக்கும் சளுக்கியருக்கும் போர் மூண்டு அந்த முயற்சியை அடியோடு குலைத்துவிட்டது. சிறிது காலத்துக்குப் பின் மீண்டும் அந்தப் பேராசை என்னுள் தலைதூக்கவே, கற்பனை வடிவாக என் மனத்தளத்தில் நிற்கும் அந்த மகத்தான கோயிலை நிஜ வடிவில் நிர்மாணிப்பதற்கான சேதியக் குறிப்புகள், சிற்ப அமைப்புக்கள் முதலானவற்றைக் கல்லிலும், சீலையிலும், ஓலையிலுமாக உருவாக்கி எங்கேனும் ஓரிடத்தில் பத்திரப்படுத்தி வைக்கவேண்டுமெனத் திட்டமிட்டேன். என்னுடைய அந்த மாபெரும் கலைக் கனவு என் காலத்துக்குள் நிறைவேறாவிட்டாலும், எனக்குப் பின் வரும் ஒரு சேதியக் கலைஞன் அவற்றைக் கொண்டு எனது கனவை நனவாக்கி முடிப்பான் என்று எண்ணியே அவ்வாறு திட்டமிட்டேன். அதற்காகவே அந்த நிலவறையை முதலில் கட்டிமுடித்தேன். ஆயின், விதி என் உற்சாகத்தை அதோடு கட்டிப் போட்டு விட்டது. அதனால் இந்நிலவறையும் இதுவரை பாழ் அடைந்தே கிடந்தது. இந்நிலையில்தான் தங்களைச் சந்தித்துத் தாங்கள் மேற்கொள்ள விரும்பும் முயற்சிபற்றிய விவரங்களை அறிந்தேன். அந்த நல்ல காரியத்துக்காகவாவது இந்நிலவறை பயன்படட்டுமே என்று அதைத் தங்களிடம் ஒப்படைத்தும் விட்டேன். நான் மனமார நேசிக்கும் ஒருவருக்காவும், அவரது தேசத்துக்காகவும் இந்தச் சிறு உதவியாவது செய்ய முடிந்ததே என்பதை எண்ணி எல்லையற்ற மகிழ்ச்சியடைகிறேன். இதனால் எனக்கு எத்தகைய இடர்பாடும் இழிபெயரும் ஏற்பட்டாலும்

அவற்றை மனமுவந்து தாங்கிக் கொள்ளவும் சித்தமா யிருக்கிறேன். இப்படி ஓர் அரிய வாய்ப்பை அளித்துதவிய தங்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்."

சாளரத்துக்கு வெளியே இருளில் மறைந்து நின்ற இளகாரிக்குடையான் தேள் கொட்டியவன்போல் துடிப்புற்று நிமிர்ந்தான். 'இவர்கள் யார் என்பது இப்போது தெரிந்து விட்டது. சந்தேகமில்லை. சேதியக் கலைஞர் பரவாதிமல்லரும் பழையாறைச் சோழரும்தாம் அங்கே பேசிக்கொண்டிருக் கிறார்கள். அவர்களுடைய நிழலுருவங்கள் தாம் அந்தக் குறுக்குச் சுவரில் தெரிகின்றன. பச்சைத் துரோகிகள்! அவர் படைக்கலன்கள் திரட்டிக்கொண்டு வந்து சேமிக்கிறாராம்; இவர் அவற்றைப் பத்திரப்படுத்தத் தம் நிலவறையைக் கொடுத்து உதவினாராம்-என்ன பயங்கரமான மனிதர்கள்! இந்தப் பழையாறைச் சோழரைப் பற்றி அந்தக் கூலவாணிகன் சொன்னது எவ்வளவு உண்மையாகிவிட்டது! இவர்தாம் பகிரங்கமாகச் சளுக்கியருடன் சேர்ந்துவிட்டார்: அதனால் அவர்களுக்குப் போர்க் கருவிகள் திரட்டிக் கொடுக்கிறார். இது நாடறிந்த சேதியுமாகி விட்டிருக்கிறது. ஆனால் பரவாதிமல்லரோ? அவர் பாலுக்கும் காவல், பூனைக்கும் தோழனாயிருக்கும் வஞ்சக மனிதர் என்னும் விஷயம் இப்போதல்லவா தெரிகிறது. இவர்மீது பல்லவ மன்னரும், பெரும்பிடுகு முத்தரையரும் எத்துணை ஆழ்ந்த அன்பும் நம்பிக்கையும் மதிப்பும் வைத்திருக்கிறார்கள்! பசுத்தோல் போர்த்திய இந்தப் புலியிடம் அவர்கள் பரிதாபகரமாக ஏமாந்து விட்டிருக்கிறார்களே! என்ன இருந்தாலும் இவர் சளுக்கிய நாட்டுப் பிரஜைதானே? அந்த மண்ணின் பற்றும் பாசமும் அவ்வளவு எளிதில் மறைந்துவிடுமா? பாம்புக்குப் பால் வார்த்து வளர்ப்பதுபோல் பல்லவ நாடு இவருக்கு வளமான வாழ்வையும் வானுயர் புகழையும் வாரி வழங்கியது. இறுதியில் அதற்கே இரண்டகம் செய்யத் துணிந்துவிட்டார்

இந்தப் பாம்பின் விடம் கொண்ட மனிதர்! சளுக்கியருக்குப் படைக்கலன்கள் சேமிக்கத் தமது நிலவறையைக் கொடுத்து உதவியதற்கு வெறும் நன்றிப் பாராட்டுதலோடு திருப்தியடைய மாட்டாராம்; வேறு ஏதோ 'பங்கும்' வேண்டுமாம்! எவ்வளவு பெரிய பேராசை பிடித்த மனிதராக இருந்தால் அப்படி இவர் கேட்கத் துணிவார்? இந்த நன்றிகெட்ட நயவஞ்சகரை நம்பி இவருடைய இல்லத்தில் பல்லவ நாட்டின் உயிர் மூச்சான பரமேசுவரவர்மரைப் புகலடையச் செய்திருந்தாரே பெரும்பிடுகு முத்தரையர், அவரைப்போல் ஒரு பைத்தியக்காரர் இருக்க முடியுமா? கலைஞர் என்ற போர்வையில் திரியும் இந்த மனச்சாட்சியற்ற மனிதரை நன்றாக எடை போட்டுத் தெரிந்து கொண்டுதான் ஆரம்ப நாள் முதலே கோவிந்தவர்மர், "இவரை நம்பக் கூடாது" என்று சொல்லிக் கொண்டேயிருந்தார். அவருடைய தீர்க்க தரிசனம் இப்போது முழுக்க முழுக்க மெய்யாகி விட்டது.' -இவ்வாறெல்லாம் எண்ணி மனம் கொதித்த இளங்காரி மீண்டும் தன் பார்வையை அந்தக் குறுக்குச் சுவர் பக்கம் ஓட்டினான்.

என்ன ஆச்சரியம்! இந்நேரம் வரையில் அங்கே பதிந்திந்த அவ்விரு நிழலுருவங்களும் எங்கோ மாயமாய் மறைந்து, வெறும் வெள்ளைச் சுவர் மட்டுமே இப்போது தெரிந்தது.

# 74

## வீசிய வலையில்?

அவசரப் பரபரப்புடன் அங்குமிங்குமாகத் தன் பார்வையை வீசினான் இளங்காரி. அந்தக் கலைக்கூடத்தின் அறையெங்கும் ஆழ்ந்து அமைதி நிலவியது.

“இத்தனை சீக்கிரம் அவ்விரண்டு பேரும் எங்கே போய் விட்டிருப்பார்கள்? இன்னும் ஏதேனும் சதித் திட்டம் போட நிலவறையினுள் சென்றிருப்பார்களா? அல்லது இங்கிருந்து வெளியேறிவிட்டிருப்பார்களா? விளக்கு அணைக்கப் படாமல் எரிந்துகொண்டிருக்கிதே! ஒருகால் பல்லவ மன்னரும், பெரும்பிடுகு முத்தரையரும் இங்கு வரப் போகிறார்கள் என்னும் விவரம் அறிந்து அவர்களைச் சளுக்கியரிடம் காட்டிக் கொடுப்பதற்குத் தயாராக எங்கே யாவது மறைந்திருக்கிறார்களா? அப்படியானால் இந்தப் பயங்கரச் சதிகாரர்களிடம் வந்து சிக்கிக் கொள்ளுமுன் அவர்களை நான் சந்தித்து விஷயத்தைச் சொல்லி எச்சரித்தாக வேண்டும்! அவ்விருவரையும் இப்போது எங்கே போய்த் தேடிப் பிடிப்பது? நான் ஒரு வழியில் போக, அவர்கள் வேறு வழியில் இங்கு வந்துவிட்டால் என்ன செய்வது?’

குழம்பிக் கலங்கிய இளங்காரி, நிற்கவும், முடியாமல் அவ்விடத்தைவிட்டுப் போகவும் கால் வராமல் தவித்தான்.

சட்டென்று ஓர் எண்ணம்: ‘பழையாறைச் சோழருடையவும் பரவாதிமல்லருடையவும் பேச்சில் அடிபட்ட அந்த நிலவறை எங்கே இருக்கிறது? அதில் நிஜமாகவே போர்க் கருவிகள் சேமித்து வைக்கப் பெற்றிருக்குமா? கண்ணால்

பார்க்காமல் செவி வழியாகக் கேட்ட அந்த விவரத்தைப் பல்லவ மன்னரிடமோ, சந்திரலேகைச் சிற்றரசரிடமோ எப்படிச் சொல்வது? சொன்னாலும் அதை அவர்கள் உண்மை என்று நம்ப வேண்டுமே!'

தலையை அப்படியும் இப்படியுமாக ஆட்டிக் குலுக்கி உதட்டை மடித்துக் கடித்துக்கொண்டு அவன் வெடுக்கென நிமிர்ந்தான்.

'என்ன ஆனாலும் ஆகட்டும்; அந்த நிலவறை எங்கே இருக்கிறது. அதில் மெய்யாகவே படைக்கலன்கள் சேமித்து வைக்கப் பெற்றிருக்கின்றவா என்பதைத் தெரிந்து கொண்டுதான் இங்கிருந்து புறப்பட வேண்டும்.'

அவன் சுற்றுமுற்றும் சுழன்று பார்த்தான். படபட வெனத் துடிக்கும் தன் நெஞ்சை ஆசுவாசப்படுத்திச் சமகதியில் வைத்துக்கொண்டு அந்தக் கலைக்கூடத்தின் சாளரத்து வழியே மார்பை ஊன்றித் தவ்வித் தவழ்ந்து ஏறி ஓசையின்றி உள்ளே குதித்தான்.

குதித்த வாக்கில் அப்படியே ஒரு கணம் உட்கார்ந் திருந்த இளங்காரி மெல்ல எழுந்து கண்களை நிமிண்டி விட்டுக் கொண்டு அங்குமிங்குமாக விழித்து நோக்கினான்.

குப்பைக் கூளங்கள் நிறைந்து பார்க்கவே அருவருப்பாக இருந்த அவ்வறையின் மேலண்டை மூலையில் விளக்கேந்திக் கொண்டு நின்ற செப்புச் சிலையைத் தவிர வேறு ஒன்றும் அங்கு இருப்பதாகத் தெரியவில்லை.

அந்தச் செப்புச் சிலை ஏந்தியிருந்த அகல் விளக்கில் நெய் குறைந்து ஒளி மங்கலிடவே அதன் திரியைத் தூண்டிவிட அருகில் சென்ற இளங்காரி திடுக்குற்றுப் பின்னால் நகர்ந்தான். காரணம், சற்றுமுன் பழையாறைச் சோழருடைய நிழல் பதிவாகியிருந்த அதே குறுக்குச் சுவரில்-அதே இடத்தில், அதே அளவினதாக அவனுடைய நிழல் நீண்டு படிந்திருப்பது தெரிந்தது.

'அப்படியானால் பழையாறைச் சோழரும், பரவாதி மல்லரும் இந்த இடத்தில் நின்றுதான் பேசிக் கொண்டிருந் தனரா?'

குறுக்குச் சுவரில் தெரிந்த தன் நிழலையும், அதன் பக்கவாட்டில் பதிவாகியிருந்த சிலையின் நிழலையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டிருந்த அவன் அந்த நிழல்களை நோக்கி நடந்தான். இப்போது அவனுடைய நிழல் குறுக்குச் சுவரை விட்டுக் கீழே இறங்கிப் பின்புறமாக நீண்டுவிடவே சிலையின் நிழல் மட்டும் அங்கு தனியாக நின்றது.

அந்த நிழலையே கூர்ந்து பார்த்துக்கொண்டிருந்த இளங்காரி தன் வலக்கையை அந்நிழலில் படிந்த சுவர்ப் பகுதிக்கு நேரே நீட்டினான்.

என்ன விந்தை! அவனுடைய கை, சுவரை ஸ்பரிசிக் காமல் சிலையின் நிழலைப் 'பொத்து'க்கொண்டு உள்ளே செல்வதுபோல் தங்கு தடையின்றி நுழைந்தது! வெடுக்கென்று கையை வெளியே இழுத்துக்கொண்டு அந்தக் கரிய நிழலைக் கூர்ந்து நோக்கினான்.

சந்தேகமில்லை; அது ஒரு நுழைவாயில்தான். விளக்கேந்தி நிற்கும் சிலையின் நிழல் வடிவமாகவே அந்த நுழைவாயிலும் அமைந்திருந்தது. விளக்கு எரிந்தாலும் எரியாவிட்டாலும் அங்கே ஒரு நுழைவாயில் இருக்கிற தென்பதை யாரும் எளிதில் கண்டுபிடித்துவிட முடியாத வகையில் அத்தனை சாமர்த்தியமாக அது அமைக்கப் பெற்றிருந்தது.

வியப்பாலும் திகைப்பாலும் வெலவெலத்துநின்ற அவன் அந்தச் சிலை வடிவ நுழைவாயிலினுள் மெல்ல எட்டிப் பார்த்தான். கீழ்நோக்கி இறங்கிச் செல்லப் படிகள் இருப்பது தென்பட்டன. நெஞ்சில் துணிவை நிறைத்துக் கொண்டு வெகு நிதானமாகப் படிகளில் இறங்கி நடக்கலா னான்.

ஏழெட்டுப் படிகளைக் கடந்தபின் தயங்கி நின்ற இளங்காரி தன் தலைக்குமேல் ஏதோ படீரென்று சத்தம் கேட்கவே பதறித் துடித்தவனாய் அண்ணாந்து நோக்கினான்.

எங்கும் ஒரே காரிருள்! அவன் இறங்கி வந்த நுழைவாயிலை யாரோ கதவுப் பலகையால் இறுகச் சாத்தித் தாழிடும் ஒலி கேட்டது!

**பு**லர்ந்தும் புலராக் கன்னிக் காலை வேளையின் சன்னமான ஒளி ரேகைகள் சாம்பல் வண்ணமாய்ப் படர்ந்து உலகைத் தழுவத் தொடங்கின சமயம் பரவாதிமல்லரின் இல்லத்தை அடைந்த பரமேசுவரவர்மன், அதன் சுற்றுப்புறச்சுழல் பாழ்பட்டுக் கிடப்பதையும், வாயிற்கதவு தாழிடப்பட்டிருப்பதையும் கண்டு திகைத்து நின்றான்.

'ஏன் இந்த இல்லம் சாத்திக் கிடக்கிறது? பரவாதிமல்லர் எங்கே போயிருப்பார்? சளுக்கியர்களின் கெடுபிடிகளுக்கு அஞ்சி வேறெங்கேனும் இடம் மாறிப்போய்விட்டிருப்பாரா? அப்படிக் கோழைபோல் அஞ்சி ஓடக்கூடிய மனிதரல்லவே அவர்? பல்லவபுரத்துக்கு வில்வேலியால் அழைக்கப்பட்டுச் சென்ற நான் அங்கிருந்து உடனடியாகத் திரும்பி வராததால், எனக்கு ஏதேனும் ஆபத்து நேர்ந்திருக்குமோ என்று எண்ணி அந்த விவரத்தை அறிய எங்காவது புறப்பட்டுச் சென்றிருப்பாரா? அல்லது சளுக்கிய ஒற்றர்களுக்குப் போக்குக் காட்டுவதற்காகத் தம் இல்லத்தை இப்படிப் பாழடையப் போட்டுவிட்டு இங்கேயே இருக்கிறாரா?'

மனம் கலங்கி நின்ற அவன் தன் அணைப்பில் பிரக்ஞையின்றிச் சாய்ந்திருந்த உத்தமசீலியைப் பூமாலை போல் ஏந்தித் தூக்கியவாறு வலப்பக்கமாகச் சுற்றிக்கொண்டு போய்ப் பின்புற வாயிலோன்றின் அருகில் நின்று அதன் கதவு தாழை உற்று நோக்கினான்.

அந்த இல்லத்தில் அவன் தலைமறைவாகத் தங்கியிருந்த போது அவனுக்காகவே அச்சிறிய வாயிலை அமைத்துக்

கொடுத்திருக்கிறார் சேதியக் கலைஞர். தினமும் காலை மாலை வேளைகளில் சிற்றாற்றங்கரைக்குச் சென்று நீராடி வர அவ்வாயிலையே அவன் பயன்படுத்தினான். எனவே தான் இப்போது குறிப்பாக அந்த வாயிலண்டைப் போய் அதன் கதவு திறந்திருக்கிறதா என்று பார்த்தான். அது தாழிடாமல் வெறுமனே சாத்தப்பட்டிருந்தது.

'பரவாதிமல்லர் இங்குதான் இருக்கிறார் என்று தோன்றுகிறது. ஆனால் அவர் உள்ளே இருப்பதாகத் தெரியவில்லையே! எங்கேனும் வெளியே சென்றிருப்பாரோ? அவர் இல்லாத சமயத்தில் அவருடைய இல்லத்தினுள் செல்லலாமா?'

தயங்கி நின்ற பரமேசுவரவர்மன் தனது கை ஏந்தலில் மூர்ச்சித்துக் கிடந்த உத்தமசீலியைத் திகிலுடன் கூர்ந்து நோக்கினான். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவனாய் அந்தச் சிறிய கதவைத் திறந்துகொண்டு உள்ளே சென்றான்.

முதல் பாகம் முற்றிற்று

